ஸ்ரீமத்

# பகவத்கீதை

(மூலத்துடனும் மூன்றுமத பாஷ்யச் சுருக்கத்துடனும்)

சென்னை ஸம்ஸ்கிருத காலேஜ்
உபாத்யாயர்

வி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார், பி. ஏ.
அவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டது.



சென்னை
சுதேசமித்திரன் புத்தகசாலை.
1924.

 [விலை ரு. 3.

சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ், சென்னை.

# பீடிகை.

இதுவரையில் பகவத்கீதை மூலத்திற்கும், பாஷ்யங்களுக்கும் தமிழில் எண்ணிறந்த மொழிபெயர்ப்புகள் இருக்கின்றன. அவைகளை அபேக்ஷித்து இந்த மொழிபெயர்ப்பில் விசேஷமென்ன?

1. அத்வைத, விசிஷ்டாத்வைத, த்வைத மதங்களைத் தழுவி சங்கரர், ஆனந்தகிரி, மதுசூதன சரஸ்வதி, சங்கரானந்தர், நீலகண்டர், ஸ்ரீதரர், அபினவகுப்தர், வெங்கடநாதர் முதலியவர்களும், ராமானுஜர், வேதாந்ததேசிகர், நாதமுனிகள் முதலியவர்களும், மத்வாசார்யர், ஜெயதீர்த்த ஸ்வாமி, ராகவேந்திர ஸ்வாமி முதலியவர்களும் இயற்றிய உரைகளை அனுசரித்து கீதைக்கு அதை அர்த்தம் செய்தவர்கள் பலர்.

2. தங்களுடைய கொள்கைக்கு அநுகூலமாய் சைவமாயும், சாக்தமாயும், லௌகிகமாயும் அர்த்தஞ் செய்தவர்கள் சிலர்.

3. மேற்சொன்ன பாஷ்யகாரர்கள் தம் தம் மதக்கொள்கைகளை ஸ்தாபிப்பதற்காக கீதா ச்லோகங்களை அனுகூலமாய் அர்த்தஞ் செய்திருக்கிறார்கள். அவை யாவும் ஏதாவது சில குறைகளுக்கும் ஆக்ஷேபங்களுக்கும் பாத்திரமாகின்றனவென்பது பக்ஷபாதமில்லாமல் மதாபிமானமில்லாமல் கீதையைப் படித்தவர்களுக்கு தெரிந்திருக்கும்.

4. கீதையில் கண்ணன் உபயோகிக்கும் ஸாங்கியம், யோகம் ப்ரகிருதி, புருஷன், தானம், யக்ஞம் முதலிய அரிய பதங்களுக்கு அவரே அங்கங்கே தெளிவாய் விளக்கி யிருப்பதால் அதையே நாம் வழி காட்டியாய் வைத்துக் கொள்ளலாம். அதற்கு ஒவ்வாத அர்த்தங்களை விலக்கிவிடுவதில் குற்றமில்லை.

5. கண்ணன் கீதையை அருச்சுனனுக்கு எந்தக் கருத்துடன் உபதேசித்தாரோ அதையே ச்லோகங்களில் வெளிப்படும் ரீதியாய்

# பீடிகை.

இதுவரையில் பகவத்கீதை மூலத்திற்கும், பாஷ்யங்களுக்கும் தமிழில் எண்ணிறந்த மொழிபெயர்ப்புகள் இருக்கின்றன. அவைகளை அபேக்ஷித்து இந்த மொழிபெயர்ப்பில் விசேஷமென்ன?

1. அத்வைத, விசிஷ்டாத்வைத, த்வைத மதங்களைத் தழுவி சங்கரர், ஆனந்தகிரி, மதுசூதன சரஸ்வதி, சங்கரானந்தர், நீலகண்டர், ஸ்ரீதரர், அபினவகுப்தர், வெங்கடநாதர் முதலியவர்களும், ராமானுஜர், வேதாந்ததேசிகர், நாதமுனிகள் முதலியவர்களும், மத்வாசார்யர், ஜெயதீர்த்த ஸ்வாமி, ராகவேந்திர ஸ்வாமி முதலியவர்களும் இயற்றிய உரைகளை அநுசரித்து கீதைக்கு அதை அர்த்தம் செய்தவர்கள் பலர்.

2. தங்களுடைய கொள்கைக்கு அநுகூலமாய் சைவமாயும், சாக்தமாயும், லௌகிகமாயும் அர்த்தஞ் செய்தவர்கள் சிலர்.

3. மேற்சொன்ன பாஷ்யகாரர்கள் தம் தம் மதக்கொள்கைகளை ஸ்தாபிப்பதற்காக கீதா ச்லோகங்களை அநுகூலமாய் அர்த்தஞ் செய்திருக்கிறார்கள். அவை யாவும் ஏதாவது சில குறைகளுக்கும் ஆக்ஷேபங்களுக்கும் பாத்திரமாகின்றனவென்பது பக்ஷபாதமில்லாமல் மதாபிமானமில்லாமல் கீதையைப் படித்தவர்களுக்கு தெரிந்திருக்கும்.

4. கீதையில் கண்ணன் உபயோகிக்கும் ஸாங்கியம், யோகம் ப்ரகிருதி, புருஷன், தானம், யக்ஞம் முதலிய அரிய பதங்களுக்கு அவரே அங்கங்கே தெளிவாய் விளக்கி யிருப்பதால் அதையே நாம் வழி காட்டியாய் வைத்துக் கொள்ளலாம். அதற்கு ஒவ்வாத அர்த்தங்களை விலக்கிவிடுவதில் குற்றமில்லை.

5. கண்ணன் கீதையை அருச்சுனனுக்கு எந்தக் கருத்துடன் உபதேசித்தாரோ அதையே ச்லோகங்களில் வெளிப்படும் ரீதியாய்

கண்டு பிடித்து மொழி பெயர்ப்பது என் உத்தேசம். நடுவு நிலைமை வாய்ந்த ஒருவன் கீதையை பாஷ்யங்களின்றி படித்தால் எந்த அர்த்தம் தோன்றுமோ அதையே வெளிப்படுத்த முயன்றிருக்கிறேன். ஆயினும் ஒவ்வொரு அத்யாயத்தின் முடிவில் மூன்று மத பாஷ்யகாரர்களின் தாத்பரிய சுருக்கமும் விஷய அட்டவணையும் காட்டப்பட்டிருக்கிறது.

6. கீதையின் உற்பத்தி குரு சிஷ்யரூபமான கிருஷ்ணார்ஜுனர்களின் சொரூபம், உபதேச ஸ்தலம், உபதேச காலம் முதலிய பல விஷயங்கள் இதுவரையில் கர்ன பரம்பரையாய்ப் பரம ரகசியமாய் தெரிவிக்கப்பட்டு வந்தன. இவைகளை ஆக்ஷேப சமாதானங்களுடன் இங்கே நான் முன்னுரையில் வெளியிட்டிருப்பது ஆஸ்திக புத்தியுள்ள அறிஞர்களுக்கு மிகவும் உபயோகமாயிருக்கும்.

ராமாயண விலாஸ்,
மைலாப்பூர்.

வி. ஆர். ஸ்ரீநிவாஸ அய்யங்கார்.

# ஸ்ரீமத் பகவத் கீதை.

## முன்னுரை.



### ஸ்ரீமத் சங்கராசார்யர்

அவ்யக்தமென்று சொல்லப்படும் மூலபிரகிருதியைக் காட்டிலும் நாராயணன் மேலானவர்; இந்தப் பிரம்மாண்டம் அவ்யக்தத்திலிருந்து உண்டாயிற்று; இந்தப் பிரம்மாண்டத்தினுள்ளே இந்த லோகங்களும் ஏழு த்வீபங்களடங்கிய பூமியும் இருக்கின்றன. அந்தப் பகவான் இந்த ஜகத்தை ஸிருஷ்டித்து இதை நிலைநிறுத்திக் காப்பாற்றும் பொருட்டு மரீசி முதலிய பிரஜாபதிகளை முதலில் உண்டுபண்ணி, வேதத்தில் விதிக்கப்பட்ட பிரவிருத்தி தர்மத்தை உபதேசிக்கச் செய்தார். பிறகு ஸனக, ஸனந்தனர் முதலிய மற்றவர்களை ஸிருஷ்டித்து, ஞானம் வைராக்யம் என்றவைகளை யுபதேசிக்கும் நிவிருத்தி தர்மத்தையும் போதித்தார். இப்படி பிரவிருத்தி தர்மமென்றும் நிவிருத்தி தர்மமென்றும் வைதிகதர்மம் இருவிதமாகும்; இவைகளே இந்த ஜகத் நிலைபெறுவதற்குக் காரணம்; ஜீவகோடிகளுக்கு இஹத்தில் ஸகல ஸுகத்தையும், பரத்தில் மோக்ஷஸாம்ராஜ்யத்தையும், கொடுப்பதற்குப் பிரத்யக்ஷமான ஹேது; அந்தத் தர்மம் நான்கு வர்ணத்தாராலும் நான்கு ஆசிரமங்களை யுடையவர்களாலும் அநுஷ்டிக்கப்பட்டு வந்தது; அதை யனுஷ்டிப்பவர்களுக்கு காமக்ரோதங்களால் ஞானம் குறைந்து, அதர்மம் மேலிட்டு, தர்மம் மங்கிப்போயிற்று. ஜகத்தின் ஸிருஷ்டிக்கும் ரக்ஷணத்திற்கும் ஸம்ஹாரத்திற்கும் ஸ்வாமியான அந்தப் பகவான், ஜீவகோடிகளை அழியாமல் காப்பாற்ற விரும்பி, உலகத்தில் பிரம்மாவால் உபதேசிக்கப்பட்ட பிராஹ்மண தர்மத்தை ரக்ஷிப்பது

அவசியமென்றெண்ணித், தான் ஆதிகர்த்தாவாயும் நாராயண னென்ற திருநாமத்தையுடைய விஷ்ணுவாயுமிருந்தும், தன் அம்ச ரூபமாய் கிருஷ்ணனென்ற திவ்ய நாமதேயத்துடன் வஸுதேவ ருக்கும் தேவகிக்கும் திருக்குமாரராய் அவதரித்தாரன்றோ? பிராஹ் மண தர்மத்தை ரக்ஷிப்பதால் வைதிக தர்மம் ரக்ஷிக்கப்படும். வர்ணு சிரம பேதங்களும் அதையே ஆதாரமாய்க் கொண்டிருக்கின்றன.

ஞானம், ஐசுவரியம், சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் முதலியவை களால் எப்பொழுதும் அலங்கரிக்கப்பட்ட அந்தப் பகவான், ஸத்வ, ரஜஸ், தமஸென்ற முக்குணங்களின் ஸ்வரூபமாய் விளங்கும் தன் வைஷ்ணவ மாயையான மூலப்பிரகிருதியை வசப்படுத்தி, தான் பிறப்பற்றவனுயும், அழிவற்றவனுயும், ஸகல பூதங்களுக்கும் ஈசுவர னுயும், நித்ய சுத்த புத்த முக்தஸ்வபாவமுள்ளவனுயு மிருந்தாலும், தன் மாயாசக்தியால் தேஹமுள்ளவனைப்போலும், பிறந்தவனைப் போலும், ஸகல லோகங்களுக்கும் அனுக்ரஹத்தைச் செய்துகொண் டிருக்கிறுன். அதனுல் தனக்கு யாதொரு பிரயோஜனமுமில்லா விட்டாலும், ஸகல பிராணிகளையும் அனுக்கிரஹம் செய்யவேண்டும். மேற்சொன்ன இரண்டுவகையான வைதிக தர்மத்தை, சோகம் மோஹமென்ற மஹாஸமுத்திரத்தில் முழுகிக்கிடந்த அர்ஜுன னுக்கு உபதேசித்தார். இப்படிச் செய்வதில் உத்தம குணவான் களால் ஸந்தேஹ விபரீதமின்றி அறியப்பட்டு அனுஷ்டிக்கப்பட்ட அந்தத் தர்மம் எல்லையின்றி விருத்தியடையும். இவ்விதமாய்ப் பக வானுல் உபதேசிக்கப்பட்டபடி அந்தத் தர்மத்தை ஸர்வக்ஞரான வேதவியாஸ பகவான், கீதையென்ற திவ்ய நாமதேயத்தையுடைய கிரந்தமாய் 700 சுலோகங்களால் இயற்றினுர்.

இந்தக் கீதா சாஸ்திரம் ஸகல வேதங்களால் உபதேசிக்கப் படும் பிரம்மவித்யையின் ஸாரத்தைச் சுருக்கமாய்ப் போதிக்கும்; ஆனுல் அதின் உட்கருத்து எளிதில் புலப்படாது. அதை வெளிப் படுத்த விரும்பிப் பலர் பதவுரை, பொழிப்புரை, விஸ்தாரமான வியாக்யானங்கள், தர்க்கவியாகரண நியாயங்கள் முதலியவைகளை செய்திருக்கிறுர்கள். ஆனுல் அவைகளை லௌகிகர்கள் பரஸ்பரம் முற்றிலும் விரோதமான கருத்துகளையே உடையவைகளாய் அறி

தால், கீதாசாஸ்திரத்தின் உண்மையான அர்த்தத்தை விவேகத்தால் அறிந்து நிச்சயப்படுத்துவதற்குச் சுருக்கமாய் ஓர் உரையைச் செய்கிறேன்.

இந்தக் கீதாசாஸ்திரத்தின் பிரயோஜனமென்னவென்று சுருக்கமாய்ச் சொல்லுமிடத்தில், இந்த ஸம்ஸாரமும் அதின் காரணமும் முற்றிலும் அழிவதென்ற ஸர்வோத்தமமான மோக்ஷமேயாகும். ஸகல கர்மங்களையும்விட்டு, ஆத்மஞானத்திலேயே ஆழ்ந்திருப்பதென்ற தர்மத்தை யனுஷ்டிப்பதால் கிடைக்கும் இந்தக் கீதா தாத்பர்யமான தர்மத்தை யுத்தேசித்தே பகவான், பாரதம், அசுவமேதிக பர்வத்தில் (16, 12) "பிரம்மத்தின் பதவியை அடைவதற்கு அந்தத் தர்மமே ஸர்வவிதத்தாலும் போதுமன்றோ" வென்றும், அனுகீதையில் "ஒரே ஆஸனத்தில் ஸ்திரமாய் அமர்ந்தவனாய் மௌனம்பூண்டு யாதொன்றையும் நினைக்காமலும், யாதொரு தர்மத்தையும் அனுஷ்டிக்காமலும், யாதொரு தர்மத்தையும் அனுஷ்டிக்காமலிராமலும், சுபாசுப கர்மங்களற்றவனாயும் யாரிருக்கிறானோ" வென்றும், ஞானத்திற்கு ஸந்யாஸமே லக்ஷணமென்றும் அருளிச் செய்திருக்கிறார். கீதையிலும் முடிவில் (18, 66) அர்ஜுனனைப் பார்த்து "ஸகல தர்மங்களையும் விட்டு என்னை ஒருவனையே சரணமடை" யென்கிறார். பிரவிருத்தி தர்மமென்பது க்ஷேமத்தைக் கொடுப்பதா யிருந்தாலும், நான்கு வர்ணங்களையும் ஆசிரமங்களையும் உத்தேசித்து ஏற்படுத்தப்பட்டது. அது தேவர் முதலிய பதவிகளை அடைவதற்கு ஹேதுவாயிருந்தாலும் ஈசுவரார்ப்பணமாய் அனுஷ்டிக்கப்பட்டால் ஸத்வ சுத்தியைக் கொடுக்கும்; அவைகளின் பயன்களில் மனது பற்றவில்லையன்றோ? ஸத்வ சுத்தியின் மூலமாய் ஞான நிஷ்டையை அடைவதற்கு யோக்யதை யுண்டாகும். ஞானம் உண்டாவதற்கும் ஸர்வோத்தமமான மோக்ஷ ஸாம்ராஜ்யத்திற்கும் காரணமாகும். கீதை V. 9-ல் "ஸகல கர்மங்களையும் பிரம்மத்தினிடத்தில் அர்ப்பணஞ் செய்து" என்றும், 10-ல் "பயனில் பற்றுதலை விட்டு ஆத்ம சுத்திக்காக யோகிகள் கர்மத்தைச் செய்கிறார்க" ளென்றும் சொல்லப்படுகிறது.

அவசியமென்றெண்ணித், தான் ஆதிகர்த்தாவாயும் நாராயண னென்ற திருநாமத்தையுடைய விஷ்ணுவாயுமிருந்தும், தன் அம்ச ரூபமாய் கிருஷ்ணனென்ற திவ்ய நாமதேயத்துடன் வஸுதேவ ருக்கும் தேவகிக்கும் திருக்குமாரராய் அவதரித்தாரன்றோ? பிராஹ் மண தர்மத்தை ரக்ஷிப்பதால் வைதிக தர்மம் ரக்ஷிக்கப்படும். வர்ணா சிரம பேதங்களும் அதையே ஆதாரமாய்க் கொண்டிருக்கின்றன.

ஞானம், ஐசுவரியம், சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் முதலியவை களால் எப்பொழுதும் அலங்கரிக்கப்பட்ட அந்தப் பகவான், ஸத்வ, ரஜஸ், தமஸென்ற முக்குணங்களின் ஸ்வரூபமாய் விளங்கும் தன் வைஷ்ணவ மாயையான மூலப்பிரகிருதியை வசப்படுத்தி, தான் பிறப்பற்றவனையும், அழிவற்றவனையும், ஸகல பூதங்களுக்கும் ஈசுவர னையும், நித்ய சுத்த புத்த முக்தஸ்வபாவமுள்ளவனையு மிருந்தாலும், தன் மாயாசக்தியால் தேஹமுள்ளவனைப்போலும், பிறந்தவனைப் போலும், ஸகல லோகங்களுக்கும் அனுக்ரஹத்தைச் செய்துகொண் டிருக்கிறான். அதனால் தனக்கு யாதொரு பிரயோஜனமுமில்லா விட்டாலும், ஸகல பிராணிகளையும் அனுக்கிரஹம் செய்யவேண்டும். மேற்சொன்ன இரண்டுவகையான வைதிக தர்மத்தை, சோகம் மோஹமென்ற மஹாஸமுத்திரத்தில் முழுகிக்கிடந்த அர்ஜுன னுக்கு உபதேசித்தார். இப்படிச் செய்வதில் உத்தம குணவான் களால் ஸந்தேஹ விபரீதமின்றி அறியப்பட்டு அனுஷ்டிக்கப்பட்ட அந்தத் தர்மம் எல்லையின்றி விருத்தியடையும். இவ்விதமாய்ப் பக வானால் உபதேசிக்கப்பட்டபடி அந்தத் தர்மத்தை ஸர்வக்ஞரான வேதவியாஸ பகவான், கீதையென்ற திவ்ய நாமதேயத்தையுடைய கிரந்தமாய் 700 சுலோகங்களால் இயற்றினார்.

இந்தக் கீதா சாஸ்திரம் ஸகல வேதங்களால் உபதேசிக்கப் படும் பிரம்மவித்யையின் ஸாரத்தைச் சுருக்கமாய்ப் போதிக்கும்; ஆனால் அதின் உட்கருத்து எளிதில் புலப்படாது. அதை வெளிப் படுத்த விரும்பிப் பலர் பதவுரை, பொழிப்புரை, விஸ்தாரமான வியாக்யானங்கள், தர்க்கவியாகரண நியாயங்கள் முதலியவைகளை செய்திருக்கிறார்கள். ஆனால் அவைகளை லௌகிகர்கள் பரஸ்பரம் முற்றிலும் விரோதமான கருத்துகளையே உடையவைகளாய் அறி,

தால், கீதாசாஸ்திரத்தின் உண்மையான அர்த்தத்தை விவேகத் தால் அறிந்து நிச்சயப்படுத்துவதற்குச் சுருக்கமாய் ஓர் உரையைச் செய்கிறேன்.

இந்தக் கீதாசாஸ்திரத்தின் பிரயோஜனமென்னவென்று சுருக்கமாய்ச் சொல்லுமிடத்தில், இந்த ஸம்ஸாரமும் அதின் காரணமும் முற்றிலும் அழிவதென்ற ஸர்வோத்தமமான மோக்ஷமேயாகும். ஸகல கர்மங்களையும்விட்டு, ஆத்மஞானத்திலேயே ஆழ்ந்திருப்பதென்ற தர்மத்தை யனுஷ்டிப்பதால் கிடைக்கும் இந்தக் கீதா தாத்பர்யமான தர்மத்தை யுத்தேசித்தே பகவான், பாரதம், அசுவமேதிக பர்வத்தில் (16, 12) "பிரம்மத்தின் பதவியை அடைவதற்கு அந்தத் தர்மமே ஸர்வவிதத்தாலும் போது மன்றோ" வென்றும், அனுகீதையில் "ஒரே ஆஸனத்தில் ஸ்திரமாய் அமர்ந்தவனாய் மௌனம்பூண்டு யாதொன்றையும் நினைக் காமலும், யாதொரு தர்மத்தையும் அனுஷ்டிக்காமலும், யாதொரு தர்மத்தையும் அனுஷ்டிக்காமலிராமலும், சுபாசுப கர்மங்களற்றவனையும் யாரிருக்கிறானோ" வென்றும், ஞானத்திற்கு ஸந் யாஸமே லக்ஷணமென்றும் அருளிச் செய்திருக்கிறார். கீதையிலும் முடிவில் (18, 66) அர்ஜுனனைப் பார்த்து "ஸகல தர்மங்களையும் விட்டு என்னை ஒருவனையே சரணமடை" யென்கிறார். பிரவிருத்தி தர்மமென்பது க்ஷேமத்தைக் கொடுப்பதா யிருந்தாலும், நான்கு வர்ணங்களையும் ஆசிரமங்களையும் உத்தேசித்து ஏற்படுத்தப்பட்டது. அது தேவர் முதலிய பதவிகளை அடைவதற்கு ஹேதுவாயிருந் தாலும் ஈசுவரார்ப்பணமாய் அனுஷ்டிக்கப்பட்டால் ஸத்வ சுத்தியைக் கொடுக்கும்; அவைகளின் பயன்களில் மனது பற்றவில்லையன்றோ? ஸத்வ சுத்தியின் மூலமாய் ஞான நிஷ்டையை அடைவதற்கு யோக்யதை யுண்டாகும். ஞானம் உண்டாவதற்கும் ஸர்வோத்தமமான மோக்ஷ ஸாம்ராஜ்யத்திற்கும் காரணமாகும். கீதை V. 9-ல் "ஸகல கர்மங்களையும் பிரம்மத்தினிடத்தில் அர்ப்பணஞ் செய்து" என்றும், 10-ல் "பயனில் பற்றுதலை விட்டு ஆத்ம சுத்திக்காக யோகிகள் கர்மத்தைச் செய்கிறார்க" ளென்றும் சொல்லப்படுகிறது.

## ஸ்ரீமத் பகவத்கீதை

இந்தக்கீதாசாஸ்திரம், மோக்ஷத்தையே பிரயோஜனமாயுடைய இந்த இரண்டுவித தர்மத்தையும், பரப்ரஹ்மமென்று சொல்லப் படும் வாஸுதேவனென்ற பரமார்த்த தத்வத்தையும், விசேஷமாய் விளக்குகிறது. இதன் பிரயோஜனமும் ஸம்பந்தமும் பெயரும் ஸாமான்யமல்ல. விசேஷமானவைகளே. இதன் உட் கருத்தை யறிவதால் ஸகல புருஷார்த்தங்களும் ஸித்திக்கும். ஆகையால் அதைத் தெரிவிப்பதற்காகவே நான் யத்னஞ் செய் கிறேன்.

## ஸ்ரீமத் ராமானுஜாசாரியர்

"எவருடைய திருவடித் தாமரைகளைத் தியானஞ் செய்வதால் நான் செய்த ஸகல பாபங்களும் அழிந்து, ஒரு வஸ்துவாயிருக்கும் தன்மையை அடைந்தேனோ அந்த ஆளவந்தாரை நமஸ்கரிக்கிறேன்."

"லக்ஷ்மீபதியாய் அனந்த கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாய் ஸகல பிராகிருத குணங்களுமற்றவனுமான பரம புருஷன், தன்னை யொழிந்த மற்ற எல்லா வஸ்துக்களைக் காட்டிலும் வேறான ஞானத்தையும் ஆனந்தத்தையும் ஸ்வரூபமாயுடையவன்; ஸ்வபாவமாய் ஏற்பட்டு எல்லையற்ற மேன்மையையுடைய ஞானம், பலம், ஐசுவரியம், வீர்யம், சக்தி, தேஜஸ் முதலிய கல்யாண குண ரத்னங்கள் விளங்கும் ஸமுத்ரம். அவருடைய திவ்ய ரூபம் அவருக்கு மிகவும் இஷ்டமானது, மிகவும் தகுந்தது, ஒரேவிதமான ஸ்வபாவமுள்ளது, நம்மால் எண்ணமுடியாதது; ஆச்சரியகரமாய் அழிவில்லாமல், தோஷமில்லாமல் எல்லையற்று விளங்கும் காந்தி அழகு, மணம், லாவண்யம், யௌவனம் முதலிய எண்ணிறந்த குணங்களுக்கு இருப்பிடமானது. அவருடைய எண்ணிறந்த திவ்யாபரணங்கள் அவருக்குத் தகுந்தவை, பலவகை, விசித்ரமானவை, எல்லையற்ற ஆச்சர்யங்களை யுடையவை, அழிவில்லாதவை, தோஷமில்லாதவை; அவருடைய திவ்ய ஆயுதங்களோ அவருக்குத் தகுந்தவை, எண்ணிறந்தவை, நினைக்க முடியாத சக்தியையுடையவை, அழிவற்றவை, தோஷமற்றவை, எல்லையற்ற நன்மையுள்ளவை.

அவருடைய நாயகியான மஹாலக்ஷ்மி அவருக்கு மிகவும் இஷ்ட மானவள், தகுந்தவள், நித்யமாய் தோஷமின்றி விளங்கும் ஸ்வ ரூபம், ஆக்ருதி, குணங்கள், மஹிமை, அதிகாரம், ஒழுக்கம் முதலிய எல்லையற்ற எண்ணிறந்த கல்யாண குணங்களுக்கு நிதி. அவருடைய திருவடிகளை எண்ணிறந்த நித்யஸூரிகள் எப்பொழு தும் ஸ்தோத்ரஞ் செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் பக வானுடைய ஸங்கல்பத்தை யனுஸரித்த ஸ்வரூபம், அழிவில்லாத தன்மை, வியாபாரம் என்றவைகளின் பேதங்களை யுடையவர்கள். ால்லோரும் பகவானுடைய கைங்கர்யங்கள் எல்லாவற்றையும் செய் ிறவர்கள்; (ஒவ்வொருவரால் செய்யப்பட்ட கைங்கர்யங்களைத் ங்கள் தங்களுக்காகச் செய்ததாய் ஒவ்வொருவரும் நினைத்துக் கொண்டிருக்கிறவர்கள். அதனாலுண்டாகும் பிரீதியென்ற பிர யாஜனம் எல்லோருக்கும் ஸமம்) அந்தக் கைங்கரியத்தைச் செய் தில் ஆசையையே ஸ்வரூபமாயுடையவர்கள். தோஷமின்றி நித்ய ாய் அளவில்லாத ஞானம், க்ரியை, ஐசுவரியம் முதலிய எண்ணி ந்த குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்கள். இந்தப் பரமாத் ாவின் ஸ்வரூபமும் ஸ்வபாவமும் மனதாலும் வாக்காலும் அள டமுடியாதவை. அவருக்குத் தகுந்த பலவிதமான விசித்ரங்களை டைய போக்ய வஸ்துக்களையும், அதற்குரிய கருவிகளையும் இடங் ளையுமுடைய அக்ஷரமான பரமாகாசமே அவருக்கு இருப்பிடம். து எண்ணிறந்த ஆச்சர்யங்களை யுடையது; அளவற்ற வைபவங் ளையுடையது. (வாஹனம் ரத்னம் முதலியவை) முடிவற்ற அள வையுடையது, என்றும் மழியாதது, தோஷமற்றது; பலவிதமாய் ட விசித்ரங்களுடன் எல்லையற்ற போக்ய பதார்த்தங்களாலும், அவைகளை அனுபவிக்கும் ஆத்மாக்களாலும் நிறைந்த எல்லா லோகங்களையும் உண்டாக்கிக் காத்து அழிப்பதையே அவன் விளை யட்டாகவுடையவன், அந்தப் பரப்ரஹ்மமும் புருஷோத்தமனுமான நாராயணன், பிரம்மா முதல் ஸ்தாவரம் வரையிலுள்ள ஸகல லோகங்களையும் ஸிருஷ்டித்து, தன் ஸ்வரூபத்துடன் மாத்திரம் இருந்துவிட்டால் பிரம்மாதி தேவதைகளும் மனுஷ்யர்களும் அவ னை; தியானஞ் செய்வதற்கும் ஆராதிப்பதற்கும் முடியாது. எல்லை யற்ற கருணை, வாத்ஸல்யம், உதாரத்தன்மை, சீலம் உடையவனான

## ஸ்ரீமத் பகவத்கீதை

இந்தக் கீதாசாஸ்திரம், மோக்ஷத்தையே பிரயோஜனமாயுடைய இந்த இரண்டுவித தர்மத்தையும், பரப்ரஹ்மமென்று சொல்லப்படும் வாஸுதேவனென்ற பரமார்த்த தத்வத்தையும், விசேஷமாய் விளக்குகிறது. இதன் பிரயோஜனமும் ஸம்பந்தமும் பெயரும் ஸாமான்யமல்ல. விசேஷமானவைகளே. இதன் உட்கருத்தை யறிவதால் ஸகல புருஷார்த்தங்களும் ஸித்திக்கும். ஆகையால் அதைத் தெரிவிப்பதற்காகவே நான் யத்னஞ் செய்கிறேன்.

## ஸ்ரீமத் ராமானுஜாசாரியர்

"எவருடைய திருவடித் தாமரைகளைத் தியானஞ் செய்வதால் நான் செய்த ஸகல பாபங்களும் அழிந்து, ஒரு வஸ்துவாயிருக்கும் தன்மையை அடைந்தேனோ அந்த ஆளவந்தாரை நமஸ்கரிக்கிறேன்."

"லக்ஷ்மீபதியாய் அனந்த கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாய் ஸகல பிராகிருத குணங்களுமற்றவனுமான பரம புருஷன், தன்னை யொழிந்த மற்ற எல்லா வஸ்துக்களைக் காட்டிலும் வேறான ஞானத்தையும் ஆனந்தத்தையும் ஸ்வரூபமாயுடையவன்; ஸ்வபாவமாய் ஏற்பட்டு எல்லையற்ற மேன்மையையுடைய ஞானம், பலம், ஐசுவரியம், வீர்யம், சக்தி, தேஜஸ் முதலிய கல்யாண குணரத்னங்கள் விளங்கும் ஸமுத்ரம். அவருடைய திவ்ய ரூபம் அவருக்கு மிகவும் இஷ்டமானது, மிகவும் தகுந்தது, ஒரேவிதமான ஸ்வபாவமுள்ளது, நம்மால் எண்ணமுடியாதது; ஆச்சரியகரமாய் அழிவில்லாமல், தோஷமில்லாமல் எல்லையற்று விளங்கும் காந்தி அழகு, மணம், லாவண்யம், யௌவனம் முதலிய எண்ணிறந்த குணங்களுக்கு இருப்பிடமானது. அவருடைய எண்ணிறந்த திவ்யாபரணங்கள் அவருக்குத் தகுந்தவை, பலவகை, விசித்ரமானவை, எல்லையற்ற ஆச்சர்யங்களை யுடையவை, அழிவில்லாதவை, தோஷமில்லாதவை; அவருடைய திவ்ய ஆயுதங்களோ அவருக்குத் தகுந்தவை, எண்ணிறந்தவை, நினைக்க முடியாத சக்தியையுடையவை, அழிவற்றவை, தோஷமற்றவை, எல்லையற்ற நன்மையுள்ளவை.

அவருடைய நாயகியான மஹாலக்ஷ்மி அவருக்கு மிகவும் இஷ்டமானவள், தகுந்தவள், நித்யமாய் தோஷமின்றி விளங்கும் ஸ்வரூபம், ஆகிருதி, குணங்கள், மஹிமை, அதிகாரம், ஒழுக்கம் முதலிய எல்லையற்ற எண்ணிறந்த கல்யாண குணங்களுக்கு நிதி. அவருடைய திருவடிகளை எண்ணிறந்த நித்யஸூரிகள் எப்பொழுதும் ஸ்தோத்ரஞ் செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் பகவானுடைய ஸங்கல்பத்தை யனுஸரித்த ஸ்வரூபம், அழிவில்லாத தன்மை, வியாபாரம் என்றவைகளின் பேதங்களை யுடையவர்கள். ரல்லோரும் பகவானுடைய கைங்கர்யங்கள் எல்லாவற்றையும் செய்றவர்கள்; (ஒவ்வொருவரால் செய்யப்பட்ட கைங்கர்யங்களைத் ங்கள் தங்களுக்காகச் செய்ததாய் ஒவ்வொருவரும் நினைத்துக் காண்டிருக்கிறவர்கள். அதனாலுண்டாகும் பிரீதியென்ற பிரயாஜனம் எல்லோருக்கும் ஸமம்) அந்தக் கைங்கரியத்தைச் செய்தில் ஆசையையே ஸ்வரூபமாயுடையவர்கள். தோஷமின்றி நித்யய் அளவில்லாத ஞானம், க்ரியை, ஐசுவரியம் முதலிய எண்ணிந்த குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்கள். இந்தப் பரமாத்வின் ஸ்வரூபமும் ஸ்வபாவமும் மனதாலும் வாக்காலும் அள—முடியாதவை. அவருக்குத் தகுந்த பலவிதமான விசித்ரங்களைடைய போக்ய வஸ்துக்களையும், அதற்குரிய கருவிகளையும் இடங்ாயுமுடைய அக்ஷரமான பரமாகாசமே அவருக்கு இருப்பிடம். து எண்ணிறந்த ஆச்சர்யங்களை யுடையது; அளவற்ற வைபவங்ாயுடையது. (வாஹனம் ரத்னம் முதலியவை) முடிவற்ற அளயுடையது, என்று மழியாதது, தோஷமற்றது; பலவிதமாய் விசித்ரங்களுடன் எல்லையற்ற போக்ய பதார்த்தங்களாலும், வகளை அனுபவிக்கும் ஆத்மாக்களாலும் நிறைந்த எல்லாகங்களையும் உண்டாக்கிக் காத்து அழிப்பதையே அவன் விளைடாகவுடையவன், அந்தப் பரப்ரஹ்மமும் புருஷோத்தமனுமான யணன், பிரம்மா முதல் ஸ்தாவரம் வரையிலுள்ள ஸகல கங்களையும் ஸிருஷ்டித்து, தன் ஸ்வரூபத்துடன் மாத்திரம் ந்துவிட்டால் பிரம்மாதி தேவதைகளும் மனுஷ்யர்களும் அவ தியானஞ் செய்வதற்கும் ஆராதிப்பதற்கும் முடியாது. எல்லை கருணை, வாத்ஸல்யம், உதாரத்தன்மை, சீலம் உடையவனான

கால், தன் ஸ்வபாவத்தை மாற்றாமல், விடாமல், மறைக்காமல், தன் ரூபத்தை ஜீவகோடிகளுக்குச் சக்திக்குத் தகுந்தபடி அமைத்துக்கொண்டு, எல்லா லோகங்களிலும் அவதாரம் செய்கிறார். சேதனர்கள் அவரை ஆராதித்துத் தங்களுடைய மனோபிஷ்டங்களுக்கேற்றபடி நான்கு புருஷார்த்தங்களையும் அவருடைய அனுக்ரஹத்தால் அடைகிறார்கள்.

பூமியின் பாரத்தைத் தீர்ப்பதென்ற வெளிப்படையான காரணத்தைக்கொண்டு நம்மைப் போன்றவர்கள் தன்னைத் தியானஞ் செய்து ஆசிரயிக்க வேண்டுமென்ற எண்ணத்தாலேயே பூமியில் அவதாரம் செய்தார். ஸகல மனிதர்களுக்கும் பிரத்யக்ஷமாய் தர்சனங்கொடுத்து ஜாதி, வர்ணம், ஆசிரமம், வயது முதலிய பேதங்களின்றி எல்லோருடைய கண்களையும் மனதையும் கவருகின்ற திவ்ய லீலைகளைச் செய்தார். பூதனை சகடாஸுரன் யமளார்ஜுனன் அரிஷ்டன் பிரலம்பன் தேனுகன், காளியன் கேசி குவலயாபீடம் சாணூரன் முஷ்டிகன் தோஸலன் கம்ஸன் முதலிய துஷ்டர்களை ஸம்ஹரித்தார். எல்லையற்ற கருணையையும் அன்பையும் பொழியும் பார்வையாலும் அமிருதம் போன்ற வார்த்தையாலும் பிராணிகளைத் திருப்தி செய்தார். எல்லையற்ற அழகு, சீலம் முதலிய குணங்களை விளக்கும் லீலைகளைச் செய்ததால் அக்ரூரர், உத்தவர் விதுரர், மாலாகாரர் முதலியவர்களைப் பரம பாகவதர்களாகச் செ[ய்]தார். தன் தோழனான அர்ஜுனனைப் போர்க்களத்தில் உத்ஸாஹப்படுத்துவதென்ற வெளிப்படையான காரணத்தைக்கொண்[டு] பரம புருஷார்த்தமான மோக்ஷத்தை யடைவதற்கு உபாயமென்[று] வேதாந்தங்களால் கொண்டாடப்பட்டதும், தன்னையே விஷயமுடையதும், ஞானம், கர்மம் என்றவைகளுடன் கூடினதுமா[ன] பக்தியோகத்தை உபதேசித்தார்.

அவ்விடத்தில் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் யுத்[தம்] ஆரம்பிக்கும் பொழுது ஸர்வேசுவரனான அந்தப் புருஷோத்தம[ன்] ஸகல லோகங்களுக்கும் உபகாரஞ் செய்வதற்காக அவதரி[த்து] தன்னை ஆசிரயித்தவர்களின் பக்திக்கு வசப்பட்டு, அர்ஜுன[ன்] ரதத்திற்கு யஜமானனையும் தன்னை ஸாரதியாயும் எல்லா ஜனங்க[ளு]

பார்க்கும்படி ஏற்படுத்திக் கொண்டார். இப்படி தெரிந்தும் அகக் கண்ணும் புறக்கண்ணு மற்ற திருதராஷ்டிரன், தன்னைச் சேர்ந்தவர்கள் ஜயமடைந்ததை அறிய விரும்பி ஸஞ்ஜயனைக் கேட்டான்.

## ஸ்ரீ ஆளவந்தார்

### அருளிச்செய்த கீதார்த்த ஸங்கிரஹம்.

தன் வர்ணாசிரமங்களுக்குரிய தர்மங்கள், ஈசுவரனுக்கு சேஷமான ஜீவாத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தைப்பற்றின ஞானம், பரமாத்மாவைத் தவிற மற்ற வஸ்துக்களில் மனதைச் செலுத்தாம லிருப்பது, யென்ற காரணங்களால் உண்டாகும் பக்தி யென்ற ஒரே ஸாதனத்தால் அடையக்கூடிய பரப்ரஹ்மமான நாராயணனே கீதையென்ற யோக சாஸ்திரத்தில் ஸம்பூர்ணமாய் வர்ணிக்கப் படுகிறான்.

## ஸ்ரீ வேதாந்த மஹாதேசிகர்

### அருளிச் செய்த கீதார்த்த ஸங்கிரஹ ரக்ஷை.

பகவானுடைய மதமான பாஞ்சராத்ர சாஸ்திரத்திற்குப் பிரமாணமான ஆகம பிராமாண்யம் என்ற நூலையும், மஹா புருஷ நிர்ணய மென்ற நூலையும், ஜீவாத்மா, ஞானம், ஈசுவரன் என்ற தத்வங்களை யுபதேசிக்கும் ஆத்மஸித்தி ஸம்வித்ஸித்தி ஈசுவரஸித்தி யென்ற கிரந்தங்களையும், கீதார்த்த ஸங்கிரஹத்தையும், பிராட்டியையும் பகவானையும் கொண்டாடும் சதுசுலோகி, ஸ்தோத்ர ரத்னம் என்றவைகளையும் இயற்றின ஆளவந்தாருடைய திருவடிகளை நமஸ்கரிக்கிறேன்.

கருமமும் ஞானமும் கொண்டெழும் காதலுக் கோரிலக்கென்
றருமறையுச் சியுளா தரித்தோது மரும்பிரமம்
திருமகளோடு வரும் திருமாலென்று தானுரைத்தான்
தரும முகந்த தனஞ் சயனுக்கவன் சாரதியே.

தர்மத்தை தான் கேட்கவேண்டு மென்றும், கேட்டு அனுஷ்டிக்க வேண்டுமென்றும் ஆவலுள்ள அர்ஜுனனுக்கு அவனுடைய ஸாரதியான கிருஷ்ணன் அவனவனுடைய வர்ணாசிரமதர்மங்களுக்கு ஏற்ற கர்ம யோகத்தையும் ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைப் பற்றின

ஞானயோகத்தையும் காரணமாயும் ஒத்தாசையாயும் அடைந்ததாலுண்டாகும் பிரீதிரூபமான பக்தியோகத்திற்கு ஒரே லக்ஷ்யமென்று அருமையான வேதாந்தத்தின் உட்கருத்தால் உபதேசிக்கப்படுகிற பரபிரம்மமானது லக்ஷ்மீ பிராட்டியுடன் விளங்கும் மஹாவிஷ்ணுவேயென்று உபதேசித்தார்.



பிறகு கீதார்த்த ஸங்கிரஹத்தில் 18-அத்யாயங்களையும் மூன்று வகுப்பாய்ப் பிரித்து ஒவ்வொன்றின் கருத்து சொல்லப்படுகிறது.

(1) யோகத்தையே பிரயோஜனமாயுடையதும், நன்றாக பரிஷ்கரிக்கப்பட்டதும், ஜீவாத்மாவின் அனுபவ ஸித்தியைக் கொடுக்கிறதுமான ஞானயோகம் கர்மயோகமென்ற நிஷ்டைகள் முதலாவது ஆறு அத்யாயங்களால் விவரிக்கப்படுகின்றன.

(2) பகவானை வஸ்துவின் உண்மையான ஸ்வரூபத்தை அனுபவிப்பதென்ற பிரயோஜனம் கிடைக்கும் பொருட்டு, ஞானயோக கர்மயோகங்களாலுண்டாகும் பக்தியென்கிற உபாயம் நடு ஆறு அத்யாயங்களில் விசேஷமாய்ச் சொல்லப்படுகிறது.

(3) பிரகிருதி, ஜீவாத்மா, பிரகிருதியின் கார்யங்கள், இவை யாவையும் நடத்தும் பரமாத்மா வென்ற தத்வங்களைப் பகுத்தறியும் வழியும், கர்மஞான பக்தி யோகங்களின் மிகுதியும், பாக்கி ஆறு அத்யாயங்களாகச் சொல்லப்படுகின்றன.

உசிதமில்லாத காலத்திலும் இடத்திலும் பிரீதியாலும் கருணையாலும் தர்மத்தை அதர்மமாகவும், அதர்மத்தைத் தர்மமாகவும் தெரிந்து கொண்டதால் கலங்கியிருக்கும் தன் சிஷ்யனை அர்ஜுனனைக் குறித்து இந்த சாஸ்திரோபதேசம் செய்யப்படுகிறது.

கீதார்த்த ஸங்கிரஹ ரக்ஷை

உகவை யடைந்த வுறவுடையார் உறவற்ற அந்நாள்
தகவுடை அன்பு கரைபுரளத் தருமத்தளவில்
மிக்கஉளமஞ்சி விழுந்தடி சேர்ந்த விசயனுக்கோர்
நகையுடன் உண்மை உரைக்க அமைந்தனர் நாரணரே.

பிரீதியை யடைந்தவர்களான தன் பந்து ஜனங்கள் அந்த அன்பையும் ஸம்பந்தத்தையும் மறந்து, துறந்து, தன்னை யுத்தத்தில் கொல்வதற்காக அந்த தினத்தில் வந்து நின்றதைப் பார்த்துக், கருணை மேலிட்டு, அவர்களிடத்தில் பிரீதி கரை புரண்டு, தான் அனுஷ்டிக்க வேண்டிய தர்மம் இன்னதென்று நிச்சயிக்கும் விஷயத்தில் மனம் எல்லையில்லாமல் மயங்கிப் பயமடைந்து, வேறு கதியின்றி, ஸாஷ்டாங்கமாய் ஸேவித்துத் திருவடிகளை ஆசிரயித்த அர்ஜுனனுக்கு நிகரற்ற புன் சிரிப்புடன் மெய்யான சாஸ்திரார்த்தங்களை உபதேசிப்பதற்குப் பகவான் திருவுள்ளமுகந்தார்.

ஸ்திரீகளும் சூத்ரர்களும் பதிதர்களான பிராஹ்மணர்களும் வேதங்களைப் படிப்பதற்கு அதிகாரமற்றவர்களென்று பாகவதத்தில் சொல்லியிருக்கிறது. அவர்களுக்காகவே வேதவியாஸ பகவான் மஹா பாரதத்தைக் கருணைகூர்ந்து இயற்றினர். தர்மத்தையும் பரமாத்மாவையும் பற்றின ஞானத்தை அந்த இதிஹாஸத்தில் சுருக்கமாய் விவரிக்கப்பட்ட தந்திர நூல்களால் அறிந்து கொள்ள வேண்டியது. மஹா பாரதத்தில், ஸம்பவ, ஸபா, ஆரண்ய, விராட, உத்யோக, பீஷ்ம, துரோண, கர்ண, சல்ய, கதா, ஸௌஷுப்திக, சாந்தி, ஆனுசாஸனிக, ஆசுவமேதிக, மௌஸல, மஹாப்ரஸ்தான, ஸ்வர்க்காரோஹண, பவிஷ்யத் என்ற பர்வங்கள் காணப்படுகின்றன. ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த ஸம்வாதமே, பகவத்கீதை. பாரதத்தில் காணப்படும் உபதேசங்களின் ஸாரமே, அங்கே பாரதமென்ற பாரிஜாத விருக்ஷத்தின் அமிருத ரஸமென்று கொண்டாடத் தகுந்ததாய் விளங்குகிறது. அதன் பதினெட்டு பர்வங்களில், முதல் ஆறில் மோக்ஷத்திற்கு ஞானமே உபாயமென்றும், இரண்டாவது ஆறில் அந்த ஞானத்தை அடைவிக்கும் ஸாதனங்களும், மூன்றாவது ஆறில் மேற்சொன்ன விஷயங்களைப்பற்றின விஸ்தாரமும் சொல்லப்படுகிறது. முதலாவது அத்யாயமும் இரண்டாவது அத்யாயத்தில் சில சுலோகங்களும் அர்ஜுனனுக்குத் திடீரென்று நேர்ந்த சோகத்தைப்பற்றிச் சொல்லுகின்றன.

## ஸ்ரீமன் மத்வாசார்யர்

பாரத தாத்பர்ய நிர்ணயத்தில் "ஆதியில் செய்யப்பட்ட பாரதத்தில், கோடியில் ஒரு பாகமாவது இப்பொழுது காணப்படவில்லை. அதைப் பலவிதமாய் மாற்றிச் சின்னா பின்னஞ் செய்து, அதற்குப் பதிலாய் வேறு விஷயங்களைக் கலந்து, அதன் பெயரைத் தவிர மற்ற யாவும் அழிந்து போகும்படி செய்யப்பட் டிருக்கிறது. ஆகையால் சொல்ல முடியாத கஷ்டங்களை அனுபவித்து, ஆழ்ந்து பரிசோதித்து, ஆதி பாரதத்தின் விஷயத்தை இங்கே சுருக்கமாகச் சொல்லுகிறேன்" என்று சொல்வதை நாம் மறக்கக் கூடாது.

ஸ்ரீசங்கராசார்யரும் ராமாநுஜாசாரியரும் தங்களுடைய முகவுரைகளில் கிருஷ்ணனுடைய பெருமையைப் பற்றியே சொல்லுகிறார்கள். ஸ்ரீமத்வாசார்யரோ வியாஸ பகவானையும் மஹாபாரதத்தையுமே கொண்டாடி, அந்த இதிஹாஸத்தின் ஹிருதயமே கீதையென்கிறார். இந்த பேதத்தைக் கவனித்தால் இரண்டு விஷயங்கள் வெளிப்படும்.

(1) ஸ்ரீ வேத வியாஸர் பகவானுடைய அவதாரமா? ஸ்ரீ வேதாந்த தேசிகருடைய மதத்தில் அவர் ஈசுவரனுடைய அவதாரமல்ல, மஹர்ஷி மாத்ரமே. மற்ற மனுஷ்யர்களைப் போல் குற்றங்களையும் குறைகளையு முடையவர்; அவருக்கும் பிராரப்த கர்மானுபவ முண்டென்கிறார். இதை நாலாவது அத்யாயம் 8, 9. சுலோகங்களுக்கு அவர் செய்திருக்கும் வியாக்யானத்தில் பார்க்க. ஸ்ரீமத்வாசாரியரோ, அநேக பிரமாணங்களை எடுத்துரைத்து, வேத வியாஸர் பகவானுடைய அவதாரமே யென்று நிரூபிக்கிறார்; சங்கரமதத்தைத் தழுவி வியாக்யானஞ் செய்தவர்கள் பெரும்பாலும் இதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். வசிஷ்டாத்வைத மதத்திலும் இதைப்பற்றி அபிப்பிராய பேதமுண்டு. சென்னை ஆனந்தா அச்சுக் கூடத்தில் பிரசுரிக்கப்பட்ட ஸ்ரீ பாஷ்யத்திற்கும் கீதைக்கும் முகவுரையில், வியாஸருடைய தெய்வத்தன்மையைப் பற்றிப் பல ஆதாரங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

(2) கீதை தற்காலத்தில் நமக்குக் கிடைத்திருக்கிற ரூபமாய் வியாஸரால் செய்யப்பட்டதா? அல்லது கிருஷ்ணனால் செய்யப் பட்டதா?

கீதையின் 18 அத்யாயங்களும் சுலோக ரூபமாய் இப்பொழுது உள்ளபடி கிருஷ்ணனால் சொல்லப்பட்டதென்று சிலருடைய மதம். பாரதத்தில் அதற்கு ஒரு தகுந்த இடத்தைக் கற்பித்ததே வேத வியாஸர் செய்த வேலையென்று அவர்கள் வாதிக்கிறார்கள். ஆனால் வேறு சிலர் "பாரதத்தின் மற்ற பாகங்களை வியாஸர் செய்ததைப் போல் கீதையையும் அவரே செய்தார்; ஆத்ம தத்வத்தையும் தர்மத்தையும் ஸம்வாதரூபமாய் அந்தப் பாரதத்தில் பலவிடங்களில் உபதேசிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் இந்த அருமையான விஷயங்களை உபதேசித்திருக்கலாம். ஆனால் ஸ்ரீ வேதவியாசர் அதைத் தானே நேரில் கேட்டுப் பிறகு சுலோக ரூபமாய்ச் செய்தாரென்பதற்குப் பாரதத்திலிருந்தே அநேக பிரமாணங்கள் சொல்லப்படுகின்றன"வென்று நினைக்கிறார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணனும் வியாஸரும் ஈசுவரனுடைய அவதாரங்களென்று நம்பும் ஆஸ்திகர்களுக்கு இந்த விவாதமேயில்லை. ஈசுவரனென்றால் ஸர்வக்ஞனென்று சொல்லவேண்டுமோ? ஒரு ரூபமாய்ச் செய்த உபதேசித்ததை வேறொரு ரூபமாய் வசனத்தாலோ சுலோகத்தாலோ வெளிப்படுத்தி யிருக்கலாம். வேறொரு பாஷையில் கிருஷ்ணனால் உபதேசிக்கப்பட்ட தத்வங்களை, அல்லது குரு சிஷ்யக் கிரமமாய் வசன ரூபமாய் உபதேசிக்கப்பட்ட தத்வங்களை, ஸ்ரீ வேதவியாஸர் மாற்றாமல் சுலோகரூபமாய் எல்லோரும் வழங்கும் பாஷையில் இயற்றி யிருக்கலாமென்றும் ஒப்புக்கொள்வதில் விரோதமில்லை.

இந்த நூலுக்குப் பகவத்கீதை யென்று பெயரிடப்பட்டிருப்பதால் பகவானே இதற்குக் கர்த்தா; வேறொருவர்க்கும் இதில் ஸம்பந்தமில்லை யென்று ஒரு ஸித்தாந்தமுண்டு. ஆனால் பாரதத்திலும் மற்றவிடங்களிலும் ஸம்வாதரூபமாகவே பூர்வ கதைகளைச் சொல்வதும் தர்மத்தை யுபதேசிப்பதும் வழக்கம். கோபிகா கீதை, குரு கீதை, சுருதிகீதை, பிரமரகீதையென்றவர்களைச் செய்தவர்கள் கோபிகளும் சுருதியும் பிரமரமுமே. வியாஸருக்கு அதில் ஸம்பந்தமில்லை யென்று சொல்வதுண்டோ?

கீதை கிருஷ்ணனால் அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்டது; அதை ஸஞ்ஜயன் கேட்டுக்கொண்டிருந்து திருதராஷ்டிரனுக்குச்

சொன்னான். வியாஸர் யுத்தத்திற்கு முன்பு குருகுலத்தரசனை நோக்கி, "இனி நடக்கும் யுத்தத்தில் யாவற்றையும் நேரில் பார்க்கக் கூடிய ஞானதிருஷ்டியை உனக்குக் கொடுக்கிறேன்" என்றார். ஆனால், தன் இனத்தோர் மடிவதைப் பார்த்து ஸஹிக்கமுடியாத அவ்வரசன் அதை வேண்டாமென்று மறுத்துவிட்டான். பிறகு ஸஞ்ஜயனுக்கு அந்தத் திவ்ய திருஷ்டியைக் கொடுத்து, பாரத யுத்தத்தில் வெளிப்படையாய் நடக்கும் ஒவ்வொரு விஷயத்தையும் அந்தரங்கமாய் விளங்கும் ஒவ்வொருவருடைய எண்ணங்களையும் காரணங்களையும் நேருக்கு நேராய் அறியச் செய்தார். "இரவிலோ பகலிலோ, செய்கையோ சொல்லோ எண்ணமோ, ஸஞ்ஜயனுக்குத் தெரியாத விஷயமில்லை. மேலும் எவ்விதமான அஸ்திரங்களாலும், சஸ்திரங்களாலும், தேவதைகளாலும், பூதகணங்களாலும், அவனுக்கு யாதொரு இடையூறும் நேராது; அவனுக்குத் தூக்கத்தாலும் பசியாலும் தாஹத்தாலும் களைப்பாலும் தடையிராது." இந்த வரப்பிரஸாதத்தால் ஸஞ்ஜயன் எல்லோருடைய எண்ணத்தையும் அறிந்து, அவர்களுடைய சொற்களை உள்ளபடியே வெளியிட்டான். பகவானுக்கும் அர்ஜுனனுக்கும் ஏகாந்தத்தில் நடந்த ஸம்பாஷணையையும், அவர்களுடன் மூன்றாவது மனிதனாய்க் கூட இருந்ததைப் போல் கேட்டான். பீஷ்மர் துரோணர் முதலிய பிரம்ம ஞானிகளுக்கும் பார்க்க முடியாத விசுவரூபத்தைக் கண்டான். இப்படியே ஸ்ரீமத்ராமாயணத்தின் உத்பத்தியைக் கவனிக்கும் பொழுது அந்தப் புண்ய சரித்ரமும் சதுர்முக பிரம்மாவால் வால்மீகி மஹர்ஷிக்கு அருளிச் செய்யப்பட்ட திவ்ய திருஷ்டியாலேயே பார்த்து வர்ணிக்கப்பட்டதென்று விளங்கும்.

"மஹர்ஷே! ராமன், லக்ஷ்மணன், ஸீதை, ராக்ஷஸர்கள், இன்னும் இந்தச் சரித்ரத்தில் ஸம்பந்தப்படும் மற்றவர்கள் செய்த செய்கைகள் யாவும், லோகத்திற்குத் தெரிந்தவையும் தெரியாதவையும் உமக்குப் பூர்ணமாய்த் தெரியக்கடவது. நீர் செய்யும் காரியத்தில் ஒவ்வொரு வார்த்தையும் ஸத்யமா யிருக்கும், பொய்யாகாது. பிரயாஸையின்றிப் பெருங் பிரவாஹமாய்ப் பெருகும். நடந்த விஷயங்களை நடந்தபடி பார்க்கும் திவ்ய திருஷ்டியையும் அவை

கனே நடந்தபடி வர்ணிக்கும் ஸத்யவாக்கையும் உமக்கு அனுக்ரஹித்திருக்கிறேறு''னென்று பிரம்மதேவர் வரங்கொடுத்தார். ஆகையால் பகவத்கீதையும் ஆரம்பம் முதல் கடைசி வரையில் ஸத்யமே. சற்று கவனித்தால் கீதையிலும் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திலும். ராமாயணத்திலும் ஒரே விதமான கேள்வியைச் சிஷ்யன் கேட்கிறுனென்று காணலாம். அதற்குப் பதில் சொல்லும் பொழுது ஒரே விதமான ஆத்மதத்வம் உபதேசிக்கப்படுகிறது.

ராமாயணத்தில் "அனந்த கல்யாண குணங்கள் பொருந்தின மனுஷ்யன் யார்" என்பதே வால்மீகியின கேள்வி. "மஹாவிஷ்ணுவின் அவதாரமாய் இக்ஷ்வாகு குலத்தில் லீலாமானுஷரூபியாய் விளங்கும் ஸ்ரீராம சந்திரனே புருஷோத்தமன். பராபர''மென்று நாரதமஹரிஷி பிரம்மவித்யையை உபதேசித்தார். விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் யுதிஷ்டிரர் பீஷ்மரைப் பார்த்து "இவ்வுலகத்தில் எல்லோராலும் போற்றப்படும் ஒரே தைய்வம் எது? குற்றமற்றுத், தன்னிலும் உயர்ந்ததில்லாத மங்களஸ்வரூபமாயிருப்பதால், எல்லாவற்றிற்கும் மேலான பரமபுருஷார்த்தமென்று தாங்கள் எதை நினைக்கிறீர்கள்? மனிதர்கள் யாரை ஸ்துதித்தால், யாரை ஆராதித்தால், இஹத்தில் பரம ஐசுவரியத்தையும், பரத்தில் முக்தியையும் அடைவார்கள்? பலவிதமாய் உபதேசிக்கப்பட்டிருக்கும் தர்மங்களில் ஸர்வோத்தமமான தர்மமென்று தாங்கள் எதை நினைத்திருக்கிறீர்கள்? ஜீவன் எதை ஜபம் செய்துகொண்டிருந்தால் ஜனனமரணரூபமான இந்த ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுகிறு''னென்று பீஷ்மாசார்யரைக் கேட்டார். அதற்கு அந்தப் பிரம்மஞானி "ஜகத்திற்குப் பிரபுவாயும், தேவர்களுக்கும் தேவனுயும், காலதேச வஸ்துக்களால் அளவில்லாதவனுயும், புருஷோத்தமனுயும் விளங்கும் பரவாஸுதேவனை அவனுடைய ஆயிரம் திவ்ய நாமங்களால் எக்காலத்திலும் துதிப்பதும், பக்தியுடன் அவரை ஆராதித்து அவருக்கே அடிமை பூண்டு அவரே தனக்கு ஸ்வாமியென்று உபாஸிப்பதும், அவரையே தியானஞ்செய்வதும், அவரையே நமஸ்காரஞ்செய்வதும், அவரையே ஸ்மரிப்பதும், தன் யாவற்றையும் அவருடைய கைங்கர்யத்தில் அர்ப்பணஞ்செய்வதும், ஜீவன் செய்யக்கூடிய பரம மோக்ஷோபாயம். ஆதியந்தமற்றவனும், எங்கும் வியாபித்திருப்பவனும், ஸகலலோகங்களுக்

கும் மஹேசுவரனும், வேதங்களின் பரம தாத்பர்யமுமாய் விளங்கும் அவரை எப்பொழுதும் கொண்டாடுவதால் ஸமஸ்த துக்கங்களேயும் தாண்டுகிறுன். ஸகல தர்மங்களேயும் அறிந்தவரும், தன் பக்தர்களுக்கு அழிவற்ற கீர்த்தியைக் கொடுப்பவரும், லோகநாதனும், ஸகல பிராணிகளின் இருப்புக்குக் காரணமுமான பகவானைத் துதிப்பதே ஸம்ஸாரத்தை ஒழிப்பதற்கு மேலான மார்க்கம். புண்டரீகாக்ஷனைப் பக்தியுடன் ஸ்தோத்ரங்களால் ஆராதிப்பதே ஸர்வோத்தமமான தர்ம"மென்று பிரம்மவித்யையையே உபதேசித்திருக்கிறுர்.

இந்தப் பகவத்கீதையிலும், ஒருவன் அனுஷ்டிக்கவேண்டிய தர்மம் என்னவென்று ஸந்தேகமுண்டாகும்பொழுது, அந்த ஸம்சயத்தை வேருடன் களேந்து, பிரம்ம வித்யையை உபதேசிப்பதே கருத்தாகும்.

## என் அபிப்பிராயம்

வேத வியாஸ பகவானுல் கீதை எப்பொழுது செய்யப்பட்டது? பாரத யுத்த கதையில் இதுவும் ஒரு பாகமா? மற்ற ஸம்பவங்களுடன் இதுவும் நடந்ததா? அல்லது வியாஸர் இந்தத் தத்வோபதேசத்தை மஹாபாரதத்தில் பிறகு சேர்த்தாரா? அல்லது பிற்காலத்தில் பிறரால் அவ்விடத்தில் சேர்க்கப்பட்டதாவென்ற கேள்விகள் பலவுண்டு. அத்வைதவமதத்தை அனுஸரிப்பவர்கள், கீதையைப் பாராயணம் செய்வதற்கு முன், வழக்கமாய்ச் சொல்லும் தியான சுலோகங்களில் "பகவான் நாராயணன் தானே இந்தக் கீதாசாஸ்திரத்தைப் பார்த்தனுக்குப உதேசித்தார். அஷ்டாதச புராணங்களின் கர்த்தாவான வேதவியாஸ மஹர்ஷி அதைப் பாரதத்தின் நடுவில் மஹாரத்னத்தைப் போல் கோர்த்தார்" என்றும்; "ஸகல உபநிஷத்துகளுமே பசுக்கள்; கோபாலனென்ற பரமாத்மாவே அதைக் கறக்கும் இடையன்; அர்ஜுனனே கன்று; பிரம்ம வித்யையென்ற பாலேக் கறந்து, ஞானிகளுக்கு அவர் கொடுத்தார்" என்றும்; "அர்ஜுனனுக்குத் தேரோட்டிக்கொண்டே ஸகல ஜீவ கோடிகளின் மேலான க்ஷேமத்தை உத்தேசித்தே கீதையென்ற அமிருதத்தை அருளிச் செய்தா"ரென்றும் சொல்லியிருக்கிறது.

"ஆகையால் ஆத்ம வித்யையை உத்தேசிக்கும் கீதையென்ற சாஸ்திரம், குருவானவர் சிஷ்யனுக்குக் கடைசியாய் தீக்ஷை செய்வித்து, அவன் தானே ஆத்மானுபவம் செய்யத்தகுந்த நிலையை அடைந்தானென்றறிந்து, அவன் ஜயிக்கவேண்டிய காம க்ரோதாதிகளின் ஸ்வரூபத்தையும் பலத்தையும், ஜீவனுடைய ஸ்வரூபத்தையும் சக்தியையும், ஜீவேசுவர பிரபஞ்சங்களின் ஸ்வரூபத்தையும் ஸம்பந்தத்தையும், பிரகிருதியிலிருந்துண்டான முக்குணங்களின் காரியங்களை அடக்கி வசப்படுத்தித் தான் ஜயசாலியாய் விளங்கி மோக்ஷமென்ற ராஜ்யத்தை ஆளவேண்டுமென்பதையும் அவனுக்கு உபதேசிக்கிறார்" என்று ஒரு சார்பாரின் மதம்.

## கீதையின் மதம் எது?

அத்வைதிகள், இந்தக் கீதாசாஸ்திரத்தில் கண்ணன் அர்ஜுனனுக்கு அத்வைதத்தையே உபதேசித்தாரென்பர்; விசிஷ்டாத்வைதிகள், கிருஷ்ணன் விசிஷ்டாத்வைதத்தையே உபதேசித்தாரென்பர்; த்வைதிகள், த்வைத மதத்தையே அநுக்ரஹித்தாரென்பர். சைவ ஸித்தாந்திகள், சைவ விசிஷ்டாத்வைதத்தையே கோபாலன் அநுக்ரஹித்தாரென்பர். இப்படி ஒவ்வொரு மதஸ்தர்களும் அவரவர்களின் ஸித்தாந்தத்தைத் கீதை ஸ்தாபிக்கிறதென்று அதின் சுலோகங்களை அர்த்தஞ்செய்து, அதற்கேற்றபடி சுருதி ஸ்மிருதிகளை எடுத்துரைத்து, நியாய ஸ்தலங்களில் வாதி ப்ரதிவாதிகளுக்கு வகாலத்து வாங்கிக்கொண்டு கக்ஷியை வாதிக்கும் வக்கீல்களைப் போல், பாஷ்யங்களை எழுதியிருக்கிறார்கள். ஆனால் ஸ்ரீ கிருஷ்ணன் இந்த மதங்களில் எதையாவது ஒன்றை உபதேசித்திருக்கவேண்டும். எல்லாவற்றையும் உபதேசித்திருக்க முடியாது. அவைகளில் ஒன்றே உண்மையாயும் மற்றவை தவறாயுமிருக்கவேண்டும். அல்லது, இவை பிரம்ம வித்யையில் அநேகம் படிகளாய் அதிகாரிக்குத் தகுந்தபடி யிருக்கவேண்டும். அல்லது, தத்வத்தைப் பல பலவிதமாய்க் கிரஹித்து அரை குறையாய்ச் சொல்லியிருக்கவேண்டும். முக்யமான பாஷ்யகாரர்களின் வரலாற்றைக் கவனித்தால், அவர்கள் பேதமான ஸித்தாந்தங்களை உபதேசித்தாரென்று சொல்லத் துணியார்கள். ஸ்ரீமத் சங்கராசார்யரோ ஸாக்ஷாத் பரமசிவ

னுடைய அம்சாவதாரமென்று சொல்லுகிறார்கள். அவருக்குப் பரமதத்வம் தெரியாம லிருக்குமா ? ஞான கர்ம பக்தி யோகங்களில் தாரதம்யம் தெரியாமலிருக்குமா ? கண்ணனுடைய கருத்து இன்ன தென்று தெரியாம லிருக்குமா?

ஸ்ரீமத் ராமாநுஜாசார்யரோ கேவலம் ஆதிசேஷனுடைய அவதாரம்.

"சென்றால் குடையாம்; இருந்தால் சிங்காசனமாம்;
நின்றால் மரவடியாம்; நீள்கடலுள் என்றும்
புணையாம் மணிவிளக்காம்; பூம்பட்டாம்; புல்கும்
அணையாம் திருமாற் கரவு." என்றபடி,

திருப்பாற் கடலில் யோக நித்ரை செய்யும் நாராயணனுக்கு ஆஸனமாய்ப் படுக்கையாய் விளங்கி, அவருடன் எப்பொழுதும் ஸம்பந்தத்தைப் பெற்று இணைபிரியாமல் இருப்பவர், பரதத்வத்தைப் பற்றி ஸந்தேஹ விபரீதமறத் தெரிந்துகொண்டிருக்கமாட்டாரா ?

ஸ்ரீமன் மத்வாசார்யர், முக்யப்ராண தேவரென்று சொல்லப்படும் வாயுபகவானுடைய அம்சாவதாரம். மஹாவிஷ்ணு லக்ஷ்மீ யென்ற நித்ய தம்பதிகளுக்கு அடுத்தபடியி லிருப்பவர். அவருக்குப் பரமபுருஷனுடைய ஸ்வரூபமும் ஜீவேசுவர ஸம்பந்தமும் தெரியாம லிருக்குமா? மேலும், பகவத்கீதையை நமக்கு அருளிச்செய்த வேத வியாஸ பகவானைப் பதரிகாச்ரமத்தில் தர்சித்து, அங்கே சிலகால மிருந்து, அவரிடத்தில் உபதேசம்பெற்றுத், தன் பாஷ்யங்களை எழுதினதாய்ச் சொல்லப்படுகிறது. இம்மூவரில் யாரை ஒப்புக்கொள்ளுகிறது? யாரைத் தள்ளுகிறது? யார் ஞானி? யார் அக்ஞானி யென்ற தீராத ஸந்தேஹமும் தர்மஸங்கடமுமுண்டாகிறது. அர்ஜுனனுக்கு நேர்ந்த தர்ம ஸந்தேஹத்தைத் தீர்த்த கிருஷ்ணனே இந்த ஸந்தேஹத்தையும் தீர்ப்பதற்காக அவதாரம் செய்வதைத் தவிர வேறு வழியில்லை.

அல்லது, வேறு சிலர் எண்ணுகிறபடி, இப்பொழுது உலகத்தில் விளங்கும் பாஷ்யங்கள் மூல புருஷர்களான

மதஸ்தாபகர்களால் செய்யப்படவில்லையா? மூலபாஷ்யங்கள் ஸாதாரண ஜனங்களுடைய கண்களில் படாமல் பரமரஹஸ்யமாய், மஹரிஷிகளின் ஆசிரமங்களிலும் குஹைகளிலும் மறைக்கப்பட்டுத், தகுந்த அதிகாரம்பெற்ற சிஷ்யனுக்கே ஸத்குருவால் உபதேசஞ் செய்யப்படுகின்றன''வென்பது உண்மையா? அத்வைதமத வியாக்யானக்காரர்களுள் அபிப்பிராயபேதங்கள் காணப்படுகின்றன. மற்ற இரு மதங்களிலும் அவ்வளவு அதிகமாயில்லை. இதற்குக் காரணமென்ன?

## பதினெட்டு ஏன்?

இது நிற்க, மஹாபாரதத்தின் கதையைக் கவனிக்குமிடத்தில், அதில் அடங்கின பர்வங்கள் 18. கௌரவ பாண்டவ ஸைன்யங்களின் தொகை 18 அக்ஷௌஹிணிகள். அந்த மஹாயுத்தம் நடந்த நாள்களும் 18. அதின் நடுநாயகமாய் விளங்கும் இந்த கீதையில் அத்யாயங்களும் 18. இதைப்போல் பாரதத்தில் நடுவில் கலந்திருக்கும் ஸனத் ஸுஜாதீயம், அனுகீதை, நாராயணீயம், ஸஹஸ்ரநாமம் முதலிய தனி உபதேசங்களில் ஒன்றாவது 18 அத்யாயங்களுடையதாகக் காணப்படவில்லை. இப்படி 18 என்ற எண் அடிக்கடி பாரத கதையில் ஸம்பந்தப்படுவதற்குக் காரணமென்ன? இதின் ரஹஸ்யத்தை விசாரிப்பதற்குப் பூர்வாங்கமாய் வேறொரு விஷயத்தைக் கவனிக்கவேண்டியிருக்கிறது. பாரதத்திற்கு மங்கள சுலோகமாகிய "நாராயணம் நமஸ்கிருத்ய நரஞ்சைவ நரோத்தமம், தேவீம் ஸரஸ்வதீம் வியாஸம் ததோ ஜயம் உதீரயேத்" தென்றதின் தாத்பர்யமென்ன? அதில் இருக்கும் வரிசைப்படி "நாராயணனையும், நர சிரேஷ்டனான நரனையும், ஸரஸ்வதீ தேவியையும், வியாஸரையும், நமஸ்கரித்துப் பிறகு ஜயத்தைச் சொல்லவேண்டியது" என்றே அர்த்தஞ் செய்யவேண்டும். ஆனால் "வியாஸம்" என்ற பெயரை விலக்கி "தேவீம் ஸரஸ்வதீம் சைவ"வென்ற ஒரு பாடமுமுண்டு. ஸ்ரீமந் மத்வாசார்யர் இயற்றின மஹாபாரத தாத்பர்ய நிர்ணயம் 3-வது அத்யாயத்தில், "நாராயணனையும் நரனென்ற ஆதிசேஷனையும் நரோத்தமனென்ற வாயு பகவானையும் லக்ஷ்மீயையும் ஸரஸ்வதீயையும் வியாஸரையும் நமஸ்கரித்து ஜயத்தைத் தருவ

தான இந்தப் பாரதத்தைச் சொல்லவேண்டு''மென்று காணப்படு கிறது. இங்கே நமஸ்கரிக்கப்படவேண்டிய தெய்வங்கள் நாரா யணன், நரன் என்ற ரிஷிகளா? அல்லது நாராயணனென்ற பரமாத் மாவும் நரோத்தமனான அர்ஜுனனுமா? நரனென்ற ரிஷியாயிருந் தாலும் அர்ஜுனனாயிருந்தாலும் ஸரஸ்வதிக்கும் வியாஸருக்கும் அவரை முந்தி வைப்பதற்கு நியாயமில்லை. கேவலம் விஷ்ணு ரூபியான வியாஸ பகவானுக்கு முந்தி ஸரஸ்வதியை வைப்பதும் உசிதமில்லை. நரனென்றதற்கு ஆதிசேஷனென்று அர்த்தஞ்செய் தால், லக்ஷ்மிக்கு அடுத்தபடியான வாயு பகவானுக்கு முந்தி அவரை வைக்க நியாயமில்லை. அவ்விருவர்க்கும் பின் லக்ஷ்மியை வைப் பதும் ஸரியல்ல. பிரஹ்ம விஷ்ணுக்களின் பார்யையை மாத் திரம் எடுத்துக்கொண்டு பரமசிவனுடைய பார்யையை விலக்கி யிருப்பதற்குக் காரணமென்ன? பாரத கதையில் முக்யமான நர நாராயணர்களும் க்ருஷ்ணார்ஜுனர்கள். இந்தக் கிரந்தம் தோஷ மில்லாமல் செய்யப்படுவதற்குக் காரணமான வாக் தேவதையே ஸரஸ்வதி; இதை இயற்றினவர் வியாஸர்; ஆகையால் இவர்களுக்கு நமஸ்கரிக்கவேண்டியது நியாயமென்றால், நாராயணனையும் அவரு டைய பார்யையான லக்ஷ்மியையும் சொல்லும்பொழுது, ஆதிசேஷ னுக்கும் வாயுவுக்கும் ஏற்பட்ட பார்யைகளை மாத்திரம் ஏன் விட வேண்டும்? ஸரஸ்வதியின் பர்த்தாவான பிரம்மாவை ஏன் நமஸ் கரிக்கக்கூடாது? பாரதத்தைச் செய்யும்படி வியாஸருக்குக் கட் டளையிட்டு, அந்த நூலை எழுதுவதற்காகக் கணபதியைத் தியானிக் கும்படி பிரஹ்மா சொன்னார். அவரை நமஸ்கரிப்பது தவறல்லவே.

இது நிற்க, ஜயம் என்ற பதத்தின் கருத்தென்ன? இப்படித் தேவதா நமஸ்காரஞ்செய்துவிட்டு, ஜயமென்று சொல்ல வேண்டு மென்றதால் ஒரு கருத்தும் விளங்கவில்லை. ஜயத்தைத் தருவதான பாரதமென்று அர்த்தஞ் செய்வதற்கு ஆதாரமென்ன? ராமாயணம், விஷ்ணு புராண முதலிய மஹாகிரந்தங்கள் உத்தம பலன்களைக் கொடுக்காதா? அந்தப் பெயர்களைச் சொல்லாமல் அந்த குணங் களின் பெயர்களை மாத்திரம் சொல்வதுண்டா? பிறகு பாரதத்தைப் படிக்கவேண்டுமென்று சொல்வது நியாயமாயும் அழகாயுமிருக்க, ஜயமென்ற பதத்தை உபயோகிப்பதற்குக் காரணமென்ன? இதற்கு

ஒரு ஸமாதானத்தைப் பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஸம்ஸ்கிருதத்தில் ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் எண்ணிக்கையுண் டென்றும், அவைகளை அனுஸரித்தே மந்த்ரசாஸ்திரம், ஜ்யோதிஷம், புராணம், வேதாந்தம் முதலியவைகளில் பெயர்கள் ஏற்பட்டிருக்கின் றன வென்றும், அவைகளில் பரம ரஹஸ்யங்கள் அடங்கி யிருக்கின் றன வென்றும் கேள்விப்பட்டிருக்கிறோம். அப்படியே இங்கே ஜய வென்ற பதத்தில் 'ஜ' என்ற எழுத்திற்கு 8 என்றும், 'ய' வென்ற எழுத்திற்கு 1 என்றும் ஏற்படும். மெய்யெழுத்துகளில் கவர்க்கத் தில் 'ஜ' எட்டாவதல்லவா ? அப்படியே யரலவசஷஸஹ என்ற வரிசையில் "ய" முதலாவது. ஆகையால் கடபயாதி கணக்குப்படி எழுத்துகளைத், திருப்பிவாசிக்கவேண்டுமென்ற விதியை அனு ஸரித்து, "ஜய" வென்ற பதத்திற்கு 18 என்று அர்த்தமாகிறது. இந்த எண்ணிக்கை பாரதத்திற்கு ஓர் அடையாளப் பெயராயிருக் கலாம். ஆனால், இந்த எண்ணால் பாரதமென்ற இதிஹாஸமே குறிக் கப்படுகிறதாவென்று கவனித்தால், அதின் உள்ளுறைப் பொரு ளான ஜீவேசுவர ஸம்பந்தமும், ஜீவனுடைய விகாஸ முறையும், முக்தி தசையுமே குறிக்கப்படுகின்றன.

அர்ஜுனன் ஜீவனென்றும், கிருஷ்ணன் ஈசுவரனென்றும், மதம் வெளிப்படையாய் ஜீவனாலும் உண்மையாய் ஈசுவரனா லுமே இந்தப் பிரபஞ்ச நாடகமும் ஜீவன்களின் பாபபுண்ய விருத்திகளின் நித்யமான யுத்தமும் நடக்கின்றன. அப் படியே, அந்தப் பாரத யுத்தத்திலும் அர்ஜுனனை ஓர் நிமித்த மாய் வைத்துக்கொண்டு கிருஷ்ணனே ஸர்வ ஸம்ஹாரத்தைச் செய்ததாகச் சொல்லியிருக்கிறார். உலகத்திலுள்ள ஸகல மத கிரந்தங்களிலும் ஜீவனுடைய ஸம்ஸார நிலையைக் காட்டுவதற்கு ஐந்து என்ற எண்ணும், முக்தி நிலையைக் காட்டுவதற்கு ஏழு என்ற எண்ணும் பெரியோரால் உபயோகிக்கப்பட்டு வந்ததென்பது ஸகல மத தாரதம்ய விசாரம் செய்யும் பண்டிதர்களுக்குத் தெரிந்த விஷயமே. த்ரிலோகங்களிலுள்ள யாவும் ஐந்து ஐந்தாய்ப் பிரிக்க ப்பட்டிருக்கிறதென்று தைத்திரீய உபநிஷத்திலும் சொல்லப் படுகிறது. இதைப் போல் பிரபஞ்சத்தைக் குறிக்கும் எண் பத்து என்பது தத்வ ஞானிகளுக்குத் தெரிந்த விஷயம். ஒன்று முதல்

ஸவதந்திரமாய் முடியும் எண் அதே. அதற்குமேலாக,முன்வந்தவை களைக் கலந்தேயிருக்கும். இந்தப் பத்து என்ற எண்ணையும் வழக்கப் படி 10 என்றெழுதாமல் ஓர் வட்டத்திற்குள்ளாக அதைத் தொடா மல் ஓர் நேர்கோட்டை இழுப்பதால், பிரம்மாண்டமும் அதற்கு அந்தர்யாமியான ஈசுவரனும் குறிக்கப்படும். அக்காரணத்தாலேயே கீதையில் 10-வது அத்யாயத்தில், பகவான் பிரபஞ்சத்தில் ஊடுருவி நின்று, எங்கெந்த பதார்த்தங்களால் தன் மஹிமையை வெளிப் படுத்துகிறாரென்று சொல்லியிருக்கிறது. ஆனால், பிரபஞ்சத்தை உள்ளும் புறமும் வியாபித்து, அண்டங்கள் பதினொன்கிற்கும் அப் பாலும் மிப்பாலு நின்று விளங்கும் பிரம்மத்தைக் குறிக்கும் எண் பதி னொன்று; விஷ்ணுவென்ற பதத்தின் பொருளான ஸர்வ வியாபகசக்தி யென்றதைக் காட்டும் எண் அதே. ஆனதால் பதினைந்து திதி களில் பதினோராவதான ஏகாதசிக்கு ஹரிதினமென்றும் ஹரிவாஸர மென்றும், அன்று உபவாஸ நியமத்துடன் பகவானைத் தியானஞ் செய்வது ஸாபல்ய மென்றும், சீக்கிரமாய்ப் பயனைக் கொடுக்குமென் றும் கேட்டிருக்கிறோம். மேலும், கீதையில், பகவான் இந்தச் சராசர பிரபஞ்ச ரூபியாயும் அதற்கு நாதனாயும் விளங்கும் விசுவ ரூபதர்சனம் பதினோராவது அத்யாயத்தில் சொல்லப்படுகிறது. ஆகையால், பதினொன்று என்ற எண் பிரபஞ்ச அதீதமான பரஸ்வ ரூபத்தைக் காட்டுகிறது. ஜீவன் ஈசுவரனுடைய ஸாயுஜ்யத்தை யடைந்து விளங்கும் நிலைமையை இவ்விரண்டு எண்களின் சேர்க்கை யான பதினெட்டு என்ற எண் குறிக்கிறது.

பரமாத்மாவான கண்ணனுடன் பிறந்த ஸுபத்ரையே பிரம்ம வித்யை. அவளை அர்ஜுனனுக்கு மனைவியாகக் கொடுத்ததால் ஜீவ னுக்கு பகவானே குருவாயிருந்து பிரம்மவித்யையை உபதேசித்ததா கும். அர்ஜுனன் ஸந்யாஸ வேஷம் பூண்டு பலராமரை வஞ்சித்து, ஸுபத்ரையை அழைத்துக்கொண்டு போய்விட்டானென்றும், அதற் குக் கண்ணன் உதவிசெய்தாரென்றும், ஸாதாரணமாய்ச் சொல்லப் படும் கதை நியாய விரோதமானது. அர்ஜுனனுக்காவது கிருஷ் ணனுக்காவது கொஞ்சமேனும் தகுந்ததல்ல. ராவண ஸந்யாஸிக் கும் அர்ஜுனனுக்கும் பேதமில்லையென்று ஏற்படும். ஆனால் ஜீவன், பரம வைராக்யத்தை யடைந்து, ஆத்ம வித்தையில் மனம் நாடி

இல்லறத்தைத் துறந்து, ஸந்யாஸம் கொண்டாலொழிய, அவனுக்குப் பிரம்ம வித்யை கிடைக்காதென்ற அரிய உபதேசமல்லவா இதனால் விளங்குகிறது?

பகவத்கீதையைப் பக்ஷபாதமின்றி மதத்வேஷமின்றி பரிசீலனை செய்தவர்களுக்குச் சில விஷயங்கள் விசாரிக்கத் தகுந்தவைகளாய்த் தோன்றும்; (1) கீதையை அர்ஜுனனுக் குபதேசித்த கிருஷ்ணன் யார்? மஹாவிஷ்ணுவென்றால், பதினன்கு லோகங்களடங்கின இந்தப் பிரம்பாண்டத்தைப் படைத்துக் காத்து அழிக்கும் பிரம்மா? விஷ்ணு, ருத்ரனென்ற த்ரிமூர்த்திகளில் ஒருவரான விஷ்ணுவா? அல்லது, எண்ணிறந்த பிரம்மாண்டங்களுக்கு அதிபதிகளான த்ரிமூர்த்திகளுள் ஒருவரான மஹாவிஷ்ணுவா? அல்லது, யாவற்றிற்கும் மூலகாரணமான பரப்ரஹ்மமா? க்ஷீராப்தியில் ஆதிசேஷ சயனத்தில் யோகநித்ரை செய்யும் ஆதிநாராயணனே சேஷசயனத்தை விட்டு அப்படியே மதுரையில்வந்து கிருஷ்ணனைய் அவதரித்தாரென்று அவரைப் பூர்ணவதாரமாய் எண்ணுகிறவர் சிலர். பாகவதம் 10-வது ஸ்கந்தம் கிருஷ்ண ஜனன கதையில் "விஷ்ணுவின் அம்சாவதாரமான" என்ற வாக்கியத்தால் அவர் விஷ்ணுவின் அம்சாவதாரமே யென்று எண்ணுகிறவர் சிலர்.

மேலும், கிருஷ்ணன் மனுஷ்ய சரீரத்தை விட்டுத் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளின பொழுது, ஓர் தேஜோமயமான ரூபம் அந்தத் தேஹத்திலிருந்து கிளம்பி, ஸகல லோகங்களையும் தாண்டி, வைகுண்டத்திற்குச் சென்றதென்றும், ஆனல் ஸ்வர்க்க லோகத்தில் தேவர்களால் ஒரு ரூபம் பூஜிக்கப்படுகிறதென்றும், பாரதம் மௌஸலபர்வத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியே ஸ்ரீராமன் நித்ய விபூதிக்கு எழுந்தருளின பொழுதும், ஸ்ரீ வைகுண்டத்திற்குச் சென்றதாய் ஸ்ரீமத் ராமாயணம் உத்தரகாண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல், தசரதராமன் லோக பாலர்களின் ஸபைகளில் ஒன்றன யமஸபையில் வீற்றிருப்பதாய் ஸபாபர்வத்தில் சொல்லப்படுகிறது. இப்படி யிருந்தால் ஸ்வர்க்கலோகத்தில் காணப்படும் ரூபம் யார்? கர்மபந்தத்திற் குட்பட்ட ஜீவன்களைப்போல் ராம கிருஷ்ணர்களுக்கும் ஸ்வர்க்க முண்டோ? மூன்று லோகங்களுக்கும் பிரளயம் ஏற்படும்பொழுது, அந்த ரூபங்களும் அழியுமோ?

மேலும், கிருஷ்ணன் கீதையை அர்ஜுனனுக்கு உபதேசித்த ஸமயத்தில், தான் யோகநிலையிலிருந்து அதைச் சொன்னதாயும், அந்நிலையைத் திரும்பவும் வருவித்துக்கொண்டு அப்படி உபதேசிப்பது ஸாத்யமல்லவென்றும், அசுவமேத பர்வத்தில் சொல்லி, அதற்குப் பதிலாய் அனுகீதையை உபதேசித்திருக்கிறார். பூர்ண பிரம்மமான கிருஷ்ணனுக்கு ஸாதாரணமான பிரக்ஞையென்றும், ஸமாதியில் அகண்டமான பிரக்ஞையென்றும் இரண்டுண்டோ? அல்லது, கிருஷ்ணார்ஜுனர்கள் நரநாராயணரென்ற புராதன ரிஷிகளின் அவதாரமென்று பாரதம் உத்தியோக பர்வத்தில் சொல்லியிருப்பது உண்மையா?

(2) கீதையென்பது யாது? கிருஷ்ணனென்ற ஓர் அவதார புருஷன், அக்காலத்திலுள்ள இதர மனிதர்களுக்கு மேலான ஞானம் சக்திமுதலிய அனந்த கல்யாணகுணங்களால் அலங்கரிக்கப்பட்டு, பெரும்பாலும் எல்லோரால் ஈசுவராவதாரமென்றே ஒப்புக்கொள்ளப்பட்டுக், கீதையை உபதேசித்தாரென்று பிரவித்தமான கொள்கை. ஆனால் அந்த உபதேசம் அவர் செய்தபடி நமக்குக் கிடைத்திருக்கிறதா? இப்பொழுது வழங்கும் கீதையில் 700-சுலோகங்கள், 18-அத்யாயங்களாய்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இந்த சுலோகங்களைப் பகவான் தானே நேரில் சொன்னாரா! அப்படியானால், முதலாவது அத்யாயத்திலும் இரண்டாவது அத்யாயத்தின் ஆரம்பத்திலும், கிருஷ்ணனுடைய வாக்யமேயில்லை. இடைக்கிடையே அர்ஜுனனும் ஸஞ்ஜயனுமே பேசுகிறார்கள். இவைகளையும் 18-வது அத்யாயத்தின் முடிவிலுள்ள சில சுலோகங்களையும் விலக்கி மிகுந்ததே கண்ணனுடைய உபதேசமாகும்.

அதுவும் இப்பொழுது காணப்படும் விதமாயிருக்க நியாயமில்லை. ஏனென்றால், ஸாதாரணமாய் மனிதர்கள் பேசும் பொழுதும், உபதேசஞ் செய்யும்பொழுதும் வசன நடையை உபயோகிக்கிறார்களேயல்லாது செய்யுளையும் விருத்தங்களையும் உபயோகிப்பதில்லை. இக்காரணத்தால் ஸ்ரீமத் சங்கராசார்யர் தன் பாஷ்யத்தின் முன்னுரையில், "வேத வியாஸ பகவான் கண்ணனுடைய உபதேசத்தை 700 சுலோகங்களாய் இயற்றினு"ரென்று சொல்லுகிறார். ஸஞ்ஜயன் தான் கேட்ட உபதேசத்தைத் திருதராஷ்டிரனுக்கு வசனரூபமாகவே

சொல்லியிருக்கவேண்டும். மேலும், கடோபநிஷத்தில் காணப்படும் பல வாக்கியங்கள் கீதையில் சுலோகரூபமாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவை பாகவதம் 11-வது ஸ்கந்தத்திலும் வருகின்றன. இப்படியே, ஸூதஸம்ஹிதையின் நடு நாயகமான பிரம்ம கீதையில், 10 உபநிஷத்துகளின் வாக்யங்கள் சுலோகரூபமாய் எழுதப்பட்டிருக்கின்றன. அவைகளுக்கு ஸாயணாசாரியர் விஸ்தாரமான உரை செய்திருக்கிறார். ஆகையால், உபநிஷத்துகளின் கருத்தைக் கண்ணன் உபதேசித்திருக்கவேண்டும். அதை வியாஸர் சுலோகரூபமாய் விரித்துரைத்திருக்கவேண்டும். கண்ணன் விஜயனுக்குபதேசித்த அஸல் வாக்யங்கள் எவையென்றும் நமக்குத் தெரியாது. எந்தப் பாஷையில் அவர்கள் பேசிக்கொண்டார்களென்றும் தெரியாது. வியாஸருடைய மொழிபெயர்ப்பே நமக்குக் கிடைத்திருக்கிறது.

இரண்டு ஸைன்யங்களும் யுத்தத்திற்கு ஆயத்தமாய் நின்றுகொண்டிருக்கையில், ஆயுதப்பிரயோகம் தொடங்கினபொழுது, கிருஷ்ணனும் அர்ஜுனனும் இரண்டு படைகளுக்கும் நடுவில் தேரில் உட்கார்ந்துகொண்டு வேதாந்த விஷயங்களைப்பற்றி வினுவிடைகளாய் விசாரித்துக்கொண்டிருந்தார்களென்று சொல்வது பொருந்தாது. வெகு வேகமாய் வாசிப்பவர்களுக்கும் இந்த 700 சுலோகங்களைப் படிப்பதற்கு ஸுமார் மூன்று மணி பிடிக்கும். ஒரு யாமம் வரையில் இவ்விருவரும் தத்வவிசாரம் செய்துகொண்டிருந்ததை இருதிறத்து வீரர்களும் சைன்யங்களும் கண்டு, அந்த ஸத்காலக்ஷேபம் முடியட்டுமென்று பக்தி சிரத்தையுடன் காத்துக்கொண்டிருந்தார்களா? அப்படி அதுவரையிலாவது அதற்குப் பிறகாவது யாராவது அப்படிச் செய்ததுண்டா? கண்ணனால் உபதேசிக்கப்பட்ட கீதை நான்கு சுலோகங்களையுடையதென்றும், ஏழு சுலோகங்களையுடையதென்றும், ஒரே சுலோகமென்றும் சிலர் சொல்வதைக் கேட்டிருக்கிறோம்.

பிரம்மவித்யையை உபதேசிப்பது கண்ணனுடைய உத்தேசமா? அர்ஜுனன் அவரை அதை உபதேசிக்கும்படி வேண்டினனா? இல்லை. பந்துக்களைக் கொல்வது தர்மமா? கொல்லாமல் விட்டுப் பிக்ஷையெடுத்துப் பிழைப்பது தர்மமா? இந்த விஷயத்தில் அவனு

க்குப் பெரிய ஸந்தேஹமுண்டாயிற்று. அதைத் தீர்க்கவேண்டு மென்றே கண்ணனைச் சரணமாயடைந்தான். கண்ணன் அதற்கிசைந்து, யுத்தஞ்செய்வதே அர்ஜுனனுடைய தர்மமென்றும் மேலான ஸ்வர்க்கத்தையும் கீர்த்தியையும் கொடுப்பதற்கும் அதே ஸுலபமான ஸாதனமென்றும், பந்துக்களை அவன் கொல்லுகிறானென்பதும் அவனால் அவர்கள் கொல்லப்படுகிறார்களென்பதும் உண்மையல்லவென்றும், கொல்லப்படும் தேஹங்கள் என்றும் நாசம் அடையும், அவைகளை உபயோகிக்கும் ஆத்மா அழிவற்றவனென்றும், ஆகையால் அதைப்பற்றித் துக்கமடையக் காரணமில்லையென்றும், யுத்தஞ் செய்யாதிருப்பதால் இகத்திலும் பரத்திலும் பல கெடுதிகள் நேரிடுமென்றும், பலாபேக்ஷையின்றிக் கருமங்களைச் செய்வதே தர்மமென்றும் அப்படிச் செய்தால் அந்தக் கர்மபலன்கள் செய்கிறவனைப் பற்றாவென்றும் தெளிவாயும் விஸ்தாரமாயும் நிரூபித்து முடித்தார். இந்த உபதேசம் இரண்டாவது அத்யாயம் 11-வது சுலோகம்முதல் 38-வது சுலோகம் வரையில் காணப்படுகிறது. அதற்குப் பிறகு காணப்படும் அத்யாயங்களும் சுலோகங்களும் அர்ஜுனனுடைய கேள்விக்கு ஸம்பந்தப்பட்ட உத்தரமல்ல; கேவலம் தத்துவ விசாரமே. ஆகையால் உண்மையான கீதை இதேயென்று சிலருடைய கொள்கை.

இப்பொழுது காணப்படும் விதமாய் 18-அத்யாயங்களாகப் பிரித்தது யார் ? வியாஸர் ஏற்படுத்தினரா ? அவைகளுக்குப் பெயரிட்டது யார் ? யோகமென்ற பதத்திற்கு அர்த்தம், நமது சித்த விருத்திகளை அடக்குவதேயென்று பதஞ்சலி பகவான் யோகஸூத்ரத்தில் சொல்லியிருக்கிறார். கண்ணன் யோகமென்பது ஸமத்வம் என்றும், கர்மங்களைச் செய்வதில் ஸாமர்த்தியமேயென்றும், அதற்கு விவரணம் செய்திருக்கிறார். லோகரீதியாய் அஷ்டாங்கயோகமென்றும், ராஜயோகம், ஹடயோகமென்றும், லயயோகமென்றும், லம்பிகாயோகமென்றும், ஞானயோகம், பக்தியோகம், கர்மயோகமென்றும் பதங்களை உபயோகிக்கும்பொழுது, மனிதன் மேலான சக்திகளையும் அறிவையும் அடைவதற்கு அனுஷ்டிக்கவேண்டிய சில அப்யாஸ முறைகளேயென்று விளங்கும். ஆனால், கீதைக்கு யோக சாஸ்திரமென்று பெயர். ஜீவன் ஈசுவரனுடைய ஸாயுஜ்யத்தை

அடையும் மார்க்கத்தை உபதேசிக்கும் சாஸ்திரமென்று அதற்குப் பொருள் சொல்லலாம். அதை உபதேசிக்கும் பரம குருவான கண்ணனுக்கு யோகேசுவரனென்று பெயரிடப்படுவது உசிதமே. ஆனால் கீதையின் 18 அத்யாயங்களில் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு யோக மென்று பெயரிடப்பட்டிருக்கிறது. அவை தனித்தனி விஷயங்களை உபதேசித்தாலும், யோகமென்ற ஸாதனமாயிருக்க நியாயமில்லை. முதலாவது அத்யாயத்திற்கு அர்ஜுன விஷாதமென்று பெயர். அர்ஜுனன் தர்ம ஸந்தேஹத்தால் கலவரமடைந்தது யோகமுறையென்று சொல்லமுடியுமா? பகவானால் உபதேசிக்கப்பட்ட முறை இரண்டேயென்றும் அவை ஸாங்க்யம் யோகமென்றும், (III)அவ்விரண்டும் பார்வைக்கு வெவ்வேறாய்த் தோன்றினாலும் உண்மையில் ஒன்றேயென்றும், இரண்டாலும் ஒரே நிலை அடையப் படுகிறதென்றும், அவைகளை வெவ்வேறாய் எண்ணுகிறவர்கள் அறியாத பாலர்களென்றும், பண்டிதர்களல்லவென்றும், (V-4, 5-ல் பகவானே சொல்லி யிருக்கிறார். ஆனால் இரண்டாவதில் ஸாங்க்ய யோகமும் மூன்றாவதில் கர்மயோகமும் உபதேசிக்கப்படுவதாய்ச்சொல்லப்படுகிறது. ஸாங்க்யயோகமே ஞானயோகமென்றால் நான்காவதிற்கு ஞானயோகமென்று பெயரிடப்பட்டதற்குக் காரணமென்ன? ஐந்தில் ஸந்யாஸ யோகமும், எட்டில் அப்யாஸ யோகமும், பத்தில் விபூதி யோகமும், 11-ல் விசுவரூப தர்சனமும், 13-ல் க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாகமும், 14-ல் குணத்ரய விபாகமும், 15-ல் புருஷ புருஷோத்தமர்களின் லக்ஷணமும், 16-ல் தைவாஸுர ஸம்பத் லக்ஷணமும், 17-ல் சிரத்தாத்ரய லக்ஷணமும் அடங்கியிருக்கின்றன. இவைகளில் விபூதியையும் விசுவரூபத்தையும் பற்றிச் சொன்னவைகளைத் தவிர மிகுந்த யாவும் ஞானயோக கர்மயோகங்களுக்கு அங்கங்களாய் அவைகளில் அடங்கியிருக்கின்றன. 12-ல் சொல்லப்படும் பக்தி யோகமும் கர்ம யோகத்தின் ஒரு சார்பே. 5-ல் சொன்ன ஸந்யாஸயோகமும் 18-ல் சொன்ன மோக்ஷஸந்யாஸயோகமும் வேறா? இப்படி இரண்டு வகையான ஸந்யாஸமுண்டென்பதற்கு இதரப் பிரமாணங்கள் எவை? ஸந்யாஸம் மோக்ஷத்திற்கு ஸாதனமாயிருக்க அப்படியில்லாத ஸந்யாஸமுமுண்டோ? பக்தியோகம் அங்கங்கே சொல்லப்படவில்லையா? 9-ல் பல விஷயங்களும் கலந்

திருக்கின்றன. அவைகளுக்குத் தகுந்த பெயர் கொடுக்க முடியாமல் ராஜவித்யா ராஜகுஹ்ய யோகமென்று சொல்லியிருக்கிறது. அதின் இரண்டாவது சுலோகத்தில், பகவான் தான் செய்யும் உபதேசத்தை வித்யைகளுக் கெல்லாம் ராஜாவென்றும், குஹ்யமான (ரஹஸ்யமான) உபதேசங்களுக்கெல்லாம் ராஜாவென்றும் சிறப்பாய்ச் சொல்லியிருப்பதையே இந்த அத்யாயத்தின் பெயராய் வைக்கப்பட்டிருக்கிறது. முதலாவது சுலோகத்தில் "எதை அறிந்து அக்ஞானத்திலிருந்தும் துக்கத்திலிருந்தும் நீ விடுபடுவாயோ, அந்தப் பரம ரஹஸ்யமான ஞானத்தை விக்ஞானத்துடன் அஸூயையற்ற உனக்கு நான் எடுத்துரைக்கிறேன்"னென்று கண்ணன் சொல்லியிருக்க, இதற்கு வேறு பெயர் கொடுக்கப்பட்டதற்குக் காரணமென்ன? 4-வது அத்யாயத்திற்கு ஞானயோகமென்றும், 7-வது அத்யாயத்திற்கு விக்ஞானயோகமென்றும் பெயர் வைத்ததற்குக் காரணமென்ன? இவ்விரண்டையும் சேர்த்து மறுபடியும் 9-வதில் சொல்லுவதாயிருந்தால் அதற்கு ஞானவிக்ஞான யோகமென்றல்லவா பெயர் வரவேண்டும்?

இரண்டாவது அத்யாயத்தில் 38-வது சுலோகம் வரையில் "ஸாங்க்யயோகத்தை உபதேசித்துப் பிறகு கர்மயோகத்தை உபதேசிக்கிறேன்"னென்று கண்ணன் சொல்லியிருக்க, அதற்கு ஸாங்க்ய யோகமென்று பெயரிடலாமா? ஸாங்க்ய கர்ம யோகமென்றல்லவா பெயரிடவேண்டும். இதைப்பற்றியே கீதையின் அத்யாயங்களுக்கு வைத்த பெயர்கள் அவைகளின் விஷயத்தை ஒட்டியில்லையென்றும், அவை பிற்காலத்தில் யாராலோ வைக்கப்பட்டனவென்றும் சிலர் ஸந்தேஹப்படுகிறார்கள்.

## உபதேச ஸ்தலம்.

கீதை உபதேசிக்கப்பட்ட இடத்தையும் காலத்தையும் உபதேசித்த குருவையும் உபதேசம்பெற்ற சிஷ்யனையும் கவனித்துப்பார்த்தால் சில ஸந்தேஹங்கள் உண்டாகின்றன. நமக்கு அக்ஞானம் நீங்கி ஞானம் பிறந்து மோக்ஷத்தையடைவதற்குக் காரணமான தத்வோபதேசத்தைச் செய்யும் இடம், தனித்தும் சாந்தமாயும்

யாதொரு இடையூறில்லாமலும் பரிசுத்தமாயுமிருக்க வேண்டும். ஆகையால், குருவின் ஆசிரமமும் தேவாலயமும் மலைக் குகையும் புண்யநதி தீரமும் புண்ய விருக்ஷத்தின் அடியுமே உசிதம் இவையில்லாத யுத்தகளத்தில், பதினெட்டு அக்ஷௌஹிணி சைன்யங்கள் கூடியிருக்குமிடத்தில், யானைகளும் குதிரைகளும் ஒட்டகங்களும் பசுக்களும் சப்தஞ்செய்யுமிடத்தில் ஆத்ம வித்யைபகவானால் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. "யோகியின் ஆஸனம் மிகவும் பரிசுத்தமான தேசத்தில் அமைக்கப்படவேண்டும். அது ஸ்திரமாயும், அதிக உயரமில்லாமலும், அதிகத்தாழ்வில்லாமலும், அதன்மேல் தர்ப்பையும் மான்தோலும் வஸ்திரமும் பரப்பட்டதாயுமிருக்கவேண்டும்" என்று உபதேச ஸ்தலத்தைப் பகவானே கீதையில் (VI-II) வர்ணித்திருப்பதற்கு இது நேர் விரோதமாயிருக்கிறது.

## உபதேச காலம்.

உபதேசஞ் செய்யப்பட்ட காலமோ வெகு விசித்ரமானது; சிஷ்யனுடைய தேஹத்திலும் மனதிலும் கொதிப்புண்டாய் மயக்கமெடுத்து இந்திரியங்களும் அந்தக்கரணமும் தடுமாறிக்கொண்டிருந்தன. அங்கே கூடியிருக்கிறவர்களுடைய மனதில் கோபமும் த்வேஷமும் ஆத்திரமும் பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்ற நோக்கமும், தங்களுடைய சபதங்களை நிறைவேற்றவேண்டுமென்ற ஊக்கமும் குடிகொண்டிருந்தன. ராஜஸ தாமஸ குணங்கள் பொங்கி வழிந்துகொண்டிருந்தன. ஸத்வகுணம் தலைகாட்டவில்லை. பிரஹ்ம வித்யையை உபதேசிப்பதற்கு வேறு காலமும் வேறு இடமும் கண்ணனுக்குக் கிடைக்கவில்லையோ?

"யோகியானவன் ரஹஸ்யமான இடத்திலிருந்துகொண்டு தன் மனதை ஒருமைப்படுத்தவேண்டும். ஒண்டியாய், சித்தத்தையும் மனதையும் அடக்கி, தனக்கு எதுவும் வேண்டுமென்ற ஆசையில்லாமல், பிறரிடத்திலிருந்து எதையும் எதிர்பாராமலிருக்க வேண்டும். இப்படி மனதை ஒரே நிலையில் நிறுத்திச் சித்தத்தையும் இந்திரியங்களையும் வேறு வழிகளில் செல்லாமல் தடுத்து, மேற்சொன்னபடி ஆஸனத்தில் உட்கார்ந்து, ஆத்ம சுத்திக்காக யோகாப்

யாஸஞ் செய்யவேண்டும்'' என்று, பிரம்ம வித்யைக்கு முதல்படியான யம நியம ஆஸனமென்ற அங்கங்களுக்கே இவ்வளவு கடினமான நிபந்தனைகளை (VI-10, 12-ல்) சொல்லவில்லையா?

பந்துக்களையும் மித்ரர்களையும் கொல்லவேண்டுமேயென்று பரிதபித்து மனந்தளர்ந்த அர்ஜுனனுக்கு முன்னொரு ஸமயத்தில், அதே கௌரவ யுத்தவீரர்களுடன் போர் நடக்கவில்லையா? 'எல்லா விதத்தாலும் என்னால் பூஜிக்கத் தகுந்த பீஷ்மாசாரியரையும் துரோணாசார்யரையும் யுத்தத்தில் எப்படி எதிர்த்துப் பாணங்களைப் பிரயோகிப்பேன்? அவர்களைக் கொல்லாமல் பிக்ஷையெடுத்துப் பிழைப்பது மேலான' தென்று (II 4, 5-ல்) சொல்லவில்லையா? இப்படிச் சொன்ன அர்ஜுனன், விராட ராஜனுடைய புத்ரனை உத்தரனைத் தேரோட்டச்சொல்லி, தான் ஒருவனே கௌரவ ஸைன்யத்தை எதிர்த்துக், கடும்போர் புரிந்து, யாவரையும் வென்று, அவர்களுடைய உடைகளைப் பறித்துகொண்டு போகவில்லையா? அப்பொழுது மனத்தளர்ச்சி ஏன் ஏற்படவில்லை?

## குரு.

ஆத்ம வித்யையை உபதேசிப்பதற்குக் கண்ணன் தகுந்த ஆசாரியனென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால், நமது ஸம்பிரதாயத்தில் பிரஹ்ம வித்யையை உபதேசஞ் செய்வதற்கு பிராமணனுக்கே அதிகாரமுண்டென்று கேள்விப்படுகிறோம். ஆனால், ஜைவலி அஜாத சத்ருமுதலிய சில க்ஷத்ரியர்கள் பிரஹ்ம வித்தையைப் பிராஹ்மணர்களுக்கு உபதேசித்ததாய்ச் சொல்லப்படுகிறது. அந்தப் பிராஹ்மணர்களோ அரசர்களை வேண்டிச் சிஷ்யர்களாய்ச் சென்று உபதேசம் பெற்றார்கள். கண்ணன் ஸர்வேசுவரனானாலும் மனிதனாய்ப் பிறந்து, வர்ணாச்ரம தர்மத்தையும் ஆசாரத்தையும் தான் அனுஷ்டித்துக் காட்டி, க்ஷத்ரிய தர்மத்தை நிலைநிறுத்த வந்தவர். க்ஷத்ரியனான அர்ஜுனனுக்கு க்ஷத்ரியனான தானே உபதேசிக்கலாமாவென்றும், முன் காலத்தில் க்ஷத்ரியனான விசுவாமித்திரர் க்ஷத்ரியனான த்ரிசங்குவுக்கு யாகம் செய்வித்ததை எல்லோரும் கண்டிக்கவில்லையாவென்றும் சிலர் ஆக்ஷேபிக்கிறார்கள்.

## சிஷ்யன்.

பிரஹ்ம வித்யையை உபதேசம் பெறத் தகுந்த சிஷ்யனுக்குள்ள குணங்கள் அர்ஜுனனிடத்திலுண்டா? பிறந்தது முதல் யுத்த மென்ற ராஜஸ வியவஹாரத்திலேயே நோக்கமுள்ளவனாய்க் காலங் கழித்தவன். இல்வாழ்க்கையில் வைராக்யம் பிறக்காதவன். அது வரையில் ஆத்ம வித்யையிலாவது தத்வ விசாரத்திலாவது முயன்றானென்றாவது, விருப்பத்தைக் காட்டினானென்றாவது சொல்லமுடியாது. பாண்டவர்களுக்குள் சாந்தி, பொறுமை, ஸத்யம் ஸமபுத்தி, தர்மானுஷ்டானம் முதலிய நற்குணங்கள் பொருந்தின தர்மபுத்ரரிருக்க; ஆத்மஞானியென்றும் அந்தர்முகி யென்றும் கொண்டாடப்படும் ஸஹதேவனிருக்க; தீவிரமான பக்தியால் கண்ணனையும் வசப்படுத்தக்கூடிய பீமனிருக்க; ஸகல தர்மங் களையும் அறிந்து, பகவானுடைய ஸ்வரூபத்தை ஆழ்ந்தனுபவித்துப் பிதிருபக்தியால் உலகத்தைத் துறந்து, தர்ம ரஹஸ்யங்களையும் தர்ம ஸூக்ஷ்மங்களையும் பெரியோரிடத்தில் கேட்டுத் தெளிவாய் உபதேசிக்கும் பீஷ்மாசார்யரிருக்க; கர்ப்பத்திலேயே பரம பாகவத ராய், பிரஹ்மஞானமும் தர்மானுஷ்டானமும் குடிகொண்டிருக்கும் விதுரிருக்க; தனக்குப் பிரிய சிஷ்யனான உத்தவரிருக்க, அர்ஜுன னுக்குத் தத்வோபதேசம் செய்யக் காரணமென்ன? "ஆற்று மணலை எண்ணினாலும் எண்ணலாம்; அர்ஜுனனுடைய மனைவிகளை எண்ண முடியா"தென்ற பழமொழிப்படி ஸ்திரீ லோலனான விஜயனே பிரஹ்மவித்யையை உபதேசம் பெறுவதற்கு யோக்யனோ?

இது போகட்டும்; கண்ணன் உபதேசித்த வைராக்யத்தையும் நிஷ்காம கர்மத்தையும் கேட்டு 'அப்படியே செய்கிறே'னென்று வாக்குறுதி செய்த சிஷ்யன், அதை அனுஷ்டானத்தில் நடத்திக் காட்டினானா? அபிமன்யுவென்ற தன் புத்ரன் பகைவர்களால் கொல் லப்பட்டபொழுது, கோவென்று கதறிக்கொண்டு தன்னுடன் பிறந்தவர்களையும் தான் செய்யப்புகுந்த யுத்தத்தையும் தனக்கு விசுவரூபத்தைக் காட்டின ஸர்வேசுவரனான கிருஷ்ணனையும் மறந்து தீயில் விழப்போகவில்லையா? பீமனுக்கும் துர்யோதனனுக்கும் கதா யுத்தம் நடந்தபொழுது, நியாயமான வழியில் கௌரவனை ஜயிக்க

முடியாதென்றறிந்து, கண்ணனுடைய தூண்டுதலால் துர்யோதனனுடைய தொடையில் அடிக்கும்படி தனது தொடையைத் தட்டிக் காட்டவில்லையா? அது க்ஷத்ரிய தர்மத்திற்கு விரோதமல்லவா? காமக்ரோதங்களையும் ஆசாபாசங்களையும் வேரறுக்கும் ஞானமான கீதையை பரமாத்மாவான கிருஷ்ணன் தானே அர்ஜுனனுக்கு உபதேசித்தார். அப்படியும் அர்ஜுனனுக்குக் காமக்ரோதங்கள் விலகினவா? மற்றவர்களைப்போல் அவனும் அவைகளுக்குக் கட்டுப் பட்டு அக்ஞானத்தில் உழன்று திரியவில்லையா? அவன் உத்தம சிஷ்யனோ?

## உபதேசத்தின் பயன்.

இன்னுமொரு விஷயம். வெகு பிரயாஸையுடன் அர்ஜுனனுக்குக்கண்ணன் செய்த தத்வோபதேசம் பிறகு எந்தக்கதியை அடைந்த தென்று பார்ப்போம். பாரதம், அசுவமேத பர்வம் 17-வது அத்யாயத்தில், இதைப்பற்றி ஒரு விசித்ரமான விஷயம் சொல்லப்படுகிறது. "பாரத யுத்தம் முடிந்தது; பாண்டவர்கள் ஸுகமாய் வஸித்துக் கொண்டிருந்தார்கள். கண்ணன் அவர்களிடத்தில் உத்திரவுபெற்றுக்கொண்டு துவாரகைக்குத் திரும்பிப் போகும் ஸமயம். அப்பொழுது அர்ஜுனன் கொலுமண்டபத்தைப் பார்த்து, முன்பு கிருஷ்ணனுடைய அருளால் தேவதச்சனான மயன் பாண்டவர்களுக்காக நிர்மித்த ஸபையை ஞாபகஞ்செய்துகொண்டான். வாஸுதேவனுடைய மஹிமையையும் அபாரமான சக்தியையும் நினைத்தான். அதின் மூலமாய் அவர் தனக்கு யுத்தகளத்தில் செய்த அருமையான தத்வோபதேசம் ஞாபகத்திற்கு வந்தது. "கிருஷ்ணா! யுத்தம் ஆரம்பிக்கும் ஸமயத்தில் உம்மால் செய்யப்பட்ட உபதேசத்தையும் காட்டப்பட்ட விசுவரூபத்தையும் நான் மறக்கவில்லை. ஆனால், அந்த உபதேசத்தின் விஷயங்கள் யாவும் எனக்கு ஏதோ ஸ்வப்னம்போல் தோன்றுகிறதேயன்றி தெளிவாய் ஸந்தேஹ விபரீதமில்லாமல் புலப்படவில்லை. அதற்குப் பிறகு பலபல வேலைகளில் கவனத்தைச் செலுத்தினதால் அதைப்பற்றி நினைக்கவும் அவகாசமில்லை. அந்த உபதேசத்தை மறுபடி கேட்கவேண்டுமென்று விரும்புகிறேன்" என்று அர்ஜுனன் வேண்டினான். அதைக் கேட்டுக் கண்ணன்

"பார்த்தா! நான் உனக்குச் செய்த உபதேசம் பரம ரஹஸ்யமானது; வெகு புராதனமானது, நித்யமான லோகங்களைப்பற்றினது, உத்தம மான தர்ம ஸூக்ஷ்மங்களை விளக்கக்கூடியது. நீ புத்திஹீனத்தால் அதைத் தகுந்தபடி கிரஹிக்கவில்லை. இதைப் பார்க்கும்பொழுது எனக்கு உன்னிடத்தில் எல்லையற்ற வெறுப்பும் வருத்தமும் உண் டாகின்றன. இப்பொழுது அந்தப் பூர்வ ஞாபகம் எனக்கு மறுபடி யும் வராது. நீ கொஞ்சமேனும் சிரத்தையில்லாதவனென்பதில் ஸந்தேஹமேயில்லை. கெட்ட புத்தியுள்ளவன். உனக்கு அதை மறுபடியும் உபதேசிக்கவேண்டுமென்று எனக்கு எண்ணமிருந்தா லும் அந்தத் தத்வத்தைப் பூர்ணமாய் மறுபடியும் சொல்ல என்னால் முடியாது. அப்பொழுது நான் உபதேசித்த தர்மமே பிரஹ்மத் தின் ஸ்வரூபத்தையும் லக்ஷணங்களையும் அறிவதற்குப்போதும். நான் யோகநிலையிலிருந்துகொண்டு பரப்ரஹ்மத்தைப்பற்றி உனக்குப் போதித்தேன். அப்படி இப்பொழுது செய்யமுடியா"தென்றார்.

கண்ணனுடைய அருமையான உபதேசத்தைக் கேட்டு மறந்து, அதை மறுபடியும் கேட்க விரும்பி, சிரத்தையில்லாதவனென்றும் கெட்ட புத்தியுள்ளவனென்றும் தன் வெறுப்புக்கும் கோபத்திற்கும் பாத்ரனென்றும் பகவானால் கண்டிக்கப்பட்ட அர்ஜுனனே தகுந்த சிஷ்யனோ? முன்சொன்னவர்கள் அந்த யோக்யதை யற்றவர்களோ?

## ஸமாதானம்.

ஸ்ரீமன்மத்வாசார்யர், மஹாபாரத தாத்பர்ய நிர்ணயமென்ற கிரந் தத்தில், குறைந்தபக்ஷம் பத்துவிதமாய் பாரதத்திற்கு அர்த்தஞ் செய்யக் கூடுமென்று சொல்லியிருக்கிறார். அவைகளில் அத்யாத்ம ரீதியாய்ச் செய்யும் அர்த்தம் நமது தேசத்தில் குருசிஷ்ய க்ரமமாய்க் கர்ணபரம் பரையாய் உபதேசஞ் செய்யப்பட்டுவருகிறது. அதை இங்கே வேண்டிய அளவு சொல்லுகிறேன். இது எந்தக் கிரந்தத்தி லிருக்கிறது? யாரால் சொல்லப்பட்டது? இதற்கென்ன பிரமாண மென்று ஆக்ஷேபிப்பதில் பிரயோஜனமில்லை. சுருதிக்கும் யுக்திக்கும் அனுபவத்திற்கும் ஒட்டியிருக்கிறதாவென்று மாத்திரம் கவனிக்க வேண்டும்.

ஆயினும், சாந்தோக்ய உபநிஷத், அத், 1, கண்டம் 2, மந்த்ரம் 1-ல் "பிரஜாபதியினிடத்திலிருந்துண்டான தேவர்களும் அஸுரர்களும் யுத்தஞ்செய்தபொழுது" என்ற வாக்யத்திற்கு ஸ்ரீமத் சங்கராசார்யர் அடியிற் கண்டபடி வியாக்யானஞ்செய்கிறார். "பிரகாசமென்ற அர்த்தத்தைக் குறிக்கும் தாதுவிலிருந்து 'தேவ' என்ற பதம் உண்டாயிருக்கிறபடியால், வேத சாஸ்திர அத்யயனத்தால் பிரகாசத்தை அடைந்த இந்திரியங்களின் விருத்திகளுக்குத் தேவர்களென்று பெயரிடப்படுகிறது. இவைகளுக்கு எதிரிடையாய், விஷயங்களை விரும்புவதிலும் தேடுவதிலும் அடைவதிலும் ஊக்கமும் ஸந்தோஷமும் உள்ளவைகளாய், அக்ஞான ஸ்வரூபமாயிருக்கும் இந்திரிய விருத்திகளுக்கு அஸுரர்களென்று பெயர். இவ்விருவர்களில், ஒருவருடைய பொருளை மற்றொருவர் எடுத்துக்கொள்ள விரும்பி யுத்தஞ்செய்வார்கள். தமோகுணப் பிரதானமான இந்திரிய விருத்திகளென்ற அஸுரர்கள், வேத சாஸ்திரங்களால் பிரகாசத்தை அடைந்த இந்திரிய விருத்திகளை அடக்கி ஜயிப்பதில் எப்பொழுதும் நோக்கமுள்ளவர்கள். இப்படியே அவர்களுக்கு எதிரிகளாய் வேத சாஸ்திரங்களின்படி விவேகமென்ற பிரகாசத்தை அடைந்து விளங்கும் இந்திரிய விருத்திகளான தேவர்கள், தமோகுணத்தைப் பிரதானமாயுடைய அஸுரர்களை ஜயித்து அடக்குவதில் இயற்கையாய் நோக்கமுள்ளவர்கள். ஸகல பிராணிகளின் தேஹங்களில் இந்தத் தேவாஸுரயுத்தம் எப்பொழுதும் நடந்துகொண்டேயிருக்கிறது. இவ்விரு வகுப்பினரும் பிரஜாபதியின் புத்திரர்களென்றதால், பிரவிருத்தி நிவிருத்தியென்ற இரண்டு மார்க்கங்களிலும் அதிகாரமுள்ள ஜீவனே பிரஜாபதியென்று ஓர் சுருதியில் சொல்லப்படுகிறது. வேத சாஸ்திரங்களுக்கு ஒத்து நடக்கும் இந்திரிய விருத்திகளும், தங்களிஷ்டப்படி நடக்கும் இந்திரிய விருத்திகளும், ஒருவனுக்குப் பிறந்த இரண்டு குழந்தைகள்; ஒருவரோடொருவர் சண்டை செய்வதைப்போல் ஓயாமல் ஒன்றையொன்று ஜயிக்கப் பார்க்கின்றன.

இதைப்போன்ற பிரமாணங்களை வைத்துக்கொண்டே பாரத கதைக்கு அடியில் வரும் தாத்பர்யம் சொல்லப்படுகிறது. எக்காலத்திலும் கர்மத்தையே செய்துகொண்டிருப்பதைத் தர்மமாயுடைய

கௌரவவம்சத்தில் துரியோதனுதியரும் பாண்டவரும் பிறந்தார்கள். (குரு வென்ற பதத்திற்குச் செய் என்று அர்த்தம்.) முதல் வகுப்பினர் ராஜஸதாமஸ விருத்திகள். கண்ணில்லாத அரசனுக்குப் பிறந்தவர் களென்பதாலும், பெரும்பாலும் துர் (கெட்ட) என்ற பதத்தை ஆதியிலுள்ள பெயர்களையே உடைத்தாயிருப்பதாலும், அக்ஞானத்தாலுண்டான ராஜஸ தாமஸ குணங்களே. பாண்டவர்கள் வெண்மையென்று அர்த்தமுள்ள பாண்டுவிற்குப் பிறந்தவர்கள், அது ஸத்வ குணத்தின் நிறமென்று சொல்லப்படுகிறது. மேலும், பாண்டுவின் புத்ரர்களில் நடுநாயகம் போல் விளங்கும் பார்த்தனுக்கு நரனென்றும் அர்ஜுனனென்றும் பெயருண்டு. அர்ஜுனனென்ற பதத்திற்கும் வெண்மையென்று அர்த்தம். மேலும், அவனைத் தெய்வ ஸம்பத் பொருந்தினவனென்றும், துரியோதனுதியரை அஸுரஸம்பத்துள்ளவர்களென்றும் கீதை 16-வது அத்யாயத்தில் பகவானே சொல்லுகிறுர்.

ஜீவன் பல ஜன்மங்களில் அக்ஞானத்தால் கட்டுண்டு, விஷய ஸுகங்களில் இந்திரியங்களையும் மனஸையும் செலுத்திப்,பிரவிருத்தி மார்க்கத்திலேயே ஆசை மிகுந்து, ஸம்ஸாரத்திலேயே சுற்றிக் கொண்டிருக்கிறுன், அவனுடைய ராஜஸதாமஸ குணங்கள் மேலிட்டு, அவனைத் தங்களுடைய வசத்தில் வைத்துக்கொண்டன. துர்யோதனுதியரின் தகப்பனே, ஸ்தூலமான கண்ணும் ஞானக் கண்ணுமில்லாதவன். தாமஸகுணத்தாலும் அக்ஞானமென்ற இருட்டாலும் வியாபிக்கப்பட்ட ஜீவன்.அவனுக்குத் திருதராஷ்டிரனென்று பெயர். அதாவது அக்காலத்தில் ராஜ்யத்தை ஆண்டுகொண்டிருக்கிறவனென்று கருத்து. ராஜஸதாமஸ குணங்கள் ஸாத்விக குணங்களுக்கு இயற்கையாகவேசத்ருக்கள்; ஆதிமுதல் அவைகளைக்கொல்ல வழி தேடிக்கொண்டிருந்தன. தாங்களே மேலோங்கியிருக்க ஸகல முயற்சிகளையும் செய்தன. முடிவில் ஸாத்விக குணங்கள் மேல் நாடவொட்டாமல் தடுக்கப்பட்டன. ஞானபூமியென்ற ஆத்மாவின் ராஜ்யம் அவர்களிடத்திலிருந்து வஞ்சனையால் அபஹரிக்கப் பட்டது. ராஜ்யத்திலிருந்து அவர்கள் துரத்தப்பட்டும், பன்னிரண்டு வருஷம் காடுகளிலும் ஒரு வருஷம் இருந்தவிடம் தெரியாமலும்

காலங்கழித்தார்கள். ஞானமென்ற கர்ப்பத்தில் ஜீவன் பிரவேசித்துப், பன்னிரெண்டு வருஷங்களாய் வளர்ந்து, ஒரு வருஷம் இவ்விரண்டு தசைக்கும் நடுப்பிரதேசமான பிரஸவ தசையிலிருந்து, பிறகு ஞானசிசுவாய் வெளிப்பட்டான்.

இப்படியே ஸ்ரீமத் ராமாயணத்திலும், ராஜஸதாமஸ விருத்திகளான ராவணாதி ராக்ஷஸர்களுடன் போர்புரிந்து அவர்களை அழிக்கும் திறமை, ஸாத்விக குணப் பிரதானமான ஜீவனுக்குக் கிடைப்பதற்குப் பதின் மூன்று வருஷங்களாய், பதினான்காவது வருஷத்தில் ஜயம் கிடைத்ததாகச் சொல்லப்படுகிறது.

மேலும், தற்காலத்தில் எல்லோராலும் மஹாபாகவதரென்று போற்றப்படும் பத்ராசல ராமதாஸ் ஸ்வாமிகள், பனிரெண்டு வருஷங்கள் வரையில் ராஜஸ குணமான அரசனால் சிறைச்சாலையில் வைக்கப்பட்டாரென்பதற்கும் இதே கருத்தாகும். யாகங்களில் பன்னிரெண்டு வருஷங்கள் வரையில் செய்யப்படும் யாகம் ஒன்று; பன்னிரெண்டு நாள்களில் செய்யப்படும் யாகம் ஒன்று. யோக தீக்ஷைக்கும் இதே காலம் நிர்ணயிக்கப்படுகிறது. ஞான பூமிகளில் முடிவாய் விளங்கும் ஷோடசாந்தமென்ற நிலைக்கு அடுத்த படியாய் விளங்குவது துவாதசாந்தமே. லோக ஸம்ரக்ஷணார்த்தம் சக்ரவர்த்தி திருமகனாய் அவதரித்த மஹாவிஷ்ணுவும் கௌஸல்யையின் கர்ப்பவாஸத்தில் பன்னிரண்டு மாஸங்களிருந்தார்.

இந்தப் பதின்மூன்று வருஷங்களுக்குள் பாண்டவர்கள் பல மஹர்ஷிகளிடத்திலும் பல தேவதைகளிடத்திலும் அநேக வரப்பிரஸாதங்களையும் அபூர்வமான சக்திகளையும் தவத்தால் பெற்றார்கள். அப்படியே ராமசந்திரனும் தண்டகாரண்யத்திலுள்ள மஹர்ஷிகளின் ஆசிரமத்திற்குச் சென்று அவர்களுடைய ஆசீர்வாதத்தையும் சக்தியையும் அபூர்வமான ஆயுதங்களையும் பெற்றார்.

அநாதிகாலமாய் ராஜஸதாமஸ விருத்திகள் ஜீவனை வசப்படுத்திக்கொண்டு, தாங்களே ராஜ்யத்திற் குரியவைகளென்றும், ஸாத்விக விருத்திகளுக்கு ராஜ்யம் கிடையாதென்றும், பிடிவாதமாய் மறுத்து

விட்டன. ஆகையால் யுத்தஞ்செய்வதைத் தவிர வேறு வழியில்லாமற் போயிற்று. அதாவது, ஜீவன் தன் நிஜஸ்வரூபத்தை அடைந்து, ஈசுவரனுடைய கல்யாண குணங்களால் விளங்கவேண்டியிருந்தால், பிரவிருத்தி மார்க்கத்தை விட்டுக், கர்மவாஸனைகளை ஒழித்து, நிவிருத்தி மார்க்கத்தில் பிரவேசிக்கவேண்டும். காம்ய கர்மம் தாமஸ ராஜஸ ஸாத்விகமாயிருந்தாலும் முக்திக்குத் தடையென்பதில் ஸந்தேஹமில்லை. "பிரம்ஹ ஞானியானவன் தான் செய்த புண்ய கர்மங்களையும் பாபகர்மங்களையும் ஒழித்து உதறித் தள்ளிவிட்டுக், கர்மவாஸனையென்ற களங்கமற்றவனாய்க், கூடியவரையில் ஈசுவரனுக்கு ஸமமான ஸ்திதியை அடைகிறான்"னென்று முண்டகோபநிஷத்தில் சொல்லப்படுகிறது.

அர்ஜுனனே ஜீவன்; பாண்டவர்களே அவனுடைய பிரதான குணங்கள். தேவாஸுர யுத்தமென்று உபநிஷத்தில் சொல்லப்பட்ட கௌரவ பாண்டவ யுத்தத்தில் (தாமஸ ராஜஸ ஸாத்விக குணங்களின் போரில்) ஜீவனே பிரதானமான யுத்தவீரன். பிரவிருத்தி மார்க்கத்தை விட்டு நிவிருத்தி மார்க்கத்தில் பிரவேசிக்கும் பொழுது, தான் அதுவரையில் பலாபேக்ஷையுடன் செய்துவந்த பாப புண்ய கர்மவாஸனைகளை முற்றிலும் அழிக்கவேண்டும். அர்ஜுனன் இருதிறத்து ஸைன்யங்களைக் கண்டு "இவைகளை எப்படிக் கொல்வே"னென்று வருந்தினதற்கு இதே பொருள். எண்ணிறந்த ஜன்மங்களில் தான் செய்துவந்த கர்மங்கள் தனக்கு மிகவும் அருமையானவை; உற்றோரையும் பெற்றோரையும் உறவினரையும் மித்ரர்களையும் பரிவாரங்களையும் போன்றவை; இவனுடைய பிரியத்திற்குப் பாத்திரமானவை. இம்மூன்று குணங்களும் ஸாத்விக ஸாத்விகம், ஸாத்விக ராஜஸம், ஸாத்விக தாமஸமென்று ஒன்பதாய்ப் பிரியும். யுதிஷ்டிரர் ஸாத்விக ஸாத்விகம்; அர்ஜுனன் ஸாத்விக ராஜஸம்; நகுல ஸகதேவர்களும் அப்படியே. பீமன் ஸாத்விக தாமஸம்; பீஷ்ம த்ரோணாதியர் ராஜஸ ஸாத்விகங்கள். நிவிருத்தி மார்க்கத்தில் வேரூன்றி, ஸத்குருவின் உபதேசத்தால் ஞானத்தையடைந்து, ஞானஸ்வரூபியான பகவானிடத்தில் பக்தியும், அவருக்குக் கைங்கர்யம் செய்வதே மோக்ஷமும் மோக்ஷானந்தமுமென்ற நிச்சயபுத்தியும் உண்டாவதற்கு முன், பழையவாஸனைகளையும் அவை

களாலுண்டான ஆனந்தத்தையும் முற்றிலும் ஒழிக்க மனம்வராது. அப்படிச் செய்வது கொடியதென்றும், மஹா பாபமென்றும், அதனால் தான் அடையும் லாபம் ஒன்றுமில்லையென்றும், அவைகளை ஒழித்தால் ஜீவஸ்ரூபமே அழியுமென்றும் தோன்றுவது ஆச்சர்யமல்ல. இப்படிப் பழைய ஆதாரங்களையும் விட்டுப், புதிய ஆதாரத்தையும் காணுமல், ஜீவன் தத்தளிக்கும் ஸ்திதியே அர்ஜுனனுடைய மனத்தளர்ச்சியெனப்படும். இதையே நமது வேதாந்த நூல்களில் பெரும் பாழென்றும் சொல்வதுண்டு. ஈசுவரனிடத்திலும் வேத சாஸ்திரங்களிலும் ஸத்குருவிடத்திலும் பரம சிரத்தையை வைத்து, உபதேசத்தைக் கேட்டு, அப்படி நடப்பதைத் தவிர, இப்பாழைத் தாண்டுவதற்கு வேறு வழியில்லை. "காம்ய கர்மத்தால் அடையப் பட்ட லோகங்களைப் பல தடவை சுற்றிப்பார்த்து அனுபவித்து, அவை யாவும் அநித்யமென்று ஜீவன் காண்கிறான். இந்த அநித்யமான ஸாதனங்களால் நித்யமான ஞானமும் ஸுகமும் கிடைக்காதென்றறிந்து யாவற்றிலும் வெறுப்படைகிறான். இருக்கிற விடத்திலும் ஸுகமில்லாமல், வேறு இடத்தையும் காணுமல், மிகுந்த மனத்தளர்ச்சியை அடைகிறான்" என்று முண்டகோபநிஷத்தில் சொல்லியிருப்பதை இங்கே ஞாபகப்படுத்திக் கொள்ளலாம். பிரவிருத்தி மார்க்கத்தை முற்றிலும் விட்டு, ஸஞ்சித கர்மத்தை ஒழிப்பதும் பலாபேக்ஷையில்லாமல் கர்மங்களைச் செய்வதுமே அப்பொழுது அவனுக்கு ஸ்வதர்மமாகும். அப்படிச் செய்யப் பயந்து, அக்ஞானத்தாலுண்டான கர்மவாஸனைகளை எதிர்த்து அழிக்காமலும், அவைகளால் அழிக்கப்பட்டாலும் சும்மாவிருப்பதே நலமென்றும், அல்லது அவைகளுடன் போராடாமல் முன்போல் அடிமையாயிருப்பதே நலமென்றும் தோன்றுகிறது. அப்பொழுதும் தன் தர்மம் எது? யுத்தஞ்செய்வதா, ஒழிவதாவென்று அவனுக்கு நிச்சய புத்தி கிடையாது. "என் க்ஷத்ரிய தர்மத்திற்குத் தகாத மனத்தளர்ச்சியும் இரக்கமுமே என்னை மேற்கொள்ளுகின்றன. என் நிஜ ஸ்வபாவத்தை மறைக்கின்றன. எனக்கு உசிதமான தர்மம் இன்னதென்று தெரியாமல் மயங்குகிறேன். கிருஷ்ணு! அதை நன்கறிந்து நிச்சயமாய் எனக்குபதேசியு"மென்று அர்ஜுனன் முறையிடுவதும் இதே. 'ஜீவன் ஸத்குருவை நாடி நமஸ்கரித்துப் பிரபத்திசெய்து,

கடைத்தேறவேண்டும். நன்றாய் அடங்கின மனதையும் இந்திரியங்களையுமுடையவனாய், தன்னை இப்படி வந்தடைந்த சிஷ்யனுக்கு அந்தப் பிரஹ்மஞானி, ஸத்யமாயும் அழிவில்லாததுமான பரமபுருஷன் எதால் அறியப்படுவானோ அந்தப் பிரம்ம வித்யையை உண்மையாய் உபதேசிப்பாரென்று முண்டகோப நிஷத்தில் இது குறிப்பிடப்படுகிறது.

ஆகையால் ஜீவனான அர்ஜுனன், ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்கவேண்டிய ஸ்தலமான தர்மக்ஷேத்ரமாயும், கர்மங்களைப் பலாபேக்ஷையின்றி செய்வதையே லக்ஷணமாயுடைய குருக்ஷேத்ரமாயும் விளங்கும் யுத்தபூமியில், கௌரவ பாண்டவ ஸைன்யங்களென்ற முக்குணங்களின் விருத்திகளை ஒழிப்பதற்காக வந்து, அவைகளைப் பார்த்துப் பயந்து, என்ன செய்வதென்றறியாமல் மயங்கி, கிருஷ்ணனென்ற ஆசார்யனைச் சரணமடைவது நியாயமே. அவர் அவனுடைய ஸந்தேஹத்தைத் தீர்த்து, மயக்கத்தைத் தெளிவித்து, அவன் அனுஷ்டிக்கவேண்டிய உண்மையான தர்மமான நிஷ்காம கர்மயோகத்தைப் பலவிதமாய் உபதேசித்துத், தானும் அதையே செய்து வருகிறேனென்று சொல்வதும், அந்தப் பிரபஞ்ச நாடகத்தை தான் நடத்திக்காட்டும் விதத்தை விசுவரூபத்தின் மூலமாய்ச் சிஷ்யனுக்குக் காட்டுவதும் நியாயமே. பாண்டவர்களில் நிகரற்ற வீரனான அர்ஜுனனே ஜீவன். யுத்தஞ்செய்து தர்மபுத்ரருக்கு ராஜ்யத்தைக் கொடுக்கவேண்டியவன் அவனே. தர்ம ஸந்தேஹமுண்டாய்த், தத்தளிக்கும் ஸமயமான யுத்தபூமியில் யுத்தம் ஆரம்பிக்குமுன், ஆசார்யன் உபதேசம் செய்வதே தகும். அதே உசிதமான ஸ்தலம்; அதே உசிதமான தருணம்.

அர்ஜுனன் ரதத்தில் வீற்றிருப்பதும், கிருஷ்ணன் அவனுக்கு ஸாரதியாயிருப்பதும் குறிப்பிடத்தக்கவை. "தேஹமே ரதமென்றும், ஆத்மாவே ரதத்திலிருக்கும் வீரனென்றும், புத்தியே ஸாரதியென்றும், மனதே கடிவாளமென்றும் அறி. இந்திரியங்களே குதிரைகளென்றும், அவைகளால் அடையப்படும் விஷயங்களே மார்க்கமென்றும் சொல்லுகிறார்கள். ஆத்மா, இந்திரியங்கள், மனது ஒன்றுசேர்ந்து கர்மபலன்களை அனுபவிக்கிறவனென்று புத்திமான்

கள் சொல்லுகிறார்கள். விக்ஞானமென்ற ஸாரதியையும், அடக்கப்பட்ட மனமென்ற கடிவாளங்களையுமுடையவன் மார்க்கத்தின் எல்லையை அடைகிறான். அதே விஷ்ணுவின் பத''மென்று கடோபநிஷத்தில் சொல்லப்படுகிறது. ஆகையால் அர்ஜுனனே ஜீவன்; தேஹமே ரதம்; கிருஷ்ணனே ஸாரதி; புத்தியென்ற ஆசார்யன் அவரே. நமது தேவாலயங்களில் நடக்கும் மஹோத்ஸவங்களின் முடிவில் பகவானுடைய உத்ஸவவிக்ரஹத்தை திருத்தேரில் எழுந்தருளப்பண்ணி வீதிப்பிரதக்ஷிணம் செய்விப்பதுண்டு. அப்படி ரதத்திலிருக்கும் கேசவனைப் பார்த்தால் புனர்ஜன்மமில்லையென்று ஒரு பிரமாணமிருப்பதால், எண்ணிறந்த ஜனங்கள் ரதோத்ஸவத்தைத் தரிசிக்கப் போவதுண்டு. அந்த வழக்கத்திற்கும் மேற்சொன்ன காரணமே ஒக்கும்.

இரண்டாவது அத்யாயம் 38-வது சுலோகத்துடன் பகவத்கீதை முடியவில்லை. பலாபேக்ஷையை விட்டு ஸ்வதர்மமான யுத்தத்தைச் செய்யவேண்டுமென்ற முக்யமான உபதேசத்திற்கு மற்ற அத்யாயங்களில் காணப்படும் வினாவிடை ரூபமான தத்வவிசாரம் அங்கமாகும். இந்த முக்ய உபதேசத்தைக் கண்ணன் கீதையில் பலவிடங்களில் பல்லவியைப்போல் சொல்லி முடித்திருக்கிறார். அதை அங்கங்கே கண்டுகொள்ளலாம். கீதையின் முதலாவது சுலோகத்தில், யுத்தஞ்செய்ய விரும்புகிறவர்களென்ற பதத்தால் இந்த விஷயம் ஆரம்பிக்கப்பட்டு, முடிவில் 'யுத்தஞ்செய்கிறேன்' என்ற பதத்தால் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது.

கீதையின் ஸாரமென்ன? ஜீவன் தன் தர்மம் இன்னதென்று ஆலோசித்து, ஆசார்யனிடத்திலிருந்து ஸந்தேஹ விபரீதமறக் கேட்டறிந்து, எவ்விதத்திலும் பின்வாங்காமல், பலத்தில் ஆசை வைக்காமல் அதை அனுஷ்டிக்கவேண்டும்.

ஸகல தர்மங்களையும் விட்டு என்னை ஒருவனையேசரணமாயடை. ஸகல பாபங்களிலிருந்தும் உன்னை விடுவிக்கிறேன். வருந்தாதே (18,55).

ஸ்வதர்மத்தையும் விட்டுத் தன்னைச் சரணமடைவதையே உபதேசிக்கிறாரென்று சொல்வது பொருந்தாது. தன் பூர்வ கர்மத்தால் ஏற்பட்ட வர்ணாசிரமங்களுக்குரிய கர்மங்களைப் பலாபேக்ஷையில்லாமல் ஈசுவரார்ப்பணமாய்ச் செய்துகொண்டிருப்பதே ஜீவனுக்கு ஸ்வதர்மம். "இந்த ஞானத்தை ஆதாரமாய்க் கொண்டு நான் செய்யும் தர்மத்தையே செய்துகொண்டிருப்பவர்கள் பிரபஞ்ச ஸிருஷ்டியில் பிறப்பதில்லை; பிரளயகாலத்தில் அழிவதுமில்லை" யென்றதாலும், 'என்னையே சரணமடை'யென்றதாலும், ஈசுவரன் அனுஷ்டிக்கும் தர்மத்தையே நாமும் அனுஷ்டிக்கவேண்டுமென்று விளங்குகிறது. அது யாதெனில், "அர்ஜுனா! இந்த மூன்று லோகங்களிலும் நான் செய்யவேண்டிய காரியம் யாதொன்றுமில்லை. நான் அடையாத விஷயமுமில்லை; அடையத் தகுந்த விஷயமுமில்லை. ஆயினும், ஓயாமல் கர்மத்தையே செய்துகொண்டிருக்கிறேன். இப்படிச் சோம்பலில்லாமல் நான் கர்மத்தைச் செய்துகொண்டிராவிட்டால், என்னைப் பார்த்து நடக்கும் அனந்தகோடி ஜீவன்கள் என்னால் கெடுக்கப்படுவார்கள். இந்த உலகங்கள் அழியும். பிராணிகள் நாசமடையும், தர்மாதர்மம், புண்யபாபம், ந்யாயா ந்யாயமின்றி எல்லாம் ஒரே குழப்பமாய்விடும்' என்று சொல்வதே அவருடைய தர்மம். அதில் நாமும் இயன்றவளவு செய்ய விரும்புவதே ஸ்வதர்மம்; அதே பகவானுக்கு உகந்த கைங்கர்யம்' அதே அவருடைய கிருபையை அடைவதற்கு மார்க்கம். ஞானயோகம், பக்தியோகம், கர்மயோகம், என்றதும் அதே. ஆகையால், ஸகல ஜீவகோடிகளுக்கும் பரம ஹிதத்தையே செய்வதும், கெடுதியைச் செய்யாமலிருப்பதுமே ஈசுவரனுடைய அவதார காரியம். நமது உத்தமமான தர்மமும் அதே. இப்படிப் பகவத் கைங்கர்யத்தாலும் ஸ்வதர்மானுஷ்டானத்தாலும் அடையப்படும் பயனை மோக்ஷமென்பதும் அதே. ஒன்றும் செய்யாமல் ஸ்வரூப நாசமடைவது மோக்ஷமல்ல. ஏனென்றால் மோக்ஷத்தைக் கொடுக்கும் பகவானே ஓயாமல் லோக ரக்ஷணம் செய்துகொண்டிருக்கிறார். ஆகையால் ஜீவன்களுக்குக் கைங்கர்யம் செய்வதே ஈசுவர கைங்கர்யமென்ற மோக்ஷ ஸாதனமான உபாயம், மோக்ஷமென்ற உபேயமும் அதே.



# கீதாபாஷ்யங்கள்.



இந்தக் கீதையென்ற ஸ்மிருதிக்கு மூன்று மதஸ்தாபகர்களும் அவர்களுடைய சிஷ்யர்களும் உரைகளைச் செய்திருக்கிறார்கள். உபநிஷத்துகள், பிரம்ம ஸூத்ரம், கீதையென்ற மூன்றும் நமது மதத்திற்கு ஜீவாதாரங்களைப்போன்றவை (மூளை, ஹிருதயம், சுவாஸப் பைகளைப் போன்றவை).

**அத்வைத மதம்:**—(1) ஸ்ரீமத் சங்கராசார்யர், (2) ஆனந்தகிரி, (3) மதுஸூதன ஸரஸ்வதி, (4) சங்கரானந்தர், (5) நீலகண்டர், (மஹாபாரத வியாக்யானக்காரர்), (6) ஸ்ரீதரர், (6) அபிநவகுப்தாசார்யர், (8) வெங்கடநாதர், (9) சங்கர பாஷ்யோத் கர்ஷ கர்த்தா.

**விசிஷ்டாத்வைதம்:**— (1) ஸ்ரீமத் யாமுனாசார்யர், (கீதார்த்த ஸங்க்ரஹம்), (2) ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் (கீதார்த்த ஸங்கிரஹ ரக்ஷை) (3) ஸ்ரீமத் ராமாநுஜாசார்யர் (பாஷ்யம்) (4) ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் (தாத்பர்ய சந்த்ரிகை).

**த்வைதமதம்:**—(1) ஸ்ரீமன் மத்வாசார்யர் (பாஷ்யம்,) (2) ஸ்ரீஜயதீர்த்தாசார்யர் (டீகை பிரமேய தீபிகை), (3) ஸ்ரீமன் மத்வாசார்யர் (கீதாதாத்பர்ய நிர்ணயம் (4) ஸ்ரீஜயதீர்த்தாசார்யர் (டீகை நியாய தீபிகை) (5) ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் (கீதாவிவிருத்தி).

மேலும், அர்ஜுனனுடைய த்வஜத்திலிருந்து கீதோபதேசத்தைக் கேட்ட ஆஞ்ஜநேய மூர்த்தி, பிராகிருத பாஷையில் செய்த பாஷ்யமுமுண்டு. கிருஷ்ணனால் கீதாஸாரமாய் உபதேசிக்கப்பட்ட 'ஸர்வதர்மான் பரித்யஜ்ய' வென்ற சரமச்லோகம் விசிஷ்டாத்வைத மதத்தில் பரமோபதேச விஷயங்களில் ஒன்றானதால், அதைப்பற்றி அந்த மதாசார்யர்கள் விஸ்தாரமாய் விசாரித்திருக்கிறார்கள். தற்காலத்தில் பாரதமாதாவின் திலகமாய் விளங்கி, லோகமான்யரென்ற பதவியை அடைந்த, பலவந்தராவ் கங்காதர திலகருடைய கீதாரஹஸ்யமென்ற உரையும் நன்றாய்க் கவனிக்கத்தக்கதே.

# श्रीमद्भगवद्गीता

अध्याय: १

अर्जुन विषाद योग:

# ஸ்ரீமத் பகவத் கீதை.

அத்யாயம். 1.

## அர்ஜுன விஷாத யோகம்.

धृतराष्ट्र उवाच—

धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः ।
मामकाः पांडवाश्चैव किमकुर्वत संजय ॥ १ ॥

1. திருதராஷ்ட்ரன்:—ஸஞ்ஜய! யுத்தஞ் செய்ய விரும்பி, தர்ம க்ஷேத்ரமான குருக்ஷேத்ர பூமியில் ஒன்றுகூடின என்னைச் சேர்ந்தவர்களும் பாண்டவர்களும் என்ன செய்தார்கள்?

संजय उवाच—

दृष्ट्वा तु पांडवानीकं व्यूढं दुर्योधनस्तदा ।
आचार्यमुपसंगम्य राजा वचनमब्रवीत् ॥ २ ॥

2. ஸஞ்ஜயன்:—அணிவகுக்கப்பட்ட பாண்டவ ஸேனையைத் துர்யோதன மஹாராஜா பார்த்து, த்ரோணாசார்யரிடத்திற்குச் சென்று, இந்த வார்த்தையைச் சொன்னான்.

पश्यैतां पांडुपुत्राणामाचार्य महतीं चमूम् ।
व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥ ३ ॥

3. துர்யோதனன்:—ஆசார்ய! புத்திமானும் உமது சிஷ்யனும் த்ருபதனுடைய புத்ரனுமான திருஷ்டத்யும்னனால் அணிவகுக்கப்பட்ட இந்தப் பெரும் பாண்டவ ஸேனையைப் பாரும்.

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥ ४ ॥

धृष्टकेतुश्चेकितानः काशिराजश्च वीर्यवान् ।
पुरुजित्कुंतिभोजश्च शैब्यश्च नरपुंगवः ॥ ५ ॥

युधामन्युश्च विक्रांत उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥ ६ ॥

4, 5, 6, இங்கே சூரர்களும், மஹா வில்லாளிகளும், யுத்தத்தில் பீமனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸமானர்களுமான ஸாத்யகியும், மத்ஸ்ய தேசத்தரசனை விராடனும், பாஞ்சால தேசத்தரசனை த்ருபதனென்ற மஹாரதனும், வீரனை காசிராஜனும், புருஜித்தும், குந்திபோஜனும், நரச்ரேஷ்டனை சைப்யனும், பராக்ரமமுள்ள யுதாமன்யுவும், உத்தமௌஜஸென்ற வீரனும், ஸுபத்ரையின் புத்ரனை அபிமன்யுவும், த்ரௌபதியின் புத்ரர்களுமிருக்கிறார்கள். இவர்களெல்லாரும் மஹாரதர்களே.

अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।
नायका मम सैन्यस्य संज्ञार्थं तान्ब्रवीमि ते ॥ ७ ॥

7. ப்ராஹ்மணோத்தமரே! நமது ஸேனையில் முக்யமானவர்களாயும், என் ஸைன்யத் தலைவராயுமிருப்பவர்களைக் குறிப்பிட்டு உமக்குச் சொல்லுகிறேன், தெரிந்துகொள்ளும்.

भवान्भीष्मश्च कर्णश्च कृपश्च समितिंजयः ।
अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिस्तथैव च ॥ ८ ॥

अन्ये च बहवः शूरा मदर्थे त्यक्तजीविताः ।
नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥ ९ ॥

8, 9. தாங்கள், பீஷ்மாசார்யர், கர்ணன், யுத்தத்தில் ஜயசாலியான கிருபாசார்யர், அசுவத்தாமா, விகர்ணன், ஸோமதத்த

னுடைய புத்ரனான பூரிச்ரவஸ், இன்னும் மற்ற அனேக சூரர்கள், பல சஸ்திரங்களையும் ஆயுதங்களையும் பிரயோகிப்பதில் திறமையுள்ளவராய், எனக்கு ஜயம் கிடைப்பதற்காக உயிரை விடத் துணிந்தவர்களாய், எல்லோரும் யுத்த சாஸ்திரத்தில் கரைகண்டவர்களா யிருக்கிறார்கள்.

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥ १० ॥

10. ஆகையால், பீஷ்மாசார்யரால் ரக்ஷிக்கப்பட்ட இந்த நமது ஸேனை ஜயிப்பதற்குப் போதாது. ஆனால், பீமஸேனனால் ரக்ஷிக்கப்பட்ட இந்தப் பாண்டவஸேனையோ, ஜயிப்பதற்குப் போதுமானது.

अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः ।
भीष्ममेवाभिरक्षंतु भवंतः सर्व एव हि ॥ ११ ॥

11. ஆகையால் நீங்களெல்லோரும் ஸேனையின் வரிசைகளில் உங்களுக்கேற்பட்ட ஸ்தானங்களிலிருந்துகொண்டு, பீஷ்மாசார்யரையே நான்கு புறங்களிலும் பாதுகாக்கவேண்டுமென்றான்.

तस्य संजनयन्हर्षं कुरुवृद्धः पितामहः ।
सिंहनादं विनद्योच्चैः शंखं दध्मौ प्रतापवाम् ॥ १२ ॥

12. கீர்த்திசாலியும் குருகுலக்கிழவரும் பாட்டனுமான பீஷ்மர், துர்யோதனனுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதற்காகக், கம்பீரமாய் ஸிம்ஹநாதஞ்செய்து, சங்கத்தை ஊதினார்.

ततः शंखाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।
सहसैवाभ्यहन्यंत स शब्दस्तुमुलोऽभवत् ॥ १३ ॥

13. பிறகு சங்குகளும், பேரிகளும், தம்பட்டங்களும், ஆனகங்களும், கோமுகங்களும் அதிவேகமாய் அடிக்கப்பட்டன. அந்தச் சப்தம் ஒரே முழக்கமாயிற்று.

ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यंदने स्थितौ ।
माधवः पांडवश्चैव दिव्यौ शंखौ प्रदध्मतुः ॥ १४ ॥

14. *பிறகு வெள்ளைக் குதிரைகள் பூட்டின பெரிய ரதத்தில் கண்ணனும் அர்ஜுனனும் வீற்றிருந்து, தைவத்தன்மையுள்ள சங்குகளை ஊதினார்கள்.*

पांचजन्यं हृषीकेशो देवदत्तं धनंजयः ।
पौंड्रं दध्मौ महाशंखं भीमकर्मा वृकोदरः ॥ १५ ॥

15. *கண்ணன் பாஞ்சஜன்யத்தையும், அர்ஜுனன் தேவதத்தத்தையும், பயங்கரமான வீரகிருத்யங்களைச் செய்யும் பீமன் பௌண்ட்ரமென்ற பெரிய சங்கையும் ஊதினார்கள்.*

अनंतविजयं राजा कुंतीपुत्रो युधिष्ठिरः ।
नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६ ॥

16. *குந்தியின் புத்ரனான யுதிஷ்டிரர் அனந்த விஜயத்தையும், நகுலன் ஸுகோஷத்தையும், ஸஹதேவன் மணி புஷ்பகத்தையும் ஊதினார்கள்.*

काश्यश्च परमेष्वासः शिखंडी च महारथः ।
धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥ १७ ॥

द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।
सौभद्रश्च महाबाहुः शंखान्दध्मुः पृथक्पृथक् ॥ १८ ॥

17—18. *பெரிய வில்லாளியான காசிராஜனும், மஹாரதனான சிகண்டியும், திருஷ்டத்யும்னனும், விராடராஜனும், பிறரால் ஜயிக்கப்படாத ஸாத்யகியும், த்ருபதராஜனும், த்ரௌபதியின் புத்ரர்களும், அளவற்ற பலசாலியான அபிமன்யுவும், ஓ மஹாராஜா ! தனித்தனியாய்ச் சங்குகளை ஊதினார்கள்.*

स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥ १९ ॥

19. பெரு முழக்கமுள்ள அந்தச் சப்தம் ஆகாசத்திலும் பூமியிலும் எதிரொலியை உண்டாக்கிக்கொண்டு, துர்யோதனனைச் சேர்ந்தவர்களின் ஹிருதயங்களைப் பிளந்தது.

अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान्कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसंपाते धनुरुद्यम्य पांडवः ॥ २० ॥
हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।

20. 20½. பிறகு ஆயுதங்களை ப்ரயோகிக்கத் தொடங்கினவுடன், ஹனுமானை த்வஜமாயுடைய அர்ஜுனன், யுத்தஞ்செய்வதற்கு ஸித்தமாயிருந்த துர்யோதனனைச் சேர்ந்தவர்களைப் பார்த்து, வில்லை எடுத்துக் கண்ணனை நோக்கி இவ்வாறு சொன்னான்.

अर्जुन उवाच—
सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥ २१ ॥
यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।

21. 21½. அர்ஜுனன்—கிருஷ்ணா! யுத்தஞ் செய்ய விரும்பி இங்கே வந்திருப்பவர்களை நான் பார்க்கும் வரையில் இரண்டு சேனைகளுக்கும் நடுவில் என் ரதத்தைக் கொண்டுபோய் நிறுத்தும்.

कैर्मया सह योद्धव्यमस्मिन्रणसमुद्यमे ॥ २२ ॥

22. இந்த யுத்தத்தில் எவருடன் நான் சண்டைசெய்ய வேண்டும்?

योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३ ॥

23. இந்த யுத்தத்தில் கெட்ட புத்தியுள்ள துர்யோதனனுக்கு ப்ரியமான கார்யத்தையே செய்ய விரும்பி இங்கே வந்திருக்கும் என்னுடன் யுத்தஞ்செய்யப்போகிறவர்களைப் பார்க்கிறேன்.

संजय उवाच—

एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥ २४ ॥

भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान्समवेतान्कुरूनिति ॥ २५ ॥

24—25. ஸஞ்ஜயன்:— இப்படி அர்ஜுனன் கண்ணனைப் பார்த்துச் சொன்னவுடன், பீஷ்மர் த்ரோணர் மற்றுமுள்ள அரசர்களுக் கெதிரில், இரண்டுஸேனைக்கு நடுவில், அவர் அந்த உத்தமமான ரதத்தை நிறுத்தி "அர்ஜுன! இங்கே கூடியிருக்கும் கௌரவர்களைப் பாரெ"ன்றார்.

तत्रापश्यत्स्थितान्पार्थः पितॄनथ पितामहान् ।
आचार्यान्मातुलान्भ्रातॄन्पुत्रान्पौत्रान्सखींस्तथा ॥ २६ ॥

श्वशुरान्सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।
तान्समीक्ष्य स कौंतेयः सर्वान्बंधूनवस्थितान ॥ २७ ॥
कृपया परयाविष्टो विषीदन्निदमब्रवीत् ।

26—27½. அங்கே இருஸேனைகளிலும் தன் தகப்பன்கள், பாட்டன்கள், ஆசார்யர்கள், அம்மான்கள், உடன் பிறந்தோர், பேரன்கள், தோழர்கள், மாமனர்கள், நண்பர்கள் இருக்கக்கண்டான். தன் பந்துக்கள் அனைவரும் வந்திருப்பதை அர்ஜுனன் உற்றுப்பார்த்துப், பெருங் கருணையால் பிடிக்கப்பட்டுத் துக்கமடைந்து இவ்வாறு சொன்னான்.

अर्जुन उवाच—

दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम् ॥ २८ ॥

सीदंति मम गात्राणि मुखं च परिशुष्यति ।
वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥ २९ ॥

गांडीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते ।
न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ॥ ३० ॥

28—30, அர்ஜுனன்:—யுத்தஞ்செய்ய இங்கே வந்திருக்கும் நம்மவர்களைக் கண்டு, என் அங்கங்கள் களைக்கின்றன. வாய் உலருகிறது. தேஹத்தில் நடுக்கமும் மயிர்க்கூச்சலும் உண்டாகின்றன. கையிலிருந்து காண்டீவம் நழுவுகிறது. என் தோல் பொசுங்குகிறது. ஸ்திரமாய் நிற்கமுடியவில்லை. என் மனஸ் சுழல்வதுபோல் தோன்றுகிறது.

निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ।
न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥ ३१ ॥

31. விபரீதமான சகுனங்களும் காணப்படுகின்றன. நம்மவர்களை யுத்தத்தில் கொன்றுவிட்டு நாம் அடையும் நன்மை எனக்குத் தெரியவில்லை

न कांक्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ।
किं नो राज्येन गोविंद किं भोगैर्जीवितेन वा ॥ ३२ ॥
येषामर्थे कांक्षितं नो राज्यं भोगाः सुखानि च ।
त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥ ३३ ॥
आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः ।
मातुलाः श्वशुराः पौत्राः श्यालाः संबंधिनस्तथा ॥ ३४ ॥
एतान्न हंतुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।
अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥ ३५ ॥
निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन ।
पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥ ३६ ॥

32-36. ஜயத்திலும் ராஜ்யத்திலும் ஸுகங்களிலும் எனக்கு விருப்பமில்லை.கோவிந்த! ராஜ்யத்தால் நமக்கு ஆகவேண்டியதென்ன? போகங்களால் ஆகவேண்டியதென்ன? அல்லது இந்த உயிரால் ஆகவேண்டியதுதானென்ன? ராஜ்யம் போகங்கள் ஸுகங்கள் முதலி

7

யவைகளை எவருக்காக நாம் விரும்புகிறோமோ அந்த ஆசார்யர்கள், பெற்றோர், புத்ரர்கள், பாட்டன்கள், அம்மான்கள், மாமனார்கள், பேரன்கள், மைத்துனர்கள், ஸம்பந்திகளென்ற யாவரும், உயிரையும் ஐச்வர்யத்தையும் துறந்து, இந்த யுத்த பூமியில் வந்துகூடியிருக்கிறார்கள். மதுஸூதனா! நான் இவர்களால் கொல்லப்பட்டாலும், இவர்களைக் கொல்வதற்கு எனக்கு மனம் வரவில்லை. மூன்று லோகங்களின் ஆளுகை எனக்குக் கிடைத்தாலும் அப்படிச் செய்யமாட்டேன். இந்த அல்ப பூமி கிடைப்பதற்காக அப்படிச் செய்வேனா? திருதராஷ்டிரனுடைய புத்ரர்களைக் கொல்வதால் நமக்கு என்ன ஸுகமுண்டாகும்? இந்தக் கொலைபாளிகளைக் கொன்றாலும், நம்மைப் பாபமே அடையும்.

तस्मान्नार्हा वयं हंतुं धार्तराष्ट्रान्स्वबांधवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥ ३७ ॥

यद्यप्येते न पश्यंति लोभोपहतचेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥ ३८ ॥

कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥ ३९ ॥

37—39. ஆகையால், நமது பந்துக்களான துர்யோதினாதியரை நாம் கொல்லவேகூடாது. மாதவ! நம்மவரைக் கொன்று நாம் எப்படி ஸுகத்தை அடைவோம்? பேராசையால் மயங்கின புத்தியையுடைய இவர்கள், நமது குலம் அழிவதாலுண்டாகும் பாபத்தையும், மித்ரர்களுக்கு த்ரோஹம் செய்வதாலுண்டாகும் பாதகத்தையும் அறியாவிட்டாலும், நமது குலநாசத்தால் வரும் பாபத்தை நன்கறிந்த நாம், இதைச் செய்யாமலிருக்கவேண்டுமென்று ஏன் அறியவில்லை?

कुलक्षये प्रणश्यंति कुलधर्माः सनातनाः ।
धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४० ॥

40. குலம் அழிந்தால் புராதனமான குலதர்மங்கள் அழியும். தர்மம் அழிந்தால் குலம் முழுவதும் அதர்மத்தைக் கைக்கொள்ளும்.

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यंति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसंकरः ॥ ४१ ॥

41. *அதர்மம் மேலிட்டால் குலஸ்திரீகள் கெடுவார்கள். ஸ்திரீகள் கெட்டால் வர்ணங்கள் ஒன்றோடொன்று கலந்து விடும்.*

संकरो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतंति पितरो ह्येषां लुप्तपिंडोदकक्रियाः ॥ ४२ ॥

42. *அந்த வர்ணக்கலப்பு குலத்திலுள்ளவர்களையும் குலத்தைக் கெடுத்தவர்களையும் கோரமான நரகத்தில் தள்ளும். வர்ணங்களைக் கலந்து குலத்தைக் கெடுத்தவர்களின் அக்ரமங்களால் அவர்களுடைய முன்னோர்கள் பிண்டம் ஜலதர்ப்பணம் முதலிய வைதிக க்ரியைகளின்றி நரகத்தில் விழுவார்கள்.*

दोषैरेतैः कुलघ्नानां वर्णसंकरकारकैः ।
उत्साद्यंते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥ ४३ ॥

उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।
नरके नियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४ ॥

अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।
यद्राज्यसुखलोभेन हंतुं स्वजनमुद्यताः ॥ ४५ ॥

यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।
धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६ ॥

संजय उवाच—

एवमुक्त्वार्जुनः संख्ये रथोपस्थ उपाविशत ।
विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥ ४७ ॥

43—47. *அனாதியாய் வழங்கிவரும் ஜாதிதர்மங்களும் குலதர்மங்களும் இந்தக் காரணங்களால் அழியும். குலதர்மங்கள் அழிந்த மனிதர்களுக்கு என்றும் நரகத்திலேயே வாஸமென்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறோம். ராஜ்ய ஸுகத்தில் ஆசை*

வைத்து நம்மவர்களைக் கொல்ல முன்வந்த நாம், ஐயோ! மஹா பாபத்தைச் செய்ய ஏற்பட்டுவிட்டோமே! நான் ஆயுதங்களை விட்டெறிகிறேன். என்னைக் கொல்ல வரும் சத்ருக்களைத் தடுப்பதில்லை. அப்படியும் துர்யோதனாதியர் ஆயுதபாணிகளாய், யுத்தத்தில் என்னைக் கொன்றாலும் அது எனக்கு மிகுந்த க்ஷேமத்தை உண்டாக்கு" மென்று காண்டீவத்தையும் பாணங்களையும் விட்டெறிந்து, சோகத்தால் மனம் கலங்கி, அந்த யுத்தகளத்தில் தேர்த்தட்டில் அர்ஜுனன் உட்கார்ந்தான்.

## குறிப்புகள்.

இதில் 47 சுலோகங்கள் அடங்கியிருக்கின்றன. முதல் 19 சுலோகங்கள் பகவத்கீதையின் விஷயத்தைத் தெரிவிக்கும் பூர்வ கதையாகும். 20-வது சுலோகம் முதல் பகவத்கீதை உண்மையாய் ஆரம்பிக்கிறது. அதற்கு அடையாளமாய் 'அத' (பிறகு) என்ற வார்த்தை சுலோகத்தின் ஆரம்பத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. பிரம்ம வித்யையை உபதேசிக்கும் உத்தர மீமாம்ஸா அல்லது பிரம்ம மீமாம்ஸா அல்லது வேதாந்த ஸூத்ரங்களென்ற பிரம்ம ஸூத்ரங்களில் முதலாவது, 'அத' யென்ற வார்த்தையால் ஆரம்பிக்கப்படுகிறது. மற்ற ஐந்து தர்சனங்களைப் பற்றின ஸூத்ரங்களும் இப்படியே; இந்தப் பதம் மங்களகரமென்றும் ஆதியில் பிரம்மாவின் முகத்திலிருந்து வெளிப்பட்டதென்றும் சொல்லப்படுகிறது.

இந்த சுலோகத்தில் கீதாசாஸ்திரம் ஆரம்பிக்கப்படுகிறதென்றதற்கு வேறொரு காரணமும் சொல்லப்படும். பிரம்மவித்யையை உபதேசிப்பதற்கு உசிதமான காலம், தேசம், ஸந்தர்ப்பம், குரு, சிஷ்யனென்ற அங்கங்கள் அவசியமானவை. "பாண்டவன், மாருதியை த்வஜமாயுடையவன்" என்ற பதங்களால் சிஷ்யனுடைய யோக்யதை சொல்லப்படுகிறது. பாண்டுயென்ற பதத்திற்கு, வெண்மையென்று கருத்து; சிவந்த நிறமுள்ள ரஜோகுணத்தையும் கறுத்த நிறமுள்ள தமோகுணத்தையும் அகற்றி, ஜீவன் வெண்மை நிறமுள்ள ஸத்வகுணம் மேலிட்ட நிலைமையிலிருக்கிறானென்பதைக்

காட்டுகிறது. இப்படியே ஸ்ரீமத் பாகவதத்தில், ருக்மிணீ கல்யாண கதையைச் சொல்லுமிடத்தில், அவளுடைய ஸஹோதரர்களுக்கு ருக்மி, ருக்மரதன், ருக்மபாஹு, ருக்மகேசி, ருக்மமாலியென்ற பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. 'ருக்ம' என்ற பதம் அவை யெல்லாவற்றிற்கும் பொதுவாயிருக்கிறது. அது நிர்மலமான ஆத்ம ஞானத்தைக் காட்டக்கூடிய தங்கநிறமென்று அர்த்தமாகும். ஆகை யால் ருக்மிணி விவாஹமானது, ஸத்வகுண பிரதானமான ஜீவன், பிராஹ்மண ரூபமான ஆசார்யன் மூலமாய் பரமாத்மாவை அடைந்த பரம தத்வத்தை உபதேசிக்கிறது.

'ஆஞ்ஜநேயரை த்வஜமாயுடையவன்' என்றதின் கருத்தை விசாரிப்போம். அவர் மஹாவிஷ்ணுவின் சிறிய திருவடியென்று சொல்லப்படுகிறார்; கருடாழ்வார் பெரிய திருவடி. வேதங்களின் பரமரஹஸ்யமே கருடனென்று வேதாந்ததேசிகர் ஸ்ரீஸ்துதியில் சொல்லியிருக்கிறார். ஸ்ரீமத் ராமாயணத்தின் ரஹஸ்யார்த்தத்தில், ராமனுக்கும் ஸீதைக்கும் சேர்க்கையைச் செய்வித்த மாருதி, பரமா சார்யனென்று பெரியோர்களின் மதம். மேலும்,த்வைதமத ஸித்தாந் தத்தின்படி அவர் முக்யப்ராணனுடைய முதலாவது அம்சாவதாரம்; இரண்டாவது பீமஸேனன்; மூன்றாவது மத்வாசார்யரென்று சொல்லப்படுகிறது. அந்த ஸித்தாந்தத்தில் தேவதா தாரதம்ய க்ர மத்தில், விஷ்ணுவிற்கும் மஹாலக்ஷ்மிக்கும் அடுத்த படியிலிருப்பவர் அவரே. அவரை 'த்வஜமாயுடையவன்' என்றதால், ஒவ்வொரு யுத்தவீரனுடைய அந்தஸ்தையும் திறமையையும் கொள்கையையும் விளக்கும் வஸ்துவே த்வஜமாகக் கொள்ளப்படுமென்ற வழக்கத்தை இங்கே ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டியது. ஆஞ்ஜநேயரை அண்டினவன் அவருடைய கிருபைக்கும் ஸஹாயத்திற்கும் பாத்ர மானவனென்ற விஷயத்தை, எல்லோரும் ஸ்பஷ்டமாய் அறிந்து கொள்ளும்படியான அனுக்ரஹத்தைப் பெற்றவன். மேலும், இந்தத் தேஹத்தையே ரதமாயும் ஜீவனை யுத்தவீரனாயும், புத்தியை ஸாரதியாயும் கடோபநிஷத்தில் சொல்லியிருப்பதை அனுஸரித்து, அர்ஜுனனுடைய ரதத்தில் ஆஞ்ஜநேயர் த்வஜ மாய் விளங்குவதைக் கவனித்தால், ஜீவனுடைய ஸ்தூல ஸூக்ஷ்ம காரணமென்ற தேஹங்கள், தன் பரமாசார்யனுக்குத் தத்தம்

செய்யப்பட்டனவென்றும், அவைகளின் செயல்களை அவரே நடத்துகிறாரென்றும் குறிப்பிடப்படுகிறது. மேலும், அர்ஜுனன் ஜீவ ஸ்வரூபமென்றதற்கு அடையாளமாய், விராட பர்வத்தில் அவனுக்குக் கொடுக்கப்பட்ட பெயர்களில் நரன் (மனிதன்) என்ற பெயரைக் கவனிக்கவேண்டும். மேலும், 'அர்ஜுன' னென்ற பதத்திற்கு 'வெண்மை' யென்று ஒரு அர்த்தமுமுண்டு; அதுவும் ஸத்வகுண பிரதானத்தைக் காட்டுகிறது. இந்தக் கீதாசாஸ்திரத்தை உபதேசம் பெறுவதற்கு சிஷ்யன் யோக்யனென்று இப்படிச் நிரூபிக்கப்பட்டது.

இதை உபதேசிக்கும் ஆசார்யன் தகுந்தவராவென்பதைப் பற்றிச் சொல்லவேண்டியதில்லை. ஸச்சிதானந்த ஸ்வரூபியும் யோகேசுவரரும் பரம்பொருளுமான கண்ணனைவிட மேலான ஆசார்யனுண்டோ? அதை "ஹிருஷீகேச" என்ற பதத்தால் இந்த சுலோகத்தில் குறிப்பிட்டிருக்கிறது. இந்திரியங்களுக்கும் அந்தக் கரணத்திற்கும் அதிஷ்டான தேவதையாயிருந்து, அவைகளின் வியாபாரங்களை நடப்பித்து ஸாக்ஷியாயிருப்பவர் பரமாத்மாவே யென்று குறிப்பிடப்படுகிறது. ஆகையால், தேஹமென்ற ரதத்தை, ஆத்மாவென்ற வீரனுடைய உத்திரவுப்படி, புத்தியென்ற ஸாரதி ஓட்டுவதைத் தவிரத் தான்•யாதொன்றையும் ஸ்வயமாய்ச் செய்வதில்லை; செயல்களின் பயனை விரும்புவதுமில்லை, அனுபவிப்பதுமில்லை. கேவலம் ஸாக்ஷிமாத்திரமேயென்பதைக் காட்டுவதற்காகப் பகவான் அர்ஜுனனுக்கு ஸாரதியாய் அமர்ந்தார். இதற்கு அடையாளமாய் 18-வது அத்யாயத்தில் தன் உபதேசத்தை முடித்து "அர்ஜுனா! நீ கேட்டதால் உனக்குத் தத்வத்தை உபதேசித்தேன். நானாக வலுவில் உன்னைத் தேடி ஒன்றையும் சொல்லவில்லை. ஆயினும், நான் சொல்வது உனக்கு ஹிதமாகத் தோன்றினால் அப்படிச் செய்; இல்லாவிட்டால் தள்ளிவிடு" என்று ஜீவனுக்குக் கர்மங்களைச் செய்வதில் பூர்ணமான ஸ்வாதந்திரியம் உண்டென்பதையும், அப்படியில்லாவிட்டால் அவனுக்குக் கர்மபலன்களை அனுபவிப்பதில் பாகமிருக்க நியாயமில்லையென்பதையும் தெரிவிக்கிறார். கீதையின் நடுவிலும் (5-14-15) "லோகத்தில் ஜீவன்களுக்குக் கார்யங்களையும், கார்யங்களைச் செய்வதையும், கர்மங்களுக்கும் அவை

களின் பயன்களுக்குமுள்ள ஸம்பந்தத்தையும், ஸர்வ சக்தியுள்ள வனை ஈசுவரன் உண்டாக்குவதில்லை; ஆனால் ஜீவன்கள் பூர்வஜன்மங் களில் செய்த கர்மங்களின் வாஸனை ரூபமான ஸ்வபாவமே யாவற் றையும் நடத்துகிறது. ஈசுவரன் எல்லாம் வல்லவனாயிருந்தாலும், எந்த ஜீவனையும் பாபகர்மத்தையாவது புண்யகர்மத்தையாவது செய்யும்படி ஏவுகிறதில்லை. அக்ஞானத்தால் ஆத்மஞானம் மறை பட்டிருக்கிறது. பிராணிகளின் அதனால் மயங்கிப் பாப புண்யங் களைச் செய்கிறார்க''ளென்று விளக்கியிருக்கிறார்.

கீதையை உபதேசித்த காலம் உசிதமென்பதைக் காட்டுவதற் காகத், திருதராஷ்டிரனைச் சேர்ந்தவர்கள் யுத்தத்திற்கு ஸித்தமா யிருந்தார்களென்றும், ஆயுதப் பிரயோகம் இரு ஸைன்யங்களிலும் ஆரம்பித்துவிட்டதென்றும் சொல்லப்படுகிறது. அதாவது, மனித னுடைய மனதை லௌகிக வியாபாரங்களான பிரவிருத்தி மார்க்கத் தில் இழுத்து, ஸம்ஸாரத்தில் கட்டுப்படுத்தி, ஜனன மரணங்களை ஓயாமல் கொடுக்கும் கர்மவாஸனைகளே கௌரவர்கள். பிரவிருத்தி மார்க்கத்தில் வைராக்யம் பிறந்து, ஸம்ஸாரத்தின் தோஷங்களைக் கண்டறிந்து, நித்யமான ஆனந்தத்தையும் அகண்டமான ஞானத் தையும் என்றும் அழியாத இருப்பையும் அடைவதற்குண்டாகும் விருப்பமே, நிவிருத்தி மார்க்கத்தில் ஜீவன் திரும்பினதற்கு அடை யாளமாகும். அதற்கு அனுகூலமான பூர்வகர்ம வாஸனைகளே பாண்டவ ஸைன்யமாகும். இந்தப் பிரவிருத்தி நிவிருத்தி மார்க்க ஹேதுவான கர்மங்களுக்கு எப்பொழுதும் மனிதனுடைய அந்தக் கரணத்தில் மஹாயுத்தம் நடந்துகொண்டேயிருக்கிறது. சாந் தோக்ய உபநிஷத்தின் பாஷ்யத்தில் இதையே தேவாஸுர யுத்த மென்று ஸ்ரீமத் சங்கராசார்யர் சொல்லுகிறார். அந்த யுத்தத்தில் அர்ஜுனனான ஜீவன், லௌகிக கர்மவாஸனைகளுடன் சண்டை செய்து அவைகளை வென்று, மோக்ஷமென்ற ராஜ்யத்தை அடைய வேண்டியது. அப்படி ஆசார்யனென்ற ஸாரதியால் நடத்தப்பட்ட ரதத்தில் ஜீவன் யுத்தகளத்திற்கு வந்து, தான் போர்புரிந்து ஜயிக்க வேண்டிய காமக்ரோத லோப முதலிய நித்ய சத்ருக்களையும் தன க்கு ஸஹாயமாயிருக்கும் சக்திகளையும் நன்றாய்க் கவனித்துப்

பார்த்துப் பிறகு யுத்தத்தை ஆரம்பிப்பது உசிதம். அந்த ஸமயத்தில் அவனுக்கு உண்டாகும் மனத்தளர்ச்சிக்கு இடங்கொடாமல், ஆசார்யன் அதை நன்றாய் விசாரித்து, அந்த யுத்தத்தைச் செய்வதே தர்மம், உசிதம், புண்யம், லாபகரமென்று நிரூபிப்பதற்கு அதைத்தவிற வேறு ஸமயம் கிடைக்காது; வேறு இடமுமில்லை.

பத்தாவது சுலோகத்தில் "நமது ஸைன்யம் பீஷ்மரால் ரக்ஷிக்கப்பட்டாலும் யுத்தஞ்செய்வதற்குப் போதாது. ஆனால் பாண்டவர்களுடைய ஸைன்யம் பீமனால் ரக்ஷிக்கப்பட்டாலும் யுத்தஞ்செய்வதற்குப் போதும்" என்ற வாக்யத்தின் உட்கருத்தை அறியாமல் பலவிதமாய் அர்த்தஞ்செய்யப்படுகிறது. பாண்டவ ஸைன்யத்திற்குத் திருஷ்டத்யும்னன் ஸேனைத்தலைவனாயிருக்க, அவனைச் சொல்லாமல் பீமனைச் சொல்வதின் கருத்தென்ன? துர்யோதனனுக்குப் பாண்டவர்களில் பீமனைத் தவிர மற்ற யாரிடத்திலும் பயமில்லை. அர்ஜுனனைக் கொல்வதற்குக் கர்ணன் போதுமென்று எண்ணினான். பால்யம் முதல் பீமனிடத்திலேயே அவனுக்குப் பயம்; பீமனுடைய கதையால் தான் துடை ஒடிந்து இறப்பானென்று திரௌபதி சபித்திருக்கிறாள். மைத்ரேய மஹர்ஷியும் அப்படியே சொல்லியிருக்கிறார். துர்யோதனன் முதலிய நூறு கௌரவர்களைக் கொல்வதாய் பீமனும் பிரதிக்ஞை செய்திருக்கிறான். ஆகையால் பாண்டவ ஸைன்யத்திற்கு உண்மையான பிராணாதாரம் பீமனென்ற உட்கருத்து அவனையறியாமல் வெளிப்பட்டது. மேலும், பீமன் முக்ய ப்ராண வாயுவின் அம்சாவதாரம். துரியோதனனோ விஷ்ணுத் துவேஷியான கலி புருஷனுடைய அம்சாவதாரம். ஆகையால் அவன் பீமனைக் கண்டு பயப்படுவது உசிதமே.

19-வது சுலோகத்தில், "பாண்டவர்களின் சங்கத்வனியானது திருதராஷ்ட்ர ஸைன்யங்களின் மனதைப் பிளந்தது. ஆகாசமும் பூமியும் அதன் எதிரொலியால் நடுங்கிற்று" என்றதற்கு ஆதாரமாய் பாரதம் வனபர்வத்தில் ஒரு கதை சொல்லப்படுகிறது. பீமஸேனன் திரௌபதியின் பிரார்த்தனைக்கிணங்கி ஸௌகந்திகா புஷ்பத்தைக் கொண்டுவரப் போனபொழுது, வழியில் ஆஞ்ஜநேயரைக்

கண்டு, அவரை இன்னாரென்றறியாமல், அவருடன் யுத்தஞ்செய்து தோற்று, முடிவில் அவருடைய வரலாற்றை அறிந்தான். மாருதி பீமனிடத்தில் நிகரற்ற அன்புவைத்து, "இனி நடக்கப்போகும் மஹா யுத்தத்தில் நான் அர்ஜுனனுடைய த்வஜத்தில் வீற்றிருந்து சத்ரு ஸைன்யங்களின் மனதைக் கலக்குகிறேன். மேலும், நீ சங்கத்தை ஊதும்பொழுதெல்லாம் நானும் கர்ஜித்து, அந்த த்வனி கோடி மடங்கு அதிகரிக்கும்படி செய்வே"னென்று வரங்கொடுத்தார்.

22,23-வது சுலோகத்தில் அர்ஜுனனுடைய மனப்பான்மையும் அவனுக்கு ஏற்பட்ட ஸந்தேஹத்தின் காரணமும் சொல்லப்படுகிறது. அர்ஜுனன் ஸகல ஸ்வாதந்தரியத்தையும் தானே வகித்துக், கிருஷ்ணனைத் தனக்குக் கீழ்ப்பட்டவராய் நினைத்துத், தன் இஷ்டப்படி ரதத்தை ஓட்டச்சொல்லுகிறான். யுத்தஞ்செய்வது தானேயென்றும், அதன் லாபநஷ்டம் தனக்கேயென்றும் அஹங்கார புத்தி மேலிட்டிருக்கிறது. "என் ரதம், நான் பார்க்கவேண்டும், யாருடன் நான் யுத்தஞ் செய்யவேண்டுமோ அவர்களைநான் பார்க்கவேண்டும்" என்று பலதடவை, நான், எனதென்ற எண்ணத்தைக் காட்டுகிறான். ஆனால், ஜீவனுக்கு இஷ்டமிருந்தாலும் இல்லாவிட்டாலும், அவனுடைய ஸ்வபாவமென்ற பூர்வ கர்மவாஸனை அவனைப் பலவந்தமாய்ச் செய்விக்குமென்பதையும், ஈசுவரனுடைய நியமனத்தின்படி இந்தப் பிரபஞ்ச வியவகாரம் ஆதிமுதல் முடிவுவரையில் நடக்கிறதென்பதையும், ஜீவனுடைய ஸ்வாதந்தரியம் அதற்கு உட்பட்டதேயென்பதையும் மறந்துவிட்டான். செய்கையெல்லாம் தேஹேந்திரியாதிகளின் காரியமென்பதை மறந்து, ஆத்மாவே கர்த்தாவென்றும் போக்தாவென்றும் தவறாக நினைத்தான். 18-வது அத்யாயத்தின் முடிவில் (59) கிருஷ்ணன் "அர்ஜுனா! நீ அஹங்காரம் மேலிட்டு யுத்தம் பண்ணுவதில்லையென்று நினைத்தாலும் அந்த எண்ணம் பலிக்காது. உன் ஸ்வபாவம் உன்னைத் தூண்டிவிடும்" என்கிறார். மேலும், 11-வது அத்யாயத்தில் (33, 34) "அர்ஜுனா! இந்த ஸைன்யங்களை நீ கொல்லுகிறாயென்று எண்ணுவது தவறு. இவர்கள் என்னால் முன்பே கொல்லப்பட்டார்கள். வெளிப்படையான காரணமாய் மாத்திரம் நீ இரு. நீ பயப்படவேண்டிய துரோணரையும் பீஷ்மரையும் ஜயத்ரதனையும் கர்ணனையும் நான் முன்பே கொன்று

விட்டேன். அவர்களைக் கொல்லவேண்டியிருக்கிறதேயென்று நீ வருத்தமடையாதே. தைரியமாய் யுத்தஞ்செய். இந்த மஹாயுத்தத்தில் நீ நிச்சயமாய் ஜயிப்பாய்" என்கிறார். இந்த அஹங்கார மமகாரம் மேலிட்டுத், தனதல்லாததைத் தனதாய் எண்ணிக்கொண்டதால் தர்ம ஸந்தேஹம் ஏற்பட்டது. அதே கீதாசாஸ்திர உபதேசத்திற்குக் காரணமாயிற்று.

25-வது சுலோகத்தில் இப்படிக் கண்ணன் ரதத்தை பீஷ்ம துரோணாதி வீரர்களுக்கெதிரே நிறுத்தி "அர்ஜுனா! இதோ யுத்தத்திற்காக அணிவகுத்து நிற்கும் கௌரவர்களைப் பார்" என்றார். அதாவது, இதுவரையில் இன்னாருடன் யுத்தஞ் செய்யவேண்டுமென்று அறியாயோ? இந்த யுத்தத்தைச் செய்ய நினைப்பதற்கு முன் உனக்கு உதவிசெய்கிறவர்களையும், கௌரவர்களுக்கு உதவிசெய்கிறவர்களையும் நன்கு விசாரித்து வகுக்கவில்லையோ? இப்பொழுது யுத்தஞ்செய்யப்போகும் ஸமயத்தில் அவர்களைப் பார்ப்பதால் உனக்கு என்ன ஆகவேண்டியிருக்கிறது? இப்பொழுது உன் எண்ணம் மாறப்போகிறதோ"வென்ற பரிஹாஸமான கருத்து அடங்கியிருக்கிறது. இரண்டாவது அத்யாயத்தில் 10-வது சுலோகத்தில் "இரு ஸைந்யங்களுக்கு நடுவிலே யுத்தஞ் செய்யப்போகும் ஸமயத்தில் மனத்தளர்ச்சியடைந்த அர்ஜுனனைப் பார்த்துப் பகவான் புன்சிரிப்புடன் இப்படிச் சொன்னார்" என்பதால் இது விளங்குகிறது.

மேலும், கண்ணன் அர்ஜுனனுடைய ரதத்தை அவ்விடத்திற்குக் கொண்டுபோய் நிறுத்தினதற்கு வேறொரு காரணமுமுண்டு. பீஷ்மர் தன் தேஹத்தை விடும்பொழுது பகவானைக் குறித்து ஸ்தோத்ரம் செய்கையில் "தன் தோழனான அர்ஜுனன் சொல்லும் வார்த்தைகளைக் கேட்டு, உடனே அவனுடைய ரதத்தை இரு ஸைந்யங்களுக்கும் நடுவில் கொண்டுபோய் நிறுத்திக், கௌரவ ஸைன்யத்திலுள்ளவர்களை உற்றுப்பார்த்து, அந்தப் பார்வையாலேயே அவர்களின் வீர்யம் முழுவதையும் ஆயுளையும் அபஹரித்தார். அந்தக் கண்ணனிடத்தில் என் மனது சரணமடையட்டு"மென்றார்.

27-வது சுலோகத்தில் அர்ஜுனனுக்கு எல்லையற்ற இரக்கமுண்டாய், மனந்தளர்ந்தானென்று சொல்லப்படுகிறது. ராஜ்யத்திற்கும் செல்வத்திற்கும் ஆசைகொண்டு யுத்தஞ்செய்வது பாபம். மேலும், தன் பந்துக்களையும் மித்ரர்களையும் வேரோடு அழிக்கும் யுத்தத்தை வருவிப்பது மஹாபாபம். அது எல்லோர்க்கும் ஸாமான்யமாய்த் தோன்றும் எண்ணமே. தற்காலத்தில் உலகத்தில் தேசங்களுக்குள் யுத்தமேயில்லாமல் செய்வதற்கும் எல்லா வியவஹாரங்களையும் ஸமாதானத்தாலேயே முடிப்பதற்கும் நடக்கும் யத்னங்களைக் கவனிக்கலாம். மனிதனுடைய புத்தியும் யுக்தியும் பிரகிருதி சாஸ்திரப் பயிற்சியும், மனிதர்களையும் பொருள்களையும் எல்லையில்லாமல் நாசஞ் செய்யக்கூடிய உபாயங்களைக் கண்டுபிடிப்பதிலேயே செலுத்தப்படுகிறதென்பதை உணராதவர்களில்லை. ரக்த ஸம்பந்தத்தாலும் பக்தியாலும் அன்பாலும் தனக்கு மிகவும் நெருங்கின மனிதர்களை நாசஞ்செய்யும் காரியத்தைத் தர்மமென்றும் கடமையென்றும் அர்ஜுனன் ஒப்புக்கொள்ளவில்லை. அஹிம்ஸையே ஸர்வோத்தமமான தர்மமென்று சொன்ன சுருதி மேலானதா? அதற்கு விரோதமான வர்ணாச்ரம தர்மம் மேலானதா? எந்த நிலைமையிலும் ஸமாதானத்தையே நாடவேண்டும். யுத்தத்தை ஒழிக்கவேண்டும். யுத்தத்தால் நேரும் கெடுதிகளுக்கு அதனால் கிடைக்கும் லாபம் பரிஹாரமாகாது.

இப்படி அர்ஜுனன் எண்ணினது பார்வைக்கு உசிதமாய்த் தோன்றுகிறது. ஆகையால் பகவான் அவனுடைய காரணங்களைப் பிரக்ஞாவாதமென்று [அதாவது பார்வைக்குப் புத்திமான்களுடைய மதமென்று] கண்டித்தார். மேற்சொன்ன சுருதியை உபதேசித்த பகவானே தன் அம்சமாய் உலகத்தில் அரசனை ஏற்படுத்தி, ஜனங்களை ஆளுவதற்குத் தண்ட நீதியையும் ராஜ தர்மத்தையும் அநுக்ரஹித்தார். பாரதம், அநுசாஸன பர்வத்தில் ராஜ தர்மத்தைப்பற்றிச் சொல்லுமிடத்தில், அர்ஜுனனே இந்தக் கொள்கையை ஆதரிக்கிறான். மேலும், சாந்திபர்வம் 15-ல், "பிறருக்குக் கெடுதி செய்யாமல் உலகத்தில் ஒரு ஜீவனும் இருப்பதை நான் பார்த்ததில்லை. பலமுள்ள மிருகங்கள் பலஹீனமான மிருகங்களையும், பெரிய மிருகங்கள் சிறிய

மிருகங்களையும் கொன்று பிழைக்கின்றன. அரசனுடைய தண்டனைக்குப் பயந்து சிலர் பாபத்தைச் செய்கிறதில்லை. பரலோகத்தில் யமனுடைய தண்டனைக்கும் நரகயாதனைக்கும் பயந்து சிலர் பாபஞ் செய்வதில்லை; தன்னை மற்றவர்கள் கொல்வார்களென்பதற்குப் பயந்து சிலர் பாபஞ் செய்வதில்லை. ஆகையால் உலகத்தில் எல்லாப் பிராணிகளும் தண்டநீதிக்குப் பயந்தே நடக்கின்றன" வென்கிறான். யாதொரு ஜீவனுக்கும் கொஞ்சமேனும் கெடுதியைச் செய்யக்கூடாதென்ற சில பௌத்த ஜைனர்களின் கொள்கை இவ்வுலகத்தில் அனுஷ்டானத்திற்கு வராது. நாம் மூச்சுவிடும் காற்றிலும் குடிக்கும் ஜலத்திலும் உண்ணும் ஆஹாரத்திலும், படுக்கை நடை இருப்பு முதலிய தேஹ சேஷ்டைகளைச் செய்யும்பொழுதும் மிகவும் நுட்பமான எண்ணிறந்த ஜீவன்களைக் கொல்லுகிறோம். உலகத்தில் அரசனும் ஸைன்யமும் இல்லாவிட்டால் ஜனங்கள் கட்டுக்காவலின்றி ஒருவர்க்கொருவர் சண்டையிட்டு நாசமடைவார்கள். ஆகையால், அதர்மமான யுத்தமே பெரியோர்களால் நிந்திக்கப்படும். ஆனால் துஷ்டர்களைச் சிக்ஷித்து ஸாதுக்களை ரக்ஷித்து தர்மத்தை நிலைநிறுத்துவதென்ற பகவானுடைய அவதார கார்யத்தை ஸாதிக்கும் தர்மயுத்தமும் அவருடைய கைங்கர்யமே. அதைச் செய்வதில் பாபமில்லையென்ற நோக்கம் அர்ஜுனனுக்கில்லை.

இவ்விதமான தர்ம ஸந்தேஹமும் மனத்தளர்ச்சியும் அர்ஜுனனுக்குண்டானது இதே முதல் தடவையல்ல. பாரதம் உத்யோக பர்வம் 163-வது அத்யாயத்தில் "ஒரு புழுவிற்கும் எறும்பிற்கும் கூடத் துன்பம்செய்ய என் மனம் தாளாது. அப்படியிருக்கப் பந்துக்களையும் நண்பர்களையும் பெரியோர்களையும் கொன்று, அவர்களை அண்டின பெண்டுபிள்ளைகளை நிர்க்கதியாய்ச் செய்யத் துணிவேனா? ஆகையால், எனக்கு இந்த ராஜ்யம் வேண்டாம். ஐந்து கிராமங்களைக் கொடுத்தால் போதுமென்று முதலில் கேட்டேன்" என்கிறான். இப்படி எல்லையற்ற கருணைகொள்வது ஸரியல்லவென்று கண்டு, பிறகு ஸந்தேஹந் தெளிந்து, கௌரவர்களுடன் யுத்தஞ் செய்யத் துணிந்தான். ஆனால், மறுபடியும் அவனை அக்ஞானம் மூடிக்கொண்டது.

தான் யுத்தஞ் செய்யக்கூடாதென்பதற்கு அர்ஜுனன் சொல்லும் காரணங்கள் இந்த அத்யாயத்திலும் அடுத்த அத்யாயத்தின் ஆரம்பத்திலும் காணப்படுகின்றன. அவைகளை ஒருவாறு ஒழுங்குபடுத்தி அவைகளுக்குப் பகவான் சொல்லும் பரிஹாரங்களையும் கவனிப்பது உசிதம்.

1. என்னைச் சேர்ந்தவர்களைக் கொல்லவேண்டுமே யென்றதை நினைத்தால் என்னை அறியாமலேயே என் தேஹம் பதைபதைக்கிறது. இந்திரியங்கள் தடுமாறுகின்றன; மனம் ஒன்றுந் தோன்றாமல் மயங்குகிறது; காண்டீவம் நழுவுகிறது. மனதையும் இந்திரியங்களையும் தேஹத்தையும் கருவிகளாய் உபயோகித்தல்லவா யுத்தஞ் வேண்டும்? அவைகளே இயற்கையாய் மறுக்கின்றன.

(2) நமக்கு ஜயம் கிடைப்பது அவ்வளவு நிச்சயமல்லவென்றும், எண்ணிறந்த பிராணிகள் இந்த யுத்தத்தால் அழியுமென்றும், நாமே பிழைப்போமோ இறப்போமோயென்றும் எண்ணுவதற்கு ஆதாரமாய்ப் பல அபசகுனங்கள் காணப்படுகின்றன. "ஏழு பெரிய கிரஹ மண்டலங்களும், ஆகாசத்திலிருந்து நெருப்பு ஜ்வாலைகளுடன் கீழே விழுகின்றன. ஸூர்யன் இதுவரையிலிருந்ததுபோல் தோன்றவில்லை. ஆகாச வீதியில் இரண்டு ஸூர்யர்கள் பிரகாசிக்கிறார்கள். அவைகளிடத்திலிருந்து நெருப்புக் கொழுந்துகள் வெகுதூரம் பரவுகின்றன. நரிகளும் காக்கைகளும் பகற்காலத்தில் ஊளையிட்டுக் கொண்டும், க்ரூரமாய்க் கத்திக்கொண்டும், ரக்த மாம்ஸங்களைத் தின்கப் போவதாலுண்டாகும் திருப்தியை நினைத்து உதடுகளை நக்குகின்றன.

3. என் இனத்தாரை யுத்தத்தில் கொல்வதால் கிடைக்கும் பயனென்ன? க்ஷேமமென்ன? உனக்கு ஜயம் கிடைப்பது லாபமல்லவா? அகண்டமான ராஜ்யமும் செல்வமும் அதிகாரமும் கிடைப்பது லாபமல்லவாவென்றால்,

(4) அந்த ராஜ்யமும் போகபோக்யங்களும் ஜயமும் எனக்குக் கிடைத்தாலும் நான் மாத்திரம் ஒண்டியாய் அவைகளை அனுபவிக்க முடியுமோ? என் பந்துக்களும் மித்திரர்களும் பிரஜைகளும்

இருந்தாலல்லது, மேற்சொன்னவைகளால் எனக்கு ஸுகமுண்டாகுமோ ?

(5) லோகத்தில் நடக்கும் யுத்தங்களில் இருகக்ஷியாரும் தீராத வைரமுடைய சத்ருக்களாயிருப்பார்கள். இந்த யுத்தத்திலோ நான் கொல்லவேண்டியவர்கள் இருவகையாகும். எனக்குக் கெடுதி செய்யும் துரியோதனாதியர் ஒரு வகுப்பு; என்னிடத்தில் பால்யம் முதல் பிரீதிவைத்து வளர்த்து, வித்யாப்யாஸஞ் செய்வித்து, எப்பொழுதும் என் க்ஷேமத்தையே கோறும் பீஷ்மர், துரோணர், கிருபர் முதலிய பலர் இரண்டாவது வகுப்பு; இவர்களைக் கொன்று அதனால் ஒரு பிரயோஜனத்தை அடைவதை இதுவரையிலும் கேட்டதில்லை.

(6) இந்த அற்பமான கௌரவ ராஜ்யத்திற்காக இந்த அக்ரமத்தைச் செய்வதைப் பற்றிச் சொல்லவில்லை. இந்தப் பூமண்டலம் முழுவதும் புவர்லோகம் முழுவதும் ஸுவர்லோகம் முழுவதும் எனக்குக் கிடைப்பதாயிருந்தாலும், இந்த அக்ரமத்தைச் செய்யக் கூடாது.

(7) ஆனால் "பால்யம் முதல் உங்களைக் கொல்வதற்குப் பல சூழ்ச்சிகளைச் செய்யும் துரியோதனாதியர் கொலையாளிகளல்லவா? தற்காப்பிற்காக அவர்களைக் கொல்வது பாபமில்லையென்று ஸ்மிருதிகள் சொல்லவில்லையாவெ"ன்றால், இந்த யுத்தத்தில் அவர்களை மாத்திரம் கொல்லமுடியாது. எனக்கு எந்நாளும் கெடுதி செய்யாமல், செய்ய நினைக்காமல், நன்மையையே செய்து, நன்மையையே எப்பொழுதும் கோறும் பலர் சத்ருபக்ஷத்திலிருக்கிறார்கள். அவர்களையும் என் பக்ஷத்திலிருக்கும் யாவரையும் கொன்றாலன்றி ஜயம் கிடைப்பதரிது.

(8) என் சத்ருக்கள் செல்வத்திலும் அதிகாரத்திலும் அக்ஞானத்தால் ஆசை வைத்து மதிமயங்கி என்னைக் கொல்ல முயன்றாலும் அவ்விதமான மயக்கமில்லாத நானும் அப்படியே செய்வது பாபமாகும்.

(9) பால்யம் முதல் ஒரே இடத்திலிருந்து வித்யாப்யாஸம் செய்து வளர்ந்த நண்பர்களைக் கேவலம் பொருளாசையால் நான் கொல்ல நினைப்பது மித்ரத்ரோஹமாகும்; அது பெரும் பாதக மல்லவா ?

(10) இந்த யுத்தத்தில் இரு கக்ஷியிலுமுள்ள போர்வீரர்கள் கொல்லப்பட்டால் அவர்களுடைய குடும்பங்களுக்குத் தலைவர்களில் லாமல் அவை நாசமடையும். குலம் அழிந்தால் அதில் நெடுநாளாய் அனுஷ்டிக்கப்பட்டு வரும் தர்மங்கள் அழியும். குலதர்மங்கள் அழிந்தால் அவைகளுக்கு விரோதமான அதர்மங்கள் பழகும். அதின் மூலமாய் அந்தக் குலத்து ஸ்திரீகள் பாபபுண்ய நியாயாந்யாய விவேகமின்றித் தாழ்ந்த வர்ணத்தாரைச் சேர்ந்து கெடுவார்கள். அப்பொழுது பகவானால் ஜனங்களின் க்ஷேமத்திற்காக ஏற்படுத்தப் பட்ட நான்கு வர்ணங்களும் ஆசிரமங்களும் சீர்குலைந்து, அவைகளின் ஆசாரங்கள் ஒன்றோடொன்று கலந்து, ஜனங்களைக் கட்டுக் காவ லின்றி, ஸ்வர்க்க நரக பயமின்றி, ஈசுவர புத்தியின்றி, எக்கார்யத் தையும் துணிந்து செய்யத் தூண்டிவிடும். இப்படிக் குலங்களை அழிப்பதற்கு மூலகாரணமான எனக்கு நேரும் பாபங்களுக்கும் அவைகளால் அனுபவிக்கவேண்டிய நரகங்களுக்கும் எல்லை யுண்டோ?

(11). இப்பொழுது உயிரோடிருப்பவர்களுக்கு மாத்திரம் கெடுதி நேருமென்று சொல்லமுடியாது. தர்மா தர்மமில்லாமல், வைதிக லௌகிக கிரியைகளை விட்ட மேற்சொன்ன குலங்களிலுள்ள வர்கள், தங்களுடைய பிதிருக்களுக்கு விதிப்படி காலாகாலங்களில் தர்ப்பணம் சிரார்த்தம் உத்தரக்ரியைகள் முதலியவைகளைச் செய்ய மாட்டார்கள். அப்பொழுது அந்தப் பிதிருக்கள் உத்தம லோகங்களி லிருந்து விழுந்து அதோகதியடைவார்கள். இப்படி என்னையும் குற்ற மற்ற பலரையும் நமக்கு முன்னோர்களான பிதிருக்களையும், கேவலம் இந்த ராஜ்யத்திற்காக ஆசைப்பட்டு, இகத்திலும் பரத்திலும் ஸுகமில்லாமல் அழிப்பதற்கு நான் காரணமாவேன்.

(12). "ஒருவேளை நீ யுத்தஞ்செய்யாமல் ஓய்ந்திருந்தாலும், அவர்கள் உன்னைக் கொல்ல வந்தால், அப்பொழுதாவது அவர்களைக்

இருந்தாலல்லது, மேற்சொன்னவைகளால் எனக்கு ஸுகமுண்டாகுமோ ?

(5) லோகத்தில் நடக்கும் யுத்தங்களில் இருகக்ஷியாரும் தீராத வைரமுடைய சத்ருக்களாயிருப்பார்கள். இந்த யுத்தத்திலோ நான் கொல்லவேண்டியவர்கள் இருவகையாகும். எனக்குக் கெடுதி செய்யும் துரியோதனுதியர் ஒரு வகுப்பு; என்னிடத்தில் பால்யம் முதல் பிரீதிவைத்து வளர்த்து, வித்யாப்யாஸஞ் செய்வித்து, எப்பொழுதும் என் க்ஷேமத்தையே கோறும் பீஷ்மர், துரோணர், கிருபர் முதலிய பலர் இரண்டாவது வகுப்பு; இவர்களைக் கொன்று அதனுல் ஒரு பிரயோஜனத்தை அடைவதை இதுவரையிலும் கேட்டதில்லை.

(6) இந்த அற்பமான கௌரவ ராஜ்யத்திற்காக இந்த அக்ரமத்தைச் செய்வதைப் பற்றிச் சொல்லவில்லை. இந்தப் பூமண்டலம் முழுவதும் புவர்லோகம் முழுவதும் ஸுவர்லோகம் முழுவதும் எனக்குக் கிடைப்பதாயிருந்தாலும், இந்த அக்ரமத்தைச் செய்யக் கூடாது.

(7) ஆனுல் "பால்யம் முதல் உங்களைக் கொல்வதற்குப் பல சூழ்ச்சிகளைச் செய்யும் துரியோதனுதியர் கொலையாளிகளல்லவா? தற்காப்பிற்காக அவர்களைக் கொல்வது பாபமில்லையென்று ஸ்மிருதிகள் சொல்லவில்லையாவெ"ன்றுல், இந்த யுத்தத்தில் அவர்களை மாத்திரம் கொல்லமுடியாது. எனக்கு எந்நாளும் கெடுதி செய்யாமல், செய்ய நினைக்காமல், நன்மையையே செய்து, நன்மையையே எப்பொழுதும் கோறும் பலர் சத்ருபக்ஷத்திலிருக்கிறுர்கள். அவர்களையும் என் பக்ஷத்திலிருக்கும் யாவரையும் கொன்றுலன்றி ஜயம் கிடைப்பதரிது.

(8) என் சத்ருக்கள் செல்வத்திலும் அதிகாரத்திலும் அக்ஞானத்தால் ஆசை வைத்து மதிமயங்கி என்னைக் கொல்ல முயன்றுலும் அவ்விதமான மயக்கமில்லாத நானும் அப்படியே செய்வது பாபமாகும்.

(9) பால்யம் முதல் ஒரே இடத்திலிருந்து வித்யாப்யாஸம் செய்து வளர்ந்த நண்பர்களைக் கேவலம் பொருளாசையால் நான் கொல்ல நினைப்பது மித்ரத்ரோஹமாகும்; அது பெரும் பாதகமல்லவா ?

(10) இந்த யுத்தத்தில் இரு கக்ஷியிலுமுள்ள போர்வீரர்கள் கொல்லப்பட்டால் அவர்களுடைய குடும்பங்களுக்குத் தலைவர்களில்லாமல் அவை நாசமடையும். குலம் அழிந்தால் அதில் நெடுநாளாய் அனுஷ்டிக்கப்பட்டு வரும் தர்மங்கள் அழியும். குலதர்மங்கள் அழிந்தால் அவைகளுக்கு விரோதமான அதர்மங்கள் பழகும். அதின் மூலமாய் அந்தக் குலத்து ஸ்திரீகள் பாபபுண்ய நியாயாந்யாய விவேகமின்றித் தாழ்ந்த வர்ணத்தாரைச் சேர்ந்து கெடுவார்கள். அப்பொழுது பகவானால் ஜனங்களின் க்ஷேமத்திற்காக ஏற்படுத்தப்பட்ட நான்கு வர்ணங்களும் ஆசிரமங்களும் சீர்குலைந்து, அவைகளின் ஆசாரங்கள் ஒன்றோடொன்று கலந்து, ஜனங்களைக் கட்டுக் காவலின்றி, ஸ்வர்க்க நரக பயமின்றி, ஈசுவர புத்தியின்றி, எக்காரியத்தையும் துணிந்து செய்யத் தூண்டிவிடும். இப்படிக் குலங்களை அழிப்பதற்கு மூலகாரணமான எனக்கு நேரும் பாபங்களுக்கும் அவைகளால் அனுபவிக்கவேண்டிய நரகங்களுக்கும் எல்லையுண்டோ?

(11). இப்பொழுது உயிரோடிருப்பவர்களுக்கு மாத்திரம் கெடுதி நேருமென்று சொல்லமுடியாது. தர்மா தர்மமில்லாமல், வைதிக லௌகிக க்ரியைகளை விட்ட மேற்சொன்ன குலங்களிலுள்ளவர்கள், தங்களுடைய பிதிருக்களுக்கு விதிப்படி காலாகாலங்களில் தர்ப்பணம் சிராத்தம் உத்தரக்ரியைகள் முதலியவைகளைச் செய்யமாட்டார்கள். அப்பொழுது அந்தப் பிதிருக்கள் உத்தம லோகங்களிலிருந்து விழுந்து அதோகதியடைவார்கள். இப்படி என்னையும் குற்றமற்ற பலரையும் நமக்கு முன்னோர்களான பிதிருக்களையும், கேவலம் இந்த ராஜ்யத்திற்காக ஆசைப்பட்டு, இகத்திலும் பரத்திலும் ஸுகமில்லாமல் அழிப்பதற்கு நான் காரணமாவேன்.

(12). "ஒருவேளை நீ யுத்தஞ்செய்யாமல் ஓய்ந்திருந்தாலும், அவர்கள் உன்னைக் கொல்ல வந்தால், அப்பொழுதாவது அவர்களைக்

கொல்லவேண்டாமாவெ"ன்றால், நான் ஒருவன் இறப்பது நலமா? அல்லது, நான் பிழைத்திருந்து எண்ணிறந்தவர்கள் அந்யாயமாய் மரணமடைவது நன்மையாவென்று யோசித்தால், பலரைக் காப்பாற்றுவதற்காக ஒருவன் உயிரைக் கொடுப்பது மேலான தர்மமாகும்.

(13) மற்றவர்களைப்பற்றி எனக்கு அதிவருத்தமில்லை. என்னைப் பிறந்தது முதல் மடியிலும் மார்பிலும் தோளிலும் வைத்துக் கட்டியணைத்துக், கொஞ்சிச், சீராட்டித், தாலாட்டி வளர்த்த குருகுல பிதாமஹரான பீஷ்மாசார்யருடன் எப்படி யுத்தஞ்செய்வேன்? என் பிதா இறந்த பிறகு அவரே எனக்குப் பிதாவாயிருக்கிறார். அவருடைய மார்பைப் பாணங்களால் துளைப்பேனோ? அவருடைய கைகளை அறுத்துத் தள்ளுவேனோ? கூர்மையான பாணங்களால் அவருடைய சிரஸைத் துணிப்பேனோ? அவரிடத்தில் நான் வைக்கவேண்டிய அன்பும் பக்தியும் பூஜையும் இதுதானோ? எனக்குப் பால்யத்தில் வில்லைப் பிடிக்கவும், பாணங்களைத்தொடுக்கவும், ஆயுதங்களை உபயோகிக்கவும், கற்றுக்கொடுத்த பரமாசார்யரான துரோணாசாரியருக்கு நான் கொடுக்கும் குருதக்ஷிணை, அவருடைய தேஹத்தைச் சின்னபின்னமாய் வதைத்து, அந்த மஹானுபாவனுடைய உயிரைக் கொள்ளைகொள்வதுதானோ? பிதிருதுரோஹம், குருதுரோஹம், யாவற்றுற்கும் நான் ஒருவனே பாத்திரமாவேனோ?

(14) அவர்களுக்கு விவேகமில்லை. பாபியான துரியோதனனை அண்டிப் பிழைக்கிறார்கள். 'நியாயமான உங்களுடைய கக்ஷியை ஏன் சேரக்கூடாது? செல்வத்திற்கும் அதிகாரத்திற்கும் போகபோக்யங்களுக்கும் ஆசைப்பட்டு, நியாயத்தைத் துறந்து, அதை எதிர்த்து, அந்யாயத்தைக் கைக்கொண்டு, அதே ஜயிக்கவேண்டுமென்று தங்களால் இயன்றவரையில் கடும்போர்புரிந்து, உயிரையும் விடத் துணிந்தவர்களைக் கொல்வது பாபமல்லவேயெ'ன்றால், அவர்களுடைய செயல்களின் பயனை அவர்களே அனுபவிக்கவேண்டியதன்றி நான் அவர்களைத் தண்டிப்பது நியாயமல்ல. மேலும், அவர்கள் எக்காலத்திலும் மனப்பூர்வமாய் என்னுடைய க்ஷேமத்தையே பிரார்த்திக்கிறார்கள். வெகுகாலமாய்த் திருதராஷ்டிரனுடைய அன்

னத்தைத் தின்று வளர்ந்த தேஹத்தை அந்தக் கடனைத் தீர்ப்பதற்காக, அவனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து யுத்தத்தில் பலிகொடுக்க நிச்சயித்திருக்கிறார்கள். அது உத்தமமான தர்மம். மேலும், லௌகிக ஸுகங்களுக்காக ஆசைப்படும் அவர்களைக் குற்றஞ்சாட்டி அதற்காகக் கொன்றால், அதே குற்றத்தை நான் செய்தவனல்லவா? ராஜ்யத்தையும் செல்வத்தையும் விரும்பியே இந்த யுத்தத்தைச் செய்யத் துணிந்தேன். நான் யுத்தஞ்செய்ய ஆரம்பித்தால் மேற்சொன்ன எண்ணிறந்த தீமைகள் விளைகின்றன. யுத்தஞ்செய்யாமல் ஓய்ந்தால் யாதொரு கெடுதியும் நேராது. ஆகையால், பிச்சையெடுத்துப் பிழைப்பதே நான் செய்யக்கூடிய மேலான தர்மமாகும்.

(15.) அப்படி யுத்தஞ்செய்யத் துணிந்தாலும் ஜயாபஜயம் ஒருவருடைய பங்கல்ல. நான் தோற்றால், கொடிய பாபத்தைச் செய்வதால் என் உயிரை மாய்த்துக்கொண்டதுமே நான் அடையும் பயனாகும்.

(16) நான் ஜயித்தாலும் தோல்வியடைந்தாலும் எனக்கு லாபமில்லை. தோல்வியடைந்தால் மேற்சொன்னபடி இஹத்திலும் பரத்திலும் துக்கத்தையே அனுபவிப்பேன். ஜயித்தாலும் இந்த ராஜ்யத்தை வைத்துக்கொண்டு ஆண்டனுபவிக்க என்னால் முடியாது. கௌரவர்களையும் பாண்டவர்களையும் அவர்களுக்கு உதவியாய் வந்த இந்தப் பதினெட்டு அக்ஷௌஹிணி ஸைன்யத்தையும் அழித்த மஹாபாபத்தை நினைக்க நினைக்க எனக்கு மீளாத் துபரமேயன்றி ஸுக லேசமுமுண்டோ? அந்த ஞாபகமே என்னைச் சீக்கிரத்தில் கொன்றுவிடும். மேலும், நான்மாத்திரம் ஒண்டியாய்ப், பிணந்தின்னும் பூச்சியைப்போல், எல்லோரையும் விழுங்கிவிட்டு இந்த ராஜ்யத்தை எப்படி அனுபவிப்பேன்? நான் சண்டைசெய்வதும் கஷ்டப்படுவதும், என் பந்துக்களோடும் மித்ரர்களோடும் கூடியிருந்து இவ்வுலகத்தில் ஸுகமாய்க் காலங் கழிப்பதற்கேயல்லவா? ஆகையால், ஜயித்தாலும் இறப்பேன், தோற்றாலும் இறப்பேன்,

(17) ஆனால், நான் பூர்வ கர்மவசத்தால் இவ்வுலகத்தில் க்ஷத்ரியனாய்ப் பிறந்திருக்கிறேன். அந்த வர்ணத்தின் தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டியவன். நல்லோரைக் காப்பாற்றி, துஷ்டர்களைச் சிக்ஷித்துத், தர்மந்தவறாமல் ஆள்வது என் கடமை. மேலும், யுத்தத் திற்குப் பிறரால் அழைக்கப்பட்டால் அதைத் தட்டாமல் இயன்ற வரையில் யுத்தஞ்செய்வது என் கடமை. மேலும், என் ஸஹோதரர் களும் பந்துக்களும் என் வீரியத்தையும் என் பராக்ரமத்தையும் நம் பியே இதுவரையில் பிழைத்திருக்கிறார்கள். நான் கடுந்தவஞ்செய்து பரமசிவனிடத்திலும் இன்னும் இந்திராதி தேவர்களிடத்திலும் வரங்களையும் திவ்யாயுதங்களையும் பெற்றது இதற்காகவே. இப்படி நினைக்கும்பொழுது யுத்தஞ்செய்வதே என் கடமையென்று தோன்றுகிறது. ஆனால், யுத்தத்தால் நேரும் கொடுமைகளையும் பாபத்தையும் நினைக்கும்பொழுது, யுத்தத்தை நிறுத்தி, எங்கேயாவது போய்ப், பிக்ஷையெடுத்துப் பிழைப்பதே என் கடமையென்று தோன்றுகிறது. ஆகையால் இந்த விஷயத்தில் என் தர்மம் இன்ன தென்றும் நான் செய்யவேண்டியது இன்னதென்றும் எனக்குத் தெரி யாமல், க்ஷத்திரியனுக்கு எந்நாளும் உண்டாகக்கூடாத அபார கருணை மேலிட்டு, இன்னதைச் செய்வதென்றறியாமல் தயங்கு கிறேன். நீர் எனக்குப் பந்து, என் தோழன், என் ஆசார்யன், என் தெய்வம், எல்லாமறிந்தவர், என் ஹிதத்தையே கோறுகிறவர். உம்மையே சரணமடைந்தேன். எனக்கு வேறு கதியில்லை. இந்த ஸமயத்தில் நான் செய்யவேண்டியதென்ன? என் தர்மம் எது? எனக்கு உத்தமமான க்ஷேமத்தைக் கொடுக்கும் கார்யம் எது? உம் முடைய உபதேசத்தை வேத வாக்யமாய்க் கொண்டு அப்படியே நடக்கிறேனெ"ன்றான்.



அத்யாயம் 2.

# ஸாங்க்யயோகம்.

संजय उवाच—

तं तथा कृपयाविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदंतमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥ १ ॥

1. ஸஞ்ஜயன்:—அப்படிக் கருணை மேலிட்டுக் கண்ணீர் ததும்பத் துக்கிக்கும் அர்ஜுனனைப் பார்த்துக் கண்ணன் இவ்வாறு சொன்னார்.

श्रीभगवानुवाच—

कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥ २ ॥

2. பகவான்:—அர்ஜுனா! இந்த நெருக்கடியான ஸமயத்தில் உனக்கு இப்படிச் சோகம்வரக் காரணமென்ன? ஆர்யர்கள் இதற்கு இடங்கொடுக்க மாட்டார்கள். இது உனக்கு ஸ்வர்க்கம் கிடைக்காமல் தடுக்கும். மேலும், அபகீர்த்தியையும் உண்டாக்கும்.

क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते ।
क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परंतप ॥ ३ ॥

3. பேதமைத் தனத்தை அடையாதே. உனக்கு இது தகாது. சத்ருக்களைப் பராக்ரமத்தால் எரிக்கும் நீ இந்த அல்பமான மனோவியாகூலத்தை உதறிவிட்டு, எழுந்து யுத்தஞ்செய் யென்றார்.

अर्जुन उवाच—

कथं भीष्ममहं संख्ये द्रोणं च मधुसूदन ।
इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन ॥ ४ ॥

4. அர்ஜுனன்:—மதுஸூதனா! நான் பூஜிக்கத்தகும் பீஷ்மாசார்யரையும் த்ரோணாசார்யரையும் இந்த யுத்தத்தில் பாணங்களால் எப்படி அடிப்பேன்?

गुरूनहत्वा हि महानुभावान्श्रेयो भोक्तुं भैक्ष्यमपीह लोके ।
हत्वार्थकामांस्तु गुरूनिहैव भुंजीय भोगान्रुधिरप्रदिग्धान् ॥ ५ ॥

5. மஹானுபாவர்களான ஆசார்யர்களைக் கொல்வதை விட்டு இவ்வுலகத்தில் பிச்சையெடுத்துப் பிழைப்பதும் எனக்கு க்ஷேமத்தை யுண்டாக்கும். ஆனால், ராஜ்யத்தையும் ஐசுவரியத்தையும் விரும்பும் இந்தப் பெரியோர்களைக் கொன்று, இவர்களுடைய ரக்தங்களால் பூசப்பட்ட ராஜ்ய போகங்களை இவர்களிருந்த இவ்விடத்திலேயே அனுபவிக்கவேண்டி யிருக்கும்.

न चैतद्विद्मः कतरन्नो गरीयो यद्वा जयेम यदि वा नो जयेयुः ।
यानेव हत्वा न जिजीविषामस्तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः ॥ ६ ॥

6. நாங்கள் கௌரவர்களை ஜயிப்பது நலமா? எங்களை அவர்கள் ஜயிப்பது நலமா? இவ்விரண்டிலும் எது எங்களுக்கு மேலான க்ஷேமத்தைக் கொடுக்குமென்று நாங்கள் அறியமுடியவில்லை. எவர்களைக் கொன்றால் நாங்கள் உயிர்பிழைத்திருக்கமாட்டோமா அந்தத் துர்யோதனாதியர் இதோ எதிரில் யுத்தஞ்செய்ய வந்திருக்கிறார்கள்.

कार्पण्यदोषोपहतस्वभावः पृच्छामि त्वां धर्मसंमूढचेताः ।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम ॥ ७ ॥

7. நம்மவர்களைக் கொல்லவேண்டுமேயென்ற கோழைத்தனத்தால் என் இயற்கையான தைர்யமும் ஞானமும் மறைந்துவிட்டன. எனக்கு ஏற்ற தர்மம் இன்னதென்று அறியாமல் என் புத்தி மயங்குகிறது. ஆகையால் உம்மைக் கேட்கிறேன். எனக்கு எது பரம க்ஷேமத்தைக் கொடுக்குமோ அதை நிச்சயமாய்ச் சொல்லும். நான் உமது சிஷ்யனல்லவா? உம்மையே சரணமடைந்தவனல்லவா? இதைச் செய்யென்று கட்டளையிடும்.

नहि प्रपश्यामि ममापनुद्याद्यच्छोकमुच्छोषणमिंद्रियाणाम् ।
अवाप्य भूमावसपत्नमृद्धं राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८ ॥

8. இவ்வுலகத்தில் சத்ருக்களை அழித்து அகண்டமான ராஜ்யத்தை ஆண்டாலும், தேவர்களுக்கு அரசனாய் விளங்கினாலும், என்

இந்த்ரியங்களை மிகவும் வாட்டும் சோகத்தைப் போக்கக்கூடிய யாதொன்றும் எனக்கு தெரியவில்லை.

संजय उवाच—

एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परंतप ।

न योत्स्य इति गोविंदमुक्त्वा तूष्णीं बभूव ह ॥ ९ ॥

9. ஸஞ்ஜயன்:—சத்ருகுல காலனை அர்ஜுனன் இப்படிக் கண்ணனைப் பார்த்துச் சொல்லி, 'நான் இனி யுத்தஞ் செய்வதில்லை' யென்று மௌனமாயிருந்துவிட்டான்.

तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत ।

सेनयोरुभयोर्मध्ये विषीदंतमिदं वचः ॥ १० ॥

10. இரண்டு ஸேனைகளுக்கு நடுவில் இப்படி மனத்தளர்ச்சி யடைந்த அர்ஜுனனைப் பார்த்துக் கண்ணன் சிரித்துக்கொண்டே இவ்வாறு சொன்னார்.

श्रीभगवानुवाच—

अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।
गतासूनगतासूंश्च नानुशोचंति पंडिताः ॥ ११ ॥

பகவான்:—அர்ஜுனா! எவரைக் குறித்து துக்கப்பட நியாயமில்லையோ அவர்களைப்பற்றித் துக்கப்படுகிறாய். ஞானிகளைப்போல் வாதம் செய்கிறாய். ஆனால் தெரிந்தவர்கள் உயிரிழந்தவர்களைப்பற்றித் துக்கப்படுவதில்லை. (அப்படிச்செய்வதால் அவர்கள் மறுபடியும் பிழைப்பதில்லை யல்லவா?). உயிரிழக்காதவர்களையும் பற்றி அவர்கள் துக்கிப்பதில்லை. (துக்கமடைவதற்குத் தகுந்த யாதொரு ஆபத்தும் அவர்களுக்கு நேரவில்லை. உயிருள்ளவர்களைப்பற்றி எவனும் வருந்தான். அப்படியே உயிரிழந்தவர்களும் வெளிப்பார்வைக்கு அழிந்தவர்களாய்த் தோன்றினாலும், அவர்களுடைய தேஹம் மாத்திரம் அழிந்ததேயன்றி அவர்களென்ற ஆத்மா அழியவில்லையல்லவா? ஆகையால் உயிரிழந்தவர்களைப்பற்றியும் வருந்த ந்யாயமில்லை).

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः ।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥ १२ ॥

12. நான் இதுவரையில் இல்லையென்பது கிடையாது; நீயும் இதுவரையில் இல்லையென்பது கிடையாது. இதோ நிற்கும் அரசர்களும் இதுவரையில் இல்லையென்பது கிடையாது. நாம் எல்லோரும் இனிமேல் இருப்பதில்லையென்பதும் இல்லை. (இதுவரையில் எல்லோரும் இருந்தவர்களே, இப்பொழுதும் இருக்கிறவர்களே, இனிமேலும் நாமெல்லோரும் இருக்கமாட்டோமென்பதுமில்லை. முன்பும் இப்பொழுதும் இனிமேலும் நாம் இருக்கிறவர்களே. நாம் எடுக்கும் தேஹங்கள் மாத்திரம் வேறு).

देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा ।
तथा देहांतरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥ १३ ॥

13. இந்தத் தேஹத்தையெடுத்த ஆத்மாவிற்கு இதில் பால்யமும் யௌவனமும் கிழத்தனமும் எப்படி ஒன்றின்பின் ஒன்றாய்வருகிறதோ (தேஹம் மாறுகிறதேயன்றி ஆத்மா அழியவில்லையோ), அப்படியே (மரணமென்ற நிலைமைக்குப் பிறகும்) வேறு தேஹத்தை அடைவதும் வரும். புத்திமான் அதைக் கண்டு மயங்கமாட்டான்.

मात्रास्पर्शास्तु कौंतेय शीतोष्णसुखदुःखदाः ।
आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥ १४ ॥

14. இந்திரியங்களும் அவைகளால் அனுபவிக்கப்படும் விஷயங்களும் ஒன்று சேர்வதால் சீதம், உஷ்ணம், ஸுகம், துக்கமென்றதைக் கொடுக்கின்றன. அடிக்கடி வருவதும் போவதுமான தன்மையுடையவை. என்றுமிராதவை. ஆகையால் அவைகளைப் பொறுமையுடன் நீ அனுபவிக்கவேண்டும்.

यं हि न व्यथयंत्येते पुरुषं पुरुषर्षभ ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥ १५ ॥

15. ஸுகத்தையும் துக்கத்தையும் ஒரேவிதமாய் அனுபவிக்

கும் புத்திமானாய், இவைகளால் வருத்தமடையாதவனா யிருப்பவனே மோக்ஷத்தை அடையத் தகுந்தவன்.

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।
उभयोरपि दृष्टोऽतस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥ १६ ॥

16. அஸத்தான இந்தத் தேஹம் இருப்பதில்லை; ஸத்தான ஆத்மாவிற்கு அழிவில்லை. தத்துவத்தை அறிந்த மஹான்கள் இவ்விரண்டைப்பற்றின முடிவை நேராக அறிந்து நிச்சயித்திருக்கிறார்கள்.

अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम् ।
विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥ १७ ॥

17. எது இந்த யாவற்றையும் உள்ளும் புறமும் கலந்து வடிவுருவி நிற்கிறதோ அந்த ஆத்மாவுக்கு நாசமில்லையென்றறி. நாசமற்ற இதற்கு நாசத்தை ஒருவனும் செய்யமுடியாது.

अंतवंत इमे देहा नित्यस्योक्ताः शरीरिणः ।
अनाशिनोऽप्रमेयस्य तस्माद्युध्यस्व भारत ॥ १८ ॥

18. இந்தத் தேஹங்கள் யாவும் முடிவுடையவை. இவைகளை எடுக்கும் ஆத்மா நித்யன்; நாசமற்றவன்; மனதிற்கு எட்டாதவன். ஆகையால் நீ (இதைப்பற்றித் துக்கப்படாமல்) யுத்தஞ்செய்.

य एनं वेत्ति हंतारं यश्चैनं मन्यते हतम् ।
उभौ तौ न विजानीतो नायं हंति न हन्यते ॥ १९ ॥

19. இது ஒருவனைக் கொல்லுகிறதென்று அறிகிறவனும் இது ஒருவனால் கொல்லப்படுகிறதென்று எண்ணுகிறவனும், இவ்விருவரும் அறியாதவர்களே. ஏனென்றால், இது கொல்வதுமில்லை, கொல்லப்படுவதுமில்லை.

न जायते म्रियते वा कदाचिन्नायं भूत्वा भविता वा न भूयः ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे ॥ २० ॥

20. இது ஒருக்காலும் பிறக்கிறதென்பதில்லை, இறப்பதென்பதுமில்லை. இது முன்காலத்தில் இருந்து பிறகு இருக்காதென்பதில்லை; முன்பு இல்லாமல் இனிவருங்காலத்தில் இருக்குமென்பதுமில்லை. இது பிறப்பற்றது. என்றுமுள்ளது. என்றும் ஒரேவிதமாயிருப்பது. யாவற்றிற்கும் முந்தியிருப்பது. இந்தத் தேஹம அழியும்பொழுது இது அழியாது.

वेदाविनाशिनं नित्यं य एनमजमव्ययम् ।
कथं स पुरुषः पार्थ कं घातयति हंति कम् ॥ २१ ॥

21. இது பிறப்பற்றது, குறைவற்றது, என்றுமுள்ளது, நாசமற்றதென்று அறிகிறவன் யாரைக் கொல்லுகிறான்? யாரைக் கொல்லுவிக்கிறான்? (இவ்விதமான அக்ஞானமே அவனுக்குக் கிடையாது).

वासांसि जीर्णानि यथा विहाय नवानि गृह्णाति नरोऽपराणि ।
तथा शरीराणि विहाय जीर्णान्यन्यानि संयाति नवानि देही ॥ २२ ॥

22. மனிதன் கிழிந்த வஸ்திரங்களை எறிந்துவிட்டு வேறு புதிய வஸ்திரங்களைத் தரிப்பதுபோல், பழுதான தேஹங்களை விட்டு, ஆத்மா வேறுபுதிய தேஹங்களைத் தரிக்கிறான்.

नैनं छिंदंति शस्त्राणि नैनं दहति पावकः ।
न चैनं क्लेदयंत्यापो न शोषयति मारुतः ॥ २३ ॥

23. இவனை ஆயுதங்கள் வெட்டுவதில்லை, இவனை நெரிப்பு எரிப்பதில்லை; இவனை ஜலம் நனைப்பதில்லை; இவனைக் காற்று உலர்த்துவதில்லை.

अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।

नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः ॥ २४ ॥

24. இவன் எதாலும் வெட்டமுடியாதவன், கொளுத்த முடியாதவன், நனைக்கமுடியாதவன், வற்ற முடியாதவன், என்றுமிருப்பவன், எங்குமிருப்பவன், யாதொன்றாலும் அசையாதவன், ஸ்திரமான ஸ்வபாவத்தையுடையவன் (தன்னாலாவது பிறராலாவது இவன் கலங்கமாட்டான்) வெகுகாலமாயிருப்பவன்.

अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते ।

तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥ २५ ॥

25. இந்திரியங்களுக்கு இந்த ஆத்மா புலப்படாது, மனதிற்கெட்டாது, மாறுதலையடையாதென்று பெரியோர் சொல்லுகிறார்கள். ஆகையால் இவன் இப்படிப்பட்டவனென்று அறிந்து, நீ இவனைப்பற்றித் துக்கப்பட ந்யாயமில்லை. (ஆத்மாவுக்கு நாசமில்லாததால் நீ அதைப்பற்றித் துக்கப்படவேண்டியதில்லையென்று முதலாவது காரணம் பகவானால் சொல்லப்பட்டது).

अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम् ।

तथापि त्वं महाबाहो नैनं शोचितुमर्हसि ॥ २६ ॥

26. அப்படியில்லாவிட்டால், இந்த ஆத்மா எப்பொழுதும் பிறக்கிறதென்றும் எப்பொழுதும் இறக்கிறதென்றும் நீ எண்ணினாலும், இதைப்பற்றி இப்படி துக்கப்பட நியாயமில்லை.

जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च ।

तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि ॥ २७ ॥

27. ஏனென்றால் பிறந்த எதுவும் இறந்தே தீரவேண்டும்; இறந்த எதுவும் பிறந்தே தீரவேண்டும். ஆகையால் உன்னால் திருத்த முடியாத இந்த விஷயத்தில் நீ துக்கப்பட நியாயமில்லை.

अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत ।
अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना ॥ २८ ॥

28. சரீரங்கள் ஆதியில் இப்படியிருந்ததென்று நமக்குத் தெரியாது. இப்பொழுது இருக்கும் நடு நிலைமை மாத்திரம் நமக்குத் தெரிகிறது. இறந்தபின் எப்படியாகின்றனவென்று நமக்குத் தெரியாது. இதைப்பற்றித் துக்கமேன்?

आश्चर्यवत्पश्यति कश्चिदेनमाश्चर्यवद्वदति तथैव चान्यः ।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाप्येनं वेद न चैव कश्चित् ॥ २९ ॥

29. ஒரு ஆச்சர்யகரமான பதார்த்தத்தைப் பார்ப்பது போல் இந்த ஆத்மாவை யாரோ ஒருவன் பார்க்கிறான். அப்படியே ஆச்சர்யமான பதார்த்தத்தைப் பற்றிப் பேசுவது போல் இதைப்பற்றி வேறொருவன் பேசுகிறான். இன்னுமொருவன் ஆச்சர்யகரமான பதார்த்தத்தைக் கேட்பது போல் அதைக்கேட்கிறான். ஆனால் இப்படிக் கேட்டும் யாரும் இவனை உண்மையாக அறியமாட்டான்.

देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि ॥ ३० ॥

30. எல்லோருடைய தேஹத்திலும் வஸிக்கும் இந்த ஆத்மா என்றும் கொல்லமுடியாதவன்; ஆகையால் நீ சொன்னவர்களைப்பற்றி மாத்ரமல்ல; உயிருள்ள எல்லாப் பிராணிகளைக் குறித்தும் நீ துக்கமடைய நியாயமில்லை. (இங்கே ஆத்மா அநித்யனாயிருந்தாலும் அவனைப்பற்றிச் சோகமடையக் கூடாதென்று இரண்டாவது காரணம் சொல்லப்பட்டது).

स्वधर्ममपि चावेक्ष्य न विकंपितुमर्हसि
धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत्क्षत्रियस्य न विद्यते ॥ ३१ ॥

31. உனக்கேற்பட்ட தர்மத்தை நன்றாய் நீ விசாரித்துப் பார்த்தாலும் நீ துக்கமடைய நியாயமில்லை. தர்மமாய் நேர்ந்த

யுத்தத்தைக் காட்டிலும் க்ஷத்ரியனுக்கு வேறு மேலான நன்மை கிடையாது. (ஆர்யர்களுடைய நடத்தை இப்படியென்ற மூன்றாவது காரணம் இங்கே சொல்லப்பட்டது.)

यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।
सुखिनः क्षत्रियाः पार्थ लभंते युद्धमीदृशम ॥ ३२ ॥

32. இந்த யுத்தம் நீ தேடாமல் தானே வந்து நேர்ந்தது; ஸ்வர்க்கத்தின் கதவைத் திறந்து வைத்ததுபோலிருக்கிறது. (இதில் இறந்தால் வீர ஸ்வர்க்கத்தை அடையலாம்.) உத்தமமான ஸுகத்தை அனுபவிக்கும் மஹாபாக்யத்தைச் செய்த க்ஷத்ரியர்களுக்கே இது கிடைக்கும். (நீ ஸ்வர்க்கத்தையடைய விரும்பினால் யுத்தஞ் செய்யவேண்டுமென்ற நான்காவது காரணம் சொல்லப்பட்டது.)

अथ चेत्त्वमिमं धर्म्यं संग्रामं न करिष्यसि ।
ततः स्वधर्मं कीर्तिं च हित्वा पापमवाप्स्यसि ॥ ३३ ॥

33. இப்படி இந்தத் தர்ம யுத்தத்தை நீ செய்யாவிட்டால் ஸ்வதர்மத்தையும் கீர்த்தியையும் துறந்து பாபத்தை யடைவாய். ("யுத்தஞ் செய்தால் பாபம் வருமென்றாய். செய்யாவிட்டால் பாபம் வருமெ"ன்ற 5-வது காரணம் சொல்லப்படுகிறது.)

अकीर्तिं चापि भूतानि कथयिष्यंति तेऽव्ययाम् ।
संभावितस्य चाकीर्तिर्मरणादतिरिच्यते ॥ ३४ ॥

34. ஸகல ப்ராணிகளும் உனக்கு என்றுமழியாத அபகீர்த்தியைச் சொல்லிக்கொண்டேயிருக்கும். எல்லாவிதத்திலும் இதுவரையில் பிறரால் பூஜிக்கப்பட்டவனுக்கு இவ்விதமான அபகீர்த்தி மரணத்தைக் காட்டிலும் கொடியது.

भयाद्रणादुपरतं मंस्यंते त्वां महारथाः ।
येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥ ३५ ॥

35. இந்த மஹாரதர்கள், நீ அவர்களைக் கண்டு பயந்து இந்தச் சண்டையிலிருந்து ஓடிப்போனதாய் எண்ணுவார்கள். இதுவரை

யில் நீ எவர்களால் மேன்மையுடன் கொண்டாடப்பட்டு வந்தாயோ அவர்கள் இப்பொழுது உன்னைப்பற்றி அற்பமாய் எண்ணுவார்கள்.

अवाच्यवादांश्च बहून्वदिष्यंति तवाहिताः ।

निंदंतस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥ ३६ ॥

36. உனக்கு வேண்டாதவர்கள் உன் ஸாமர்த்தியத்தை இகழ்வார்கள். சொல்லத்தகாத பற்பல வார்த்தைகளைச் சொல்வார்கள். அதைக் காட்டிலும் அதிகமான துக்கமுண்டா? (யுத்தஞ்செய்யாவிட்டால் உனக்கு மரணத்தைக் காட்டிலும் கொடிய அபகீர்த்தி நேருமென்ற காரணம் இங்கே சொல்லப்பட்டது).

हतो वा प्राप्स्यसि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम् ।

तस्मादुत्तिष्ठ कौंतेय युद्धाय कृतनिश्चयः ॥ ३७ ॥

37. (சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேள்.) நீ இந்த யுத்தத்தில் இறந்தால் வீர ஸ்வர்க்கத்தை அடைவாய்; ஜயித்தாலோ இந்தப் பூமியை ஆள்வாய் (எவ்விதத்திலும் உனக்கு நஷ்டமில்லை). ஆகையால் யுத்தஞ் செய்ய நிச்சயங்கொண்டு எழுந்திரு (ஜயித்தாலும் துக்கம், தோற்றாலும் துக்கமென்றாய் (II 6.) எவ்விதத்திலும் உனக்கு லாபமே யென்கிறார்.)

सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।

ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि ॥ ३८ ॥

38. ஸுகத்தையும் துக்கத்தையும் லாபத்தையும் நஷ்டத்தையும் வெற்றியையும் தோல்வியையும் ஒரேவிதமாய் நினைத்துப், பிறகு யுத்தஞ்செய்யக்கடவாய்; இப்படிச் செய்தால் உனக்குப் பாபமில்லை. ("யுத்தஞ் செய்யாவிட்டால் எனக்குப் பாபம் நேராதே"ன்றாய். அப்படியல்ல. யுத்தஞ் செய்தால் பாபம் நேராதென்று சொல்லப்படுகிறது.)

एषा तेऽभिहिता सांख्ये बुद्धिर्योगे त्विमां शृणु ।

बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबंधं प्रहास्यसि ॥ ३९ ॥

39. இதுவரையில் உனக்கு ஸாங்க்யத்தை (ஞானயோகத்தை) அனுஸரித்து, ஹிதமான உபதேசத்தைச் செய்துவந்தேன்; இனி கர்மயோகத்தை அனுஸரித்து, ஹிதத்தை உடதேசிக்கப் போகிறேன். இதை ஸாவதானமாய்க் கேள். இந்த உபதேசத்தின்படியே நீ நடந்தால், கர்மமென்ற விலங்கிலிருந்து நீ விடுபடுவாய்.

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।

स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥ ४० ॥

40. நான் சொல்லப்போகிற இந்தக் கர்மயோகத்தை ஒருவன் செய்யவாரம்பித்துச் சிறிது செய்து, விட்டுவிட்டாலும், அதுவரையில் செய்தது வீண் போகாது; இதைச் செய்யாமல் நடுவில் விட்டதால் பாபமாவது கெடுதியாவது நேராது; மேலும், இதை ஸ்வல்பமாய்ச் செய்தாலும், செய்கிறவனைப் பெரிய பயத்திலிருந்து காப்பாற்றும். (தின்ற மண்ணுக்குச் சோகையென்று வேதாந்த சாஸ்திரங்களில் இதை உபமானமாய்ச் சொல்வதுண்டு.)

व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनंदन ।

बहुशाखा ह्यनंताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥ ४१ ॥

41. ஆத்ம ஸ்வரூபத்தை நன்றுயறிந்து நிச்சயமான புத்தியுள்ளவன், இந்தக் கர்ம யோகத்தை அனுஷ்டிப்பதில் ஒரேவிதமான உறுதியையுடையவன். (லௌகிக வைதிக விஷயங்களை ஒரேவிதமாய் மயங்காமல் செய்வானென்றும் அர்த்தஞ் செய்யலாம்.) இப்படி நிச்சயமில்லாதவர்களின் புத்தி பல வழிகளில் செல்லும். எல்லையற்றது.

यामिमां पुष्पितां वाचं प्रवदन्त्यविपश्चितः ।

वेदवादरताः पार्थ नान्यदस्तीति वादिनः ॥ ४२ ॥

कामात्मानः स्वर्गपरा जन्मकर्मफलप्रदाम् ।
क्रियाविशेषबहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥ ४३ ॥

भोगैश्वर्यप्रसक्तानां तयापहृतचेतसाम् ।
व्यवसायात्मिका बुद्धिः समाधौ न विधीयते ॥ ४४ ॥

42—44. உலகத்தில் சிலர் அக்ஞானத்தால் மயக்கப்பட்டு வேத வாக்கியங்களைப்பற்றி விதண்டாவாதம் செய்வதிலேயே ஆசையுள்ளவர்களாயிருக்கிறார்கள்; எப்பொழுதும் எங்கும் போகங்களை அனுபவிப்பதிலேயே அவர்களுடைய மனம் நாடியிருக்கும். ஸ்வர்க்கமே மேலானது; ஸ்வர்க்கத்தைக் காட்டிலும் மேலான நிலைமை கிடையாதென்று அவர்கள் வாதிக்கிறார்கள். இவ்வுலகத்திலும் ஸ்வர்க்கத்திலும் போகங்களையும் ஐசுவரியத்தையும் அடைவதற்கு அவர்கள் சொல்லும் ஸாதனங்கள் கேட்பதற்கு வெகு அழகாயிருக்கும். ஆனால், அந்த மார்க்கம் கேவலம் எண்ணிறந்த கர்மங்களையே பிரதானமாயுடையது; அதை அனுஷ்டித்தால் பிறப்பதும் கர்மங்களைச் செய்வதும் அவைகளின் பயன்களை அனுபவிப்பதுமே ஓயாமல் நேரும். இவர்களுடைய வார்த்தைகளைக் கேட்டுப் போகங்களையும் ஐசுவரியத்தையும் அடைந்தனுபவிப்பதிலேயே செல்லும் புத்தியையுடைய மற்றும் சிலருடைய மனது மயங்குகிறது. ஆகையால் ஸமாதி நிலையில் சேரும் விஷயத்தில் அவர்களுடைய புத்தி பதார்த்தங்களின் ஸ்வரூபத்தை நன்றாய் விசாரித்தறிந்து நிச்சயித்து உறுதியோடிருக்காது.

त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।
निर्द्वन्द्वो नित्यसत्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥ ४५ ॥

45. ஸத்வம் ரஜஸ் தமஸென்ற மூன்று குணங்களையுடையவர்களைப்பற்றியே வேதங்கள் சொல்லுகின்றன. ஆனால் நீயோ மூன்று குணங்களுக்கும் மேலானவனாயும் ஸுகதுக்கமற்றவனாயுமிரு. உன் மனம் எப்பொழுதும் ஸத்வ ஸ்வபாவத்திலேயே நாடியிருக்கட்டும்; கிடைக்காத பொருள்களை ஸம்பாதிக்கவேண்டுமென்ற ஆசையும், கிடைத்தவைகளைக் காப்பாற்ற வேண்டுமென்ற ஆசையும் உனக்கு

வேண்டாம். எப்பொழுதும் ஆத்ம ஸ்வரூபத்தைத் தியானஞ் செய்கிறவனுயிரு.

यावानर्थ उदपाने सर्वतः संप्लुतोदके ।

तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥ ४६ ॥

**46.** தாஹத்தால் பீடிக்கப்பட்டவன் ஜலத்தால் நிறைந்து தளும்பும் தடாகம் கிணறு முதலிய ஜலாதாரங்களுக்குச் சென்று, அந்த ஜலத்தில் தனக்குத் தாஹத்தைத் தணிப்பதற்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவையே எடுத்துக் கொள்ளுகிருன். அதைப் போல் வேதங்கள் யாவும் பல விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றன. விவேகமுள்ள பிராஹ்மணன் அவைகளில் தான் முன்னேறுவதற்கு எது வேண்டுமோ அதை மாத்திரம் எடுத்துக்கொள்ள வேண்டும். (முக்குணங்களைப் பற்றின பாகங்களை விலக்கி, கேவலம் வைராக்கியத்தையும் ஆத்ம ஞானத்தையும் உபதேசிக்கும் சுருதிகளை மாத்திரம் நீ பின்பற்ற வேண்டும். இப்படியே மற்றவரும் தம் பக்வத்திற்கேற்ற ஞான கர்ம உபாஸனு பக்தி முதலிய மார்க்கங்களைப் பற்றினவையையே கைக்கொள்ள வேண்டும்.)

कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।

मा कर्मफलहेतुर्भूर्मा ते संगोऽस्त्वकर्मणि ॥ ४७ ॥

**47.** கர்மத்தைச் செய்வதில் மாத்திரம் உனக்கு அதிகாரமுண்டு. அவைகளின் பலன்களை அனுபவிக்கும் விஷயத்தில் உனக்கு ஒருநாளும் அதிகாரமில்லை. கர்ம பலன்களை அடைவதையே காரணமாகக் கொண்டு கர்மங்களை நீ செய்யக்கூடாது. ஆனுல் இதற்குப் பயந்து கர்மங்களைச் செய்யாமலேயே இருப்பதிலும் உனக்கு ஆசை யிருக்கக்கூடாது. (லோகமான்யரென்ற திலகர் தன் கீதா ரஹஸ்யத்தில் இதற்கு சது: ஸூத்ரியென்று பெயரிட்டிருக்கிருர். பிரஹ்ம ஸூத்ரத்தில் முதல் நான்கு ஸூத்ரங்கள் வெகு முக்யம். இந்த சுலோகத்தையே கீதாஸாரமென்று அவா சொல்லியிருக்கிருர்.)

योगस्थः कुरु कर्माणि संगं त्यक्त्वा धनंजय ।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥ ४८ ॥

48. பற்றுதலை விட்டுக், காரியம் கைகூடினாலும் கூடாவிட்டாலும் கலங்காமல், ஸமமான மனதுடன் யோக நிலையை அடைந்து கர்மங்களைச் செய். விருப்பு வெறுப்பு ஸுகதுக்கங்களால் கலங்காமல் ஸமமாயிருக்கும் நிலைமையே யோகமெனப்படும்.

दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनंजय ।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥ ४९ ॥

49. மேற்சொன்ன புத்தி யோகத்தைக் (பலாபேக்ஷையில்லாமல் கர்மங்களைச் செய்வதை) காட்டிலும் கர்மயோகம் (பலாபேக்ஷையுடன் கர்மங்களைச் செய்வது) மிகவும் தாழ்ந்தது. ஆகையால் இந்தப் புத்தி யோகத்திலேயே நிலைத்திருக்க விரும்பவேண்டும். காம பலன்களை அடைவதையே காரணமாகக் கொண்டு கர்மங்களைச் செய்கிறவர்களுக்கு மிகுந்த துக்கமுண்டாகும்.

बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते ।
तस्माद्योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम् ॥ ५० ॥

50. புத்தி யோகத்தில் நிலைத்தவன் இந்தத் தேஹமிருக்கும் பொழுதே பாபம் புண்யமென்ற இரண்டையும் உதறிவிடுகிறான். ஆகையால் அந்த யோக நிலைமையில் நிலைத்திருக்க யத்னஞ் செய். கர்மங்களைச் செய்வதில் மேற்சொன்ன ஸாமர்த்தியமே யோகமெனப்படும்.

कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः ।
जन्मबंधविनिर्मुक्ताः पदं गच्छंत्यनामयम् ॥ ५१ ॥

51. புத்தி யோகத்தில் வேரூன்றினவர்கள் நிர்மலமான ஞானத்தை அடைந்து, கர்மங்களாலுண்டான பலத்தை விட்டு, ஜனன மரணமென்ற விலங்குகளிலிருந்து விடுபட்டு, என்றுமழியாத பரமபதத்தை அடைகிறார்கள்.

यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।
तदा गंतासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥ ५२ ॥

52. பதார்த்தங்களின் நிஜஸ்வரூபத்தை மாற்றிக் காட்டும் மோஹத்தாலுண்டான தோஷத்தை உன் புத்தி எப்பொழுது தாண்டுமோ அப்பொழுது, நீ அதுவரையில் கற்றதிலும் கேட்டதிலும், இனி கற்க வேண்டும் கேட்க வேண்டுமென்றிருக்கும் விஷயங்களிலும் உனக்கு விசாரம் விலகும்.

श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।
समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि ॥ ५३ ॥

53. பார்வைக்குப் பரஸ்பர விரோதமாயிருக்கும் வேதவாக்கியங்களால் கலங்கித் தடுமாறும் உன் புத்தி, ஸமாதி நிலையில் ஸந்தேஹ விபரீதமில்லாமல் அசைவற்றுக், கலங்காமல் எப்பொழுது நிற்குமோ அப்பொழுது உனக்கு யோகம் கைகூடும்.

अर्जुन उवाच—

स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।
स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम ॥ ५४ ॥

54. அர்ஜுனன்:— கேசவ! ஸமாதியில் நிலைத்திருக்கும் ஸ்திரமான பிரக்ஞையுடையவனுக்கு என்ன பெயர்? (அவனுடைய லக்ஷணமென்ன) அவன் எப்படிப் பேசுவான்? எப்படியிருப்பான்? எப்படி நடப்பான்?

श्रीभगवानुवाच—

प्रजहाति यदा कामान्सर्वान्पार्थ मनोगतान् ।
आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥ ५५ ॥

55. கிருஷ்ணன்:— மனதில் உண்டாகும் ஸகல ஆசைகளையும் எப்பொழுது துறந்து, தன் மனதை ஆத்மாவிடத்தில் லயப்படுத்திப், பரமானந்தத்தை அனுபவிக்கிறானோ, அப்பொழுது அவன் ஸ்திரமான பிரக்ஞையையுடையவனென்று சொல்லப்படுகிறான்.

दु:खेष्वनुद्विग्नमना: सुखेषु विगतस्पृह: ।
वीतरागभयक्रोध: स्थितधीर्मुनिरुच्यते ॥ ५६ ॥

56. துக்கங்கள் நேர்ந்தால் வருந்தாமல் ஸுகம் நேர்ந்தால் அதில் ஆசையற்றுக், காமம் பயம் கோபமென்றவைகளை ஒழித்து, எப்பொழுதும் ஆத்ம ஸ்வரூபத்தையே த்யானஞ்செய்துகொண்டிருப்பவனுக்கு ஸ்திரமான பிரக்ஞையையுடையவனென்று பெயர்.

य: सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनंदति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५७ ॥

57. எவன் எல்லா விஷயங்களிலும் அளவுக்கு மிஞ்சி பற்றுதலில்லாமல், அந்தந்த சுபாசுபங்கள் நேரும்பொழுது, அதிகமாய் மகிழாமலும் அதிகமாய் வெறுக்காமலுமிருக்கிறானோ அவனே ஸ்திரமான பிரக்ஞையையுடையவன்.

यदा संहरते चायं कूर्मोऽगानीव सर्वश: ।
इंद्रियाणींद्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५८ ॥

58. ஆமை தனக்கு வெளியிலிருந்து அபாயம் நேருமென்று கண்டவுடன் தன் கை கால்களை ஓட்டிற்குள் மறைத்துக்கொள்ளுகிறதல்லவா ? அப்படியே எவன் தன் இந்திரியங்களை ஸுகதுக்கங்களைக் கொடுக்கும் விஷயங்களிலிருந்து திருப்பிக்கொள்ளுகிறானோ அவனுடைய பிரக்ஞையே நிலைத்திருக்கும்.

विषया विनिवर्तंते निराहारस्य देहिन: ।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥ ५९ ॥

59. நாம் அந்தந்த வேளைகளில் ஆஹாரத்தை உட்கொள்ளுவதால் இந்திரியங்கள் பலம் குறையாமல் விஷய ஸுகங்களை அனுபவிக்கின்றன. அந்த ஆஹாரத்தை முற்றிலும் நிறுத்தி விட்டால் இந்திரியங்கள் பலமற்று விஷயங்களை அனுபவிக்க முடியாது. ஆனால் மனதில் அவைகளில் அனுபவிக்கவேண்டுமென்ற ஆசை

மாத்திரம் மிகுந்திருக்கும். அப்படியே விஷய ஸுகங்களை அனுபவிப்பதைப் பற்றின எண்ணங்களே இந்தத் தேஹத்தை எடுத்த ஜீவனுக்கு ஆஹாரமாகும். அவைகளை முற்றிலும் நிறுத்தி விட்டால் சிலகாலம் வந்து வந்து பார்த்து இடமில்லாமல் தானே அலுத்துத் திரும்பிப் போய்விடும். ஆனால் அவைகளை முன் அனுபவித்த ஞாபகமும் ஆசையும் விடாது. அதைக் காட்டிலும் மேலான நித்யானந்தத்தைக் கொடுக்கும் ஆத்மத்யானத்தில் மனதை நாட்டி இந்திரியங்களை வசப்படுத்தினால் அந்த ஆசையும் இவனை விட்டு விலகும்.

यततो ह्यपि कौंतेय पुरुषस्य विपश्चितः ।

इंद्रियाणि प्रमाथीनि हरंति प्रसभं मनः ॥ ६० ॥

60. ஞானியான புருஷன் எவ்வளவு யத்னம் செய்து அடக்கினாலும் இந்திரியங்கள் மனதை விஷயங்களை நோக்கி வேகமாய் இழுத்துக் கொண்டுபோய் விடும். அவைகளின் பலம் எல்லையற்றது.

तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।
वशे हि यस्येंद्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६१ ॥

61. ஆகையால் அவைகளை யெல்லாம் அடக்கி, மனதைத் திருப்பி, என்னையே அடைய வேண்டுமென்ற நிச்சயத்துடன் என்னிடத்தில் நாட்டக்கடவாய். இந்திரியங்களை வசப்படுத்தினவனுடைய பிரக்ஞையே நிலைத்திருக்கும்.

ध्यायतो विषयान्पुंसः संगस्तेषूपजायते ।
संगात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥ ६२ ॥

62. ஸுக துக்கங்களைக் கொடுக்கும் பதார்த்தங்களை இடைவிடாது நினைத்துக் கொண்டிருக்கும் மனிதனுக்கு அவைகளில் பற்று உண்டாகிறது; அந்தப் பற்றால் அந்த ஸுகத்தை அனுபவிக்க வேண்டுமென்ற ஆசையுண்டாகிறது; அந்த ஆசை எந்தக் காரணத்தாலாவது நிறைவேறாவிட்டால் அதைப்பற்றிக் கோபமுண்டாகிறது.

क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥ ६३ ॥

63. கோபத்திற்கிடங்கொடுத்தால் பதார்த்தங்களின் ஸ்வரூபத்தை மாற்றிக் காட்டும் மோஹம் உண்டாகிறது. அந்த மோஹம் தடித்தால் முன் நடந்தவைகளை மறுபடியும் நினைக்கக்கூடிய ஞாபகசக்தி சுழன்று தடுமாறுகிறது. ஞாபக சக்தி தடுமாறினால் நன்மை தீமையைப் பகுத்தறியும் புத்தி அழிகிறது. புத்தி அழிந்தால் தானும் அழிகிறான்.

रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४ ॥

64. ஆகையால் இந்திரியங்களை மனதால் வசப்படுத்திக் கொண்டு, விருப்பம் வெறுப்புகளால் கலக்கமடையாமல், விஷயங்களை அனுபவிக்க வேண்டும். அந்த மனதையும் தான் வசப்படுத்த வேண்டும். அப்பொழுது அவனுடைய பிரக்ஞை தெளிவை யடைகிறது.

प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ।
प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठते ॥ ६५ ॥

65. அந்தத் தெளிவு உண்டானால் ஸகல துக்கங்களும் அழியும். அப்படிப்பட்டவனுடைய புத்தி அதிவேகமாய் நிலைபெறும்.

नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।
न चाभावयतः शांतिरशांतस्य कुतः सुखम ॥ ६६ ॥

66. மனதை ஒருமைப்படுத்தாதவனுக்கு மேற்சொன்ன ஞானயோகம் ஸித்திக்காது; அவனுக்கு ஆத்ம ஸ்வரூபத்யானம் ஸாத்யமல்ல; அப்படி த்யானம் செய்யாதவனுக்குச் சாந்தி கிடையாது; சாந்தமில்லாதவனுக்கு ஸுகமேது?

इंद्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवांभसि ॥ ६७ ॥

67. இந்திரியங்கள் ஓய்வில்லாமல் விஷயங்களை அனுபவிப்பதிலேயே நோக்கங்கொண்டு அவைகளைப் பின் தொடரும். அவைகளின் வசப்பட்டு, மனதையும் அவை இழுக்குமிடங்களில் ஒருவன் போகவிட்டால், அது அவனுடைய பிரக்ஞையையும் இழுத்துக் கொண்டு போய்விடும். ஒரு கப்பலைக் குறித்தவிடத்திற்கு நடத்திக்கொண்டு போவதற்கும், அதின் ஓட்டத்தைத் தடுத்து மாற்றும் காற்றையும் அலைகளையும் தடுத்துச் செல்வதற்கும் ஸமர்த்தனை மாலுமி வேண்டுமல்லவா? அப்படியில்லாத கப்பலைக் காற்று தன் இஷ்டப்படி அடித்துக்கொண்டு போகுமல்லவா?

तस्माद्यस्य महाबाहो निगृहीतानि सर्वशः ।
इंद्रियाणींद्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६८ ॥

68. ஆகையால் இந்திரியங்களை அவைகளால் அனுபவிக்கப்படும் பதார்த்தங்களிலிருந்து முற்றிலும் திருப்பி வசப்படுத்திக் கொள்ளுகிறவனுக்கே பிரக்ஞை நிலைபெறும்.

या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥ ६९ ॥

69. ஸகல பிராணிகளுக்கும் எது ராத்ரியோ அது யோகிகுப் பகல்; அப்பொழுது அவன் விழித்துக்கொண்டிருக்கிறான். ஸகல பிராணிகளுக்கும் எது பகலோ, எப்பொழுது அவை விழித்துக் கொண்டிருக்கின்றனவோ அது, ஆத்ம ஸ்வரூபத்தை பார்த்து த்யானம் செய்கிறவனுக்கு ராத்ரியாகும். (ஸம்ஸார ஸமுத்திரத்தில் கிடந்து தடுமாறும் பிராணிகளுக்கு ஆத்ம ஸ்வரூப ஞானமென்பதில்லை. அது அவர்களுக்கு இருள்சூழ்ந்த ராத்ரியைப்போலாகும். இந்த்ரியங்களையும் மனதையும் வசப்படுத்தின ஞானிக்கு அது பகலைப்போல் ஸர்வ ஸ்வாதீனமாயிருக்கும். அப்பொழுது ஞான ஸூர்யன் ப்ரகாசிப்பானல்லவா? அதே அவன் வேலை செய்யுமிடம். ஆனால் ஸம்ஸாரிகள் உண்மையென்று எண்ணி அனுபவிக்கும் லௌகிக ஸுகதுக்கங்களென்றவை அவனுடைய பிரக்ஞையில் எக்காலத்திலும் தோன்றுவதில்லை. அவை அவனுக்கு ராத்ரியைப் போலாகும்).

आपूर्यमाणमचलप्रतिष्ठं समुद्रमापः प्रविशंति यद्वत् ।
तद्वत्कामा यं प्रविशंति सर्वे स शांतिमाप्नोति न कामकामी ॥ ७० ॥

70. லோகத்திலுள்ள நதிகள் ஓயாமல் தங்களுடைய ஜலங்களை ஸமுத்ரத்தில் கொண்டு வந்து சேர்த்துக்கொண்டே யிருக்கின்றன. அப்படி நான்கு புறத்திலிருந்தும் அது ஜலத்தைப் பெற்றுக்கொண்டாலும் நிறைந்து தளும்புவதில்லை; கரை கடப்பதில்லை. அப்படி இந்திரியங்களையும் மனதையும் வசப்படுத்தி ஞானநிஷ்டையிலிருப்பவனுடைய பிரக்ஞையில் எண்ணிறந்த விருப்பமும் வெறுப்பும் நான்கு புறங்களிலிருந்தும் வந்து கலந்துகொண்டே யிருக்கும். ஆனால் அவன் அவைகளால் கலக்கமடையாமல், தன் நிலை தவறாமல் சாந்தத்தையடைகிறான்; இந்த்ரியங்களால் அனுபவிக்கப்படும் ஸுகங்களில் இவனுக்கு ஆசை அற்றதல்லவா? (ஸமுத்ரத்தில் நதிகள் விழுவதற்கு முன் தனித் தனி லக்ஷணங்களையும் பெயரையும் கொண்டிருந்தாலும், அதில் விழுந்த பிறகு நாமமும் ரூபமுமற்று அதனுடன் கலந்து விடுவதுபோல், காமக்ரோதங்களை உண்டாக்கும் காரணங்கள் யோகியைத் தாக்குவதையே காணலாம். பிறகு அவை போனவிடம் தெரியாது.)

विहाय कामान्यः सर्वान्पुमांश्चरति निःस्पृहः ।
निर्ममो निरहंकारः स शांतिमधिगच्छति ॥ ७१ ॥

71. எவன் ஸகல காமங்களையும் அனுபவிப்பதை விட்டு, அவைகளில் ஆசையுமற்றவனாய், நான் எனதென்ற எண்ணத்தையே ஒழித்திருக்கிறானோ அவனே சாந்தமான நிலையையடைவான்.

एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
स्थित्वास्यामंतकालेऽपि ब्रह्म निर्वाणमृच्छति ॥ ७२ ॥

72. அர்ஜுனா! இதே பிரஹ்மத்தின் நிலையென்று சொல்லப்படும். இதை அடைந்தவனே ஜீவன் முக்தன். (இந்த தேஹம் இருக்கும்பொழுதே ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்து மோக்ஷானந்தத்தை அனுபவிக்கிறான்.) அவனுக்கு மோஹமென்பதில்லை. இந்தத் தேஹம் அழியும்பொழுதும் அந்த ஸமாதி நிஷ்டையிலேயே இருந்து பிறகு, விதேஹ முக்தியென்ற ப்ரஹ்மானந்தத்தை அனுபவிக்கிறான்.

## பீடிகை (அத்வைதம்)

### அத்யாயம் 2.

**சங்கராசார்யர்:**—இங்கே இரண்டாவது அத்யாயம் 9-ல் "அர்ஜுனன் போர்புரிய மாட்டேனென்று கோவிந்தனிடத்தில் சொல்லிவிட்டு ஒன்றும் பேசாமலிருந்து விட்டா"னென்பது வரையில், ஸம்ஸாரத்திற்கு விதைகளான சோகம் மோஹம் முதலிய கெடுதிகள் எல்லாம் பிராணிகளுக்கு உண்டாவதின் காரணத்தைத் தெளிவாய் எடுத்துக் காட்டுவதற்காகவே சொல்லப்பட்டன. எப்படியென்றால் "ராஜ்யமும் பெரியோரும் புத்ரரும் மித்ரரும் நண்பர்களும் தன்னைச் சேர்ந்தவர்களும் ஸம்பந்திகளும் பந்துக்களும் என்னைச் சேர்ந்தவர்கள், நான் இவர்களைச் சேர்ந்தவன்" என்ற எண்ணத்தால் பற்றுதல் உண்டாகிறது. அவர்களை இழந்துவிடுவதாலும் இதைப் போன்ற மற்ற காரணங்களாலும் சோகமோகங்கள் உண்டாகின்றனவென்பதை, "பூஜிக்கத் தகுந்த பெரியோர்களை எப்படிக் கொல்வேன்" என்று ஐந்து சுலோகங்களால் அர்ஜுனன் நன்றாய்த் தெரிவித்தான். யுத்தமோ க்ஷத்ரியதர்மம்; அதை அர்ஜுனன் தானே ஒப்புக்கொண்டான்; யுத்த பூமியில் வந்து யுத்தஞ்செய்ய ஆரம்பித்துவிட்டான். அப்படியிருந்தும், அவனுடைய விவேகமும் புத்தியும் நிலைகுலைந்து கலங்கும்படி சோக மோகங்கள் அவனைத் தாக்கி யுத்தஞ் செய்யவொட்டாமல் தடுத்தன. அதுவுமன்றி, தன் தர்மமல்லாத பிராஹ்மண தர்மமான பிக்ஷையெடுத்துப் பிழைப்பதே மேலானதென்று நிச்சயித்துவிட்டான். இப்படியே ஸகலப் பிராணிகளும் சோக மோஹ முதலிய கெடுதிகள் நிறைந்த மனதையுடையவர்களாய், தமக்கு இயல்பான தர்மத்தைக் கைவிடுவதும், விலக்கியிருக்கும் தர்மத்தைக் கைக்கொள்ளுவதும் ஆச்சர்யமல்ல. ஒரு வேளை தங்களுடைய தர்மத்தையே பற்றி அனுஷ்டித்தாலும், மனோ வாக்குக் காயங்கள் கர்ம பலன்களைத் தாங்களே அனுபவிக்கவேண்டுமென்று ஆசைகொண்டு நான் எனதென்ற அஹங்கார மமகாரங்களால் கவரப்படுவார்கள். அப்படியிருப்ப

தால், தர்மாதர்மங்கள் எல்லையில்லாமல் வளர்ந்து, அவைகளின் பயனாய் உத்தம மத்யம அதம ஜன்மங்களுண்டாய், அவைகளில் அனுபவிக்கும் ஸுக துக்கங்களும் ஓயாமல் சுழன்று வரும் ஸம்ஸார சக்ரமானது அநாதியாய் ஏற்பட்டு நிற்கிறது. ஆகையால் மேற்சொன்ன சோகமோகங்களே அதற்கு விதைகளாம். அது அநாதியானாலும் அனந்தமல்ல. ஸகல கர்மங்களையும் விட்ட ஆத்ம ஞானமென்ற பெருந்தீயால் வேகும். அந்த ஞானத்தை ஸகல ஜீவகோடிகளுக்கும் உபதேசித்துக் கடைத்தேற்ற விரும்பின பரம காருணிகரான பகவான் வாஸுதேவன், அர்ஜுனனை வெளிப்படையான காரணமாய் வைத்துக்கொண்டு, "எக்காரணத்தாலும் வருத்தப்படத் தகாதவர்களைக் குறித்து வருத்தப்படுகிறாயெ"ன்று உபதேசிக்கிறார்.

## விஷய அட்டவணை.

1. அர்ஜுனனுடைய மனத்தளர்ச்சியை கிருஷ்ணன் கண்டிக்கிறார்.
2. ஆத்மஞானமே துன்பத்தை ஒழிக்கும்.
3. ஞானமும் கர்மமும் கூடியே முக்திக்கு ஸாதனமென்ற கொள்கை.
4. ஸாங்க்ய யோக விவேகம்.
5. ஞான கர்மங்களின் கூடுதல்.
6. பகவானுடைய மதத்திற்கு விரோதம்.
7. சில விடங்களில் இப்படிக் காணப்படும் வாக்கியங்களின் விவரம்.
8. ஆத்மா மரணமற்றது.
9. பொய்யும் மெய்யும்.
10. ஆத்மா கர்த்தாவல்ல.

11. ஆத்மா விகாரமற்றது.

12. ஞானியானவன் கர்மங்களைத் துறக்க வேண்டும்.

13. கர்மங்கள் அக்ஞானிக்கே விதிக்கப்பட்டவை.

14. விகாரமற்ற ஆத்மாவின் ஞானம் உண்டாகக்கூடியதே.

15. ஞானயோகத்தையே ஞானி நாடவேண்டும்.

16. ஆத்மா எப்படி விகாரமற்றவனென்பது.

17. துக்கத்திற்கு இடமேயில்லை.

18. க்ஷத்ரியன் யுத்தஞ் செய்ய வேண்டும்.

19. யோகம் அபாயமில்லாத வழி.

20. நிச்சய புத்தி ஒன்றே, பலவல்ல.

21. லௌகிகர்களுக்கு நிச்சய புத்தி வராது.

22. யோகிக்குரிய உபதேசம்.

23. கர்ம யோகம்.

24. ஸமபுத்தியே சிறந்தது.

25. ஜீவன் முக்தனுடைய லக்ஷணம்.

(a) தன்னிடத்திலேயே தனக்கு ஸந்தோஷமுண்டு.

(b) இன்பதுன்பங்களில் ஸமமாயிருப்பான்.

(c) வெறுப்பும் விருப்பமும் பற்றுமில்லாதவன்.

(d) இந்திரியங்களை விஷயங்களிலிருந்து திருப்பி உள் நோக்கும்படி செய்கிறவன். அப்படி அடக்காததின் கெடுதி

(e) எப்பொழுதும் பகவானைத் தியானிப்பது. விஷயங்களை நினைப்பதே கெடுதிக்குக் காரணம். தன்னடக்கம் தெளிவையும்,

ஸுகத்தையும் கொடுக்கும். அதே நிச்சயமான ஞானத்தைக் கொடுக்கும்.

(f) ஜீவன் முக்தனுக்கு உலகம் கனவே; ஞானிக்கு கர்மம் ஏற்படவில்லை.

(g) தன்னடக்கமும் ஆசை யொழிவதும்

26. ஞானமே பிரம்மானந்தத்தைக் கொடுக்கும்.

## அத்வைதம் 2.

**சங்கராசார்யர்:**—இந்த அத்யாயத்தில் சொல்லியிருக்கும் முக்கியமான விஷயங்களாவன:—சுலோகம் 11-30. அர்ஜுனனுடைய சோகத்தை ஸாங்க்யயோகத்தின் உபதேசத்தால் போக்குகிறார். பிரம்மமே ஸத்யம், ஸகல மாயைக்கும் அவரே ஆதாரம். அவரிடத்தில் பிரபஞ்சம் மாயையால் ஆரோபிக்கப்படுகிறது. சிப்பியில் வெள்ளியும் கயிற்றில் பாம்பும்போல் உலகம் பார்க்கிறவனுக்குத் தோன்றும். பிரம்மமே நித்யம், மாறாதது. செய்கைக்கும் செய்விக்கைக்கும் மேலானது. பிரத்யக்ஷம் அனுமானம் ஆகமம் என்றவைகளால் அறியமுடியாததால் பிரமாணத்திற்கு மேற்பட்டது. ஜீவன்களும் பிரகிருதியுமுள்ள பிரபஞ்சம் ஸத்துமல்ல, அஸத்துமல்ல. பிரம்மத்தைப்போல் ஸத்தல்ல; முயலின் கொம்பைப்போல் அஸத்தல்ல. ஆகையால் அநிர்வசனீயமெனப்படும் (இன்னதென்று சொல்ல முடியாதது).

தேசத்தால் எல்லையற்ற எண்ணிறந்த ஜீவன்கள் இருப்பது ஸாத்யமல்ல. ஒரேகாலத்தில் எல்லா தேசங்களிலும் ஒரே ஆத்மா விளங்குவதாலும், அது அழிவற்றதாலும் மரணமென்பதே கிடையாது. ஆத்மா கர்மமற்றதால் ஸுகதுக்கங்களால் விகாரமடையாது. அந்தக்கரணம் பல; ஸுக துக்கங்களுக்கும் அவையே காரணம், ஆகையால் அர்ஜுனன் துக்கப்படுவது யுக்தமல்ல. இந்த உபதேசத்தை அர்ஜுனன் பூர்ணமாய் கிரஹிக்கவில்லை; ஆகையால் ஆத்மாவே இல்லையென்றும் அப்படியிருந்தாலும்

அழியுமென்றும், சார்வாகனும் நாஸ்திகனும் சொல்லும் கக்ஷியை கூறினதற்குக் கண்ணன் ஸமாதானம் சொல்லி, "அப்பொழுதும் உன்னால் பரிஹாரஞ்செய்ய ஸாத்யமில்லாத விஷயத்தைப் பொறுத்துக்கொள்ளவேண்டியதேயல்லாது வருத்தப்பட நியாயமில்லை" யென்கிறார். (27,28).

(31-38) லோகரீதியாய்ப் பல காரணங்களை எடுத்துச்சொல்லி "க்ஷத்ரியனும் வீரசிரேஷ்டனுமான அர்ஜுனனுக்கு இது தகாது. நிகரற்ற அபகீர்த்தியைக் கொடுக்கும்" என்றார். இப்படியும் அர்ஜுனன் ஸந்தேஹம் தெளியாததைக் கண்டு

(39-53) கர்மயோகத்தை உபதேசிக்கிறார். கர்மமும் கர்மயோகமும் ஞானத்திற்கும் ஞானயோகத்திற்கும் விரோதிகள். அஞ்ஞானிகளுக்குக் கர்மமும், மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு ஞானமும் ஏற்பட்டது. ஞானத்தை உபதேசித்து, அதற்கு அர்ஜுனன் அதிகாரியில்லையென்று கண்டு, தாழ்ந்த படியான கர்மத்தை உபதேசித்தார். ஞானிக்குக் கர்மமும் கடமைகளும் கிடையாது; அஞ்ஞானிக்கே உண்டு. வேதங்களைப் பின்பற்றுகிறவர்கள் அவர்களே; ஞானிகள் அவைகளை லக்ஷியஞ்செய்கிறதில்லை. வேதங்களுக்கும் விதி விலக்குகளுக்கும் மேலாய் நிற்பதே ஞான பூமியின் எல்லை. கர்ம யோகத்தின் ஆரம்பதசையிலும் வேதங்களில் சில பாகங்களைத் தள்ளிவிடவேண்டும். கர்மங்களையும் கர்மபலன்களையும் பற்றியே அவை சொல்லுகின்றனவல்லவா? அர்ஜுனன் அஞ்ஞானிகளுக்குள் தாழ்ந்தவன். அவன் ஞானியாயிருந்தால் அதற்கு முன்பே உலகத்தைத் துறந்து ஞானயோகத்தை அப்யஸித்திருப்பான்.

யுத்தஞ்செய்யென்று கண்ணன் அடிக்கடி சொல்வதால் கர்மமே சிரேஷ்டமென்று உபதேசிக்கவில்லை. அவன் ஆரம்பித்த காரியத்தை முடிக்காமல் விடுவதற்கு யாதொரு காரணமுமில்லை யென்றே காட்டுகிறார். ஸந்யாஸியே உண்மையான ஞானயோகி; மற்ற மூன்று ஆசிரமத்தாருக்கும் மோக்ஷ மார்க்கத்தில் பிரவேசமில்லை. ஸந்யாஸியே ஸர்வோத்தமன். முதிர்ந்த வயஸ் வந்தபொழுதாவது ஒவ்வொருவனும் ஸந்யாஸியாகவேண்டும்.

(54-72) ஸமாதியிலிருக்கும் ஞானியின் நிலையைப்பற்றி அர்ஜுனன் கேட்டதற்குப், பகவான் அத்வைத ஸாக்ஷாத்காரத்தை விஸ்தாரமாய் வர்ணிக்கிறார்.

## ஆக்ஷேபம்.

மேற்சொன்ன விஷயங்களில் அர்ஜுனன் பரம அக்ஞானியென்றும் அவனுக்குக் கர்மமே தகுந்ததென்றும் சொல்லப்படுகிறது. அப்படியானால் ஸர்வக்ஞனை கிருஷ்ணனுக்கு அது தெரியாதா? சிஷ்யனுடைய நிலையை அறியாமல் அவனுக்குத் தெரியாத ஸாங்க்ய யோகத்தை முதலில் உபதேசித்துப், பிறகு தன் பிசகைக் கண்டு கொண்டு கர்ம யோகத்தை உபதேசித்தாரென்று சொல்வது அவருக்கழகல்ல. பாகவதம் 2-வது ஸ்கந்தம் அத் 7,45-ல் ப்ரஹலாதன், துருவன், நாரதர், என்றவர்களைப்போல் அர்ஜுனனும் ஞானியென்றும், இந்திரனுடைய புத்ரனை தேவனென்றும், நரனென்ற ரிஷியின் அம்சமென்றும் சொல்லப்படுகிறது. அத்வைத மதத்தைச் சேர்ந்த வெங்கடநாதர் என்றவர் 39, 52 சுலோகங்களுக்குச் செய்த உரையில் மேற்கண்ட கொள்கையை ஆதரிப்பது ஆச்சர்யமானதே.

இந்த அத்யாயத்தின் ஆரம்பத்திலும் மற்ற விடங்களிலும் கர்மத்தையும் ஞானத்தையும்பற்றி சங்கராசார்யர் விசாரித்து, முமுக்ஷுவுக்கு கர்மம் இடையூறென்றும், ஸந்யாஸமே தகுந்ததென்றும், கர்மங்களை முற்றிலும் விடுவதே கடமையென்றும் நிச்சயிக்கிறார். ஆனால் ஸ்ரீமத்வாசார்யர் கீதா தாத்பர்ய நிர்ணயத்தின் ஆரம்பத்தில் இந்த மதத்தை விசாரித்துக், கர்மங்களைச் செய்வதே கடமையென்று உரைக்கும் கீதா சுலோகங்களைச் சேர்த்துச்சொல்லுகிறார். கண்ணன் 'கர்மங்களைச் செய்'யென்றபொழுது செய்யாதேயென்று விகல்பமாய் அர்த்தம் கல்பிப்பது ஸரியல்ல. ஸாங்க்யமும் கர்மமும் விரோதமல்ல, ஒன்றே; ஒரே பலத்தைக் கொடுக்குமென்று பகவான் சொன்னது பொய்யல்ல. ஒன்றிற்கொன்று இன்றியமையாததே. இரண்டும் சேர்ந்தே அனுஷ்டிக்கப்படவேண்டும்.

## விசிஷ்டாத்வைதம்.

இதற்கும் த்வைத மதத்திற்கும் அதிக பேதமில்லை. ஆகையால் அதன்கீழ் பார்த்துக்கொள்ளவும். ஆயினும், இந்த அத்யாயத்தில் 12, 16, 17, 18, 19, 21, 23, 24, 25, 29, 30, சுலோகங்களில் பரமாத்மாவைப்பற்றியே சொல்லப்படுகின்றனவென்றும், வேறு விதமாய் அர்த்தமில்லையென்றும் மத்வாசார்யருடைய மதம். ஜீவன்களே இங்கே குறிக்கப்படுகின்றதென்பது ராமாநுஜாசார்யருடைய மதம். 'எதால் இவையெல்லாம் வியாபிக்கப்படுகிறதோ', 'மனோ வாக்கிற்கு எட்டாதவன்' என்ற பதங்களும் ஜீவனையே குறிக்கின்றன. இது மாத்திரமல்ல. முதல் ஆறு அத்யாயங்களிலும் "ஜீவன் பரமாத்மை ஸாக்ஷாத்காரம் செய்வது சொல்லப்படவில்லை. தன் நிஜஸ்வரூபத்தை அடைவதே சொல்லப்படுகிறது"என்கிறார்.

அத்வைதிகள் ஜீவேசுவர ஐக்கியத்தை வாதிப்பதுபோல், ராமாநுஜாசார்யர் ஸகல ஜீவன்களும் ஒன்றுக்கொன்று ஸமமென்றும் பரமாத்மாவுக்கும் ஸமமென்றும் 30-வது சுலோகத்தின் உரையில் வாதிக்கிறார். இது பொருந்தாதென்பது த்வைதிகளின் மதம்.

காரணங்களும் காரியங்களும் பிறப்பிறப்பில்லாதவையென்று ஸத்கார்யவாத மதத்தை 27-வது சுலோகத்தின் உரையில் எடுத்துச் சொல்லுகிறார். ஆனால் அபாவத்திலிருந்து (ஒன்றுமில்லாதது) அபாவம் உண்டாகாது. பிரகிருதி அழிக்கமுடியாததென்பது த்வைதமதம். ஆனால் காரணத்திலிருந்து கார்யம் உண்டாக முடியாதென்றும் காரணமே காரியமாகுமென்றும் அவர்கள் சொல்லவில்லை. மண்ணே கடமானால் அதின் ரூபமென்பது புதிதாய்ப் பிறந்ததல்லவா ? ஒருவன் இறந்து சாம்பலானால் ஏதோ ஒன்று இறந்ததல்லவா ? சாம்பல் புதிதாய் உண்டாவதென்பது இதற்கு விரோதமல்ல. காரணத்தில் கார்யம் அடங்கியிருக்கலாமேயொழிய அது வெளிப்படும்பொழுது பிறந்ததென்றே சொல்லவேண்டும்.

ஸமாதியிலிருப்பவனுடைய நிலைமையைப் பற்றிச் சொல்லும் சுலோகங்களில் (54—72) ஸ்ரீமத் ராமாநுஜாசார்யரும் வேதாந்த தேசிகரும் பதஞ்ஜலியின் யோக ஸூத்ரங்களை அனுஸரித்து, 55-58

சுலோகங்களில் "விரக்தனுடைய நான்கு வெவ்வேறு நிலைகள் சொல்லப்பட்டிருக்கின்றன" வென்கிறார்கள். அபர வைராக்கியமே நான்கு படிகளாய் யோக ஸூத்ரங்களில் சொல்லப்படுகிறதென்றும், அதையே கண்ணன் குறிக்கிறாரென்றும், அவைகளை அடைந்த ஸமாதியோகியும் பரவைராக்கியத்திற்கு மிகவும் தாழ்ந்தவனென்றும் அவர்களுடைய மதம். ஆனால், எல்லா நிலைகளையும் தாண்டி, பிரஹ்ம ஞானத்தில் வேறுன்றி, நிற்பவனைப்பற்றியே அர்ஜுனன் கேட்டானென்றும் கண்ணன் அவனையே வர்ணித்தாரென்றும் ஸ்ரீமத் சங்கராசார்யரும் மத்வாசார்யரும் எண்ணுகிறார்கள்.

## த்வைதம்.

இந்த அத்யாயமே கீதையின் உபதேசம் முழுவதற்கும் ஆதாரம். தற்காலத்தில் வழங்கும் ஸாங்க்யமும் யோகமும் வேதாந்திகளால் வேதபாஹ்ய மதங்களென்று தள்ளப்படுகின்றன. இந்த அத்யாயத்தில் சொல்லப்படும் ஸாங்க்யமும் யோகமும் வேறு. ஸாங்க்யம், ஞானம்; யோகம், அனுஷ்டானம். ஜீவேசுவர ஸ்வரூபங்களை அறிவது ஸாங்க்யம். அதின் பிரயோஜனத்தை அடைவதற்குத் தகுந்தபடி மனோவாக்குகாயங்களின் வியாபாரங்களை நடத்துவது யோகம். இரண்டும் சேர்ந்து ஒன்றே. ஒன்றில்லாமல் மற்றொன்று பிரயோஜனமில்லை. வேறாக நினைக்கிறவன் அறிவில்லாத பாலனே.

(12—30) ஜீவஸ்வரூபத்தையும் பகவானுடைய மஹிமையையும் தேஹங்களின் அநித்யத்தையும் எடுத்துரைக்கின்றன. தேஹமே ஆத்மாவென்ற சார்வாக மதம் முதலில் கண்டிக்கப்படுகிறது. ஆத்மாக்கள் நித்யமானவை; ஸம்ஸார சக்ரத்தில் சுற்றும்பொழுது ஒவ்வொன்றும் எண்ணிறந்த தேஹங்களை அடைந்து அவைகளை விடுகின்றன. ஸர்வ வியாபியான ஈசுவரன் பிரகிருதி ஆகாசம் முதலியவைகளைப் போல் ஜீவன்களும் நித்யமே. அனந்தமான பரமாத்மாவின் பிரதிபிம்பங்களான ஜீவன்களும் நித்யமென்பது வியக்தமே. தான் ஈசுவரனை அண்டினவனென்றும், அவர் தனக்கு மேலானவரென்றும், அவர் காலதேச குணங்களால் எல்லையற்றவரென்றும்,

ஸமஸ்த தோஷமற்றவரென்றும் ஒவ்வொரு ஜீவனும் எண்ண வேண்டும். ஆகையால் அர்ஜுனன் துக்கிப்பது வீணே.

(31—38) அர்ஜுனன் சொன்ன லௌகிக காரணங்கள் இங்கே கண்டிக்கப்படுகின்றன.

(39—53) நமது கடமையைச் செய்ய வேண்டிய விதம் சொல்லப்படுகிறது. பலாபேக்ஷையின்றி கர்மங்களைச் செய்து ஈசுவரனுக்கு அர்ப்பணஞ் செய்யவேண்டியது. அதே விஷ்ணு தர்மம். இதைச் சொல்வதாலேயே கீதைக்கு யோகசாஸ்திரமென்று பெயர். மனதை ஸம நிலையில் வைத்துக்கொண்டிருப்பதே யோகம். கர்மங்களைச் செய்வதில் ஸாமர்த்யமே யோகம். (48 & 50.)

## கீதார்த்த ஸங்கிரஹம்.

இந்த அத்யாயத்தில் அர்ஜுனனுடைய அக்ஞானத்தை நீக்கும்பொருட்டு ஸாங்க்யபுத்தி யோகபுத்தி யென்ற விஷயங்கள் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டன: ஸ்திதப்ரக்ஞனென்ற ஞானியின் நிலைக்கு ஸாதனமாக, நித்யமான ஜீவாத்மாவையும் பலாபேக்ஷையில்லாமல் கர்மங்களைச் செய்வதென்ற கர்மயோகத்தையுமே இவ்விரண்டு மார்க்கங்களும் வர்ணிக்கின்றன.

## கீதார்த்த ஸங்கிரஹப் பாட்டு.

உடல மழிந்திடு, முள்ளுயிரொன்றழியா தேனைப்போல்,
விடுமதுபற்று, விடாததடைத்த கிரிசைகளே;
கடுகவுனக்குயிர் காட்டு நினைவதனுலுளதாம்,
விடுமயலென்று விசயனைத் தேற்றினன் வித்தகனே.

சரீரம் நாசத்தையடையும்; அந்தச் சரீரத்திற்குள்ளிருக்கும் ஒன்றாகிய ஜீவாத்மா என்னைப்போல் நாசமடையாது. கர்ம பலன்களை அனுபவிக்கவேண்டுமென்ற பற்றை விடவேண்டும். சாஸ்திரங்களால் அவசியமென்று விதிக்கப்பட்ட கர்மங்களை விடக்கூடாது; ஜீவாத்மாவை பிரத்யக்ஷமாய்ப் பார்ப்பதற்குக் காரணமான ஞானயோகம் இந்தக் கர்மயோகத்தால் சீக்ரமாய் உண்டாகும். தேஹமே ஆத்மாவென்ற பிரமையையும், அவசியம் செய்யவேண்டியவைகளில் செய்யக்கூடாதென்ற பிரமையையும் விடு யென்று அர்ஜுனனைக் கிருஷ்ணன் தெளிவித்தார்:

## அத்யாயம் 3.

# கர்மயோகம்.



अर्जुन उवच—

ज्यायसी चेत्कर्मणस्ते मता बुद्धिर्जनार्दन ।
तत्किं कर्मणि घोरे मां नियोजयसि केशव ॥ १ ॥

1. அர்ஜுனன்:—"கர்ம யோகத்தைக் காட்டிலும் புத்தி யோகம் மேலானதென்று நீர் எண்ணினால், கோரமான இந்த யுத்தஞ் செய்யும் கர்மத்தில் என்னை ஏவுகிறதற்குக் காரணமென்ன?

व्यामिश्रेणेव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।
तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥ २ ॥

2. ஒன்றிற்கொன்று விரோதமான ஸித்தாந்தங்களைக் கலந்து எனக்குபதேசித்து என் புத்தியை மயக்குகிறீரென்று தோன்றுகிறது. ஆகையால் நான் உத்தமமான க்ஷேமத்தை அடையும் பொருட்டு, நன்றாய் உமக்குள் பரிசோதித்து நிச்சயஞ் செய்து ஒரே மார்க்கத்தை உபதேசிக்கவேண்டும்.

श्रीभगवानुवाच—

लोकेऽस्मिन्द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयानघ ।
ज्ञानयोगेन सांख्यानां कर्मयोगेन योगिनाम् ॥ ३ ॥

3. பகவான் "நான் முன்பே இவ்வுலகத்தில் ஞானயோகத்திற்கு யோக்யதையுள்ளவர்களுக்கு ஞானயோகமென்றும், கர்ம யோகத்தில் யோக்யதை யுள்ளவர்களுக்கு கர்மயோக மென்றும் இரண்டு முறைகளை உபதேசித்திருக்கிறேன்.

न कर्मणामनारंभान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।
न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥ ४ ॥

4. (நீ என் உபதேசத்தை உள்ளபடி அறியவில்லை. கர்மங்களைச் செய்ய வேண்டிய முறையை நான் உனக்குத் தெளிவாய் எடுத்துரைத்தும், நீ கர்மங்களைச் செய்வதையே ஒழிக்க வேண்டுமென்று நான் சொன்னதாய் எண்ணி விட்டாய்.) கர்மங்களைச் செய்வதை ஆரம்பிக்காமலிருப்பதால் ஒருவன் கர்மபந்தத்திலிருந்து விடுபட்டவனாகான். கர்மங்களைச் செய்வதை முற்றிலும் ஒழிப்பதாலேயே அவனுக்கு ஸித்தி கிடைக்காது.

न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।
कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥ ५ ॥

5. ஏனென்றால், ஒருவனும் ஒருக்ஷணமாவது ஏதாவது கர்மத்தைச் செய்யாமலிருப்பதில்லை. பிரகிருதியிலிருந்துண்டான ஸத்வம் ரஜஸ் தமஸென்ற குணங்களால் வசப்படுத்தப்பட்டுத் தனக்கு இஷ்டமில்லாவிட்டாலும் கர்மத்தைச் செய்யும்படி கட்டாயப்படுத்தப்படுகிறான்.

कर्मेंद्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।
इंद्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥ ६ ॥

6. கர்மேந்திரியங்களை மாத்திரம் அடக்கி (பார்வைக்குக் கர்மங்களையே செய்யாதவன்போல் தோன்றி) மனதால் மாத்திரம் இந்திரியங்களுக்கு ஸுக துக்கங்களைக் கொடுக்கும் விஷயங்களை நினைத்துக்கொண்டே யிருப்பவன், ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறியாமல் மயங்குகிறான். அவன் கபடமான நடத்தையையுடையவன். (கர்ம பந்தத்திலிருந்து விடுபட்டவனென்று பிறர் எண்ணும்படி செய்கிறான்.)

यस्त्विंद्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन ।
कर्मेंद्रियैः कर्मयोगमसक्तः स विशिष्यते ॥ ७ ॥

7. ஆனால், இந்திரியங்களை மனதால் அடக்கிக் கர்மேந்திரியங்களால் கர்மயோகத்தைச் செய்ய ஆரம்பிக்கிறவனே ஸுக துக்கங்களில் பற்றில்லாதவன்; அவனே மேலானவன்.

नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।
शरीरयात्रापि च ते न प्रसिद्ध्येदकर्मणः ॥ ८ ॥

8. பூர்வ கர்மத்தால் உனக்கு ஏற்பட்ட கர்மத்தைச் செய். கர்மத்தைச் செய்யாதிருப்பதைக் காட்டிலும் கர்மத்தை முறைப்படி செய்வதே மேலானது. நீ கர்மத்தைச் செய்யா விட்டால் உன் தேஹத்தைக் காப்பாற்றுவதற்கு வேண்டிய காரியங்களும் நடவாது. (ஸமாதிக்கும் ஞானயோகத்திற்கும் இந்த ஸ்தூலதேஹம் அவசிய மன்றோ? ரக்தம் ஓடுவது மூச்சுவிடுவது முதலியவையும் கர்ம மல்லவா? அவைகளையும் நிறுத்து. இல்லாவிட்டால், கர்மத்தை விட்டவனாக மாட்டாய். நிறுத்தினால் இறப்பாய்).

यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबंधनः ।
तदर्थं कर्म कौंतेय मुक्तसंगः समाचर ॥ ९ ॥

9. பகவானுக்கு ஆராதன ரூபமாய் விளங்கும் யக்ஞ ஸம்பந்தமான கர்மங்களைத் தவிற மற்றவை இவ்வுலகத்தில் ஜீவன்களைக் கர்மபந்தத்திற்கு உட்படுத்தும். ஆகையால் அந்த யக்ஞத்திற்கு வேண்டிய கர்மங்களைப் பற்றில்லாமல் நீ செய்யக்கடவாய்.

सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्वमेष वोऽस्त्विष्टकामधुक् ॥ १० ॥

10. ஆதியில் பிரஜாபதியான ஸர்வேசுவரன் ஜீவகோடிகளை ஸிருஷ்டித்தபொழுது, பலவிதமான யக்ஞங்களையும் ஸிருஷ்டித்து, "நீங்கள் இவைகளால் விருத்தியடையுங்கள். இது உங்களுடைய மனோபீஷ்டங்களைப் பூர்த்தி செய்யும் காமதேனுவாகட்டும்.

देवान्भावयतानेन ते देवा भावयंतु वः ।
परस्परं भावयंतः श्रेयः परमवाप्स्यथ ॥ ११ ॥

11. "இவைகளால் நீங்கள் தேவதைகளைத் திருப்தி செய்யுங்கள்; அதற்குப் பதிலாக அவர்கள் உங்களைத் திருப்தி செய்யட்டும்,

இப்படி ஒருவர்க்கொருவர் திருப்தி செய்துகொண்டு நிகரற்ற க்ஷேமத்தை அடையக்கடவீர்கள்.

इष्टान्भोगान्हि वो देवा दास्यंते यज्ञभाविताः ।
तैर्दत्तानप्रदायैभ्यो यो भुंक्ते स्तेन एव सः ॥ १२ ॥

12. நீங்கள் செய்யும் யக்ஞங்களால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள் உங்களுக்கு வேண்டிய போகபோக்யங்களைக் கொடுப்பார்கள். ஆனால், அவர்களால் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை அவர்களுக்குத் திருப்பிக் கொடுக்காமல் அனுபவிக்கிறவன் திருடனே. (தேவர்களால் நமக்குக் கொடுக்கப்பட்ட லௌகிகப் பொருள்களில் ஸாரமான அன்னத்தையும் பால் நெய் தயிரையும் அவர்களுக்கு யாகங்களில் நாம் ஹவிர்ப்பாக ரூபமாய்க் கொடுக்கவேண்டும். பிறர் கஷ்டப்பட்டு ஸம்பாதித்த பொருளை அவர் மனப்பூர்வமாய்க் கொடுக்காமல், அவருடைய அனுமதியின்றி, அதற்குப் பதிலாக வேறொன்றையும் கொடுக்காமல் எடுத்துக் கொள்ளுகிறவனே திருடன்.)

यज्ञशिष्टाशिनः संतो मुच्यंते सर्वकिल्बिषैः ।
भुंजते ते त्वघं पापा ये पचंत्यात्मकारणात् ॥ १३ ॥

13. தேவதைகளைக் குறித்துச் செய்யப்பட்ட யக்ஞங்களில் அவர்களுக்கு நிவேதனஞ் செய்து மிகுந்ததைப் புஜிக்கும் ஸாதுக்கள் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். ஆனால் எவர் தங்களுடைய உபயோகத்திற்காக மட்டும் ஆஹாரத்தைப் பக்வஞ் செய்கிறார்களோ அவர்கள் புஜிக்கும் அன்னம் பாபரூபமே.

अन्नाद्भवंति भूतानि पर्जन्यादन्नसंभवः ।
यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः ॥ १४ ॥

14. ஸகல ப்ராணிகளும் அன்னத்திலிருந்து உண்டாகின்றன. அன்னம் மழையிலிருந்து உண்டாகிறது. மழை, யக்ஞத்தால் கிடைக்கிறது; அந்த யக்ஞம் கர்மத்திலிருந்துண்டாகிறது (மனோ வாக்கு காயங்களால் செய்யப்பட்ட கிரியைகளின்றி நடவாது.)

कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षरसमुद्भवम् ।
तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ॥ १५ ॥

15. இந்தக் கர்மங்கள் பிரம்மமென்று சொல்லப்படும் வேதத்தால் உபதேசிக்கப்படுகின்றன; இந்த வேதமும் அக்ஷரமென்று சொல்லப்படும் ஸர்வேசுவரனுடைய மூச்சுக்காற்றாகும்; ஆகையால் ஸகல வியாபாரங்களையும் ஊடுருவி நிற்கும் வேதம் எப்பொழுதும் யக்ஞத்திலேயே வேரூன்றியிருக்கும் (அதாவது, நான்கு வேதங்களும் யக்ஞங்களைச் செய்வதற்கே ஏற்பட்டவை. ரிக்வேதம் தேவதைகளை அழைக்கும் ஹோதாகணத்திற்கும், ஸாமவேதம் அந்த ஸூக்தங்களை ஸப்த ஸ்வரங்களுடன் பாடும் உத்காதாகணத்திற்கும், யஜுர்வேதம் யாக கர்மங்களை நடப்பிக்கும் அத்வர்ண கணத்திற்கும், மேற்சொன்னவை பிசகாமல் நடக்கும்படி கவனித்துவரும் ப்ரஹ்மகணத்திற்கு அதர்வவேதமும் உரியவை).

एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः ।
अघायुरिंद्रियारामो मोघं पार्थ स जीवति ॥ १६ ॥

16. இப்படிச் சுழன்றுகொண்டிருக்கும் சக்கரத்தின் போக்கை அனுசரிக்காதவன் இவ்வுலகத்தில் இந்திரியங்களால் அடையப்படும் விஷயங்களிலேயே ஆனந்தத்துடன் உழன்றுகொண்டிருப்பான்; அவனுடைய ஆயுள் முழுவதும் பாபரூபமே; அவன் உயிரோடிருப்பது வீணே.

यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।
आत्मन्येव च संतुष्टस्तस्य कार्यं न विद्यते ॥ १७ ॥

17. நாம் செய்யும் காரியங்களால் நமக்கு ஆனந்தமுண்டாகிறது; அது ஆத்ம ஸ்வரூபத்யானத்தாலேயே உண்டாகவேண்டும். வெளியிலிருக்கும் பொருள்களாலும் நமக்கு ஆனந்தமுண்டாகிறது; அதுவும் ஆத்மஸ்வரூப த்யானத்தாலேயே உண்டாகவேண்டும். மேற் சொன்னவையின் அபேக்ஷையில்லாமல் நமது எண்ணங்களாலும் ஆனந்தமுண்டாகிறது; அதுவும் ஆத்ம ஸ்வரூப த்யானத்தா

லேயே உண்டாகவேண்டும். அப்படியிருப்பவனுக்கு இவ்வுலகத்தில் செய்யவேண்டியது ஒன்றுமில்லை.

नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।
न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥ १८ ॥

18. அதுவரையில் செய்யப்பட்ட கர்மத்தால் அவனுக்கு யாதொரு பிரயோஜனமுமில்லை. செய்யப்படாமல் இனி செய்யப் போகும் கர்மத்தாலும் யாதொரு பிரயோஜனமுமில்லை. (ஸஞ்சித மென்ற பூர்வ கர்மத்தையும் ஆகாமியென்ற வரும் கர்மத்தையும் ஒழிக்கிறானல்லவா?) இவ்வுலகத்திலுள்ள ஸகல பிராணிகளிடத்தி லும் அவனுக்கு ஆகவேண்டிய கார்யம் யாதொன்றுமில்லை.

तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर ।
असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः ॥ १९ ॥

19. ஆகையால் நீ செய்துதீரவேண்டிய கர்மத்தை எப் பொழுதும் பற்றில்லாமல் செய்யக்கடவாய். பற்றின்றிக் கர்மங்களைச் செய்கிறவன் பரமாத்மாவை அடைகிறான்.

कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ।
लोकसंग्रहमेवापि संपश्यन्कर्तुमर्हसि ॥ २० ॥

20. ஜனகர் முதலான ஞானிகளும் கர்மங்களை இப்படிச் செய்ததாலேயே மோக்ஷமென்ற மேலான ஸித்தியைப் பெற்றார்க ளல்லவா? மேலும் உலகத்திலுள்ள ஜனங்களை ஒன்றுசேர்த்து வைத் திருக்கும் தர்மமென்ற புருஷார்த்தத்தை உத்தேசித்தாவது கர்மங் களை நீ செய்யவேண்டும். (பரோபகாரமே கர்மபலனாயிருப்பதில் உனக்குக் கெடுதியில்லை).

यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ २१ ॥

21. மேலும், எங்கெந்த கர்மத்தை பிரஸித்தனான புருஷன் விசாரித்துச் செய்கிறானோ அதையே அப்படி விசாரித்தறிய முடி

யாத மற்றவர்களும் அவனை நம்பிச் செய்கின்றார்கள். அவன் எதைத் தன் நடத்தைக்குப் பிரமாணமாய் ஏற்படுத்திக்கொண்டிருக்கிறானோ அதையே லோகத்தாரும் ஒப்புக்கொண்டு நடக்கிறார்கள்.

न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किंचन ।
नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥ २२ ॥

22. அர்ஜுனா! பார். மூவுலகங்களிலும் நான் செய்யவேண்டிய காரியமென்று ஒன்றில்லை; நான் அடையாததும் அடையவேண்டியதுமானது யாதொன்றுமில்லை. அப்படியிருந்தும், ஓயாமல் கர்மத்தையே செய்துகொண்டிருக்கிறேன் (மேற்சொன்ன காரணங்களில் உனக்கு விசுவாஸமில்லாவிட்டாலும், உன் பந்துவாய் மித்ரனாய் ஆசாரியனாயிருக்கும் என்னைப்போலாவது நடக்கக்கடவாய்).

यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतंद्रितः ।
मम वर्त्मानुवर्तंते मनुष्याः पार्थ सर्वशः ॥ २३ ॥

23. நான் சோம்பலில்லாமல் எப்பொழுதும் கர்மங்களைச் செய்துகொண்டிராவிட்டால் உலகத்திலுள்ள மனிதர்கள் யாவரும் என் நடத்தையைப் பின் தொடர்வார்கள்.

उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम् ।
संकरस्य च कर्ता स्यामुपहन्यामिमाः प्रजाः ॥ २४ ॥

24. நான் கர்மங்களை விதிப்படி பூர்ணமாய்ச் செய்யாவிட்டால் இந்த உலகங்கள் அழியும்; ஜாதிகள் ஒன்றோடொன்று கலப்பதற்குக் காரணமாவேன். இந்த ஜீவகோடிகளைக் கொன்றவனாவேன்.

सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वंति भारत ।
कुर्याद्विद्वांस्तथासक्तश्चिकीर्षुर्लोकसंग्रहम् ॥ २५ ॥

25. ஆத்மஞானமில்லாதவர்கள் கர்மங்களை எப்படிப் பற்றுடன் செய்கிறார்களோ அப்படியே ஆத்மஞானமுள்ளவன் அவைகளைப் பற்றில்லாமல், உலகத்தாரின் ஒத்துமையையும் க்ஷேமத்தையும் உத்தேசித்தே, செய்யவேண்டும்.

न बुद्धिभेदं जनयेदज्ञानां कर्मसंगिनाम् ।
जोषयेत्सर्वकर्माणि विद्वान्युक्तः समाचरन् ॥ २६ ॥

26. கர்மங்களைப் பற்றுடன் செய்யும் ஆத்மஞானமில்லாதவர்களின் புத்தியை ஆத்மஞானி கலைக்கக்கூடாது. (தனக்கு ஏற்ற மேலான விதிகளைச் சிரேஷ்டமாகச் சொல்லி, அவனுடைய தர்மத்தை இகழ்ந்து, அவனை இரண்டிற்கும் உதவாமற் செய்யக்கூடாது). ஆகையால் ஆத்மஞானி மனதை ஒருமைப்படுத்தி ஸகல கர்மங்களையும் செய்துகொண்டு ஆனந்தமடையக்கடவான்.

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहंकारविमूढात्मा कर्ताहमिति मन्यते ॥ २७ ॥

27. பிரகிருதியின் முக்குணங்களால் உண்மையில் செய்யப்படுகிற எல்லா கர்மங்களையும், அஹங்காரத்தால் ஞானம் மறைந்தவன், 'நானே இவைகளைச் செய்கிறே'னென்று எண்ணுகிறான்.

तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।
गुणा गुणेषु वर्तंत इति मत्त्वा न सज्जते ॥ २८ ॥

28. ஆனால், குணங்களையும் கர்மங்களையும் பகுத்தறிவதின் தத்வத்தை அறிந்தவனே, காரணரூபமான முக்குணங்களுமே காரிய ரூபமான இந்திரியங்களையும் அவைகளுக்கு விஷயமான பதார்த்தங்களையும் நடப்பிக்கின்றனவென்று எண்ணி, அவைகளில் பற்று வைக்கமாட்டான்.

प्रकृतेर्गुणसंमूढाः सज्जंते गुणकर्मसु ।
तानकृत्स्नविदो मंदान्कृत्स्नविन्न विचालयेत् ॥ २९ ॥

29. பிரகிருதியின் குணங்களால் மயங்கி, ஸாதாரண மனிதர்கள், குணங்களின் காரியரூபமான கர்மங்களில் பற்றுகிறார்கள். அவர்கள் ஸம்பூர்ணமான ஞானமில்லாதவர்கள், மந்தபுத்தியுள்ளவர்கள்; பூர்ணஞானமுள்ளவன் அவர்களைக் கலைக்கக்கூடாது.

मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा ।
निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ॥ ३० ॥

30. ஆகையால் ஆத்ம ஸ்வரூப த்யானத்திலேயே மனதை நாட்டி, நீ செய்யும் ஸகல காமங்களையும் என்னிடத்தில் அர்ப்பணஞ் செய்து, ஆசையற்றவனாய் எனதென்ற பற்றில்லாதவனாய்க் கவலையைவிட்டு யுத்தஞ்செய்யக்கடவாய்.

ये मे मतमिदं नित्यमनुतिष्ठंति मानवाः ।
श्रद्धावंतोऽनसूयंतो मुच्यंते तेऽपि कर्मभिः ॥ ३१ ॥

31. எந்த மனிதர்கள் சிரத்தையுடன் அஸூயையின்றி, நான் இப்பொழுது உபதேசித்த கொள்கையை எப்பொழுதும் அநுஷ்டிக்கிறார்களோ, அவர்களும் ஸகல கர்மபந்தங்களிலிருந்து விடுபடுகிறார்கள்.

ये त्वेतदभ्यसूयंतो नानुतिष्ठंति मे मतम् ।
सर्वज्ञानविमूढांस्तान्विद्धि नष्टानचेतसः ॥ ३२ ॥

32. ஆனால் எவர் இதைப் பார்த்து அஸூயைகொண்டு என் கொள்கையை அநுஸரிக்கவில்லையோ, அவர்கள் எவ்விதமான ஞானமுமில்லாத மூடர்களாய்ப் பகுத்தறியும் புத்தியில்லாதவர்களாய் அழிவார்களென்று அறி.

सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि ।
प्रकृतिं यांति भूतानि निग्रहः किं करिष्यति ॥ ३३ ॥

33. ஞானியானாலும் தன் ஸ்வபாவத்திற்குத் தகுந்தபடியே கர்மங்களைச் செய்கிறான். ஸகல பிராணிகளும் தங்களுடைய ஸ்வபாவத்தின்படியே செல்லுகின்றன. அவைகளைத் தடுப்பதால் பயனென்ன? (இங்கே ஸ்வபாவமென்பது பூர்வ ஜன்மங்களில் நாம் செய்த கர்மங்களின் வாஸனா ரூபமாய் இந்த ஜன்மத்தில் இயற்கையாய் நம்முடன் வரும் போக்குகளே).

इंद्रियस्येंद्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।
तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपंथिनौ ॥ ३४ ॥

34. இந்திரியங்கள் விஷயங்களை அனுபவிப்பதில் விருப்பமும் வெறுப்பும் தொடருகின்றன. இவ்விரண்டிற்கும் வசப்படக்கூடாது; இவன் செல்லும் ஞானமார்க்கத்தில் அவை தடைகளல்லவா ?

श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥ ३५ ॥

35. பிறருடைய தர்மம் நன்றென்றெண்ணி அதை நன்றாய் அனுஷ்டிப்பதைக் காட்டிலும், தனக்கு ஏற்பட்ட தர்மம் மேலானதாய்த், தோற்றுவிட்டாலும் அதே நமக்குப் பரம க்ஷேமத்தைக் கொடுக்கும். நமது தர்மத்தைச் செய்வதில் மரணம் நேர்ந்தாலும் அதே நமக்கு க்ஷேமம்; பிறருடைய தர்மத்தை அனுஷ்டிப்பதால் கொடிய பயம் உண்டாகும். (பந்துக்களைக் கொல்வதென்ற ஸ்வ தர்மத்தை விட்டு பிக்ஷையெடுத்துப் பிழைப்பதென்ற பிராஹ்மண தர்மத்தை விரும்பின (II 5) அர்ஜுனனுக்கு இது ஸமாதானமாய்ச் சொல்லப்பட்டது).

अर्जुन उवाच—

अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः ।
अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥ ३६ ॥

36. அர்ஜுனன்—"அப்படியானால் மனிதன் பாபத்தைச் செய்கிறானே. அப்படிச் செய்யும்படி அவனைத் தூண்டுகிறவர் யார்? பாபத்தைச் செய்ய விருப்பமில்லாவிட்டாலும் யாரோ வலுவில் அவனை செய்யச்சொல்வதுபோல் தோன்றுகிறதே. இதற்குக் காரணமென்ன?"

श्रीभगवानुवाच—

काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।
महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम् ॥ ३७ ॥

38. பகவான்—"ரஜோ குணத்திலிருந்து உண்டாகும் காமமென்பதே இது; கோபமென்பதே இது; இதற்கு ஆஹாரம்

போட்டுமுடியாது, மஹா பாபி; இவ்வுலகத்தில் எந்தக் கர்மத்தைச் செய்தபோதிலும், அது நமக்குப் பரம சத்ருவென்றறி.

धूमेनाव्रियते वह्निर्यथादर्शो मलेन च ।

यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम् ॥ ३८ ॥

38. புகையால் நெருப்பு மறைக்கப்படுவதுபோலும், கண்ணாடி அழுக்கால் மறைக்கப்படுவதுபோலும், கருவானது பையால் மறைக்கப்படுவதுபோலும். இவ்வுலகம் இதனால் மறைக்கப்படுகிறது.

आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।

कामरूपेण कौंतेय दुष्पूरेणानलेन च ॥ ३९ ॥

39. இந்தக் காமம் ஒன்றாலும் திருப்தியடையாது; எவ்வளவு வந்தாலும் நிறையாது. இது ஞானிக்கு என்றுமழியாத சத்ரு; இது ஞானத்தை மறைக்கும்.

इंद्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते ।

एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ४० ॥

40. இந்திரியங்களும் மனதும் புத்தியும் இதற்கு இருப்பிடமென்று பெயர். இவைகளால் ஞானத்தை மறைத்து ஆத்மாவை மயங்கச்செய்கிறது.

तस्मात्त्वमिंद्रियाण्यादौ नियम्य भरतर्षभ ।

पाप्मानं प्रजहि ह्येनं ज्ञानविज्ञाननाशनम् ॥ ४१ ॥

41. ஆகையால் நீ முதலில் இந்திரியங்களை அடக்கி இந்த மஹாபாபியை கொல்லக்கடவாய். ஏனென்றால் இது ஆத்ம ஸ்வரூபத்தை அறியும் ஞானத்தையும் விவேகம் செய்யும் புத்தியையும் அழிக்கும்.

इंद्रियाणि पराण्याहुरिंद्रियेभ्यः परं मनः ।
मनसस्तु परा बुद्धिर्यो बुद्धेः परतस्तु सः ॥ ४२ ॥

42. *அனுபவிக்கப்படும் விஷயங்களைக் காட்டிலும் இந்திரியங்கள் மேலானவையென்றும், இந்திரியங்களைக் காட்டிலும் மனது மேலானதென்றும், மனதைக் காட்டிலும் விவேகஞ்செய்யும் புத்தி மேலானதென்றும், எது புத்தியைக்காட்டிலும் மேலானதோ அதே அவனென்றும் (பரமாத்மா) சொல்லுகிறார்கள்.*

एवं बुद्धेः परं बुद्ध्वा संस्तभ्यात्मानमात्मना ।
जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम् ॥ ४३ ॥

43. *இப்படி புத்திக்கு மேலான பொருளையறிந்து, மனதை ஆத்ம ஞான சக்தியால் அசையாமல் நிறுத்தி, ஜயிக்க அரிய இந்தக் காமமென்ற சத்ருவைக் கொல்வாய்.*

---

# குறிப்புகள்.

## பீடிகை.

சங்கராசார்யர்:—கீதாசாஸ்திரத்தின் இரண்டு மதங்களான பிரவிருத்தி நிவிருத்தி மார்க்கங்களைப் பகவான் சென்ற அத்யாயத்தில் ஸாங்க்ய புத்தியென்றும் யோகபுத்தியென்றும் பெயரிட்டு உபதேசித்தார். அதில் 55-வது சுலோகம் முதல் முடிவுவரையில் ஸாங்க்யபுத்தியைச் சார்ந்தவர்களுக்கு ஸந்யாஸம் முக்யமென்று சொன்னார். அவர்களுக்கே ஸகல புருஷார்த்தங்களும் கைகூடுமென்று 72-வது சுலோகத்தில் "இதே பிரம்மத்தின் நிலை"யென்றார். அதற்கு முன் "கர்மத்திலேயே உனக்கு அதிகாரம்; கர்மத்தைச் செய்யாமையில் உனக்குப் பிரியமிருக்கக்கூடா"தென்று (47) யோகபுத்தியைக் குறித்துக் கர்மத்தையே செய்யவேண்டுமென்றார். ஆனால் அதே முக்தியைக் கொடுக்கும் ஸாதனமென்று சொல்லவில்லை. தனக்குரியதென்று உபதேசித்த கர்மானுஷ்டானத்தையும் மேலான அதிகாரிகளுக்குரியதென்று சொன்ன முக்தி ஸாதனமான ஞானயோகத்தையும் பார்த்து அர்ஜுனன் மலைத்தான். முக்திக்கு நேரான ஸாதனமாகும் ஸாங்க்யயோகத்தை உண்மையான வேறொரு பக்தனுக்கல்லவோ உபதேசித்தார். பலவிதமான கெடுதிகளையுடையதும், இதே ஜன்மத்தில் மோக்ஷத்தை கிரமக்கிரமமாயாவது கொடுக்குமென்று நிச்சயமில்லாததுமான கர்மயோகத்தைச் செய்யும்படி, அவருக்குப் பந்துவும் தோழனும் பக்தனும் சிஷ்யனுமான என்னை எப்படி ஏவக்கூடுமென்றான். அவனுடைய ஸந்தேஹம் நியாயமே. பகவானுடைய மதம் அப்படியிருந்தால் அர்ஜுனனுடைய கேள்விக்கு இடமுண்டு.

## விஷய அட்டவணை.

1. ஞான கர்மங்கள் ஒன்று சேராது.
2. வேதத்தால் விதிக்கப்பட்ட ஸந்யாஸம்.
3. கர்மத்தால் மோக்ஷமில்லை.

4. இரண்டும் கூடுமென்பது அர்ஜுனனுடைய கேள்விக்கு ஒவ்வாது.
5. ஞான கர்மங்களில் எது சிரேஷ்டம்?
6. இரண்டு மார்க்கங்களின் லக்ஷணம்.
7. கர்மயோகம் ஒருவனைக் கர்மத்திலிருந்து விடுவிக்கும்.
8. முக்குணங்கள் அக்ஞானிகளை ஆட்டுவிக்கின்றன.
9. அவர்கள் கர்மத்தை விடக்கூடாது.
10. பிரபஞ்ச சக்ரத்தைச் சுற்றச்செய்யவேண்டும்.
11. ஆத்ம ஞானிக்குக் கர்மயோகம் விதிக்கப்படவில்லை.
12. அர்ஜுனனுக்கு அதே உரியது.
13. ஸம்ஸாரத்திலிருந்து விடுபட வேண்டியவன் கர்மத்தைச் செய்யும் விதம்.
14. நமது நடத்தை ஸ்வபாவத்தை பொறுத்தது.
15. ஆனால் சொந்த முயற்சிக்கும் இடமுண்டு.
16. ஆசை நமக்கு பரம சத்ரு.
17. அது அறிவை மறைக்கும்.
18. அதின் இருப்பிடம்.
19. அதைக் கொல்லும் வழி.

ஞான கர்மங்கள் இரண்டும் ஒன்றுசேர்ந்து முக்திக்கு ஸாதனமென்பது பகவானுடைய கருத்தானால், கர்மத்தைக் காட்டிலும் ஞானமே மேலானதென்று இவ்விரண்டையும் பிரித்துச்சொல்வது பிசகாகும். ஒரே பிரயோஜனத்தைப் பெறுவதற்கு இரண்டு விஷயங்கள் ஒன்றுசேர்ந்து ஸாதனமாயிருந்தால், அவற்றுள் ஒன்றிற்கொன்று உயர்ந்தது, தாழ்ந்ததென்ற வேறுபாட்டை எப்படி உடைத்தாயிருக்கும்? பித்தம் தணிவதற்குக் குளிர்ச்சியும் இனிமையுமான இரண்டு பதார்த்தங்களை ஒன்றுசேர்த்துப் புஜிக்கவேண்டியிருந்தால், அவற்றுள் ஒன்றைக்காட்டிலும் மற்றொன்று மேலானதென்று சொல்வது பொருந்தாது. "கர்மத்தைக் காட்டிலும் ஞானம் எனக்கு நன்மை செய்யுமென்று பகவான் சொல்லிப், பிறகு நன்மை செய்யாத கர்மத்தையே செய்யக்கடவாயென்று எனக்கு உபதேசிக்கிறார். இதென்ன? பிரத்யக்ஷ விரோதமாயிருக்கிறதே" யென்று அர்ஜுனனுக்கு ஸந்தேகமும் கண்ணனிடத்தில் நம்பிக்

கைக் குறைவும் உண்டாய் அவரைப் பழிக்கிறவனைப்போல் "கேசவா! அப்படியானால், பரஹிம்ஸையான கொடிய கர்மத்தில் என்னை ஏன் ஏவுகிறீ"ரென்று சொல்லுகிறான். அது எப்படிப் பொருந்தும்?

ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட கர்மங்களுடன் மாத்திரம் ஞானத்தை ஒன்றுசேர்த்து அனுஷ்டிப்பதே பகவானுடைய கருத்தென்றும், அர்ஜுனனும் அப்படியே அறிந்தானென்றும் சிலர் சொல்வது பொருந்தாது. மேற்சொன்ன அர்ஜுனனுடைய வார்த்தைகள் அதற்கு விரோதமாகவேயிருக்கின்றன. "பகவான் தெளிவாய்ப் பேசினாலும் மந்தபுத்தியுள்ள எனக்கு அவருடைய வார்த்தைகள் மலைக்கச் செய்வதுபோலத் தோன்றுகின்றது. மயக்கத்தைப் போக்குவதற்காக உம்மை அடைந்தேன். என்னை மறுபடியும் மயங்கச் செய்வீரோ? ஆனால் ஞானத்தையும் கர்மத்தையும் ஒருவனே ஒரேகாலத்தில் சேர்த்து அனுஷ்டிக்க முடியாது. அவ்விரண்டும் வெவ்வேறேயென்று நீர் நினைத்தால் அவற்றுள் ஞானத்தையோ கர்மத்தையோ 'இதே அர்ஜுனனுக்குத் தகுந்தது; அவனுடைய புத்தியின் வலிமைக்கும் நிலைமைக்கு மேற்ற'தென்று நிச்சயித்து அருளிச்செய்யும். இவ்விரண்டில் எதால் நான் க்ஷேமத்தை அடைவேனோ அதை உபதேசிபு"மென்கிறான். பகவான் கர்ம நிஷ்டைக்கு ஞானத்தைத் துணையாகவாவது சொல்லியிருந்தால், அவ்விரண்டில் ஒன்றைச் சொல்லவேண்டுமென்று அர்ஜுனன் கேட்டிருக்க முடியாது. தான் இரண்டையும் பெறமுடியாதென்று நினைக்கிறவனுப், ஒன்றையே வேண்டும்படிக்கு, ஞானகர்மங்களுக்குள் ஏதாவது ஒன்றைத்தான் சொல்வேன். இரண்டையும் சொல்ல மாட்டேனென்று பகவான் சொல்லவில்லையல்லவா?

விசிஷ்டாத்வைத மதம்—மோக்ஷத்தை விரும்புகிறவர்களால் பரம புருஷனே அடையத் தகுந்தவனென்று வேதாந்தங்களில் சொல்லப்படுகிறது. அவன் அவித்யை முதலிய ஸகல தோஷங்களின் வாஸனையற்றவன்; எல்லையில்லாத மேன்மையையுடையவன். எண்ணிறந்த கல்யாண குணங்களையுடையவன்; பரப்ரஹ்மமென்றும் புருஷோத்தமனென்றும் சொல்லப்படுவான். அவனை அறிவது, உபாஸிப்

பது, தியானிப்பதென்றவையே அவனை அடைவதற்கு உபாயம். அதே ஏகாந்திக அத்யந்திக பக்தி (வேறு தேவதையையும் வேறு பிரயோஜனத்தையும் விட்டு நாம் அடையவிரும்பும் பிரயோஜனமாயும் அதை அடைவிக்கும் உபாயமாயுமிருக்கிற ஒரே வஸ்துவைப் பற்றின பக்தியே ஏகாந்த பக்தி. அழிவில்லாத ஸ்வரூபத்தையுடையதே ஆத்யந்த பக்தி) யென்று சொல்லப்படும். சாந்தோக்ய உபநிஷத்தில் பிரஜாபதியால் எந்த ஆத்மா பாபமற்றவனென்று வர்ணிக்கப்பட்டதோ, அந்தப் பரமாத்மாவை அடையும் ஜீவாத்மாவினுடைய உண்மையான ஸ்வரூபத்தை நேரில் பார்க்கவேண்டும். ஆத்மா நித்யமென்ற ஞானத்தை ஸம்பாதித்துப் பிறகு பலாபேக்ஷையில்லாமல் கர்ம யோகத்தைச் செய்வதால், ஞானயோகம் சித்திக்கும். அந்த ஞானயோகமே பக்திக்கு அங்கமாகும். சாந்தோக்ய உபநிஷத்தில் தஹர வித்யைப்பற்றிச் சொல்லும் வாக்கியத்தில், ஆத்மவித்யை பராவென்றும் அபராவென்றும் இருவிதம்; அவற்றுள், பரமாத்மாவை அடைகிற ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை நேரில் பார்ப்பதே அங்கமென்று, எவன் அந்த ஆத்மாவைத் தெரிந்துகொண்டு உபாஸிக்கிறானோவென்று சொல்லப்படுகிறது. விழித்துக் கொண்டிருப்பது, ஸ்வப்னம், ஸ்வப்னமின்றித் தூங்குவதென்ற மூன்று அவஸ்தைகளையும் அவன் தாண்டினவன், சரீர ஸம்பந்தமற்றவனென்று ஜீவாத்ம ஸ்வரூபம் வர்ணிக்கப்படுகிறது. இந்த ஜீவாத்மா இப்படியே இந்த சரீரத்தைவிட்டுக் கிளம்பி, பரஞ்சோதியை அடைந்து, தன் ரூபத்தைச் சேருகிறானென்ற மேற்சொன்ன உபநிஷத் வாக்கியத்தால் தஹர வித்யையின் பிரயோஜனம் வர்ணிக்கப்பட்டது. ஆத்மாவைப்பற்றின யோகத்தால் உண்டாகும் ஞானத்தால் பகவானைப் புத்திமான் உபாஸனை செய்து ஸுக துக்கங்களை விடுகிறானென்று கடோபநிஷத்தில் சொல்லியிருக்கிறது. பகவானுடைய உபாஸனையான பரவித்யைக்கு மேற்சொன்ன ஞானயோகமே அங்கமாகும். இந்த ஜீவாத்மா பிறப்பதுமில்லை, இறப்பதுமில்லை யென்று கடோபநிஷத் வாக்கியம் ஜீவாத்ம ஸ்வரூபத்தை நிரூபிக்கிறது. 'அணுவான வஸ்துவைக் காட்டிலும் அணுவானவென்றும் பெரியவனையும் எங்கும் நிறைந்திருக்கிறவனையும் விளங்கும் பரமாத்மாவைத் தியானஞ் செய்யும் புத்திமான் துக்கத்தை அடைகிறதில்லை' யென்றும், 'மனனம் செய்கிறதாலும் விஸ்

தாரமாய்க் கேட்பதாலும் இந்தப் பரமாத்மா அடையத் தகுந்தவனல்ல. எவனை இந்தப் பரமாத்மா தானுகக் கோருகிருனே அவனுலேயே அடையத் தகுந்தவன். அந்தப் பரமாத்மா தன் ஸ்வரூபத்தை வெளியிடுகிருனென்'ற கடோபநிஷத் வாக்கியங்களால் பரமாத்மாவின் ஸ்வரூபமும் உபாஸனையும், அதே பக்தி யென்றும் உபதேசிக்கப்படுகிறது. 'ஞானத்தை ஸாரதியாகக்கொண்டு மனஸை அடக்கினவன் ஸம்ஸார ஸமுத்திரத்திற்கு அக்கரையான விஷ்ணுவின் பரமபதத்தை அடைகிருனென்'ற கடோபநிஷத் வாக்கியம் பரவித்யையின் பலனைச் சொல்லிமுடிக்கிறது. ஆகையால் 3, 4, 5, 6 வது அத்யாயங்களில் பரமாத்மாவை அடைகிற ஜீவாத்மாவின் ஸாக்ஷாத்காரமும் (நேரில் பார்ப்பதும்), அதன் ஸாதனமும் விஸ்தாரமாய்ச் சொல்லப்படுகிறது.

### கீதார்த்த ஸங்கிரஹம்.

கர்ம பலன்களை அனுபவிப்பதில் பற்றுதலின்றி, முக்குணங்களே கர்த்தாவென்று நிச்சயித்துக், கர்ம பலன்களைப் பகவானிடத்தில் ஸமர்ப்பித்துச் சாஸ்திரத்தால் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யவேண்டும்.

### கீதார்த்த ஸங்கிரஹப் பாட்டு.

சங்கந்தவிர்ந்து சகஞ்சதிர் பெற்ற தனஞ்சயனே !
பொக்குங் குணங்கள் புணர்ப்பனைத்தும் புகவிட்ட வைத்துங்
நங் கண்ணுரைத்த கிரிசை யெல்லாமெனவுந் நவின்ருர்
எங்குமறிவார்களே யென்று நாதனியம்பினனே.

அ—து:—லோகத்தில் வருத்தமில்லாமல் பலத்தை அடையும் ஸாமர்த்தியத்தை அடைந்த அர்ஜுனனே! பற்றுதலை நீக்கிவிட்டு, விருத்தியடைந்துகொண்டிருக்கிற கர்மங்கள் எல்லாவற்றையும் முக்குணங்களிடத்தில் புகும்படி செய்து, அவசியம் செய்ய வேண்டியதாய்ச் சாஸ்திரங்களில் சொல்லப்படும் கர்மங்கள் யாவற்றையும் என்னிடத்திலேயே யிருக்கின்றன (குணங்களுக்கும் அவைகளுக்கு ஆதாரமான பிரகிருதிக்கும் அதற்கு ஆத்மாவான ஜீவனுக்கும் ஆத்மாவான என்னிடத்தில் வசப்பட்டு நிற்கின்றன) வென்றும்

சொன்னவர்கள் எல்லா விஷயங்களையும் தெரிந்துகொண்டவரா வார்களென்று ஸர்வேசுவரன் சொன்னான்.

த்வைதமதம்:—கர்மத்தைச் செய்யவேண்டியது அவசிமாவென் பது அர்ஜுனனுடைய கேள்வி. பலாபேக்ஷை கூடாது. ஆனால் யுத்தஞ் செய்வது ஸ்வயதயத்திற்காக இல்லையாதலால் காம்ய கர்ம மாகாதென்று ஆக்ஷேபிக்கலாம். கர்மத்தைச் செய்யவேண்டியது அவசியமானால் பரஹிம்ஸையில்லாத சாந்தமான தர்மத்தை ஏன் அர்ஜுனன் அனுஷ்டிக்கமுடியாது ?

ஸந்யாஸத்தைக் கைக்கொள்ளலாமே, யுத்தத்தைப்போல் இது காமக்குரோதங்களையுடையதல்ல. மேலும் ஒருவன் செய்யும் வேலை களில் யுத்தமென்பது மஹா க்ரூரமானது, மனிதனுடைய துர்க் குணங்களைப் பெருக்கக் கூடியது. காமக் குரோதங்களை ஒழிப்பதே ஞானத்தின் ஸாரமென்று கண்ணன் சொல்லவில்லையா? ஆகையால் தான் செய்யக்கூடிய காரியங்களில் ஆபத்துகளையுடைய சண் டையை விலக்கி, ராகத்துவேஷங்களை வளர்க்காத வேறு அமைதி யுள்ள தர்மத்தை அனுஷ்டிக்கலா மென்றெண்ணினான்.

அவனுடைய கேள்விகள் இரண்டு (1) கர்மங்களை விடுவதைக் காட்டிலும் செய்வது நலமென்று தோன்றவில்லை. (2) அப்படி கர்மத்தைச் செய்வது அவசியமென்று ஏற்பட்டால், ஏன் ராஜஸ தாமஸ குணங்களை அதிகரிக்கும் யுத்தத்தை ஏன் செய்யவேண்டும்? இவ்விரண்டிற்கும் 33, 34, 35-வது சுலோகங்களில் பதில் சொல் லப்படுகிறது. தன் தர்மத்தை ஸரிவரச் செய்வதில் மரணம் நேர்ந்தாலும் க்ஷேமமே; பரதர்மத்தை எவ்வளவு நன்றாய்ச் செய்தா லும் அது க்ஷேமகரமல்ல வென்று, 35 வது சுலோகத்தில் சொல் லப்படுவதே இரண்டாவது கேள்விக்கு ஸமாதானம்.

கர்மத்தைச் செய்யவேண்டியது அவசியமென்பதை வற்புறுத் தும் பொருட்டு, அர்ஜுனன் ஸாதாரணமானவனல்லவென்றும், ஓர் பெரிய லோகோபகாரத்திற்காக ஈசுவரனால் நியமிக்கப்பட்டவ னென்றும், லௌகிக வியவஹாரங்களில் கலந்திருந்தும் காமக் குரோதங்களால் பாதிக்கப்படாமல் தன் கடமையைச் செய்யக்

கூடியவனென்றும், பிரியவிருதரையும் ஜனகரையும் போன்றவனென்றும், லௌகீகப் பற்றால் கலக்கம் அடையக்கூடாதவனென்றும், ஜனக்களுக்குத் தர்மத்தை அனுஷ்டித்துக் காட்டவேண்டியவனென்றும் சொல்லப்படுகிறது. "யோகிகள் பல வகைபாவர்: கர்ம யோகிகள், பக்தியோகிகளென்று தனித்தனி வகுப்புண்டு. மனுஷ்யன் முதலாவதிலும் ரிஷிகள் இரண்டாவதிலும் தேவர்கள் மூன்றாவதிலும் சேர்ந்திருப்பார். ஒவ்வொரு மார்க்கமும் பூர்ணமானது. மற்ற இரண்டும் அதில் சேர்ந்திருக்கும். ஆனால் ஒன்று மேல் நாடியிருக்குமென்று சொல்லி யிருக்கிறார். மேற் சொன்ன காரணங்களால் கர்மத்தைச் செய்யவேண்டியதல்லாது விடமுடியாது. ஆனால் அதிகமான பொறுப்பு வாய்ந்து பலருக்குத் தலைவனாயிருப்பதால் அவன் ஓர் அதிகாரிபுருஷனாயிருந்து தன் கடமையைச் செய்யவேண்டியது.

ஆத்மஞானி கர்மங்களைச் செய்துகொண்டிருக்கும் விதம் அடுத்தபடியாகச் சொல்லப்படுகிறது. கர்மத்தைச் செய்யாமல் சோம்பேறியாயிருக்க விரும்புகிறவன் சொல்லக்கூடிய சில ஆக்ஷேபங்கள் இங்கே கண்டிக்கப்படுகின்றன. ஒன்றும் செய்யாமலிருப்பதால் காரிய ஸித்தியாவதேயில்லை. மலைகளும் மரங்களும் யாவற்றிற்கும் முந்தி மோக்ஷத்தையடையவேண்டுமே. ஆனால் ஸந்யாஸி ஒன்றையும் செய்யவில்லையே யென்றால், தேஹத்தால் செய்யும் கர்மங்களைக் காட்டிலும் அதிக கஷ்டமானதும் எல்லையற்ற பயனைக் கொடுக்கக் கூடியதுமான மானஸகர்மரூபமான தியானத்தை லோகோபகாரமாய்ச் செய்து வருகிறானென்றறிய வேண்டும்.

மேலும் கர்மத்தையே செய்யாமலிருப்பது ஸாத்யமல்ல. மனிதன் உயிரோடிருப்பதற்கு அவசியமான சுவாஸ ஸஞ்சாரமும் ரக்தத்தின் ஓட்டமும் தேஹ பரமாணுக்களின் மாற்றமும் அவனறியாமலேயே நடந்துகொண்டிருக்கின்றன. அது கர்மமல்லவா? மனதின் சஞ்சலத்தை நிறுத்துவது ஸுலபமா? ஆகையால் கர்மங்களைச் செய்யாமலிருந்து ஒருவன் பிழைத்திருக்கமுடியாது.

மேலும், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களை அடக்கிச் சும்மா உட்கார்ந்திருப்பவன் கர்மத்தை விட்டவனென்று சொல்வது பிசகு.

அவ்வளவுக்கவ்வளவு மனது வேகமாய் வேலை செய்யும். தேஹேந்திரியங்களை வெளிக்குமாத்திரம் அடக்கி, மனதால் ஸுகதுக்கங்களை அநுபவிக்கிறவன் கேவலம் வேஷதாரியே. மனதை அடக்கினால் தேஹேந்திரியங்கள் நாம் விரும்பாமலேயே அடங்கிவிடும். ஸ்வர்க்கமும் நரகமும் நமது மனதின் தன்மைகளே.

மேலும், கடமையைச் செய்யாமலிருப்பது பாபமாகும். விதிப்படி செய்வதால் ஓர் விதப் பழக்கமும் கட்டுப்பாடும் ஏற்பட்டு, சுத்தமான மனதும் பக்குவமான ஞானமு முண்டாகும். ஆகையால் அர்ஜுனன் கர்மத்தை விடாமல் செய்யவேண்டியதே. ஆனால் கர்மம் பந்தமென்றும், ஞானமே மோக்ஷமென்றும் மனு சொன்னதும் அவ்வித பந்தரூபமான கர்மம் பலாபேக்ஷையுடன் கூடினதேயாகும். பகவானுடைய கைங்கர்ய ரூபமாய்ப் பரோபகாரமாய்ச் செய்யப்படும் கர்மம் அவ்விதமல்ல.

இதிலிருந்து யாகங்களைப்பற்றி பிரஸ்தாபமுண்டாகிறது. அவைகளின் உத்பத்தியும் தேவர்களுக்கும் மனிதர்களுக்குமுள்ள ஸம்பந்தமும் சொல்லப்படுகிறது. யக்ஞமே ஸம்ஸாரத்தின் ஸாரமாகும். ஸ்தாவர ஜங்கம வர்க்கங்களிலும் ஓர் பிராணி தனக்கு மேலான பிராணிக்கு ஆஹாரமாகிறது. ஆனால் மனிதனோ தன்னை அறியாமல் தன் நன்மையைத் துறந்து மற்றவர்கள் க்ஷேமத்தை அடைய வேண்டுமென்றும் முயலுகிறான். அது அவனுக்கேற்பட்ட மேன்மையாகும். "யக்ஞமே ஸமஸ்த இஷ்டங்களையும் நிறைவேற்றும். யக்ஞமில்லாவிட்டால் லோகங்கள் நிலைபெறாது. நமக்குத் தேவர்களால் கொடுக்கப்பட்டிருக்கும் தேஹங்களையும் பஞ்சபூதரூபமான பிரகிருதி பதார்த்தங்களையும் நாம் அநுபவித்து முன்னேறுவதற்குப் பதிலாக நாம் அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய கூலியான யக்ஞத்தைச் செய்து அவர்களைப் போஷிக்காமலிருந்தால், கேவலம் திருடர்களேயாவோம். ஒவ்வொருவனும், தன் தேஹங்களைக் கொடுத்த பிதிர்களுக்கும், பிரகிருதி பதார்த்தங்களை ஸிருஷ்டித்த தேவர்களுக்கும் பூதங்களுக்கும், இப்பிறப்பில் தன்னுடன் பழகும் மனிதர்களுக்கும் சில கடமைகளைச் செலுத்தவேண்டும். யாவற்றையும் தனக்கென்றே அநுபவித்து, ஒன்றும் கொடா

மலிருப்பவன் மஹா பாபியாவான். பஞ்ச மஹா யக்ஞமும் வைச்வ தேவம் முதலியவைகளும் யாகங்களும் இதற்காகவே ஏற்படுத்தப் பட்டன.

பிராணிகள், அன்னம், மழை, யக்ஞம், கிரியைகள், பிரம்மா, வேதங்களென்று ஏழு ஆரங்களுடைய ஸம்ஸார சக்ரம் சுழன்று கொண்டேயிருக்கிறது. ஜீவகோடிகள் அதைச் சுற்றும்படி செய்வது கடமையாகும். இதில் ஸம்பந்தப்படாதவன் ஒருவனுமில்லை. ஆயினும் நிர்விகல்ப ஸமாதியில் ஆழ்ந்திருக்கும் மஹா யோகி ஒருவனே இதற்கு விலக்காகும். ஏனென்றால் அவன் ஸகல லோகங்களையும் தரிக்கும் சக்தியை விருத்தி செய்துகொண்டிருக்கும் கடுமையான தியான முறையை அனுஷ்டிக்கிறானன்றோ? கீழான கர்மங்களை அவன் செய்யவேண்டியதில்லை. அதனால் அவனுடைய காலமும் சக்தியும் வீணாகும். ராஜ்யபாரம் செய்துகொண்டு வெளிக்குக் கர்மங்களில் முழுகியிருந்த ஜனகர் பிரம்மஞானியல்லவா.' மேலும், லோக நாதன் பூமியில் அவதாரம் செய்யும்பொழுது மற்றவர்களைப் போல் தானும் கர்மங்களைக் குறைவற நடத்திப் பிறரையும் அனுஷ்டிக்கும்படி செய்கிறார். அப்படியில்லாவிட்டால் அவரையே குறியாகக் கொண்ட மற்றவர்கள் தர்மங்களைவிட்டு, ஜன ஸமூகத்தைக் குழப்பி, எல்லோரும் நரகத்திற்குப் போவார்கள். ஆகையால் ஸமாதியில் ஆழ்ந்துநிற்கும் பக்வநிலை வரும்வரையில் ஒருவனும் தன் வர்ணாசிரம தர்மங்களை விடக்கூடாது.

பகவானே யாவற்றையும் நடத்துகிறவர். ஜீவன்களுடைய ஸ்வபாவமே அவர்களின் நடத்தையையும் தன்மையையும் மாற்றுகின்றன. முக்குணங்களின் ரூபமாய் நம்மைச் சூழ்ந்திருக்கும் பல சக்திகள் நமது தன்மையை வேறுபடுத்துகின்றன. கடவுள் ஜீவன்களின் செய்கைகளில் அனாவசியமாய்த் தலையிடுவதில்லை; ஸ்வபாவத்தின் போக்கைத் தடுப்பதில்லை. நன்மை தீமைகளைச் சாஸ்திரங்களால் உபதேசித்துப் பெரியோர்களால் நடத்திக்காட்டி, அதை அனுஷ்டிப்பதையும் விடுவதையும், ஜீவனுடைய இஷ்டத்தைப் பொறுத்ததாக விட்டுவிடுகிறார்.

"ஸகலகர்மங்களையும் என்னிடத்தில் ஸமர்ப்பித்துப்,பரமாத்மா விடத்தில் மனதை நாட்டி, ஆசையையும் அஹங்காரத்தையும் ஒழித்துத் தாபத்ரயத்தை விலக்கி யுத்தஞ்செய்யக்கடவா"யென்ற 30-வது சுலோகம் வெகு முக்யமானது.

"ஸ்வாமி ! தர்ம புத்தியைக் கைப்பற்றுமல் ஜீவனைத் தடுப்பது யார் ? காமம், கோபம், லோபம், மோஹம் முதலியவையென்று சொன்னீர். இவை ஸமமான பலமுள்ளவைகளா ? அல்லது ஒன்று மேலானதா ? நன்மை தீமை நன்ருய்த் தெரிந்திருக்கும்பொழுதே, நன்மையைச் செய்ய விரும்பும்பொழுதே, நம்மைத் தடுத்துத் தீமை யைச் செய்யும்படி கட்டாயப்படுத்துவது யார்?" என்று அர்ஜுனன் கேட்டது நியாயமே. காமமே ஸத்ரு ஸைன்யத்தின் தலைவனென் பதே பகவானுடைய பதில். அதற்குக் காலநேமியென்ற அஸு ரனே அதிஷ்டான தேவதை. அமிருதத்திற்காக பாற்கடலைக் கடைந்தபொழுது அவனே அஸுரர்களுக்குத் தலைவனுயிருந்தான். பகவான் சக்ரத்தால் அவனைக் கொன்ருர். சிலருக்கு ஆசை புகை யைப்போலும், சிலருக்குக் கண்ணுடியில் களிம்பைப்போலும், சில ருக்குக் கர்ப்பப்பையைப்போலும். அது தீங்கு செய்கிறது. பகவா னுடைய தர்சனத்தை மறைக்கிறது. ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டு கிறது. இந்திரியங்களும் மனதும் புத்தியும் அதின் கோட்டைகள். அவைகளிலிருந்து அதைத் துரத்தித், தான் அங்கே அதிகாரஞ் செலுத்தவேண்டும். விஷயங்கள், இந்திரியங்கள், மனம், புத்தி, மஹத், அவ்யக்தமென்று தத்வங்கள், இந்திரன் அக்னி முதலான அதிஷ்டான தேவதைகளுடன் படிப்படியாய் அமைந்திருக்கின்றன. அவைகளுக்கு மேலாயிருக்கும் பரவாஸுதேவனை அறிகிறவனே முக்தன்; அவருடைய கிருபையைப் பெற்றவனே காமத்தை வென்றவன்.

## மதுஸூதன ஸரஸ்வதி.

(கூடார்த்த தீபிகை.)

கீதாசாஸ்திரம் மூன்று பிரிவுள்ளது. சாந்தோக்ய உபநிஷத் தின் ஸாரமாயும் நான்கு மஹாவாக்யங்களின் நடுநாயகமாயும் விளங்

கும் தத்வமஸியென்ற சுருதிக்குக் கீதையே வியாக்யானமாகும். அத்யாயம் I முன்னுரை யாகும்; அத் 2, கீதாசாஸ்திரச் சுருக்கம்; 3, 4, 5, 6, த்வம் என்ற பதத்திற்குப் பொருளான ஸம்ஸாரத்தில் கிடக்கும் ஜிவதத்வத்தைச் சொல்லும்; 7, 8, 9, 10, 11, 12, தத் என்ற பதத்தின் பொருளான ப்ரஹ்மத்தைப் பற்றி யோக ரூபமாய் சொல்லுகிறது. அத் 13. முதல் முடிவுவரையில் ஜீவேசுவர ஐக்கியத்தைக் குறிக்கும் அஸி யென்ற பதத்தின் வியாக்கியானமாகும். அத், 4, 5-ம் கர்மயோகத்தைப்பற்றிச் சொல்லும். அதற்கு ஆதாரம் II,48. அத் 5,6-ம் கர்ம ஸந்யாஸத்தைச் சொல்லும்; அதற்கு II 71 ஆதாரம். 7 முதல் 12 அத்யாயங்கள் பக்தியை உபதேசிக்கும். அதற்கு II, 61 ஆதாரம். 13 முதல் முடிவு வரையில் ஐக்கியத்தைச் சொல்லும். அதற்கு II 21 ஆதாரமாகும். 13-ல் பிரகிருதி புருஷ விவேகத்தால் ஜீவப்பிரம்ம ஐக்யம் சொல்லப்படுகிறது. முக்குணங்களைத் தாண்டும் வழியைச் சொல்லும். 14-வதில் ஜீவன்முக்தி யென்ற ஐக்கியம் சொல்லப்படுகிறது; அதற்கு II 45 ஆதாரம். ஸம்ஸார விருக்ஷம் வேருடன் அழிக்கப்பட்டு, ஞானி பிரபஞ்சத்தால் பாதிக்கப்படாமலிருக்கும் தன்மை 15-ல் சொல்லப்படுகிறது. 16-ல் போதிக்கப்படும் தெய்வாஸுர ஸம்பத்து ஞானத்திற்கு, II 56 ஆதாரம். 17-ல் சொல்லப்படும் ஆஸுர ஸம்பத்திற்கு II 42-44 வரையில் ஆதாரம். 18-வது அத்யாயம் கீதாசாஸ்திரத்தின் ஸங்கிரஹமாகும்.

ஆக்ஷேபம் (1) மூன்று முதல் 6 அத்யாயங்கள் வரையில் அக்ஞானியான ஜிவனைப்பற்றி 'த்வம்' என்ற பதத்தால் சொல்லப்படுகிறதென்பது பொருந்தாது. ஜீவன் அக்ஞானத்தால் மறைக்கப்பட்ட நிலைமையில் கர்மயோகமே அவனுக்கு ஹிதமென்றும், அதைப்பற்றின அத்யாயங்கள் அவனுக்கு ஸம்பந்தமுள்ளவை யென்றும் எண்ணுவது மூக்கைத் தொடுவதற்கு மூன்று மைல் சுற்றுவது போலிருக்கிறது. ஜீவன் மாயையால் உண்டான கார்யமே, வெறும் தோற்றமே, வாஸ்தவமல்ல வென்ற அத்வைத மதற்திற்கும், அவன் தன் கடமையைச் செய்யவேண்டுமென்பதற்கு எப்படிப் பொருந்துமென்றும் தெரியவில்லை.

(2) 'த்வம்' பதத்தைக் கர்மயோகம் விளக்குகிறதென்றால், 7-முதல் 12-வரையிலுள்ள அத்யாயங்கள் பக்தியோகத்தை உபதேசிக்கின்றன. அவைகளும் அதையே விளக்கவேண்டும். ஏனென்றால் அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்திற்குப் பக்தியும் உண்மையான ஸாதனமல்லவென்பது அத்வைதமல்லவா? அக்ஞான தசையில் ஜீவன் இருக்கும்பொழுதுண்டாகும் ஓர் மனத் தோற்றமல்லவா? ஆகையால் அவை 'தத்' என்ற பிரஹ்மத்தைப்பற்றி எப்படிச் சொல்லும்?

(3) மூன்றாவது பாகமான 6-அத்யாயங்கள் (13-18) 'அஸி' யென்ற பதார்த்தத்தால் ஜீவேசுவர ஐக்கியத்தை உபதேசிப்பதெப்படி? பிரகிருதியும் புருஷனும் வெவ்வேறென்று 13-ல் சொல்லியிருக்க, அத்வைதமெங்கே? 2-வது அத்யாயம் 21-வது சுலோகத்தில் இது உபதேசிக்கப்படுகிறதென்றால், அது ஜீவனுடைய அமிருதத்வத்தை (நித்யமான நிலைமை) ஸ்பஷ்டமாய் உபதேசிக்கிறது. இதைக்காட்டிலும் பலமான ஆதாரம் கிடைக்கவில்லை போலும். 45-வது சுலோகத்தில் மூன்று குணங்களின் ஸ்வரூபத்தையும், அவைகளை ஜயிக்க வேண்டுமென்பதையும் பகவான் சொல்லுகிறார். வெளிப்படையாய்ப் பார்த்தால் நாம் வேதங்களைத் தள்ளிவிட வேண்டுமென்றே ஏற்படுகிறது. ஆனால் பௌத்தர்களும் இந்துக்களல்லாத யாவரும் அப்படியே செய்கிறார்கள். அவர்களும் பகவானுடைய உபதேசத்தைப் பின்பற்றுகிறவர்களோ?

(4) 52-வது சுலோகத்தில் "நீ இது வரையில் கேட்டதையும் இனி கேட்கப் போவதையும் வெறுப்பாய்"என்று அர்த்தஞ் செய்வது வழக்கம். அப்படியானால் "எவருடைய சுவாஸமே வேதங்களோ"வென்ற கிருஷ்ணன் இந்தக் கீதையில் செய்யும் உபதேசத்தை அந்த வேதங்களை ஆதாரமாய்க்கொண்டே சொல்லியிருக்கிறார். அவரே அதற்கு விரோதமாய்ச் சொல்லுவாரா?

(5) மூன்றாவது பாகத்திலுள்ள ஆறு அத்தியாயங்களிலாவது 2-வது அத்யாயத்தின் 21, 45, 52-வது சுலோகங்களிலாவது ஜீவேசுவர ஐக்கியத்தைப்பற்றி ஸ்பஷ்டமான உபதேசமில்லை. கீதையில் பின்பு சொல்லப்படும் பல விஷயங்களை இரண்டா

வது அத்யாயத்தின் 42, 56, 61, 71-வது சுலோகங்கள் குறிக்கின்றனவென்று சொல்வதற்குத் தகுந்த ஆதாரமில்லை. ஆனால் 2-வது அத்யாயம் கீதையின் ஸாரமே. 'தத்வமஸி' யென்ற வாக்யத்தை கீதை விளக்குகிறதென்று ஸித்தாந்தஞ் செய்வதற்காக வாக்யங்களையும் பதங்களையும் ஸந்தர்ப்பத்தைக் கவனிக்காமல் பெயர்த்தெடுத்து, தோன்றினபடியெல்லாம் அர்த்தஞ் செய்வது ஆக்ஷேபகரமாகும்.

---

## அத்யாயம் 4.

# ஞானயோகம்.

श्रीभगवानुवाच—

इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम् ।
विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ १ ॥

1. பகவான்,—"என்றுமழியாத இந்த யோகமார்க்கத்தை நான் இந்த மன்வந்தரத்தின் ஆதியில் ஸூர்யனுக்குபதேசித்தேன். அதை ஸூர்யன் தன் புத்ரனான வைவஸ்வதமனுவுக்குச் சொன்னான். அந்த மனு தன் புத்திரனான இக்ஷ்வாகுவிற்குச் சொன்னான்.

एवं परंपराप्राप्तमिमं राजर्षयो विदुः ।
स कालेनेह महता योगो नष्टः परंतप ॥ २ ॥

2. இப்படிப் பரம்பரையாய் வந்த இந்த யோகத்தை ராஜரிஷிகள் அறிந்தார்கள். ஆனால் அதற்குப்பின் வெகுகாலமானதால் இந்த யோகம் இவ்வுலகத்தில் வழங்காமல் மறைந்தது.

स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः ।
भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम् ॥ ३ ॥

3. நீ என்னிடத்தில் அளவற்ற பக்தியை வைத்தவன். எனக்குத் தோழனென்ற காரணத்தால் இந்தப் புராதனமான யோக மார்க்கத்தையே உனக்கு இன்று உபதேசித்திருக்கிறேன். இது ஸர்வோத்தமமான ரஹஸ்யமல்லவா?

अर्जुन उवाच—

अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः ।
कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥ ४ ॥

4. அர்ஜுனன்—"ஸூர்யனுடைய பிறப்பு வெகுகாலத்திற்கு முந்தினது; உமது பிறப்போ சிலகாலத்திற்கு முன்பே நேர்ந்தது.

இப்படியிருக்க, நீர் இதை ஆதியில் அவருக்கு உபதேசித்தீரென்று எப்படி நான் அறிவது."

श्रीभगवानुवाच—

बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।
तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परंतप ॥ ५ ॥

5. பகவான்—"எனக்கு எண்ணிறந்த பிறப்புகள் இதுவரையில் கழிந்தன; உனக்கும் அப்படியே. ஆனால் நான் அவை யாவையும் அறிவேன்; நீயோ அப்படி அறியாய்.

अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् ।
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥ ६ ॥

6. எனக்குப் பிறப்பில்லை; என் ஸ்வரூபத்திற்கு அழிவில்லை. ஸகல பிராணிகளுக்கும் நான் ஈசுவரன் (அவைகளுக்கு ஏற்ற பிறப்பிறப்பு கர்மபந்தம் முதலியவை எனக்கிருக்க நியாயமில்லை). ஆயினும் நான் ஜன்மமெடுக்கிறேன். கர்மகதிப்படி மாதா பிதாக்களால் கொடுக்கப்படும் சரீரம் எனக்கில்லை; எவ்விதத்திலும் எனக்கு வசப்பட்ட பராப்ரக்ருதியையே என் தேஹம் ஆதாரமாயுடையது. பூர்வ கர்மபலத்தால் நான் பிறப்பதில்லை; என் இஷ்டப்படி என் சக்தியாலேயே நான் ஜன்மமெடுக்கிறேன்.

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥ ७ ॥

7. லோகத்தில் எங்கெந்தக் காலத்தில் தர்மம் குறைகிறதோ அதர்மம் ஓங்குகிறதோ அப்பொழுது நான் அவதாரரூபமாய் வெளிப்படுகிறேன்.

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥ ८ ॥

8. ஒவ்வொரு யுகத்திலும் ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும் துஷ்டர்களை அழிப்பதற்கும், தர்மத்தை நிலைநிறுத்துவதற்கும் பிறக்கிறேன்.

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः ।
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ ९ ॥

9. இப்படி என் தைய்வத்தன்மையுள்ள (அமானுஷ்யமான) பிறப்பையும் நான் செய்யும் கர்மத்தையும் உண்மையாய் அறிகிறவன், இந்த தேஹத்தை விட்டபிறகு மறுபடியும் பிறக்கிறதில்லை, என்னை அடைகிறான்.

वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः ।
बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः ॥ १० ॥

10. பயம் ஆசை கோபம் அற்றவர்களாய்; ஞானயோக அனுஷ்டானத்தால் பரிசுத்தர்களாய், என்னையே கதியென்றடைந்து; என்னால் நிறைந்து, எதையும் நானாகப் பாவித்து, என் நிலையை அடைந்தவர் பலர்.

ये यथा मां प्रपद्यंते तांस्तथैव भजाम्यहम् ।
मम वर्त्मानुवर्तंते मनुष्याः पार्थ सर्वशः ॥ ११ ॥

11. யார் யார் எங்கெந்த வழியாய் என்னை வந்தடைகிறார்களோ நான் அதற்குத் தகுந்தபடியே அவர்களுக்கு அனுக்கிரஹஞ் செய்கிறேன். லோகத்திலுள்ள மனிதர்கள் பலவிதமாய் என்னை அடையும் மார்க்கத்தையே அனுஷ்டிக்கிறார்கள்.

कांक्षंतः कर्मणां सिद्धिं यजंत इह देवताः ।
क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥ १२ ॥

12. கர்மத்தால் உண்டாகும் ஸித்தியானது இந்த மனுஷ்ய லோகத்தில் வெகு சீக்கிரமானது. ஆகையால் அவர்கள் தாங்கள் செய்யும் கர்மங்கள் கைகூடவேண்டுமென்று விரும்பி அன்ய தேவதைகளை உபாஸிக்கிறார்கள் (ஆயினும் முடிவில் என்னையே அடைகிறார்கள்.)

चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः ।
तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥ १३ ॥

13. ஜீவகோடிகளின் ஸ்வபாவத்தில் முக்குணங்கள் கலந்திருக்கும் முறையையும், அவைகளுக் கேற்றபடி அவர்கள் செய்த பூர்வ கர்மங்களையும் அனுஸரித்தே, ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ரர்களென்ற நான்கு வர்ணங்களை நான் ஏற்படுத்தினேன். அதைச் செய்தவன் நானென்று வெளிப்படையாய்த் தோற்றினாலும், உண்மையாய் நான் அதைச் செய்தவனல்ல. (அவரவர்களுடைய கர்ம பலங்களைக் கொடுக்கிறவனே யல்லாது, அதற்கு விரோதமாய் நான் செய்வது யாதுமில்லை.) நான் என்று மழியாத ஸ்வபாவத்தை யுடையவன் (ஆகையால் இதைச் செய்து எனக்கு ஆக வேண்டியது யாதொன்றுமில்லை. பூர்ணமான ஞானத்தையும் ஆனந்தத்தையும் உடையவனன்றோ.)

न मां कर्माणि लिंपंति न मे कर्मफले स्पृहा ।
इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥ १४ ॥

14 "நான் செய்யும் கர்மங்கள் என்னைப் பற்றா. ஏனெனில் கர்மங்களின் பலத்தை அனுபவிக்க வேண்டுமென்று எனக்கு விருப்பமில்லை" யென்று எவன் இவ்விதமாய் என் ஸ்வரூபத்தை அறிகிறானோ, அவன் தான் செய்யும் கர்மங்களால் கட்டுப்பட மாட்டான்.

एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः ।
कुरु कर्मैव तस्मात्त्वं पूर्वैः पूर्वतरं कृतम् ॥ १५ ॥

15. முற்காலத்திலிருந்த முமுக்ஷுக்களும் (மோக்ஷத்தை அடைய விரும்பினவர்கள்) இப்படி நன்கறிந்தே கர்மங்களைச் செய்து வந்தார்கள். ஆகையால் நீயும் அப்படியே கர்மங்களைச் செய்தே தீரவேண்டும். இது நமது முன்னோர்களால் அநாதி காலமாய் அனுஷ்டிக்கப்படும் முறையல்லவா ?

किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १६ ॥

16. இந்திரியங்களுக் கெட்டாத விஷயங்களை ஞானக் கண்ணால் பார்க்கும் மஹான்களும் "கர்மத்தைச் செய்வதெப்படி? கர்மத்தைச் செய்யாதிருப்பது எப்படி" என்ற விஷயத்தில் மயக்கங் கொண்டார்கள். ஆகையால் உனக்கு கர்மஸ்வரூபத்தின் ரஹஸ்யத்தை உபதேசிக்கிறேன். அதை அறிந்தால் நீ அக்ஞானம் துக்கம் முதலியவைகளிலிருந்து விடுபடுவாய்.

कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मणः ।
अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः ॥ १७ ॥

17. செய்யவேண்டிய கர்மத்தின் உண்மையான ஸ்வரூபத்தை அறியவேண்டும். செய்யக்கூடாத நிஷித்தமான கர்மத்தின் ஸ்வரூபத்தை அறியவேண்டும்; கர்மத்தைச் செய்யாமையின் ஸ்வரூபத்தை அறியவேண்டும்; கர்மத்தின் போக்கு ஸுலபமாய் அறிய முடியாதன்றோ?

कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः ।
स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥ १८ ॥

18. பார்வைக்குக் கர்மத்தைப் போலிருக்கும்; உண்மையாய் அது கர்மத்தைச் செய்யாமையாகும். பார்வைக்குக் கர்மத்தைச் செய்யாமையாகத் தோன்றும்; அதில் நாம் செய்யவேண்டிய கர்மம் மறைந்திருக்கும். இந்த உண்மையை அறிகிறவனே மனிதர்களுக்குள் புத்திமான், யோக நிலையில் நிலைத்திருப்பவன், ஸகல கர்மங்களையும் உண்மையாய்ச் செய்கிறவன்.

यस्य सर्वे समारंभाः कामसंकल्पवर्जिताः ।
ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पंडितं बुधाः ॥ १९ ॥

19. ஞானிகள் எவனைத் தெரிந்தவனென்று சொல்லுகிறார்களோ அவன், கர்மங்களைச் செய்ய ஆரம்பிக்குமுன், அவைகளில் ஆசைவைக்க மாட்டான்; அவைகளைச் செய்யவேண்டுமென்று மனதால் ஏற்பாடுசெய்யமாட்டான். இவ்விதமான ஞானத்துடன் கர்மங்களைச் செய்வதால் அவைகளின் பலம் சாம்பலாகிறது.

त्यक्त्वा कर्मफलासंगं नित्यतृप्तो निराश्रयः ।
कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किंचित्करोति सः ॥ २० ॥

20. கர்மபலன்களை அனுபவிக்க வேண்டுமென்ற பற்றை விட்டு, எப்பொழுதும் திருப்தியடைந்தவனாய், ஆத்மாவைத் தவிர மற்ற சரீரம் முதலியவைகளில் நிலையற்றவன் கர்மங்களை ஊக்கத்துடன் செய்ய முயன்றாலும், அவன் கொஞ்சமேனும் செய்கிறவனல்ல.

निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः ।
शरीरं केवलं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ २१ ॥

21. யாதொன்றிலும் ஆசையற்றவனாய், சித்தத்தையும் மனதையும் அடக்கிப், பிறரிடத்திலிருந்து எதையும் பெறாதவனாய், சரீரத்தைக் காப்பாற்றுவதற்கு வேண்டிய கர்மத்தைமாத்திரம் செய்கிறவன், பாபத்தை அடைகிறதில்லை.

यदृच्छालाभसंतुष्टो द्वंद्वातीतो विमत्सरः ।
समः सिद्धावसिद्धौ च कृत्वापि न निबध्यते ॥ २२ ॥

22. தான் தேடாமல் வலுவில் கிடைத்ததால் ஸந்தோஷமடைந்து, ஸுகதுக்கங்களைத் தாண்டி, அஸூயையற்று, தன் கோரிக்கைகள் கைகூடினாலும் கூடாவிட்டாலும் கலங்காத மனமுடையவனாயிருப்பவன், கர்மங்களைச் செய்தாலும் அவைகளால் கட்டுப்படுவதில்லை.

गतसंगस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः ।
यज्ञायाचरतः कर्म समग्रं प्रविलीयते ॥ २३ ॥

23. பற்றின்றி, அக்ஞானத்திலிருந்து விடுபட்டு, ஞானத்திலேயே மனதை நாட்டிப், பகவானை ஆராதிப்பதற்காகவே ஒருவன் செய்யும் யக்ஞத்திற்கு மாத்திரம் வேண்டிய கர்மங்கள் யாவும் கரைந்துவிடும்.

ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गंतव्यं ब्रह्मकर्मसमाधिना ॥ २४ ॥

24. அது எப்படியென்றால், யாகத்தில் உபயோகப்படும் அக்னி ப்ரஹ்மஸ்வரூபம்; அதில் செய்யப்படும் ஹோமம் முதலிய பதார்த்தங்களும் ப்ரஹ்மஸ்வரூபம்; அவைகளை ஆஹுதிசெய்வதென்ற கர்மமும் ப்ரஹ்மஸ்வரூபம்; அதைச்செய்யும் யஜமானனும் ப்ரஹ்மஸ்வரூபமென்று இப்படித் தான் செய்யும் யாககர்மத்தை ப்ரஹ்மமயமாய் த்யானிப்பவன் அடையும் பதவியும் ப்ரஹ்மமே.

दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।
ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥ २५ ॥

25. வேறு சில யோகிகள் தேவதைகளைக் குறித்த யக்ஞங்களையே செய்கிறார்கள். வேறு சிலர் தாங்கள் செய்யும் யக்ஞத்தைப் ப்ரஹ்மமென்ற அக்னியில் ஆஹுதியாகக் கொடுக்கிறார்கள். (அந்த யக்ஞத்தின் பயனைத் தாங்கள் அனுபவிக்க விரும்பாமல் அதையும் ப்ரஹ்மத்திற்கு அர்ப்பணம் செய்கிறார்கள்.)

श्रोत्रादीनींद्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति ।
शब्दादीन्विषयानन्य इंद्रियाग्निषु जुह्वति ॥ २६ ॥

26. வேறு சிலர் செவி முதலிய இந்திரியங்களை, வசப்படுத்துவதென்ற அக்னியில் ஹோமஞ் செய்கிறார்கள். (இந்திரியங்களை விவேகத்தால் அடக்கி, அதையும் யக்ஞரூபமாய் பகவானுக்கு அர்ப்பணஞ் செய்கிறார்கள்). இன்னும் சிலர் சப்தம், முதலிய இந்திரியங்களின் விஷயங்களில் இந்திரியங்களைச் செல்லவொட்டாமல் தடுத்து, அந்தக் கர்மத்தையும் யக்ஞரூபமாய்ப் பகவானுக்கு அர்ப்பணஞ் செய்கிறார்கள் (இந்திரியங்களென்ற அக்னியால் அவைகளை எரித்து மறுபடியும் பாதிக்காமல் செய்கிறார்கள்).

सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे ।
आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते ॥ २७ ॥

27. வேறு சிலர் ஞானமென்ற காற்றால் வளர்க்கப்பட்டு ஜ்வலிக்கும் மனோ வசியயோகமென்ற அக்னியில் ஸகல இந்திரிய காரியங்களையும் பிராணவாயுக்களின் காரியங்களையும் ஆஹுதி செய்கிறார்கள் (மனதை அடக்குவதற்குத் தான் பிரபஞ்சம் ஈசுவரன் இம மூன்றின் ஸ்வரூப ஞானம் முதலில் வேண்டும். பிறகு தன்னைக் கெடுக்கும் மனதை அடக்குவதென்ற யோகத்தை அனுஷ்டிக்க வேண்டும். அப்பொழுது அதுவரையில் மனதைப் பலவழிகளில் இழுத்துக்கொண்டிருந்த இந்திரியங்களின் செயல்களையும் தேஹத்தை வசப்படுத்துவதற்கு இடையூறா யிருந்த பிராணவாயுக்களின் செயல்களையும் தடுக்கவேண்டும்).

द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।
स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥ २८ ॥

28. லோகத்தில் வேறு சிலர், விரதங்களை உறுதியாய் அனுஷ்டித்துப், புலன்களையும் மனதையும் அடக்கி, வெளிப்படையான பொருள்களைத் தேவதைகளுக்கு யாகங்களில் ஆஹுதி செய்கிறார்கள்; சிலர் தாங்கள் செய்யும் தவத்தையே அர்ப்பணஞ் செய்கிறார்கள்; சிலர் தாங்கள் அனுஷ்டிக்கும் யோக முறையையே அர்ப்பணஞ் செய்கிறார்கள். வேறு சிலர் தாங்கள் ஸம்பாதிக்கும் வேத சாஸ்திர ஞானத்தையே அர்ப்பணஞ் செய்கிறார்கள். (மேற் சொன்னவைகளின் பயனை விரும்பாமல் யாவையும் ஈசுவரார்ப்பணம் செய்கிறார்கள். அதாவது, ஜீவகோடிகளின் மேலான க்ஷேமத்தை உத்தேசித்துச் செய்கிறார்கள். ஈசுவரனுடைய வேலையும் அதே. அவருடைய ப்ரீதியை ஸம்பாதிக்கும் ஸாதனமும் அதே யல்லவா?).

अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथापरे ।
प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः ॥ २९ ॥

अपरे नियताहाराः प्राणान्प्राणेषु जुह्वति ।
सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषाः ॥ ३० ॥

29—30. வேறு சிலர், ஆஹாரங்களை வரவரக் குறைத்து, பிராண வாயுக்களை அடக்குவதென்ற வித்தியையே மேலாயெண்ணி, மேல் நோக்கி ஸஞ்சரிக்கும் பிராணவாயுவை கீழ்நோக்கி ஸஞ்சரிக்கும் அபானவாயுவில் ஹோமஞ் செய்கிறார்கள். (வெளியிலிருக்கும் வாயுவை உள்ளே இழுத்துக் கொள்வதென்ற இந்த முறைக்குப் பூரகமென்று பெயர்). வேறு சிலர் அபானனைப் பிராணனில் ஆஹுதி செய்கிறார்கள். (உள்ளே இழுத்துக் கொண்ட வாயுவை வெளியே விடுவதென்ற இந்த முறைக்கு ரேசகமென்று பெயர்). வேறு சிலர் பிராணு பானன்களின் போக்கைத் தடுத்துப் பிராணன்களைப் பிராணன்களிலேயே ஆஹுதி செய்கிறார்கள் (அவை தங்களிலேயே அடங்கிப் போவதென்ற கும்பகமிங்கே இங்கே குறிக்கப்படுகிறது). மேற்சொன்ன யாவரும் யக்ஞம் செய்வதின் ரஹஸ்யத்தை அறிந்தவர்களே; யக்ஞத்தால் ஸகல பாபங்களையும் அழித்தவர்களே.

यज्ञशिष्टामृतभुजो यांति ब्रह्म सनातनम् ।
नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥ ३१ ॥

31. யக்ஞங்களைச் செய்து அமிருதம் போன்ற அவைகளின் சேஷத்தை புஜிப்பவர்கள் அநாதியான ப்ரஹ்மத்தை அடைகிறார்கள். (பகவானுக்கு ஸகலத்தையும் அர்ப்பணஞ் செய்து, தன் தேஹபோஷணைக்கு வேண்டியதை மாத்திரம் உபயோகிக்கிறவர்கள் அவருடைய திருவடிகளை அடைகிறார்கள்), மேற்சொன்னபடி ஈசுவரார்ப்பணமாய் யக்ஞம் செய்யாதவனுக்கு இவ்வுலகத்தில் இருப்பது ஸாத்யமல்ல. பரலோகத்தைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?

एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे ।
कर्मज न्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥ ३२ ॥

32. இப்படிப் பலவிதமான யக்ஞங்கள் வேதத்தின் முக்யமான பாகங்களில் விஸ்தாரமாய் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன.

ஆனால் அவை யாவும் கர்மங்களிலிருந்துண்டானவை யென்று அறி. இப்படி அறிந்தால் கர்மபந்தத்திலிருந்து விடுபடுவாய் (இங்கே அறி யென்ற பதத்திற்குச், சுருதி வாக்யங்களைப்போல் அனுஷ்டிப்ப தென்ற அர்த்தமே செய்யவேண்டும். ய ஏவம் வேத என்று அடிக் கடி வேதத்தில் வரும் வாக்கியத்திற்கு 'இப்படி அறிகிறவன்' யென்று வெளிப்படையாயும், 'இதை ஸாதகம் செய்து அனுபவத்திற்குக் கொண்டு வருகிறவனென்று உண்மையாயும் உட்கருத்து).

श्रेयान्द्रव्यमयाद्यज्ञाज्ज्ञानयज्ञः परंतप ।
सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥ ३३ ॥

33. திரவியங்களால் யாகங்களைச் செய்வதைக் காட்டிலும் தான் ஸம்பாதித்த ஞானத்தையே ஈசுவரார்ப்பணம் செய்வது மேலானது. ஒருவன் செய்யும் கர்மங்கள் யாவும் ஞானத்திலேயே முடிகிறது. (கர்மங்களைப் பலாபேக்ஷையின்றி ஈசுவரார்ப்பணஞ் செய்வதால் சித்தசுத்தியும் ஸத்குரு லாபமும் ஞானோபதேசமும் ஞானத்திற்குப் பொருளான பிரஹ்ம ஸாக்ஷாத்காரமும் முறையே உண்டாகின்றன.)

तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यंति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥ ३४ ॥

34. ஆத்மக் ஞானத்தை நீ அறியக்கடவாய். ஆத்மஸ்வரு பத்தை உண்மையாய் அறிந்து நேருக்கு நேராய்ப் பார்த்தவர்களுக்கு நீ நன்றாய் நமஸ்காரம் முதலிய உபசாரங்களைச் செய்வதாலும், ஸந்தேஹம் விபரீதமற ஸங்கோசமின்றிக் கேள்வி கேட்பதாலும், நன்றாய்ப் பணிவிடை செய்வதாலும் அந்த ஞானத்தை உனக்கு அவர்கள் உபதேசிப்பார்கள்.

यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पांडव ।
येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि ॥ ३५ ॥

35. அதை நீ அறிந்தால் இப்படி உனக்குப் புத்தி மயக்கம் மறுபடியும் ஏற்படாது. ஸகல ப்ராணிகளையும் உன் ஸ்வ

ரூபத்தில் அடங்கியிருப்பதாய்க் காண்பாய். பிறகு எல்லாம் என்னிடத்தில் இருப்பதாய்க் காண்பாய் (என் விராட்ஸ்வரூபத்தைத் தர்சிப்பாய்).

अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।
सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं संतरिष्यसि ॥ ३६ ॥

36. (பந்துக்களைக் கொன்று பாபத்தைக் கட்டிக்கொள்ள வேண்டுமேயென்று பயப்படும் நீ) உலகத்திலுள்ள பாபிகளைக் காட்டிலும் பாபியாயிருந்தாலும், அந்த ஸமுத்ரத்தை ஆத்மஞான மென்ற கப்பலால் அபாயமின்றி தாண்டுவாய்.

यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥ ३७ ॥

37. நன்றாய் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் நெருப்பு அதில் போடப்படும் விரகுகளைச் சாம்பலாய் அடித்துவிடுவதுபோல் ஞான மென்ற அக்னி சகல கர்மங்களையும் சாம்பலாயெரித்துவிடும்.

नहि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विंदति ॥ ३८ ॥

38. இவ்வுலகத்தில் ஞானத்தைப்போல் வேறொன்றும் ஒருவனைப் பரிசுத்தஞ் செய்யாதன்றோ? மேற்சொன்ன கர்மயோகத்தை நன்றாக அனுஷ்டித்து ஸித்திபெற்றால் அந்த ஞானம் நாளிடையில் அவன் மனதிலேயே தோன்றும்

श्रद्धावाँल्लभते ज्ञानं तत्परः संयतेंद्रियः ।
ज्ञानं लब्ध्वा परां शांतिमचिरेणाधिगच्छति ॥ ३९ ॥

39. இந்திரியங்களை வசப்படுத்தி ஞானத்தையே மேலான பொருளாய் எண்ணி, அதையடையும் ஸாதனங்களில் முழு நம்பிக்கையுள்ளவனாயிருப்பவன் இந்த ஆத்மஞானத்தை நிச்சயமாய் அடைகிறான். அப்படி ஆத்மஞானத்தை அடைந்தபிறகு அதிசீக்ரத்தில் நிகரற்ற சாந்தியை (ஸமாதானத்தை) அடைகிறான்.

अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।
नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥ ४० ॥

40. ஆனால் ஆத்மஞானமின்றி நம்பிக்கையின்றி எதிலும் நிச்சய புத்தியில்லாமல் ஸந்தேஹத்தால் மனங்கலங்கியிருப்பவன் நாசமடைவான். ஏனென்றால், அப்படி ஸந்தேஹமுள்ளவனுக்கு இவ்வுலகத்தில் ஒன்றும் நடக்காது. பரலோகத்திலும் அவனுக்கு இடமில்லை. மோக்ஷத்தில் அனுபவிக்கப்படும் ஸுகமும் அவனுக்கில்லை.

योगसंन्यस्तकर्माणं ज्ञानसंछिन्नसंशयम् ।
आत्मवंतं न कर्माणि निबध्नंति धनंजय ॥ ४१ ॥

41. மேற்சொன்ன கர்மயோகத்தை அனுஷ்டிப்பதால் ஸகல கர்மங்களையும் விட்டு, ஆத்ம ஞானத்தால் ஸகல ஸந்தேஹங்களையும் வேரறுத்து, இந்திரியங்களையும் அந்தக்கரணத்தையும் வசப்படுத்தினவனை, அவன் செய்யும் எந்தக் கருமமும் கட்டுப்படுத்தாது.

तस्मादज्ञासंभूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः ।
छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥ ४२ ॥

42. உன் மனதில் குடிகொண்டிருக்கும் இந்தத்தர்ம ஸந்தேஹம் அக்ஞானத்தால் உண்டானது. ஆகையால் இதை ஆத்ம ஞானமென்ற கத்தியால் வெட்டியெறிந்து, மேற்சொன்ன கர்மயோகத்தை அனுஷ்டிக்கக் கடவாய். யுத்தஞ் செய்ய எழுந்திரு.



# குறிப்புகள்.

## பீடிகை.

சங்கராசார்யர்:—கர்மயோகத்தை ஸாதனமாகக்கொண்டு ஸந்யாஸத்துடன் கூடியிருக்கும் ஞான நிஷ்டையான யோகமே முந்தின இரண்டு அத்யாயங்களில் சொல்லப்பட்டது. பிரவிருத்தி மார்க்கத்தால் அறியப்படும் கர்மயோகமும் நிவிருத்தி மார்க்கத்தால் அறியப்படும் ஞானயோகமுமான வேதங்களின் தாத்பர்யமும் இதிலேயே முடிவடைந்திருக்கிறது. இந்த யோகத்தையே பகவான் கீதையில் உபதேசிக்கிறார். அந்த வேதத்தின் உட்கருத்து ஞானத்திலேயே முடிவு பெற்றதாய் எண்ணி, அந்த ஞானயோகத்தின் ஸம்பிரதாய பரம்பரையை எடுத்துச் சொல்லிக்கொண்டாடுகிறார்.

## விஷய அட்டவணை.

17. ஞானம் ஸகல கர்மங்களையும் எரிக்கும்.
18. ஞானத்திற்கு ரஹஸ்யமான ஸாதனம்.
19. அதே ஸம்சயத்தை வேரறுக்கும்.

விசிஷ்டாத்வைதமதம்—பிரகிருதியுடன் சேர்ந்தவனும் மோக்ஷத்தில் ஆசையுள்ளவனுமிருப்பவனுக்கு அப்பொழுதே ஞானயோகத்தில் அதிகாரமில்லை. ஆகையால் கர்மயோகத்தையே செய்ய வேண்டியது. ஞானயோகத்தில் அதிகாரமுள்ளவனுக்கும், தான் கர்த்தாவல்லவென்ற எண்ணத்துடன் கர்மயோகத்தைச் செய்வதே மேலானதென்று மூன்றாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டது. சிஷ்டனுக்கு கர்மயோகமே விசேஷமாகச் செய்யத்தகுந்ததென்றும் சொல்லப்பட்டது. இந்த அத்யாயத்தில், "ஸகல லோகங்களையும் கடைத்தேறும்படி செய்விப்பதற்காக இந்த மன்வந்தரத்தின் ஆரம்பத்திலேயே இந்தக் கர்மயோகத்தை உபதேசித்தார். ஆகையால் அதே அனுஷ்டிக்கத்தக்கது. ஆத்மஞானத்தை உள்ளடக்கிக் கொண்டிருக்கிறபடியால் அதே ஞானயோகமாகும். கர்மயோகத்தின் ஸ்வரூபமும் வகுப்புகளும் ஞானயோகமே அவைகளுக்குள் முக்யமென்றும் வர்ணிக்கப்படுகின்றது. அந்த ஸந்தர்ப்பத்தில் பகவானுடைய அவதாரத்தின் உண்மையும் மஹிமையும் உபதேசிக்கப்படுகின்றது.

## கீதார்த்த ஸங்கிரஹம்.

பிரஸ்தாபத்தில் வந்ததால் பகவான் தன் ஸ்வபாவத்தை வர்ணிக்கிறார். கர்மயோகம் ஞானஸ்வரூபமாயிருக்கிறது. இந்த கர்மயோகத்தின் உட்பிரிவுகளும் ஸ்வரூபமும் கர்மயோகத்திற்கு உள்ளடங்கி யிருக்கும். ஞானயோகத்தின் மஹிமையும் இந்த அத்யாயத்தின் விஷயங்கள்.

## பாட்டு

பிறவாமை தந்திடத்தானே பிறக்கும் பெருமைகளும்
துறவாக்கிரிசைகள் தூய்மதி தன்னுற்றுளங்குகையும்
இறவா உயிர் நிலையும் கண்டிடு மூலின் நிலையும்
மறைவாழி மாயவனே எனக்கின்றறி வித்தனனே.

அதாவது:— தான் மற்றொரு காரணத்தால் ஏவப்படாமல் தன் ஸங்கல்பத்தாலேயே அவதாரங்களைச் செய்யும் பகவானுடைய மஹிமையும் ஸாதுக்களைக் காப்பாற்றுவதும் மோக்ஷத்திற்கு ஸாதனங்களான தர்மங்களை நிலைநிறுத்துவதுமே அதன் முக்யப் பிரயோஜனமென்றும், ஆத்மஸ்வரூப ஞானத்தை விட்டுப் பிரியாத கர்மங்கள் ஒருபொழுதும் விடமுடியாதவை யென்றும், பரிசுத்தமான ஆத்மஸ்வரூப ஞானத்தால் பரிசுத்தமாக விருப்பதும், நாசமில்லாத ஜீவாத்மாவின் உண்மையான ஸ்திதியை நேரில் பார்க்கிற கர்மயோகத்தைச் செய்யும் ஜனங்களின் நிஷ்டையும், வேதங்களால் உபதேசிக்கப்படும் பகவானாலேயே இப்பொழுது எனக்குபதேசிக்கப்பட்டன.

த்வைதமதம்—மூன்றாவது அத். 30-வது சுலோகத்தில் ஒவ்வொரு கர்மயோகியும் தன் செயல்களைப் பக்தியுடன் பகவானுக்கு அர்ப்பணஞ் செய்து 'நான்' 'என'தென்ற பாவனையை விட்டு லௌகிக கர்மங்களைச் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டது. 43-வது சுலோகத்தில், கர்மத்தை ஜயிப்பதற்கு பிரஹ்மஞான மொன்றே ஆயுதமெனப்பட்டது. ஆகையால் இந்த அத்யாயத்தில் ஈசுவரனையும் அவருடைய அவதாரங்களையும் பற்றி 15-வது சுலோகத்தில் சொல்லப்படுகிறது.

15 முதல் 33 வரையில் கர்ம யோகியின் அனுஷ்டானமானது மற்ற கர்மங்களிலிருந்து பிரித்துச் சொல்லப்பட்டு, யோகியின் கடமைகளையும் நியமங்களையும் பற்றி யிருக்கும் உட்பிரிவுகளும் காட்டப்படுகின்றன.

33 முதல் முடிவுவரையில் ஞானத்தின் தன்மையும் மஹாத்மியமும் சொல்லப்படுகின்றன.

ஒவ்வொரு கல்பத்தின் ஆரம்பத்திலும் பகவான் மனிதர்களின் முதல்வர்களுக்குத் தன்னைப் பற்றின ஞானத்தை உபதேசிக்கிறார். அது பரம்பரையாலும் மனிதர்களின் ஞானபரிபக்வக் குறைவாலும் காலபலத்தாலும் மங்குகின்றது. அதை அடிக்கடி ஞாபகப்படுத்திச் சீர்திருத்துவதற்காகப் பகவானுடைய அம்சம் பல மஹான்களி

டத்தில் பிரவேசித்து அவர்களால் ஆத்மவித்யை உபதேசிக்கப்படு கிறது. அவை பூர்ணாவதாரம் அம்சாவதாரம் லீலாவதாரம் ஆவேச மென்று பலவகைப்படும். ஒவ்வொரு யுகத்திலும் அவதாரம் செய்கிறேனென்றதை ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுவே பூர்ணாவதாரம் செய்வதாய் நினைக்கக்கூடாது. பிரபஞ்ச சரித்ரத்தின் முக்யமான சில ஸமயங்களில் மாத்திரம் அவருடைய ஸாக்ஷாத் அவதாரம் வேண்டியிருக்கும். அவை பத்தென்று சொல்லுவதுண்டு. அதிலும் ராமகிருஷ்ணாவதாரங்களே பூர்ணமென்று ஒரு மதம். அதிலும் ஒன்றே பூர்ணமென்று ஒரு மதம். வடதேசத்தில் சைதன்ய மதத்திலும் வல்லப மதத்திலும் கிருஷ்ணனைப் பத்து அவதாரங்களில் ஒன்றாய்ச் சேர்ப்பதில்லை. அவை பரப்ரஹ்மமான அவரிடத்திலிருந்தே வெளிப்பட்டன வென்கிறார்கள். அவருக்குப் பதிலாய்ப் பரசுராமன் வைக்கப்படுகிறார். இதை ஜய தேவஸ்வாமியின் கீத கோவிந்தம் முதலாவது அஷ்டபதியில் காணலாம்.

பிரம்ம வைவர்த்தபுராணத்தில் பிரம்மா முதல் பாண்டவர்கள் வரையில் உபதேச பரம்பரை சொல்லப்படுகிறது. அர்ஜுனனுக்குபதேசிக்கப்பட்ட பகவத்கீதை பாஞ்சராத்ரத்தின் ஸாரமென்றும் ஸர்வோத்தமமென்றும் கொண்டாடப்படுகிறது. "ஒவ்வொரு யுகத்தின் முடிவில் வேதங்களும் இதிஹாஸங்களும் மறைகின்றன. அந்த யுகஸந்தியில் ஸப்தரிஷிகள் ஸமாதியில் ஆழ்ந்து, சதுர்முக பிரம்மாவை யடைந்து, அவருடைய அருளால் அடுத்த யுகத்திற்கு வேண்டிய சுருதிஸ்மிருதி இதிஹாஸ புராணங்களை ஞானதிருஷ்டியால் பார்த்தறிந்து, அந்த யுகத்தில் காலதேச புத்திகளுக்குத் தகுந்தபடி உபதேசங்களைச் செய்து வருகிறார்கள்."

பகவானுக்குப் பூர்வகர்மமில்லை; தேஹமுமில்லை; பிறப்பிறப்பில்லை. மற்றவருடன் கர்மபந்தமில்லாததால் மாதாபிதாக்களில்லை. மற்றச் சரீரங்களைப் போல் தானும் ஓர் சரீரத்தை பிரகிருதிக்கு மேலான சுத்த ஸத்வமென்ற பதார்த்தத்தால் சிருஷ்டித்து, அதில் தன் குணங்கள் யாவும் விளங்கச் செய்கிறார். தமோகுணத்தின் அதிஷ்டான தேவதையான துர்க்கை, ஈசுவரனுக்கு மாம்ஸரூபமான தேஹமுண்டென்று நம்பும்படி மயக்குகிறாள். உண்மையில்

அவருக்குத் தேஹமுமில்லை; கர்ப்பவாஸமுமில்லை, எல்லாம் தோற்றமே.

ஜீவன்களின் பூர்வகர்மத்திற்குத் தகுந்தபடி அவர்களுக்குக் கால தேச ஜாதி வர்ண ஆசிரமங்களை அமைக்கிறார்; மாற்றுகிறார். அதில் அவருக்கு அபிமானமாவது த்வேஷமாவதில்லை. அந்தக் கர்மம் அவரைப் பற்றாது. அதை அறிந்தே கர்மயோகி அவருடைய கைங்கர்யத்தைச் செய்யும் கருவியாகிறான்.

கர்மம், அகர்மம், விகர்மமென்ற சொற்களின் கருத்தென்ன? தேஹ முயற்சி மாத்திரமே கர்மமல்ல. சும்மாவிருப்பது அகர்மமல்ல. அக்ஞானிகள் பாபமென்று சொல்வதெல்லாம் விகர்மமல்ல. ஈசுவரன் லோகநாதனென்று பூர்ண நம்பிக்கையுடன் அவருக்கு அர்ப்பணஞ் செய்யப்படும் செயலே கர்மம். லௌகிக வியாபாரங்களில் யோகி மூழ்கி யிருந்தாலும் துறவியே. அகர்மத்தைச் செய்கிறவனே. யாவற்றையும் பகவானுக்கு அர்ப்பணஞ் செய்து கைங்கர்ய ரூபமாய்ச் செய்கிறவன் கர்த்தாவல்ல. நான் எனது என்ற எண்ணத்தையும் காமக்ரோதங்களையும் விட்டு மற்றவர்களைப் போல் ஸகல கர்மங்களையும் செய்கிறவனே அகர்த்தா, உண்மையான ஸந்யாஸி, பிரஹ்ம நிஷ்டன், ஆத்மாராமன். தேஹம் கர்மத்தைச் செய்யுமே யொழிய மனது சுத்தமாய் சாந்தமாயிருக்கும். மனோ வாக்காயங்கள் பகவானைப் பற்றினவைகளையே செய்யும்.

32 முதல் 42 வரையில், யோகி செய்யும் பலவிதமான யக்ஞங்கள் சொல்லப்படுகின்றன. இவைகளுக்கு அடிப்படையான தத்வம் பிரம்மத்திற்கு அர்ப்பணஞ் செய்வதே; யாவும் பிரம்மமே; அதற்கு நெருப்பும் பதார்த்தங்களும் பசுக்களும் மந்திரங்களும் வேண்டுமென்பதில்லை. பூஜை, ஆஹூதிகள், இந்திரியங்களை அடக்குவது, விஷயங்களை மிதமாய் அனுபவிப்பது, பிராணாயாமம், தானம், தபஸ், யாகம், அஷ்டாங்கயோகம், உபவாஸம், விரதங்கள், யக்ஞங்களே. இவை உண்மையான வழியால் உண்மையான நோக்கத்தால் செய்யப்பட்டால் யக்ஞங்களேயாகும். எல்லாம் கர்மமே, எல்லாம் யக்ஞமே, எல்லாம் ஈசுவர கைங்கரியமே. அர்ஜுனன் செய்யவேண்டிய யுத்தமும் இப்படியே. ஆனால்

இவைகளில் தாரதம்மியமுண்டு. ஞானமும் ஈசுவர ஸாக்ஷாத்கார மும் யக்ஞங்களின் முடிவாகும். அது, ஸத்குருவைத் தகுந்தபடி யடைந்து, அவருடைய கிருபையைப் பெற்று, ஆத்ம வித்யா உப தேசத்தை அடையவேண்டும். பகவத்ஸ்வரூப தர்சனம் கிடைத் தால் மோக்ஷம் கிடைப்பது நிச்சயம். பூர்வ கர்மங்கள் எரிக்கப்படு கின்றன; இனி கர்மத்தைச் செய்வதில்லை. பிராரப்தத்தை அனுப வித்தே தீரவேண்டும்; ஆனால் அதைப் பற்றில்லாமல், நான் என தென்ற தோற்றமின்றி அனுபவிப்பதால் அவனுக்கு ஸுகதுக்கங்க ளில்லை. உண்மையில் அவன் அனுபவிக்காதவனென்றே சொல்ல வேண்டும். மூன்றுவித கர்மங்களும் ஒழிந்தனவென்று சொல்வது உசிதமே.

நம்மைக் கெடுக்கும் பல சத்ருக்களில் ஸம்சயமே தலைவனாகும். அவனுக்கு ஈசுவரன் நேரில் வந்து உபதேசித்தாலும், நேரில் யாவற் றையும் காட்டினாலும் பயனில்லை. குருவின் உபதேசத்தை சிரத்தை யுடன் நம்பி, அதின் உண்மையைத் தன் அனுபவத்தில் அனுஷ் டித்து நிரூபிக்கிறவனே மோக்ஷத்தை அடைவான். ஆகையால் அர்ஜுனன் கர்மயோகத்தையேபற்றி முடிவில் ஞானத்தை அடைய வேண்டும்.

பகவானுடைய அவதார தேஹங்களைப்பற்றி சங்கரர், மதுஸூ தனர், நீலகண்டர், மத்வர் முதலிய ஆசாரியர்கள், சுத்த தத்துவ மென்ற அப்பராகிருதத்தால் செய்யப்பட்டவையென்று எண்ணு கிறார்கள். ராமானுஜாசாரியரோ அதை ஒப்புக்கொண்டும், அந்தத் தேஹங்களுக்குப் பிறப்பிறப்புண்டென்கிறார். அவதாரங்களும் அவ தார காரியங்களும், கேவலம் மாயையேயென்று சங்கரருடைய மதம். ஜீவனைப்போல் ஈசுவரனும் கர்த்தாவல்ல. இங்கே சொல்லப்படும் யக்ஞங்கள் தாழ்ந்தவையென்றும், அவைகளை அர்ஜுனன் விட வேண்டியதென்றும் நினைத்தே கண்ணன் எடுத்துக் காட்டுகிறானென் பது சங்கரருடைய மதம்.

சங்கராசார்யருக்கு முன்பு, பிரம்ம ஸூத்ரங்களுக்கும் கீதைக் கும் விருத்தியைச் செய்த ஒருவருடைய கொள்கைகள் சங்கரரால் அடிக்கடி கூறப்படுகின்றன. பிரம்ம ஸூத்ரத்திற்குப் பாஷ்யம்

செய்த ராமானுஜர் போதயனரென்ற மஹரிஷியால் ஓர் விருத்தியுண்டென்றும், அதைத்தான் காச்மீர தேசத்தில் சரஸ்வதி பீடத்திலிருந்து ஸம்பாதித்துப்படித்து, அதை ஆதாரமாய் வைத்துக்கொண்டே தன் பாஷ்யத்தை எழுதினதாகவும் சொல்லுகிறார். ஒருவேளை சங்கரர் சொல்லுகிற விருத்திக்காரர் இவராகவே யிருக்கலாம். அவருடைய கொள்கை த்வைதமதச் சார்பாகவே யிருக்கிறது. இந்த அத்யாயம், 18, 24, சுலோகங்களின் உரையில் சங்கராசார்யர் விருத்திகாரரைப்பற்றிச் சொல்லுகிறார். "கர்மத்தை பகவானுடைய கைங்கர்ய ரூபமாய்ச் செய்வதால் பாபம் அணுகாது. ஆகையால் அதே அகர்மமென்றும், பிரம்மமே யக்ஞமென்றபொழுது விக்ரஹங்களில் பகவான் விளங்குவதாய்ச் சொல்லப்படுவதால் யாகத்தின் பல அம்சங்களில் அவரே விளங்குகிறாரென்பதே கருத்தென்றும், மேற்சொன்ன விருத்திக்காரருடைய கொள்கை. இவ்விடத்தில் அவரைச் சங்கராசார்யர் கடுமையாய்க் கண்டிக்கிறார். இந்த அத்யாயத்தில் பலவிடங்களில் சங்கரர் முதலியவர்கள் அத்வைத மதச் சார்பாய் அர்த்தஞ்செய்யும் விஷயங்களை ஸ்ரீதரஸ்வாமி பக்தி பரமாயும், மத்வாசார்யருடைய கருத்திற் கிணங்கியும் அர்த்தஞ் செய்கிறார்.

வேதவ்யாஸர் கேவலம் மஹர்ஷியே. தர்மஸ்தாபனத்திற்காக பகவானால் நியமிக்கப்பட்டவர். விஷ்ணுவின் அவதாரமல்ல. அவருக்குப் பிராரப்த அனுபவமுண்டு. அதை ஒரே ஜன்மத்தில் தீர்த்துவிட்டாரென்பது ராமானுஜாசாரியாரும் வேதாந்த தேசிகரும் கொண்ட அபிப்பிராயம் சு. 8, 9.

ஸ்ரீரங்கம் முதலிய புண்யஸ்தலங்களில் பூஜிக்கப்படும் விக்ரஹங்கள் விஷ்ணுவின் அவதாரங்களென்றும்; உலோகத்தாலும் கல்லாலும் மரத்தாலும் செய்யப்பட்ட விக்ரஹங்களல்ல; பார்வைக்கு அப்படித் தோன்றினாலும் உண்மையில் அவை அப்ராகிருதமான சுத்தஸத்வத்தால் அமைக்கப்பட்ட திவ்ய ரூபங்களேயென்றும்; பக்தர்களுடைய தியானத்திற்காக அந்த ரூபங்களை எடுக்கிறாரென்றும், தனக்குப் பதிலாய் வேறொருவரை நியமித்து இந்தக் கார்யத்தைச் செய்யச்சொல்ல முடியாததால் தானே நேரில் வரவேண்டு

மென்றும், மேற்சொன்ன இருவரின் மதம் (சு. 11.) ஈசுவரன் பிர பஞ்சத்திற்கு உபாதான காரணமென்பது விசிஷ்டாத்வைதத்தின் முக்கியமான கொள்கை. இதற்கு சு. 14, 24 ஆதாரங்களென்று சொல்லப்படுகிறது.

கர்மம், அகர்மம், விகர்மமென்றதைப்பற்றிச் சொல்லும் பொழுது, பகவானே உண்மையான கர்த்தா, யாவற்றையும் அவ ருக்கே அர்ப்பணஞ் செய்யவேண்டியதென்று மத்வாசார்யரும், கர்த்தாவென்பதே மாயையென்று சங்கராசார்யரும் சொல்லுகிறார் கள். ஆனால், அகர்மமென்பதற்கு ஞானமே கருத்தென்றும், கர்ம யோகத்தில் ஆத்மஞானமும் கர்மமுமே இரண்டு வகுப்புகளென் றும், உண்மையில் ஞானமே கர்மம், கர்மமே ஞானமென்றும், ஆகையால் யோகி ஞானத்தை ஸம்பாதித்து, கர்மத்தைச் செய்ய வேண்டுமென்றும், ராமானுஜாசாரியர் 16, 23 வரையில் அர்த்தஞ் செய்கிறார்.

ஞானயோகத்தைக் காட்டிலும் கர்மயோகமே மேலானது. ஆனால், கர்மயோகத்தின் அங்கங்களில் கர்மத்தைக்காட்டிலும் ஞானமே மேலானதென்று சு. 36 முதல் முடிவுவரையில் அர்த்தஞ் செய்கிறார்.

இவ்விடத்தில் ஆத்மாவென்ற சப்தத்திற்குப் பகவானென்று மத்வாசார்யர் அர்த்தஞ்செய்யும் பலவிடங்களில் ஜீவனென்றே ராமா னுஜாசார்யர் அர்த்தஞ்செய்கிறார்.



## 5-வது அத்யாயம்.

# ஸந்யாஸயோகம்.



अर्जुन उवाच—

संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि ।
यच्छ्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥ १ ॥

1. அர்ஜுனன்:—"கிருஷ்ணா! கர்மங்களை விடவேண்டுமென்கிறீர். மறுபடியும் கர்மயோகத்தை அநுஷ்டிக்கவேண்டுமென்று உபதேசிக்கிறீர். இவ்விரண்டில் எது எனக்கு க்ஷேமகரம்? அதை நிச்சயமாய் எனக்குச் சொல்லும்.

श्रीभगवानुवाच—

संन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरावुभौ ।
तयोस्तु कर्मसंन्यासात्कर्मयोगो विशिष्यते ॥ २ ॥

2. பகவான்:—கர்மங்களை விடுவதும் கர்மங்களைச் செய்வதும் இவ்விரண்டும் மேலான மோக்ஷத்திற்கு ஸாதனங்களே. ஆனால் அவ்விரண்டில் கர்மங்களை விடுவதைக் காட்டிலும் கர்மயோகமே உன் தற்கால நிலைமைக்கு மேலானது.

ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न कांक्षति ।
निर्द्वंद्वो हि महाबाहो सुखं बंधात्प्रमुच्यते ॥ ३ ॥

3. ஒன்றையும் கண்டு வெறுப்படையாமலும் விருப்பமடையாமலும் சீதோஷ்ண ஸுகதுக்கங்களைத் தாண்டினவனுமே என்றும் கர்மங்களை விட்ட ஸந்யாஸியெனப்படுவான். இந்தக் கர்மபந்தத்திலிருந்து விடுபடுவது அவனுக்குக் கஷ்டமேயில்லை.

सांख्ययोगौ पृथग्बालाः प्रवदंति न पंडिताः ।
एकमप्यास्थितः सम्यगुभयोर्विंदते फलम् ॥ ४ ॥

4. ஆனால் ஸாக்யமென்றும் யோகமென்றும் வேறு பெயர்களையுடைய இவ்விரண்டு மார்க்கங்களையும் வெவ்வேறென்று பூர்ண

ஞானமில்லாத சிறுவரைப்போன்றவர்களே சொல்வார்கள். விவேகி கள் அப்படிச் சொல்லமாட்டார்கள். இவ்விரண்டில் ஏதாவது ஒன்றை நன்றாய் அனுஷ்டித்தாலும் இவ்விரண்டை அனுஷ்டித்த பயன் கிடைக்கும்.

यत्सांख्यः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।

एकं सांख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥ ५ ॥

5. அதாவது, கர்மங்களை விட்ட ஞானயோகிகளால் எந்த மேலானபதவி அடையப்படுகிறதோ அது கர்மயோகத்தை அனுஷ்டிப்பவர்களாலும் அடையப்படுகிறது. ஆகையால், ஞானயோகமும் கர்மயோகமும் ஒன்றென்று அறிகிறவனே உண்மையான ஞான முடையவன்.

संन्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः ।

योगयुक्तो मुनिर्ब्रह्म न चिरेणाधिगच्छति ॥ ६ ॥

6. கர்மயோகத்தை முதலில் அனுஷ்டிக்காமல் கர்ம ஸந்யாஸ மென்ற ஞானயோகத்தை அனுஷ்டிப்பது வெகு கஷ்டம். கர்ம யோகத்தில் நிலைபெற்று ஆத்மஸ்வரூபத்தை த்யானஞ்செய்கிறவன் அதிசீக்கிரத்தில் ப்ரஹ்மஸ்வரூபத்தை அடைகிறான்.

योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेंद्रियः ।

सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥ ७ ॥

7. கர்மயோகத்தில் நிலைத்து, அந்தக்கரணத்தைக் களங்கமறச் செய்து, மனதை அடக்கி, இந்திரியங்களை வசப்படுத்தி, ஸகல பிராணிகளும் தானேயென்று நிச்சயமான அனுபவமுடையவனு யிருப்பவன் எந்தக் கர்மங்களைச் செய்தாலும் அவைகளின் பயன் அவனை ஒட்டாது.

नैव किंचित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित् ।

पश्यञ्शृण्वन्स्पृशञ्जिघ्रन्नश्नन्गच्छन्स्वपञ्श्वसन् ॥ ८ ॥

प्रलपन्विसृजन्गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि ।

इंद्रियाणींद्रियार्थेषु वर्तंत इति धारयन् ॥ ९ ॥

8. 9. ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை யறிந்து யோகத்தில் நிலைபெற்றவன், மற்றவர்களைப்போல் பார்ப்பது, கேட்பது, தொடுவது, முகர்வது, நடப்பது, உண்பது, உறங்குவது, மூச்சுவிடுவது பேசுவது, கொடுப்பது, வாங்குவது, விழிப்பது, கண்மூடுவது முதலிய காரியங்களைச் செய்துகொண்டிருந்தாலும், இந்திரியங்கள் தத்தம் வஸ்துக்களைத் தேடி அனுபவிக்கின்றன, நான் செய்வது யாதொன்று மில்லையென்று எண்ணுவான்.

ब्रह्मण्याधाय कर्माणि संगं त्यक्त्वा करोति यः ।

लिप्यते न स पापेन पद्मपत्रमिवांभसा ॥ १० ॥

10. தான் செய்யும் ஸகல கர்மங்களையும் ஈசுவரனிடத்தில் அர்ப்பணஞ்செய்து பற்றைவிட்டுச் செய்கிறவனை, அந்தக் கர்மங்களால் வரும் பாபம், தாமரை யிலையில் ஒட்டாத தண்ணீரைப்போல் ஒட்டாது.

कायेन मनसा बुद्ध्या केवलैरिंद्रियैरपि ।

योगिनः कर्म कुर्वंति संगं त्यक्त्वात्मशुद्धये ॥ ११ ॥

11. தங்களுடைய அந்தக்கரணம் பரிசுத்தமாகும்பொருட்டு யோகிகள் பற்றைவிட்டு, தேஹத்தாலும் மனதாலும் புத்தியாலும் கேவலம் இந்திரியங்களாலும் கர்மங்களைச் செய்கிறார்கள்.

युक्तः कर्मफलं त्यक्त्वा शांतिमाप्नोति नैष्ठिकीम् ।

अयुक्तः कामकारेण फले सक्तो निबध्यते ॥ १२ ॥

12. கர்மயோகத்தில் நிலைபெற்றவன் கர்மங்களின் பயனை விரும்பாமல் விட்டு, என்றுமழியாத சாந்தியை அடைகிறான். ஆனால் (கர்ம) பலன்களை அநுபவிக்கவேண்டுமென்ற ஆசையால் அவைகளைப் பற்றி மனதை ஒன்றுபடுத்தாதவன் கர்மங்களால் கட்டுப்படுகிறான்.

सर्वकर्माणि मनसा संन्यस्यास्ते सुखं वशी ।

नवद्वारे पुरे देही नैव कुर्वन्न कारयन् ॥ १३ ॥

13. இந்திரியங்களையும் அந்தக்கரணத்தையும் நன்றாய் வசப்படுத்தினவன் ஸகல கர்மங்களையும் மனதால் விட்டு (பயனை விரும்பாமல் செய்து), ஒன்பது வாயில்களுள்ள இந்தத் தேஹமென்ற நகரத்தில் ஒன்றையும் செய்யாமல், ஒன்றையும் செய்விக்காமல் ஸுகமாயிருக்கிறான்.

न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।

न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥ १४ ॥

14. ஏனென்றால் இப்படியே ஸர்வலோகநாதனும், ஜீவகோடிகளில் ஒருவனுக்கும் 'நான் செய்கிறே'னென்ற எண்ணத்தை உண்டாக்குவதில்லை. கர்மங்களைத் தானே செய்வதுமில்லை. அல்லது கர்மங்களுக்கும் அவைகளின் பயன்களுக்கும் சேர்க்கையையும் உண்டாக்குவதுமில்லை. (கர்மங்களுக்குத் தகுந்தபடி பலன்களைக் கொடுப்பதே ஈசுவரனுடைய காரியமென்ற மதமும் இங்கே மறுக்கப்பட்டது.) ஆனால் ஸ்வபாவமென்பது நடந்துகொண்டே யிருக்கிறது. ஈசுவரன் ஜீவன்களின் கர்மங்களுக்குத் தகுந்த பலன்களை அனுபவிப்பதற்கு வேண்டிய கருவிகளைத் தேஹம் பிரபஞ்சம் தேவதைகள் முதலிய ரூபமாய் ஸிருஷ்டித்துக் கொடுக்கிறார். தானே ஒன்றும் செய்வதில்லை; ஒன்றையும் செய்விப்பதுமில்லை. ஆயினும், கர்மபலன்களைக் காலதேசத்திற்குத் தகுந்தபடி ஒழுங்குபடுத்தி ஜீவன்கள் அனுபவிக்கும்படி செய்வதில் அவருக்கு விருப்பு வெறுப்பு யாதொன்றுமில்லை. ஏன் அப்படிச் செய்கிறாரென்றால், நெருப்பு சுடுவதும், காற்று அடிப்பதும், புஷ்பம் நல்ல வாஸனையுடனிருப்பதும் இயற்கையே யன்றி, அதனால் அவைகளுக்கு ஸுகதுக்கமில்லை. அப்படியே இந்தப் பிரபஞ்ச நாடகத்தை நடத்துவதும் ஈசுவரனுக்கு யாதொரு பிரயோஜனத்தையும் உண்டாக்குவதில்லை. அதற்குக் காரணம் அவருடைய ஸ்வபாவமே; அப்படியே செய்துகொண்டிருக்கிறாரென்று சொல்வதைத் தவிர வேறொன்றும் பொருந்தாது.

नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः ।
अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यंति जंतवः ॥ १५ ॥

15. எவன் செய்யும் பாபத்தையும் ஈசுவரன் ஏற்றுக்கொள்வதில்லை; எவன் செய்யும் புண்யத்தையும் ஏற்றுக்கொள்வதுமில்லை; ஆனால் அவரவர்களின் ஞானம் அக்ஞானத்தால் மறைக்கப்பட்டிருக்கிறது; பிராணிகள் அதனால் மயக்கமடைகிறார்கள்.

ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः ।
तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम् ॥ १६ ॥

16. அந்த அக்ஞானம் ஆத்மஞானத்தால் அழிக்கப்பட்டால், முன்பு அக்ஞானமென்ற இருள் மூடியிருந்ததை ஆத்மஞானமென்ற ஸூர்யன் அழித்து, யாவற்றிற்கும் மேலான பிரஹ்ம ஸ்வரூபத்தை விளக்கும்.

तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।
गच्छंत्यपुनरावृत्ति ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७ ॥

17. ஆத்ம ஞானத்தால் பாபபுண்ய கர்ம பலன்களை உதறிவிட்டுப், பரம புருஷனிடத்திலேயே நாடின மனதையும் புத்தியையும் உடையவர்களாய், அவனிடத்திலேயே நிலை நின்று, தாங்கள் அடையவேண்டிய பரம்பொருள் அதே யென்று நிச்சயித்திருப்பவர்கள், மறுபடியும் கர்மவாஸனையால் திரும்பிவராமல், பரமபதத்தை யடைகிறார்கள்.

विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।
शुनि चैव श्वपाके च पंडिताः समदर्शिनः ॥ १८ ॥

18. வித்யையாலும் வினயத்தாலும் நிறைந்த பிராஹ்மணனையும், பசுவையும், யானையையும் நாயையும் அதைத் தின்பவனையும் விவேகிகள் ஸமமாய் நினைத்து நடப்பார்கள், (இங்கே புத்தியையும் ஸ்வபாவத்தையும் குறித்து இந்த வரிசை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது).

इहैव तैर्जितः सर्गो येषां साम्ये स्थितं मनः ।
निर्दोषं हि समं ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः ॥ १९ ॥

19. யாவற்றையும் பக்ஷபாதமின்றி ஸமமாய்ப் பாவிப்பதில் மனதை நாட்டினவர்கள் இவ்வுலகத்திலேயே (இந்தத் தேஹம் அழிவதற்கு முன்பே) ஜனன மரணரூபமான ஸம்ஸாரத்தைத் தாண்டினவர்கள், ஜீவன் முக்தர்கள்). யாதொரு தோஷமில்லாமலும் எங்கும் ஸமமாயும் விளங்குவதே பிரஹ்மத்தின் ஸ்வரூபமல்லவா? ஆகையால் அவர்கள் அந்த ப்ரஹ்மத்தில் வேரூன்றியிருக்கிறார்கள்.

न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत्प्राप्य चाप्रियम् ।
स्थिरबुद्धिरसंमूढो ब्रह्मविद्ब्रह्मणि स्थितः ॥ २० ॥

20. பிரஹ்ம ஸ்வரூபத்தை அறிந்து அதிலேயே நிலைத்திருக்கிறவன், ஒன்றாலும் கலங்காத புத்தியுடன் மயக்கமடையாமல், இஷ்டமானவை நேர்ந்தாலும் ஸந்தோஷிக்கமாட்டான். இஷ்டமில்லாதவை நேர்ந்தாலும் துக்கப்படமாட்டான்.

बाह्यस्पर्शेष्वसक्तात्मा विंदत्यात्मनि यत्सुखम् ।
स ब्राह्मयोगयुक्तात्मा सुखमक्षय्यमश्नुते ॥ २१ ॥

21. வெளியிலிருந்து வரும் ஸுக துக்க ரூபமான சேர்க்கைகளில் மனதைப் பற்றின்றிச் செய்வதால் எந்த விதமான ஸுகம் உண்டாகிறதோ அது நித்யமல்ல; ஆனால், பிரஹ்ம ஸ்வரூபத்தைத் தியானஞ் செய்வதில் பழக்கப்பட்ட மனதையுடையவன் அடையும் ஸுகமோ என்று மழியாதது.

ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।
आद्यंतवंतः कौंतेय न तेषु रमते बुधः ॥ २२ ॥

22. ஸுக துக்க ரூபமான உணர்ச்சிகளின் சேர்க்கையால் உண்டாகும் போகங்கள் முடிவில் துக்கத்தையே விளைவிக்கும். ஏனென்றால் அவைகளுக்கு ஆதியும் அந்தமும் உண்டு. விவேகி அவைகளில் ஆனந்தத்தை அடையமாட்டான்.

शक्नोतीहैव यः सोढुं प्राक्शरीरविमोक्षणात् ।
कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥ २३ ॥

23. இந்தத் தேஹம் அழிவதற்கு முன்பே காமக்ரோதங்களிலிருந்து உண்டாகும் வேகத்தைப் பொறுக்கக்கூடியவனே மனதை ஒருமைப்படுத்தினவன்; அவனே ஸுகத்தை யனுபவிக்கும் மனிதன்.

योऽन्तःसुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः ।
स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥ २४ ॥

24. தனக்கு வெளியிலிருக்கும் பதார்த்தங்கள் தனக்கு ஸுகத்தை யுண்டுபண்ணாமல் ஆத்ம ஸ்வரூப த்யானத்தாலேயே ஸுகத்தை யடைகிறவனும், தனக்கு வெளியிலிருக்கும் பதார்த்தங்களைத் தேடி அவைகளை யனுபவிப்பதால் திருப்தியடையாமல் ஆத்ம த்யானத்திலேயே தன் தேஹேந்திரிய அந்தக்கரணங்களைச் செலுத்தி அதனால் திருப்தியடைகிறவனும், சாஸ்திரம் ஆசார்யன் முதலிய வெளியிலிருக்கும் ஸாதனங்களால் தன் அக்ஞானம் நீங்கி ஞானோதயமாகும் நிலையைக்கடந்து, தன் ஆத்ம ஸ்வரூப ஞானத்தாலேயே யாவற்றையும் உண்மையாய்ப் பார்க்கிறவனுமான யோகி, பிரஹ்மத்தின் தன்மையை யடைந்து ப்ரஹ்மானந்தத்தை அனுபவிக்கிறான்.

लभन्ते ब्रह्म निर्वाणमृषयः क्षीणकल्मषाः ।
छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥ २५ ॥

25. அந்தக்கரணத்தை வசப்படுத்தி, சீதோஷ்ண ஸுகதுக்கமென்றவைகளை வேரறுத்து, ஸகல பிராணிகளின் க்ஷேமத்தையே நாடி, ஸகல தோஷங்களுமற்று விளங்கும் ரிஷிகள் மேற்சொன்ன பிரஹ்மானந்தத்தை யனுபவிக்கிறார்கள்.

कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।
अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥ २६ ॥

26. காமக்ரோதங்களை யொழித்து, ஊக்கத்துடன் முயன்று, இந்திரியங்களையும் அந்தக்கரணத்தையும் வசப்படுத்தி, ஆத்ம ஸ்வரூபத்தை யறிந்தவர்களுக்கு எவ்விடத்திலும் பிரஹ்மானந்த அனுபமுண்டு.

स्पर्शान्कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवांतरे भ्रुवोः ।
प्राणापानौ समौ कृत्वा नासाभ्यंतरचारिणौ ॥ २७ ॥
यतेंद्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।
विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥ २८ ॥

27, 28. வெளியிலிருந்து வரும் உணர்ச்சிகளை வெளியிலேயே நிறுத்தி, புருவங்களுக்கு நடுவில் பார்வையை நாட்டி, பிராணாபான வாயுக்களின் ஓட்டத்தை ஸமமாகச் செய்து, அவைகளை மூக்கினுள்ளேயே ஸஞ்சரிக்கும்படி செய்து, இந்திரியங்களையும் மனதையும் புத்தியையும் வசப்படுத்தி, இச்சை, பயம், கோபமென்றவைகளை ஒழித்து, மோக்ஷத்தையே மேலான பொருளாயெண்ணி பிரஹ்ம ஸ்வரூபத்தை த்யானஞ் செய்கிறவன் எக்காலத்திலும் (ஸமாதி நிலையிலும் வியவஹார வேளையிலும்) முக்தி ஸுகத்தை யனுபவிப்பவனே.

भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शांतिमृच्छति ॥ २९ ॥

29. ஜீவன்கள் தேவதைகளைக் குறித்துச் செய்யும் யக்ஞங்களையும் ஸித்திகளை யடைவதற்காகச் செய்யும் தவத்தையும் பெற்றுக்கொண்டு அவைகளுக்குத் தகுந்த பயனைக் கொடுப்பவன் நானே; ஸமஸ்த பிராணிகளுக்கும் பிரதி ப்ரயோஜனத்தை எதிர்பார்க்காமல் எப்பொழுதும் ஹிதத்தையே செய்கிறவன் நானே. ஸகல லோகங்களுக்கும் மஹேசுவரன் நானே. இப்படி என் ஸ்வரூபத்தை யறிந்து என்னை உபாஸிக்கிறவன் என்றுமழியாத சாந்தியை யடைகிறான்.



# பீடிகை.



**சங்கராசார்யர்:—** அக்ஞானிக்குக் கர்மயோகம் நலமா, ஸந்யாஸமா?

நான்காவது அத்யாயத்தில் 18-வது சுலோகம் முதல் ஞானமென்னும் தீயால் (19) சாரீர கர்மத்தை (21) தானாகக் கிடைத்ததை (22) அர்ப்பணஞ் செய்வது (24) அவையெல்லாவற்றையும் ஸகல கர்மமும் (33) ஞானம் (37) கர்மங்களை (44) என்பது வரையில், ஸகல கர்மங்களையும் விடவேண்டுமென்பதையே பகவான் உபதேசித்தார். "இந்த ஸந்தேஹத்தை ஞானமென்ற கத்தியால் வெட்டியெறிந்து, "கர்ம யோகத்தைச் செய்யக்கடவா" யென்று (4-42) "கர்மாநுஷ்டானமாகிய யோகத்தையும் நீ செய்யவேண்டு" மென்று உபதேசித்தார். ஆனால் கர்மங்களைச் செய்வதும் விடுவதும் ஸாத்யமல்ல. ஒருவன் ஒரேகாலத்தில் நிற்கவும் நடக்கவும் முடியாது. அப்படி ஞான கர்மங்களை ஒருவன் சேர்த்து அனுஷ்டிக்க முடியாது. மேலும், அவைகளை வெவ்வேறு காலத்தில் அநுஷ்டிக்கலாமென்றும் விதிக்கப்படவில்லை. ஆகையால் இவ்விரண்டில் ஏதாவதொன்றையே அனுஷ்டிக்க வேண்டியதென்றே ஏற்படுகிறது. இவ்விரண்டில் எது சிறந்ததோ அதையே செய்யவேண்டு"மென்ற எண்ணமுடையவனாய் இந்த அத்யாயத்தில், "கிருஷ்ணா! கர்மங்களை விடவேண்டுமென்றும் சொல்லுகிறாய்; கர்மங்களைச் செய்யவேண்டு மென்பதையும் புகழ்ந்து பேசுகிறாய். இவ்விரண்டில் எது மேலானதோ அந்த ஒன்றையே நன்றாய் நிச்சயித்து எனக்குச் சொல்லவேண்டு"மென்கிறான்.

## விஷய அட்டவணை.

1. அக்ஞானிகளுக்கு எது நன்மை, கர்மமா, ஞானமா?
2. இது ஞானியைப்பற்றினதன்று.
3. இது ஞானிக்குப் பொருந்தாது.
4. கர்மமே அக்ஞானிக்கு யேற்றது.

5. கர்ம ஸந்யாஸமும் கர்மயோகமும் ஒரே பயனைத்தரும்.
6. கர்மயோகமே உண்மையான ஸந்யாஸத்திற்கு மார்க்கம்.
7. ஞானியின் கர்மம் அவனைப் பற்றாது.
8. உண்மையாய் அவன் கர்த்தாவல்ல.
9. உண்மையான கர்மயோகியும் கர்ம பலன்களால் கட்டப்படுவதில்லை.
10. அந்தச் செய்கைகளுக்கு ஸ்வபாவமே காரணம்.
11. ஞானமும் அக்ஞானமும்.
12. ஞானிக்கு மறுபிறப்பில்லை.
13. எந்தப் பொருளிலும் அவன் ஒன்றையே பார்க்கிறான்.
14. இந்த ஜன்மத்திலேயே அவனுக்கு முக்தி.
15. ஸுகமும் துக்கமும் அவனுக்கில்லை.
16. எல்லையற்ற ஆனந்தானுபவமே.
17. அதைப் பெறும் மார்க்கம்.
18. தியான யோகத்தால் பகவானைக் காணலாம்.

**விசிஷ்டாத்வைதமதம்.** கர்மயோகம் ஞானஸ்வரூபமாயிருப்பது முதலாக அதின் தன்மையும் உட்பிரிவுகளும் ஞானபாகமே முக்யமென்பதும் நான்காவது அத்யாயத்தில் சொல்லப்பட்டது. ஞானயோகத்தில் அதிகாரமுள்ளவனுக்கும் கர்மயோகமே ஆத்மஞானத்தைக் கொடுக்கும். அதனால் தவறு நேரக்கூடியதல்ல; ஸுலபமாய்ச் செய்யக்கூடியது. வேறொன்றைத் தனக்கு உதவியாய் வேண்டினதல்ல. ஆகையால் மேலானதென்று மூன்றாவதிலேயே சொல்லப்பட்டது. ஆத்மாவை அடைவதற்கு ஸாதனங்களில் ஞானயோகத்தைக் காட்டிலும் கர்மயோகமே சீக்கிரமாய்ப் பலத்தைக் கொடுக்குமென்பதும், நான் கர்த்தாவல்லவென்ற தியானம் கர்மயோகத்தில் அடங்கியிருக்கிறதென்பதையும், ஞானம் அதனால் உண்டாகக்கூடியதென்றும் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகிறது.

### கீதார்த்த ஸங்கிரஹம்.

கர்மயோகம் ஸுலபமாய்ச் செய்யக்கூடியது; சீக்கிரத்தில் பலத்தைக் கொடுக்கும். அதின் அங்கங்கள் பரிசுத்தமான ஆத்மாவைப்

பற்றின ஸமதர்சனமென்ற ஞானத்தின் காரணங்களும் ஸ்வரூபமும் இந்த அத்யாயத்தின் விஷயங்கள்.

பாட்டு.

கண்டெளிதாம் கருமமுயிர் காட்டும் கடுருதலும்
மண்டியதன் படியில் மனங்கொள்ளும் வரிசைகளும்
கண்டறியா வுயிரைக் காணலுற்ற நினைவுகளும்
வண்டுவரீச னியம்பினன் வாசவன் மைந்தனுக்கே.

அ-து:—இதுவரையிலும் நாம் அனுபவித்துக்கொண்டு வருவதால் ஸுலபமாய்ச் செய்யக்கூடிய கர்மயோகமும் ஜீவாத்மாவை நேரில் பார்க்கும்படி செய்வதிலுண்டான விவேகமும் அந்த யோகத்தின் உட்பிரிவுகளில் தியானம் செய்யும் வரிசைகளும் (நான் கர்த்தாவல்லவென்று அறிவது) ஒருவராலும் கண்டு அனுபவிக்கப்படாத சுத்த ஜீவஸ்வரூபத்தைக் காணுவதென்ற தியான விசேஷங்களும் இந்த அத்யாயத்தில் உபதேசிக்கப்படுகின்றன.

த்வைதம்:—இந்த அத்யாயம் ஸந்யாஸயோகமென்று பெயரிடப் பட்டிருந்தாலும் ஸந்யாஸத்தையும் யோகத்தையும் பற்றிச் சொல்லுகிறது.

இரண்டாவது அத்யாயம் ஸாங்க்ய யோகத்தை உபதேசிக்கிறது. ஆகையால் ஸாங்க்யமென்ற பதத்தால் குறிக்கப்படும் அர்த்தத்தைக் காட்டிலும் ஸந்யாஸமென்றது வேறென்று விளங்குகிறது.

ஸந்யாஸம் தனக்கு க்ஷேமகரமா அல்லது யோகமாவென்று அர்ஜுனன் அறியவிரும்புகிறான். இரண்டும் சிலாக்யமே. ஆனால் யோகம் அவனுக்கு விசேஷ நன்மையைச்செய்யு மென்று பகவான் சொல்லுகிறார். கேள்வியிலும் பதிலிலும் ஸந்யாஸமென்பதற்கு 'விடுதல்' என்ற அர்த்தமேயொழிய நான்காவது ஆச்ரமமென்று அர்த்தமில்லை. கர்மங்களை மாத்திரம் விடுவதென்று உத்தேசமல்ல. காமக்ரோதங்களையும் ராகத்வேஷங்களையும் (அதாவது ஆசையையும்) விடுவதே முக்யமானது. அப்படி அர்த்தஞ் செய்தா லொழிய, இரண்டு

மார்க்கமும் சிலாக்யமென்று கண்ணன் சொல்வது பொருந்தாது. சிலர் எண்ணுகிறபடி இங்கே ஸந்யாஸ ஆச்ரமத்தையும் கிருஹஸ்தாச்ரமத்தையும் ஒப்பிட்டுத் தாரதம்யங்களைச் சொல்வது உத்தேசமல்ல. ஞானயோகத்தையும் கர்மயோகத்தையும் ஒப்பிட்டு கர்மயோகம் தாழ்ந்ததென்று வித்தாந்தம் செய்யவில்லை. கர்மயோகத்தில் இரண்டு அம்சங்களுண்டு. (1) ஆசையை விடுவது, (2) கர்மங்களைப் பகவானுடைய கைங்கர்யமாய்ச் செய்வது. இவை தனித் தனியே மேலான பயனைக் கொடுக்காது. ஸமரஸமாய்ச் சேர்த்தே அனுஷ்டிக்கப்பட வேண்டும். ஆனால் இவ்விரண்டில் கர்மானுஷ்டானமே முக்யமானது; ஏனென்றால், பகவானிடத்தில் பக்தி பெருகி, அவனுடைய ஸகல செய்கைகளையும் வியாபிக்கும் வைராக்யம் அபூர்வமான ஸாதனம்; மேன்மையானதே. ஆனால் அது பிரத்யக்ஷமான தர்மமல்ல. ஒன்றைச் செய்யாமலிருக்கும் தன்மையேயாகும். ஆனதால் ஒரே முகமான பக்திமார்க்கத்திற்கு ஈடாகாது.

மேற் சொன்ன 'விடுதல்' பொதுவாய் ஸாங்க்ய மார்க்கத்தோடும், கர்மானுஷ்டானம் யோகத்தோடும் சேர்ந்தே வழங்கும். காமக்ரோதங்களை விட்டுப் பக்தியுடன் கர்மங்களை ஈசுவர ஆராதனமாய்ச் செய்வதே உண்மையான கர்மயோகமாகும். இவ்விரண்டு அம்சங்களின் முடிவு ஒன்றே. இவ்விரண்டும் உண்மையில் ஒன்றே. அறியாதவர்களே இவை வெவ்வேறு முறை யென்றே கொள்வார்கள்.

கர்மங்களை முற்றிலும் விடுவதென்பதை அனுஷ்டானத்தில் கொண்டுவருகிறவனுக்கு வெகு கஷ்டங்கள் நேரும். அவனுடைய முயற்சி பயன்படாது. பகவானைத் தவிர மற்ற ஜீவகோடிகள் யாவும் காமக்ரோதங்களை முற்றிலும் ஜயித்தவர்களல்ல. ஆகையால், "ஒழிவில்லாமல் வாழ்நாள் முழுதும் கர்மங்களைச் செய்து கொண்டே யிருக்கவேண்டு" மென்ற ஈசாவாஸ்ய சுருதியைப் பின் பற்றி, அந்தக் கர்மத்தை பலாபேக்ஷையில்லாமல் ஈசுவரார்ப்பணமாய்ச் செய்வதாலும், கூடியவரையில் மனதை வைராக்கியத்தால் சுத்தஞ் செய்வதாலும், அந்த அனுஷ்டானம் எம்பெருமானுக்கு உகந்ததாகிறது. ஸகல லோகநாயகன் தனக்கும் நாயகனே, தன் பக்

தர்களை ரக்ஷித்து அவர்களுக்கு வேண்டியவைகளை யறிந்து அனுக்ரஹிப்பானென்ற நிச்சயத்துடன் கர்மத்தைச் செய்து கொண்டிருப்பதே மேலானது. ஆனால் அப்பொழுதும் பகவான் உண்மையான கர்த்தா, அனுபவிக்கிறவர், ஏவுகிறவர், தான் அப்படிப்பட்டவனல்ல. அவருடைய திருவுளப்படியேதான் நடக்கிறவனென்று உணர வேண்டும். ஜீவன் பரமாத்மாவினிடத்தில் ஈடுபட்டவன், ஸ்வதந்திரனல்ல. ஆகையால் ஆசைக்குக் காரணமான ஸங்கல்பம் முற்றிலும் விடப்பட வேண்டும். இப்படி ஆசையை யொழித்துப் பகவானை ஆராதிப்பதாலும், நான், என தென்பதை பொழிப்பதாலும், கர்மங்களின் பயன்களால் தொடரப்படாமல் தாமரை யிலைத் தண்ணீரைப் போல் பற்றின்றி பிரஹ்மானந்தத்தை யனுபவிப்பான்.

அனாதிகாலம் முதல் யோகிகள் இப்படியே கர்மங்களைச் செய்து வருகிறார்கள். தேஹேந்திரியங்களால் கர்மங்களைச் செய்துகொண்டிருக்கையில் மனது கலக்கமின்றி சுத்தமாய் நிற்கும். இவ்வுடலை ஒன்பது வாயில்களுள்ள நகரமென்றும், அங்கே தாங்கள் சிலகாலம் தங்கி யிருக்கவேண்டு மென்றும், தாங்கள் அது வல்லவென்றும், அது அனித்யம், அசுத்தம், ஜடமென்றும் அறிவார்கள்.

ஜீவன் கர்மங்களைச் செய்வதற்கும் விடுவதற்கும், பயன்களை அனுபவிப்பதற்கும் ஸ்வாதந்தரிய முண்டு. ஆனால் கர்மானுபவத்திற் கேற்ற உலகங்களையும் தேஹங்களையும் ஈசுவரனே ஸிருஷ்டித்துக் கொடுக்கிறார். பாப புண்யங்களைப் பகுத்தறிவதற்கு வேதசாஸ்திரங்களை யுபதேசித்து, அவைகளை அனுஷ்டித்துக் காட்டுவதற்குத் தானும், தன் நிலைமையை யடைந்த மஹாத்மாக்களும் அடிக்கடி லோகங்களில் அவதாரம் செய்கிறார்கள். இதே ஈசுவரனுக்கும் கர்மத்திற்குமுள்ள ஸம்பந்தம். அவனவனுடைய பூர்வ கர்ம வாஸனைகளின் ரூபமான ஸ்வபாவமென்பதே அவனைப் பாப புண்யங்களைச் செய்யும்படி ஏவுகின்றன.

மேற்சொன்னபடி ஸந்யாஸத்தாலும் உண்மையான கர்மயோகத்தாலும் மனது சுத்தமாகிறது. பகவானுடைய ஸ்வரூபதர்சனம் கிடைக்கிறது. மேகங்களால் மறைக்கப்படாத ஸூர்யனைப்போல், அவர் பக்தனுக்குப் புலப்படுகிறார். அவன் அவருடைய ஸ்வரூப

த்யானத்தில் ஆழ்ந்து நிற்கிறான். வேறொருவரையும் பார்க்கிறதில்லை. வேறொன்றையும் விரும்புவதில்லை. அவரையே தன்னுயிர்க்குயிராயும் ஆத்மாவுக்கு ஆத்மாவாயும் வைத்து, அவருடைய நியமனப்படி நடக்கிறான். பாபங்கள் எரிந்து சாம்பலாகின்றன. முக்தி ஸித்திக்கிறது. பிராஹ்மணன், பசு, யானை, நாய், சண்டாளனென்றவைகளில் ஒரே பகவான் விளங்குவதை யறிகிறான். வெளிப்படையான தேஹங்களும் தோற்றங்களும் செயல்களும் அவருடைய ஸ்வரூப மஹிமையை மறைக்கமுடியாது. அவரிடத்தில் வேரூன்றினவன் ஸுகதுக்கங்களால் அசைக்க முடியாதவன். வெளிப்படையான காரணங்களால் ஜீவன்களுக்கு கிடைக்கும் ஸுகம் அவனுக்குப் பக்தியோகத்தால் கோடிமடங்கு விருத்தியாகிறது. லௌகிக ஸுகங்களுக்கு ஆதியந்த முண்டு. ஞானி அவைகளை நித்யமென்று நம்பமாட்டான். வைராக்யத்தையடைந்தவனுக்கு மனதின் ஸமாதானத்தால் கிடைக்கும் ஸுகமானது, அவருடைய தியானத்தில் ஆழ்ந்து நிற்கும் பக்தனுக்கு நித்யமாய்க் கிடைக்கிறது. ஆகையால் ஆசையை விடுவதென்ற ஸந்யாஸ முறையைக் காட்டிலும் யோகமே மேலானது.

ஸர்வோத்தமமான புருஷார்த்தத்தைக் குறிப்பாய் வைத்துக்கொண்டு ஸந்யாஸத்தையும் யோகத்தையும் ஸமரஸமாய்ச் சேர்த்தனுஷ்டிக்கவேண்டும். பகவானுடைய ஸ்வரூப தர்சனத்தில் நாடினவன், இடைவிடாத ஆத்மானந்தத்தில் மூழ்கியிருக்கிறான். பரமாத்மாவினாலேயே அவனுக்கு ஸகலவிதமான இன்பமும் ஞானமும் கிடைக்கிறது. அவனுடைய குரு கேவலம் ஸ்தூல பஞ்ச பூதங்களால் அமைக்கப்பட்ட தேஹத்தை யுடையவரல்ல. அப்ராகிருத திவ்ய மங்கள ஸ்வரூபத்தையுடைய பிரஹ்மமே. ஸகல ஸம்சயங்களும் ஒழிந்து அந்தப் பரம குருவை யடைந்து, ஸகல பூதங்களுக்கும் ஹிதத்தையே செய்கிறவனாய், தானே அவைகளாய் விளங்குகிறான்.

ஸந்யாஸம் இதையே கொடுக்கும்; யோகமும் இதையே கொடுக்கும். ஆனால் ஈச்வர ஸ்வரூப தர்சனம் கிடைக்குமுன் வெகு காலம் தியான யோகத்தை அனுஷ்டிக்கவேண்டும். லௌகிக விருப்பு

வெறுப்புகளை யொழித்து, நேத்ரங்களைப் புருவங்களுக்கு நடுவில் நாட்டி, பிராணாயாமத்தை அனுஷ்டித்து, தியான யோகத்தில் ஆழ்ந்து விடுகிறான். மோக்ஷத்தைத் தவிர வேறு பலத்தை உத்தேசிக்காமல் கிருஷ்ண பரமாத்மாவையே தியானிக்கிறான். ஆகையால் அவருடைய நித்ய விபூதி தர்சனம் அவனுக்குக் கிடைக்கிறது.

ஸகல கர்மங்களையும் தபஸையும் அனுபவிக்கிறவனும், ஸர்வ லோகங்களுக்கு மஹேசுவரனும், ஸமஸ்த ஜீவன்களுக்கு நண்பனும் சரண்யனுமான பரம புருஷனை நேருக்கு நேராய்ப் பார்க்கிறான்.

இந்த அத்யாயத்தில் முக்யமாய்க் கவனிக்க வேண்டிய விஷயங்கள்:—(1) ஸந்யாஸமும் பக்தியும் சேர்ந்ததே கர்மயோகம். இவைகளில் பக்தி மேலானது. (2) வைராக்யமும் கர்மானுஷ்டானமும் சேர்ந்தே ஈசுவரஸ்வரூப தர்சனத்திற்கு ஸாதனமாய்க் கொள்ளவேண்டும். (3) வைராக்யமென்ற ஸாங்க்யத்தையும் கைங்கர்யமென்ற யோகத்தையும் ஸமரஸமாய்ச் சேர்த்து, ஆத்மலாபத்தையடைய வேண்டும். (4) ஈசுவரனே பிரதானமான கர்த்தா, ஜீவன் அவாந்தரமான கர்த்தா. அவருடைய இச்சையையும் நியமனத்தையும் அனுஸரித்தே நடக்கிறான். (5) இப்படியில்லாமல் ஸந்யாஸத்தை யோகத்திற்கு மேலானதென்றும், அல்லது கர்மயோகத்தை ஞானயோகத்திற்கு மேலானதென்றும் கொள்வது பகவானுடைய கருத்திற்கு விரோதமாகும்.

## பொதுக் குறிப்புகள்.

(1) அத்வைதிகளில் ஸ்ரீதரஸ்வாமியும் சங்கராசார்யரும் பலவிடங்களில் அபிப்பிராய பேதத்தைக் காட்டுகிறார்கள். 7-முதல் 11-வரையிலுள்ள சுலோகங்களில் சில ஞானிக்கும் சில அப்யாஸிக்கும் பொருந்துமென்று சங்கரரும், பொதுவாய் எல்லோருக்கும் பொருந்துமென்று ஸ்ரீதரரும் மத்வாசார்யரும் எண்ணுகிறார்கள்.

(2) கீதையில் பிரஸித்தமான சுலோகங்களில் இந்த அத்யாயம் 15-வதும் 17-வதும், சில கர்மம் தாழ்ந்த முறையென்று சொல்வதாய் சங்கரரும், ஜீவகோடிகளின் யோக்யதைக்குத் தகுந்த

படியே கடவுள் ஸுகதுக்கங்களைப் பக்ஷபாதமின்றிக் கொடுக்கிறுரென்று ஸ்ரீதரரும் சொல்லுகிறுர்கள்.

(3) அத்வைத கொள்கையையும் ஸந்யாஸத்தையும் தாங்கிப் பேசும் 17-வது சுலோகமென்று சொல்லும் சங்கராசார்யரை, கேவலம் பக்தியையே அது உபதேசிக்குமென்று ஸ்ரீதரர் மறுக்கிறுர்.

(4) பிரஹ்மம் ஜகத்திற்கு உபாதான காரணமென்று சில அத்வைதிகளும் (மதுஸூதன ஸரஸ்வதி), விவர்த்த காரண மென்று வேறு சிலரும், 7-வது ச்லோகத்தில் "ஸர்வபூதாத்ம பூதாத்மா" வென்றதை அர்த்தஞ்செய்கிறுர்கள்.

(5) ஸாங்க்யமும் யோகமும் ஒன்றென்று 4-வது சுலோகத்தில் பகவான் சொல்லியிருக்க, நீலகண்டர், இவைகளுக்கு அகண்டமான பிரஹ்மமே கருத்தென்கிறுர். அப்படியானுல் யோகத்திற்கும் ஸந்யாஸத்திற்கும் பகுத்தறிவதென்பது பகவானுடைய உத்தேசமில்லையா? இதற்காக உத்கர்ஷதீபிகைகாரர் நீலகண்டரைக் கண்டிக்கிறுர்.

(6) ஸகல ஜீவன்களும் ஸமமே. ஈசுவரனுக்கும் அவை ஸமமேயென்று கண்ணனுடைய மதம். இதை 7, 18-சுலோகங்கள் வெளியிடுகின்றனவென்று ராமாநுஜாசாரியருடைய கொள்கை.

(7) ஸ்வபாவமென்ற பதத்திற்கு இவர் கர்மவாஸனைகளென்று அர்த்தஞ்செய்கிறுர்.

(8) இதற்கு அனுகூலமாய் 10-வது சுலோகத்தில் பிரஹ்ம மென்ற பதத்திற்கு 'பிரகிருதி' யென்று இவர்சொல்வது விசித்ரமே. 19-வது சுலோகத்திலும் பிரஹ்மமென்ற பதத்திற்கும் ஜீவனென்று அர்த்தஞ்செய்கிறுர். ஆனுல் 12-வது சுலோகத்தில் அயுக்த" மென்ற பதத்திற்கு (ஒருமைப்படுத்தாதவன்) இவர் 'நித்யஸம்ஸாரிக' னென்று அர்த்தஞ்செய்கிறுர். இதுவே த்வைத மதக் கொள்கைகளில் ஒன்று. ஒரு காலத்தில் மனதை ஒருமைப்படுத்த முடியாதவனுக்கு ஒரு நாளும் நல்ல கதியில்லை; எப்பொழுதும் ஸம்ஸாரத்திலேயே உழல்வானென்று தீர்மானிப்பது உசிதமல்ல.



## அத்யாயம் 6.

# த்யானயோகம்.



श्रीभगवानुवाच—

अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः ।
स संन्यासी च योगी च न निरग्निर्न चाक्रियः ॥ १ ॥

1. பகவான்—கர்மங்களின் பயனை எதிர்பாராமல் தனக்கு ஏற்பட்ட கர்மத்தைச் செய்கிறவனே ஸந்யாஸி (கர்மங்களை விட்டவன்). அவனே யோகி (கர்மயோகத்தை உண்மையாகச்செய்கிறவன்.) உலகத்தில் அக்னிஹோத்ரம் முதலிய வைதிக க்ரியைகளைச் செய்கிறவர்கள் கிருஹஸ்தர்களென்றும் அவைகளை விட்டவர்கள் ஸந்யாஸிகளென்றும் சொல்வதுண்டு; ஆனால் அவன் ஸந்யாஸியல்ல. பார்வைக்கு ஒன்றையும் செய்யாமல் த்யானத்தில் ஆழ்ந்தவனைப் போல் இருப்பவனை யோகியென்று வழங்குகிறது. ஆனால் கேவலம் ஒன்றும் செய்யாமலிருப்பதாலேயே அவன் கர்மயோகியென்று சொல்லப்படமாட்டான்.)

यं संन्यासमिति प्राहुर्योगं तं विद्धि पांडव ।
न ह्यसंन्यस्तसंकल्पो योगी भवति कश्चन ॥ २ ॥

2. ஸந்யாஸமென்று எதைச் சொல்லுகிறார்களோ அதையே யோகமென்றறி. ஏனென்றால், கர்ம பலன்களை அனுபவிக்கவேண்டுமென்ற எண்ணத்தை விடாத எவனும் கர்மயோகியாகமாட்டான்.

आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते ।
योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते ॥ ३ ॥

3. இந்த மார்க்கத்தில் முன்னேற வேண்டுமென்று விரும்பி ஆத்மஸ்வரூப த்யானத்தைச் செய்கிறவனுக்கு கர்மயோகமே ஸாதனமாகும்; ஆனால் அந்த யோகநிலையை அடைந்தவனுக்கு கர்மங்களைச் செய்யாமல் சாந்தமாயிருப்பதே முன்னேறுவதற்கு ஸாதனமாகும்.

यदा हि नेंद्रियार्थेषु न कर्मस्वनुषज्जते ।
सर्वसंकल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥ ४ ॥

4. இந்திரியங்களால் அடையப்படும் விஷயங்களிலும் கர்மங்களிலும் பற்றின்றி, எவ்விதமான மனோவியாபாரமும் அற்றவனாய் இருப்பவனே யோகத்தில் நிலைபெற்றவன் (யோகாரூடன் எனப் படுவான்).

उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो बंधुरात्मैव रिपुरात्मनः ॥ ५ ॥

5. தன் மனதால் தன் ஆத்மாவை உத்தமமான நிலைக்குக் கொண்டு வரவேண்டும். ஆத்மாவைத் தாழ்ந்த நிலைக்குக்கொண்டு வரக்கூடாது. ஆத்மாவுக்கு மனதே பந்து, ஆத்மாவுக்கு மனதே சத்ரு.

बंधुरात्मात्मनस्तस्य येनात्मैवात्मना जितः ।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत् ॥ ६ ॥

6. ஆத்ம ஸ்வரூபத்யானத்தால் மனதை வசப்படுத்தினால் அது ஆத்மாவுக்குப் பந்துவாகும் (ஹிதத்தையே செய்யும்). அப்படி வசப்படுத்தாத மனது ஆத்மாவுக்குச் சத்ருவைப் போலவே கெடுதியைச் செய்யும்.

जितात्मनः प्रशांतस्य परमात्मा समाहितः ।
शीतोष्णसुखदुःखेषु तथा मानापमानयोः ॥ ७ ॥

7. மனதை வசப்படுத்திச் சீதம், உஷ்ணம், ஸுகம், துக்கம், மானம், அவமானம் என்றவை நேரும் பொழுதும் நிகரற்ற சாந்தியை அடைந்தவனுக்குப், பரமாத்மா எப்பொழுதும் பிரத்யக்ஷமாய் விளங்குகிறார்.

ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेंद्रियः ।
युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकांचनः ॥ ८ ॥

8. ஒன்றாலும் அசைக்கப்படாத உறுதியுடையவனாய், இந்திரி

யங்களை ஜயித்து, மனதை ஒருமைப்படுத்தி, ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றின ஸாமான்ய ஞானத்தையும் விசேஷ ஞானத்தையும் அடைந்ததால் திருப்தியுண்டாய், ஓட்டையும் கல்லையும் தங்கத்தையும் ஒரேவிதமாய் நினைப்பவன், யோகியென்று சொல்லப்படுகிறான்.

सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबंधुषु ।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥ ९ ॥

9. இயற்கையாகவே பலாபேக்ஷையின்றி தனக்கு உபகாரம் செய்கிறவனி (ஸுஹிருத்தி) டத்திலும், தன்னிடத்தில் பிரியம் வைத்துத் தனக்குத் தோழனாய் ஆபத்து நேரும்பொழுது எச்சரிக்கை செய்து தன்னை ரக்ஷிக்கிறவ (மித்ரனி) னிடத்திலும், நமக்குக் கெடுதியைச் செய்கிறவ (சத்ருவி) னிடத்திலும், இயற்கையாகவே கெட்டவனாய் எல்லோராலும் வெறுக்கப்படுகிறவனி (த்வேஷ்யனி) டத்திலும், நன்மையையும் செய்யாமல் கெடுதியையும் செய்யாமல் அலக்ஷ்யமாயிருப்பவனி (உதாஸீனனி) டத்திலும், நன்மை தீமைகளை உசிதமாய்ச் செய்து கொண்டு நடுநிலை தவறாதிருப்பவனி (மத்யஸ்தனி) டத்திலும், பந்துக்களிடத்திலும், ஸாதுக்களிடத்திலும், பாபிகளிடத்திலும் ஒரேவிதமாய் நடப்பது மேலானதே.

योगी युंजीत सततमात्मानं रहसि स्थितः ।
एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥ १० ॥

10. யோகாப்யாஸஞ் செய்ய விரும்புகிறவன், பிறர்க்குத் தெரியாத ரஹஸ்யமான விடத்தில் ஒண்டியாயிருந்துகொண்டு, சித்தத்தையும் மனதையும் அடக்கி, ஒன்றையும் எதிர்பாராமல், எவரிடத்திலிருந்தும் எதையும் பெறாமல், எப்பொழுதும் மனதை ஒருமைப்படுத்தவேண்டும்.

शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।
नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥ ११ ॥

11. யோகாப்யாஸம் செய்வதற்காகக் குறிக்கப்படும் ஸ்தலம் எவ்விதத்திலும் பரிசுத்தமாயிருக்கவேண்டும்; அங்கே தான் உட்காரும் ஆஸனத்தை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். அது எக்கார

ணத்காலும் அசையாமல் ஸ்திரமாயிருக்கவேண்டும்; அது அள வுக்கு மிஞ்சி உயரமாயாவது தாழ்ந்தாவது இருக்கக்கூடாது; அதன் மேல் தர்ப்பைகளையும், அதன்மேல் மான்தோலையும், அதன்மேல் வஸ்திரத்தையும் போடவேண்டும்.

तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेंद्रियक्रियः ।
उपविश्यासने युंज्याद्योगमात्मविशुद्धये ॥ १२ ॥

12. இந்திரிய வியாபாரங்களை அடக்கி, மனதை ஒரே நிலை யில் நிறுத்தி, அதின் கல்மஷங்களை நீக்குவதற்காக, அந்த ஆஸனத் தில் உட்கார்ந்து யோகப்யாஸஞ் செய்ய வேண்டும்.

समं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिरः ।
संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥ १३ ॥

13. தேஹம், தலை, கழுத்து இம்மூன்றையும் ஸமமாய் அசை யாமல் ஸ்திரமாய் வைத்துக்கொள்ளவேண்டும். தன் மூக்கின் நுனியையே உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கவேண்டும். அப் பொழுது எந்தத் திக்கிலேயும் பார்வையைச் செலுத்தக்கூடாது.

प्रशांतात्मा विगतभीर्ब्रह्मचारिव्रते स्थितः ।
मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥ १४ ॥

14. இப்படிச் சாந்தமான மனதுடன், எவ்விதமான பயமுமில் லாமல், பிரம்மசாரி விரதத்தை அனுஷ்டித்துக்கொண்டு, மனதை நன்றாய் அடக்கி, என்னையே த்யானஞ் செய்துகொண்டு, என்னையே பரம்பொருளாய் அடைய விரும்பி, என்னிடத்தில் நாடின மனதை யுடையவனு யிருக்கவேண்டும்.

युंजन्नेवं सदात्मानं योगी नियतमानसः ।
शांतिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ॥ १५ ॥

15. இப்படித் தன்மனதை நன்றாய் வசப்படுத்தி, எப்பொழு தும் அதை ஆத்ம ஸ்வரூப த்யானத்தில் நாட்டின யோகி, என் னிடத்திலுள்ள பரமானந்தத்தையும் சாந்தியையும் அடைகிறான்.

नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकांतमनश्नतः ।
न चातिस्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥ १६ ॥

16. அளவுக்கு மிஞ்சி புஜிக்கிறவனுக்கு யோகம் ஸித்திக்காது; அப்படியே சற்றேனும் புஜிக்காமலிருப்பவனுக்கும் யோகம் கைகூடாது. அளவுக்கு மிஞ்சித் தூங்குகிறவனுக்கு யோகம் நிறைவேறாது; தூங்காமல் எப்பொழுதும் விழித்துக்கொண்டிருப்பவனுக்கும் யோகம் பலிக்காது.

युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥ १७ ॥

17. உசிதமான ஆஹாரத்தையுடையவனும், பொழுதுபோக்கையுடையவனும், கர்மங்களைச் செய்வதில் உசிதமாய் நடப்பவனும், உசிதமான அளவே தூங்குகிறவனும், விழித்துக் கொண்டிருப்பவனுமே துக்கத்தை ஒழிக்கும் யோகத்தை ஸாதிப்பான்.

यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।
निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥ १८ ॥

18. யோகத்தில் நிலைபெற்றவனென்று சொல்லக்கூடியவனுடைய மனது, ஸகல காமங்களிலும் ஆசையின்றி, தனக்கு வசப்பட்டு, ஆத்ம த்யானத்திலேயே நிலைபெற்றிருக்கும்.

यथा दीपो निवातस्थो नेंगते सोपमा स्मृता ।
योगिनो यतचित्तस्य युंजतो योगमात्मनः ॥ १९ ॥

19. காற்றில்லாத விடத்தில் வைக்கப்பட்டிருக்கும் தீபம் அசையாது. ஆத்ம ஸ்வரூபத்யானத்தில் தன் மனதை அடக்கி நிறுத்தின யோகிக்கு இதே உபமானமாகச் சொல்லப்படும்.

यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवात्मनात्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥ २० ॥

सुखमात्यंतिकं यत्तद्बुद्धिग्राह्यमतींद्रियम् ।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥ २१ ॥

यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥ २२ ॥

तं विद्याद्दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।
स निश्चयेन योक्तव्यो योगो निर्विण्णचेतसा ॥ २३ ॥

20, 23. இவ்விதமான யோகாப்யாஸத்தால் தடுக்கப்பட்ட மனது எவ்விடத்தில் அடங்குகிறதோ; மனதால் ஆத்மஸ்வரூபத்தை நேருக்குநேராய்ப் பார்த்து ஆத்மாவில் ஆனந்தமடையும் நிலை எதோ; இந்திரியங்களுக்கு எட்டாததும் புத்தியால் அறியக் கூடியதுமான பரமானந்தம் எதோ; எதில் லயித்திருக்கும்பொழுது ஆத்மாவைத் தவிர வேறொன்றையும் அறிகிறதில்லையோ; எதில் நிலை பெற்றிருந்தால் பரதத்வத்திலிருந்து நழுவ முடியாதோ; எதை அடைந்தால் அதற்கு மேலான லாபம் உண்டென்று எண்ணமாட்டானோ; எதில் நிலைபெற்றிருந்தால் அபாரமான துக்கம் வந்தாலும் கலங்கமாட்டானோ; அதே ஸகல துக்கங்களையும் நம்மிடத்திலிருந்து அகற்றும் யோகமென்று அறியவேண்டும். மனதில் அதைரியத்திற்கு இடங்கொடாமல், அந்த யோகத்தையே நிச்சயமான புத்தியுடன் அனுஷ்டிக்கவேண்டும்.

संकल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।
मनसैवेंद्रियग्रामं विनियम्य समं ततः ॥ २४ ॥

शनैः शनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किंचिदपि चिंतयेत् ॥ २५ ॥

24. 25. மனதின் ஸங்கல்பத்தாலுண்டாகும் ஸகல ஆசைகளையும் முற்றிலும் ஒழித்து, மனதால் இந்திரியங்களை எவ்வழியிலும் செல்லவொட்டாமல் தடுத்து, மெள்ள மெள்ள சாந்தியை அடையவேண்டும்; உறுதியால் நடத்தப்பட்ட புத்தியால் மனதை ஆத்மத்யானத்தில் நிலை நிறுத்திப், பிறகு வேறொன்றையும் நினைக்கக்கூடாது.

यतो यतो निश्चरति मनश्चंचलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत ॥ २६ ॥

26. மனது ஸ்திரமில்லாதது; அடிக்கடி சலிக்கும்; நாட்டின விடத்திலிருந்து அடிக்கடி நழுவும்; ஒரு க்ஷணத்திற்குள் எண்ணிறந்த விஷயங்களைப் பற்றி வெகுதூரம் சென்றுவிடும், பொறுமையுடன் ஒவ்வொரு தடவையிலும் அதைப் படிப்படியாய்ப் பின் தொடர்ந்து, அது பற்றின விஷயங்களிலுள்ள தோஷங்களை எடுத்துக்காட்டி, அவ்விடத்திலிருந்து அதைப் படிப்படியாய்த் திருப்பிக் கொண்டுவந்து, மறுபடியும் ஆத்மத்யானத்திலேயே நாட்ட வேண்டும்.

प्रशांतमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।
उपैति शांतरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥ २७ ॥

27. இப்படி மனதில் மேலான சாந்தி உண்டாய், ரஜோகுணம் அடங்கிக், கல்மஷமற்றுத், தான் தியானிக்கும் பிரஹ்ம ஸ்வரூபத்தில் லயித்த யோகியை, ஒப்பில்லாத பிரஹ்மானந்தம் தானே வந்தடையும்.

युंजन्नेवं सदात्मानं योगी विगतकल्मषः ।
सुखेन ब्रह्मसंस्पर्शमत्यंतं सुखमश्नुते ॥ २८ ॥

28. இப்படி எப்பொழுதும் மனதை ஆத்மத்யானத்தில் நாட்டி யிருக்கும் யோகி, அதனால் ஸகல கல்மஷங்களு மற்றுப், பிரம்ம ஸ்வரூபத்யானத்தால் உண்டாகும் பரமானந்தத்தை ஸதா காலமாய் அடைகிறான்.

सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥ २९ ॥

29. யோக நிலையில் மனதை நிறுத்தினவன் எங்கும் ஸம திருஷ்டியுள்ளவனாய், ஸகல ப்ராணிகளையும் தன்னிடத்திலும், ஸகலப்ராணிகளிடத்தில் தன்னையும் பார்க்கிறான்.

योो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥ ३० ॥

30. எவன் எதிலும் என்னையே காண்கிறானோ, எதையும் என்னிடத்தில் காண்கிறானோ, அவனுக்கு நான் ஒருக்காலும் இல்லாமல் போவதில்லை. (எப்பொழுதும் என்னை ஸாக்ஷாத்கார மாய்ப் பார்க்கிறான்). அவனும் எனக்கு இல்லாமற் போவதில்லை. (அவனிடத்தில் நான் எல்லையற்ற ப்ரேமையுடன் அனுக்ரஹஞ் செய்கிறேன்).

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।
सर्वथा वर्तमानोपि स योगी मयि वर्तते ॥ ३१ ॥

31. என்னுடன் ஒன்றாய், ஸகல பூதங்களிலும் விளங்கும் என்னை உபாஸிக்கும் (எனக்கு உகந்த கைங்கர்யத்தைச் செய்யும்) யோகி, எவ்விதமாய் நடந்துகொண்டாலும் என்னிடத்திலேயே நிலைத்திருக்கிறான் (நீயும் அப்படி யுத்தஞ்செய்தால் உன்னைப் பாபம் அணுகாது).

आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।
सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः ॥ ३२ ॥

32. ஸகலப்ராணிகளிலும் ஆத்மஸ்வரூபம் விளங்குகிற தென்று தன்னைப் போல் பாவித்து, ஸுகம் நேர்ந்தாலும் துக்கம் நேர்ந்தாலும் அதை ஸம புத்தியுடன் அனுபவிக்கிறவனே, யோகி களுக்குள் சிரேஷ்டனென்று நினைக்கிறேன்.

अर्जुन उवाच—

योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन ।
एतस्याहं न पश्यामि चंचलत्वात्स्थितिं स्थिराम् ॥ ३३ ॥

33. அர்ஜுனன்—ஸமபுத்தியைப் பிரதானமா யுடைய யோகம் உம்மால் உபதேசிக்கப்பட்டதல்லவா? அதை அடையும்

ஸ்தானம் நிலையில்லாததால், அதுவும் நிலைத்திருக்க முடியாதென்று தோன்றுகிறது.

चंचलं हि मनः कृष्ण प्रमाथि बलवद्दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥ ३४ ॥

34. ஜீவன்களுடைய மனது அடிக்கடி மாறும்; மிகுந்த பல முள்ளது; உறுதியானது; எதையும் கலக்கிவிடுமல்லவா? ஆகையால், காற்றைப் பிடித்துக் கட்டி வைப்பது எப்படி அஸாத்யமோ அப்படி மனதை அடக்குவது அஸாத்யமென்று எண்ணுகிறேன்.

श्रीभगवानुवाच—
असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।
अभ्यासेन तु कौंतेय वैराग्येण च गृह्यते ॥ ३५ ॥

35. பகவான்:— நீ சொல்வது உண்மையே; அதில் ஸந்தேஹமில்லை. மனது சஞ்சலமே. அதை அடக்குவது வெகு கஷ்டம். ஆனால் வைராக்யத்தாலும் பழக்கத்தாலும் அது அடக்கப் படும்.

असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।
वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ॥ ३६ ॥

36. மனதை அடக்காதவன் யோகத்தில் ஸித்தியடைய மாட்டானென்று என் கொள்கை. மனதை அடக்கி ஊக்கத்துடன் தகுந்த உபாயங்களைக் கொண்டு யத்னம் செய்கிறவன் யோக ஸித்தியை யடையலாம்.

अर्जुन उवाच—
अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।
अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥ ३७ ॥

37. அர்ஜுனன்—ஒருவனுக்கு நீர் செய்யும் உபதேசத்தில் பூர்ணமான நம்பிக்கையுண்டு. ஆனால் அதற்கேற்ற பிரயத்னத்தைச் செய்யவில்லை. அதனால் யோக நிலையிலிருந்து மனது அடிக்கடி

நழுவுகிறது. அவனுக்கு யோகஸித்தி கிடைக்காதல்லவா? ஆனால் அவன் அடையும் கதியென்ன? ஒரே ஜன்மத்தில் ஸித்தியடைவது எல்லோருக்கும் ஸாத்யமா? அரைகுறையாய் முடியும் முயற்சியுடையவன் மறுபடியும் ஆரம்பிக்கவேண்டுமோ?)

कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥ ३८ ॥

38. உலக வாழ்வையும் துறந்து, அதின் ஸுகத்தையும் அநுபவிக்காமல், யோக ஸித்தியையும் அடையாமல், இரண்டும் கெட்டவனாய், பிரம்மத்தை யடையும் யோக மார்க்கத்தில் நிலையில்லாமல், மயங்கிச், சிதறிப்போன மேகத்தைப் போல் அழிவானோ?

एतन्मे संशयं कृष्ण छेत्तुमर्हस्यशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते ॥ ३९ ॥

39. இந்த ஸந்தேஹத்தை நன்றாய் வேரறுக்க வேண்டும். இந்த ஸம்சயத்தை ஒழிப்பதற்கு உம்மைத் தவிர வேறொருவர் எனக்குக் கிடைக்கமாட்டாரன்றோ?

श्रीभगवानुवाच—

पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।
नहि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति ॥ ४० ॥

40. பகவான்— இவ்வுலகத்திலாவது பரலோகத்திலாவது அப்படிப்பட்டவனுக்கு நாசமென்பதே கிடையாது. மங்களகரமாக எதைச் செய்கிறவனும் கெட்ட கதியை ஒருநாளும் அடைய மாட்டான்.

प्राप्य पुण्यकृतांल्लोकानुषित्वा शाश्वतीः समाः ।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥ ४१ ॥

41. யோகநிலையிலிருந்து தவறினவன், அந்தத் தேஹத்தை விட்டுப், புண்யங்களைச் செய்தவர்கள் அடையும் லோகங்களை யடைந்து, அங்கே வெகுகால மிருந்து, புண்யபலனை அநுபவித்துப்

பிறகு, சுத்தமான ஆசாரத்தையும் ஞானத்தையும் உடையவர்களின் வீட்டில் பிறக்கிறான். (ஸ்ரீமதாம் என்ற பதத்திற்கு லக்ஷ்மீ கடாக்ஷத்தைப் பெற்ற தனவான்களென்று வழக்கமாய்ச் செய்யும் அர்த்தத்தைக் காட்டிலும் 'ரிக் யஜுஸ் ஸாம அதர்வமென்ற வேதங்களின் உட்கருத்தான பிரஹ்மக்ஞானமே ஸ்ரீ அல்லது லக்ஷ்மியென்பது பொருந்தும். பகவானுடைய ஸ்வரூபமான ஞானம் அவரைவிட்டு என்றும் பிரியாதல்லவா. "மஹாலக்ஷ்மி விஷ்ணுவைவிட்டு என்றும் பிரிவதில்லை. அவளை மார்பிலேயே வைத்துக்கொண்டிருக்கிறார்" என்ற தத்வத்தை யுபதேசிக்கும் வேதவாக்கியம் இங்கே கவனிக்கத்தக்கது).

अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥ ४२ ॥

42. அல்லது, தெளிவான விவேகமுள்ள யோகிகளுடைய குலத்திலேயே அவன் பிறக்கலாம். இவ்விதமான ஜன்மம் கிடைப்பது இவ்வுலகில் வெகு கஷ்டம்.

तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनंदन ॥ ४३ ॥

43. அங்கே யிருந்துகொண்டு முன் தேஹத்தில் அவன் அப்யஸித்த யோகத்தையும் ஞானத்தையும் மறுபடியும் வெகு ஸுலபமாய் அதிசீக்கிரத்தில் அடைகிறான். அந்த நிலையிலிருந்து மறுபடியும் ஸித்தியை யடைவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்கிறான். (இதையே தமிழில் விட்டகுறை தொட்டகுறை யென்ற பழமொழியால் சொல்வதுண்டு.)

पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।
जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥ ४४ ॥

44. முன் ஜன்மத்தில் செய்த யோகாப்யாஸமே அவனுக்கு இஷ்டமிருந்தாலும் இல்லாவிட்டாலும் அவனை இழுக்கும். யோகத்தின் ஸ்வரூபம் இன்னதென்று சிரத்தையுடன் அறிய முயற்சி செய்

கிறவனும், வேதங்களில் லௌகிகனுக்கு ஏற்படுத்தியிருக்கும் விதி விலக்குகளைத் தாண்டுகிறான். (மற்றவைகளில் நம்பிக்கையற்று வெறுப்புண்டான பிறகே யோக ஸாதனத்தைப் பரீக்ஷிக்க புத்தி யுண்டாகும். ஆகையால் அவனுக்கு வைராக்கியமும் மோக்ஷ இச்சையும் இருப்பதால் மறுபடியும் கர்மங்களைப் பலாபேக்ஷையுடன் செய்வதில் ஆனந்தத்தை யடையமாட்டான்).

प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः ।
अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥ ४५ ॥

45. இப்படி ஊக்கத்துடன் முயற்சிசெய்யும் யோகி அநேக ஜன்மங்களை யெடுத்துப் பிறகு யோகஸித்தி யடைந்து தோஷங்களை யொழித்து சுத்தனாய் பிறகு மேலான பதவியை (என்னை) யடைகிறான்.

तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः ।
कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥ ४६ ॥

46. இந்திரியங்களை யடக்குவதற்காக விரதம், உபவாஸம், நியமம், ஹடயோகம் முதலியவைகளை அனுஷ்டிக்கும் தவசிகளைக்காட்டிலும் மேற்சொன்ன யோகி மேலானவன். பிரஹ்மஸ்வரூபத்தை குருவாலும் வேதசாஸ்திரங்களாலும் அறிவதாலுண்டான ஞானத்தை ஸம்பாதித்த ஞானிகளைக் காட்டிலும் மேலானவன். பலாபேக்ஷையுடன் கர்மங்களைச்செய்யும் கர்மிகளைக் காட்டிலும் மேலானவன். ஆகையால் நீயும் அவ்விதமான யோகியாகக்கடவாய்.

योगिनामपि सर्वेषां मद्गतेनांतरात्मना ।
श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः ॥ ४७ ॥

47. இவ்விதமான யோகிகள் எல்லோரிலும் எவன் என்னிடத்திலேயே மனதையும் அந்தக்கரணத்தையும் நாட்டி என் உபதேசத்தில் சிரத்தைவைத்து, அதன்படி எனக்குகந்த கைங்கரியத்தைச் செய்கிறானோ அவனே சிரேஷ்டனென்று நானெண்ணுகிறேன்,



## அத்யாயம் 6.

### பீடிகை.

சங்கராசாரியர்:—தியான யோகத்துடன் கர்மம் சேர முடியாது.
சென்ற அத்யாயத்தின் முடிவில் உண்மையான ஞானத்தின் அந்தரங்க ஸாதனமாகிய தியான யோகத்திற்கு ஸூத்ரங்களைப் போன்ற வெளிப்படையாய் (5.27) யென்பது முதலிய சுலோகங்கள் உபதேசிக்கப்பட்டன. அந்தக் கருத்தையே விஸ்தாரமாய் இந்த அத்யாயத்தில் பகவான் உபதேசிக்கிறார். கர்மயோகமானது தியான யோகத்திற்கு வெளிப்படையான ஸாதனம். கர்மத்தைச் செய்வதற்கு அதிகாரமுடைய கிருஹஸ்தன் தியானயோகத்தை விதிப்படி அனுஷ்டிப்பதற்குத் திறமையடையும் வரையில் கர்மத்தையே செய்ய வேண்டும். ஆகையால் இந்த அத்யாயத்தின் முதலாவது சுலோகத்தால் பகவான் அதைக்கொண்டாடுகிறார்.

### விஷய அட்டவணை.

1. தியான கர்மயோகங்கள் ஒன்று சேராது.
2. கர்மத்திலே ஸந்யாஸம்.
3. கர்மமே தியானத்திற்கு முதலாவது படி.
4. தியான யோகியின் லக்ஷணம்.
5. யோகாப்யாஸத்தின் ஒழுங்குகள்.
6. யோகஸித்தி.
7. தியானயோகத்தின் பயன்.
8. அப்யாஸமும் பற்றில்லாமையும் யோகஸித்திக்கு உபாயங்கள்.
9. யோக நிலை தவறினவனுடைய கதி.
10. உத்தமயோகி.

விசிஷ்டாத்வைதமதம்:—கர்மயோகமும் அதின் அங்கங்களும் சொல்லப்பட்டன. ஞான கர்மயோகங்களால் உண்டாகும் ஆத்ம ஸ்வரூபதர்சனமென்ற யோகாப்யாஸம் சொல்லப்படுகிறது. கர்ம யோகம் வேறொன்றை எதிர்பார்க்காமல் தானே ஸாதனமாகுமென்

பதை உறுதிப்படுத்துவதற்காக, ஞானரூபமான கர்ம யோகமே முடிவில் ஆத்மஸ்வரூபதர்சனத்தைக் கொடுக்குமென்று மறுபடியும் சொல்லப்படுகிறது. கர்மங்களுக்குப் பலன்களாய் ஏற்பட்டிருக்கும் ஸ்வர்க்காதி லோகங்களை யடையாமல் அவைகளையே அனுஷ்டிக்க வேண்டியது. எவ்விதத்திலும் நமக்குப் பரம மித்ரனான பரம புருஷனுக்கு கர்மமே ஆராதனமா யிருப்பதால் அதே எனக்குப் பிரயோஜனம். அதனாலுண்டாகக்கூடிய தொன்றுமில்லை. உபாய மும் அதின் பலனும் கைங்கர்யமேயென்ற தியானத்துடன் கர்மங் களைச் செய்கிறவனே ஞான கர்மயோகங்களில் ஸித்தியடைவான். அதனால் சுத்த ஜீவாத்ம ஸ்வரூப தர்சனமுண்டாகும். சாஸ்திரங் களில் விதிக்கப்பட்ட யாகங்களிலும் கேவலம் ஞானயோக நிஷ்டை யிலும் பிரவர்த்திக்காதவனுமல்ல; அவனுக்கு ஞானநிஷ்டை மாத்திரமே. கர்மயோக நிஷ்டனுக்கோ இவ்விரண்டுமுண்டு.

## கீதார்த்த ஸங்கிரகம்.

யோகாப்யாஸம் செய்யவேண்டிய முறையும் நான்குவித யோகி களும், யோகத்திற்கு ஸாதனங்களும் தன்னைப்பற்றின யோகத்தின் மேன்மையும், யோகஸித்தியும் இங்கே சொல்லப்படுகிறது.

## கீதார்த்த ஸங்கிரஹ ரக்ஷை.

கீதையின் ஒவ்வொரு அத்யாயத்திலும் ஒரு விஷயத்தை முக்யமாகச் சொல்லிவிட்டு, பிரஸ்தாபத்தால் வந்த அதைச் சேர்ந்த பல அர்த்தங்களும் சொல்லப்படுகின்றன.

(1) கீதையைக் கேட்பதற்கு யார் அதிகாரி.
(2) அவனுடைய மயக்கம் நீக்கப்படுகிறது.
(3) கர்மயோகமே அனுஷ்டிக்கவேண்டியது.
(4) அதன் உட்பிரிவுகள்.
(5) அதற்கு உள்ளடங்கின ஞானயோகம்.
(6) யோகாப்யாஸம்
(7) ஞானியின் மஹிமை.
(8) மூன்றுவித அதிகாரிகள் அறிய வேண்டியவை, செய்ய வேண்டிவை.

(9) பக்தி யோகமும் அதன் அங்கங்களும்.

(10) அவருடைய குணங்களும் விபூதிகளும் எண்ணிறந்தவை.

(11) விசுவரூபமும் அதற்கு உபாயமும்

(12) பக்தியில் முன்னேறும் வரிசை.

(13) பரிசுத்தமான ஜீவாத்மாவின் பகுத்தறிவு.

(14) பிரகிருதியின் ஸ்வரூபம்.

(15) புருஷோத்தமனுடைய மேலான தன்மை.

(16) சாஸ்திரங்களுக்குக் கட்டுப்படவேண்டும்.

(17) சாஸ்திர கர்மங்களின் பிரிவு.

(18) கீதாஸாரம்.

## பாட்டு.

யோக முயற்சியும் யோகிற்சம நிலை நால்வகையும்
யோகினுபாயமும் யோகு தன்னால் வரும் பொருளும்
யோகு தனிற்றன்றிற முடையோகுதன் முக்கியமும்
நாகனை யோகி நவின்றனன் நன்முடி வீரனுக்கே.

அ-து:— ஆத்மாவை நேரில் பார்ப்பதென்ற யோகத்தில் அப்யாஸஞ் செய்வதும் அதன் நான்கு விதங்களான ஸமநிலையும் (ஆத்மாக்கள் ஸமனென்ற தியானமும்) யோகத்திற்கு உபாயமான அப்யாஸமும் வைராக்கியமும் யோகாப்யாஸத்தின் பிரயோஜனமும் மேற் சொன்ன உபாயங்களில் தன்னைப்பற்றியுள்ள யோகமே முக்ய மென்பதும் இங்கே சொல்லப்படுகின்றன.

## துவைதம்.

கர்மயோகத்தில் ஸித்தியடைந்தவனே தியானயோகத்திற்கு அதிகாரியாகையால், இந்த அத்யாயத்தில் (1—9) கர்மயோகத்தின் முக்யமான அம்சங்கள் குறிப்பிடப்படுகின்றன:—

1. நான்காவது ஆசிரமத்திலிருப்பவனே ஸந்யாஸியென்று நினைக்கக்கூடாது. பலாபேக்ஷையின்றிக் கர்மங்களைச் செய்கிறவன் எந்த ஆசிரமத்திலிருந்தாலும் ஸந்யாஸியே. ஸந்யாஸிக்கு

லௌகிக வேலை யில்லாவிட்டாலும், ஞானத்தை ஸம்பாதிப்பதும், அதைப்பற்றி மனனம் செய்வதும், அதைப் பிறருக்கு உபதேசிப்பதும் ஒழியாது. அதே அவன் செய்யும் வேலை.

2. ஸாங்கியமும் யோகமும் ஒன்றே; ஸந்யாஸயோகமும் கர்மயோகமும் ஒன்றே. பலாபேக்ஷையை விடாமல் இவ்விரண்டும் ஸித்திக்காது.

3. தியான யோகத்தை அடைய விரும்புகிறவன் நிஷ்காம கர்மத்தைச் செய்துகொண்டே யிருக்கவேண்டும்.

4. தியானயோகமென்பது வெளிப்படையான கர்மத்திற்குப் பதிலாக, மனஸ், புத்தி முதலியவைகளால் இன்னும் மேலான லோகோபகாரஞ் செய்வதே.

5. பரமாத்மாவை அண்டினால், நம்மைஸம்ஸார ஸமுத்திரத்திலிருந்து கரையேற்றுவார். அவரை நம்பாமல் நம்மை நாமே காப்பாற்ற முடியுமென்றிருந்தால் அக்ஞானத்தில் ஆழ்ந்து அழிவோம்.

6. தியான யோகத்திற்குத் தகுந்தவனென்பதற்கு அடையாளங்கள்:—பொருளாசை ஒழிவது, சத்ருவும் மித்ரனும் பரமாத்ம ஸ்வரூபமாய்த் தோன்றுவது, அவர்களிடத்தில் பேதபுத்தியின்றி நடப்பதே.

## சுலோகங்கள் 10—32.

1. தியானத்திற்குத் தகுந்த இடம், ஆஸனம், ப்ரஹ்மசர்யம் முதலிய நியமங்கள், அப்பியாஸ முறை.

2. ஆஹாரம், நித்திரை, தேஹப்பழக்கம்.

3. ஸித்தியடைவதற்கு அடையாளங்கள்.

4. அடிக்கடி இடையூறுகள் நேரும்; சோரக்கூடாது.

5. தியான யோகத்தில் ஸித்தியடைந்தவனுடைய தன்மை, மனது அடங்கி, கல்மஷமற்று, தாமஸ ராஜஸமொழிந்து, பிரும்மானந்தத்தை அடையப்போகும் தருணம் முதலாவதுபடி. யோகநிலையில் இடைவிடாமல் நின்று மேற்சொன்ன ஆனந்தத்தைப் பூர்ணமாய் அடைவது இரண்டாவதுபடி. எங்கும் ஸமபுத்தியுடன் தன்னி

டத்தில் ஸகல பூதங்களையும், ஸகல பூதங்களில் தன்னையும் இருப்பதாய்ப் பார்ப்பது மூன்றாவதுபடி. தானும் மற்ற ஜீவன்களும் பரமாத்மாவிடத்திலும், பரமாத்மா ஸர்வ பூதங்களிடத்திலு மிருப்பதாய்ப் பார்ப்பதே விச்வரூபதர்சனம்; இதே நான்காவதுபடி. இவனுக்கு ஈசுவர தரிசனம் எப்பொழுதுமுண்டு. இவனுக்கு அழிவில்லை. பரமாத்மாவுடன் தான் ஒன்றென்பதை உணர்ந்து அவர் எங்கும் வஸிக்கிறாரென்று அவைகளிடத்தில் நடந்துகொள்ளுவது ஐந்தாவதுபடி. தியானநிலை கலைந்து, பிராரப்த கர்மானுபவத்திற்காக அந்தத் தேஹம் முடியும் வரையில் அதை ரக்ஷிப்பதற்கு ஏற்ற எந்தக் கார்யத்தைச் செய்துகொண்டிருந்தாலும், அவனுடை மனம் ஈசனிடத்திலேயே நாடியிருக்கும். இதே ஸஞ்சார ஸமாதி.

"விவகார வேளையெல்லாம் ஸமாதியென்றால்,
விகற்பமன்றோ? மனமலைந்து விடாதோ? விட்டால்,
அவதானம் நழுவுமன்றோ? வென்றாயாகில்,
அதற்கொரு திருஷ்டாந்தங்கேள். ஆசைகொண்டு

நவமாகப் பரபுருஷன் தன்னைக்கூடி
நயந்து ஸுகமனுபவித்த நாரி நெஞ்சம்
தவமான மனைத்தொழில்கள் செயினும் அப்போ
தணைந்தனுபவித்த ஸுகந்தனை விடாதே" யென்ற கைவல்ய நவநீதத்தின் வாக்கியம் இதையே குறிக்கும். தனக்கு நேரும் ஸுகதுக்கங்களை அனுபவிப்பதுபோல் ஸகல ஜீவன்களுக்கு நேரும் ஸுகதுக்கங்களைத் தானே அவ்விதமாய் அனுபவிப்பது ஆறாவதுபடி. இவனே யோகிகளில் சிரேஷ்டன். [மேற் சொன்னது இதை மொழி பெயர்க்கும் என்னுடைய தனி அபிப்பிராயம்.]

## சுலோகங்கள் 33—36

1. மனதை அடக்கும் உபாயமென்ன ?

2. அது நாடும் விஷயங்களின் தோஷத்தைக் காட்டி வெறுப்படையச்செய்து, ஆத்மத்யானத்தில் திருப்புவது, அங்கிருந்து நழுவும்பொழுதெல்லாம் அதைப் பின்தொடர்ந்து கொண்டு வந்து மறுபடியும் நிலையில் நாட்டுவதுமே.

## சுலோகங்கள் 37—47

ஒரு ஜன்மத்தில் ஸித்தியடையாமல், சிரத்தை மாத்ரமிருந்து மனதை அடக்காமல், யோக நிலையிலிருந்து நழுவினவனுடைய கதியென்ன ?

2. ஸ்வர்க்கத்தில் வெகுகாலமிருந்து, சுத்தமானவர்களுக்காவது யோகிகளுக்காவது புத்ரனாய்ப் பிறப்பான். முன் ஜன்மத்தில் அடைந்த படிகளை அதிவேகமாய் அடைந்து, விட்ட விடத்திலிருந்தே ஆரம்பித்து, அதற்கு மேலான நிலையை அடைவான். செய்தவரையில் வீண்போகாது.

இந்த அத்யாயத்தில் சொல்லப்படும் தியானமுறை, பதஞ்சலியின் அஷ்டாங்கயோக முறையை அனுஸரித்தது; ஆயினும் அடையும் பலத்தையும் அதின் தன்மையையும்பற்றி அபிப்பிராய பேதமுண்டு.

### என் அபிப்பிராயம்.

1. அத்வைதத்தின் கொள்கைக்கு அனுகூலமாய் இந்த அத்யாயத்தில் 7—27, 29, 30, முதலிய சுலோகங்களில் ஜீவேசுவர ஐக்கியம் சொல்லப்படுகிறதென்றும், கர்மம் மித்யையானதால் விடப்பட வேண்டியதென்றும், ஸமாதியும் மித்யையென்றும் (21—33), அந்தக்கரணத்தின் கல்மஷத்தைப் போக்கி பிரஹ்ம ஸ்வரூபம் தானாக விளங்கும்படி செய்யக் கூடிய ஸாதனமே யென்றும், கர்ம காண்டத்தை முற்றிலும் ஒழிப்பதே தியான யோகிக்கு அடையாளமென்றும் (44), யோக நிலையிலிருந்து நழுவினவன் (37) தாழ்ந்த ஸந்யாஸியே யென்றும், அவன் ஒரு புறத்தில் கர்மத்தை முற்றிலும் விட்டு மற்றொரு புறத்தில் அத்வைத ஸாக்ஷாத் காரத்தை யடையாமல் தவிக்கிறானென்றும் சங்கராசார்யர் அர்த்தஞ் செய்வது குறிப்பிடத்தக்கது.

2. ஆனால் அத்வைத மதஸ்தாபகர்களில் ஒருவரான மதுஸூதன ஸரஸ்வதி அடியிற்கண்ட விஷயங்களில் சங்கராசார்யரை அனுஸரிக்கவில்லை. பதஞ்சலியின் யோக ஸூத்ரத்தில் சொன்ன

படி ஏகாக்ரதை, அடக்குத லென்ற ஸாதனங்களை வர்ணிப்பதாய் சங்கராசார்யர் 19—23 வரையில் அர்த்தஞ் செய்கிறார். இவை அடக்குவதைப் பற்றியே யென்று ஸரஸ்வதி எண்ணுகிறார். ஆசார்யர் 20-வது சுலோகத்தில் 'யத்ர' என்ற பதத்திற்குச் செய்யும் அர்த்தம் பிசகென்று ஸரஸ்வதி சொல்லுகிறார்.

மேலும், ஸ்ரீ கிருஷ்ணனையே ஆராதிக்கவேண்டும், தியானிக்க வேண்டுமென்று சொல்லுமிடங்களில் (29, 30, 31) 'தத்வமஸி' யென்ற மஹா வாக்ய உபதேசமே கருத்தென்று ஸரஸ்வதி எண்ணுகிறார். மேலும், 29-வது சுலோகத்தில் அவர் ஓர் புதிய கல்பனை செய்கிறார். யோகிகள் இருவகை. ஒரே பதவியை அடைந்தாலும் வழிகள் வேறு. பதஞ்சலியின் மார்க்கத்தை அனுஸரித்துத் தியான யோகத்தை அனுஷ்டித்து ஸித்தியடைகிறவர்கள் ஒரு வகுப்பு. ஆசார்யனிடத்தில் வேதாந்தத்தை உபதேசம் பெற்று அத்வைத ஸாக்ஷாத்காரத்தை அடைகிறவர்கள் மற்றொரு வகுப்பு. இவர்களில் ஸ்ரீ கிருஷ்ணன் இவ்விருவரையும் ஒப்புக்கொள்ளுகிறாரென்றும், ஆசார்யர் இரண்டாவது வகுப்பையே ஒப்புக்கொள்ளுகிறா ரென்றும், ஸரஸ்வதியின் தாத்பர்யம். சுலோகங்கள் 30, 31 யோகத்தையும் வேதாந்தத்தையும் உபதேசிக்கின்றன வென்று குழப்பமாய் அவர் சொல்வது கவனிக்கத் தக்கது.

மேலும், 32-வது சுலோகத்தில் இரண்டுவிதமான யோகிகள் குறிக்கப்படுகின்றனவென்றும்; இருவரும் அத்வைத ஸாக்ஷாத்காரம் பெற்றவரென்றும்; ஆனால் அவர்களில் ஒருவர் பிராரப்த கர்மத்தால் பூர்ணமான ஜீவன் முக்தி தசையை அடையாதவரென்றும்; மற்றவர் ஜீவேசுவர ஐக்யத்தை ஸாக்ஷாத்காரமாய் அடைந்ததால் மனதையும் வாஸனைகளையும் ஒழித்து ஜீவன்முக்தனாய் மேலான ஆநந்தத்தை யடைந்தவரென்றும்; அவரையே அந்த சுலோகத்தில் பரம யோகியென்று சொல்லப்படுகிறதென்றும்; ஸரஸ்வதியின் வியாக்யானம்.

மேற் சொன்னவர்களில் தாழ்ந்த பதவியிலுள்ள யோகி, மேலான பதவிக்கு வருவதில் நேரும் கஷ்டத்தையே உத்தேசித்து அர்ஜுனன் 33, 34-ல் கேட்டானென்றும்; புருஷப்ரயத்னத்தாலும்

உசிதமான ஸாதனங்களாலும் பிராரப்தத்தை வெல்லலாமென்றும்; கண்ணன் பதில் சொன்னதாயும் ஸரஸ்வதியின் தீர்மானம்.

ஸ்ரீ ராமாநுஜாசார்யர்.

இந்த அத்யாயத்தின் கருத்தை வேறு விதமாய் கிரஹிக்கிறார்:— "இதில் ஈசுவரதியானமே சொல்லப்படவில்லை; ஜீவாத்மாவின் சுத்தஸ்வரூபத்தையே தியானஞ்செய்ய வேண்டுமென்று ஆத்மஸாக்ஷாத்காரமே சொல்லப்படுகிறது. கபிலருடைய ஸாங்க்ய மதத்திற்கும், பதஞ்சலியின் யோகமதத்திற்கும் உட் கருத்தாக விளங்கும் தத்வத்தை அனுஸரித்து, ஆத்மா ஒன்றையும் செய்வதில்லை, செய்விப்பதில்லை. பிரதானம் அல்லது பிரகிருதியே கர்த்தா வென்று இந்த அத்யாய சுலோகங்களை அர்த்தஞ் செய்கிறார்.

இந்த விஷயத்திற்கு ஈசுவர த்யானமே ஸம்பந்தமில்லையென்று 5, 6, 7 சுலோகங்களை அவர் வியாக்யானஞ்செய்கிறார். ஆத்மாவென்ற பதம் 5, 6, 7, 10, 15, 18, 19, 20, 25, 26, 27, 28, சுலோகங்களில் காணப்படுகிறது. நியாயமாய் இங்கே ஈசுவரனென்று அர்த்தஞ் செய்யவேண்டும். அப்படிச் செய்யாமல் வேறு விதமாய் ஆசார்யர் அர்த்தஞ்செய்கிறார். 'பரமாத்மா'வென்ற பதம் 7-வது சுலோகத்தில் ஜீவனென்று அர்த்தஞ் செய்யப்படுகிறது (பரம் ஆத்மா-வென்று அதைப்பிரித்து, ஆத்மா ஜீவனேயென்று சொல்லப்படுகிறது). இப்படியே பிரஹ்மமென்ற பதம் 27-ல் ஜீவனென்று அர்த்தஞ் செய்யப்படுகிறது. எப்படி யென்றால், பிரஹ்மம், அதாவது, பிரகிருதியைத் தவிர வேறு யிருப்பது எதோ அதே. அதாவது ஜீவனே. ஜீவன் அணுஸ்வரூபியாயிருந்தாலும் அனந்த கல்யாண குணங்களைத் தன்னிடத்தில் அடக்கிக்கொண்டிருக்கிறானென்று எண்ணப்படுகிறது.

எல்லா ஜீவன்களும் ஒன்றிற் கொன்று ஸமமே. அவையாவும் ஈசுவரனுக்கு ஸமமேயென்ற கொள்கை, 29, 30, 31-ல் வற்புறுத்தப் படுகிறது. அர்ஜுனன் 33-ல் ஸாம்யேன' வென்ற பதத்தால், இந்த ஸமத்வத்தையே ஆக்ஷேபித்ததாய்ச் சொல்லப்

படுகிறது. ஆனால் பகவான் இந்த ஸந்தேஹத்திற்கு என்ன பதில் சொன்னாரென்று தெளிவாய்த் தெரிவிக்கப்படவில்லை. மேற் சொன்ன ஸமத்வத்தை அறிவதற்குக் கர்மயோகமே ச்ரேஷ்டமான ஸாதனமென்று உபதேசித்ததாய்ச் சொல்லப்படுகிறது.

அதாவது, ஆத்ம ஸாக்ஷாத்காரமென்பதால் தேஹத்தைக் காட்டிலும் ஆத்மாவேறென்று அறிவதே தியான யோகத்தின் முடிவென்று எண்ணப்படுகிறது.

இந்த ஆறு அத்யாயங்களிலும் பக்தி யோகம் ஓரிடத்திலும் சொல்லப்படவில்லையென்றும், ஜீவாத்ம ஸ்வரூபமே விஷயமென்றும், அடுத்த 6 அத்யாயங்களிலேயே பக்தி யோகம் உபதேசிக்கப் படுகிறதென்றும், இந்த அத்யாயத்தின் கடைசி சுலோகத்தில் அது குறிப்பிடப் படுகிறதென்றும், பக்தி யோகியே மற்ற எவ்வித மான யோகிகளைக் காட்டிலும் மேலானவனென்று எங்கே சொல் லப் படுகிறதென்றும் ஸ்ரீமத் ராமாநுஜாசார்யருடைய ஸித்தாந்தம்.



## அத்யாயம் 7.

# ஞானயோகம்.

श्रीभगवानुवाच—

मय्यासक्तमनाः पार्थ योगं युंजन्मदाश्रयः ।
असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तच्छृणु ॥ १ ॥

1. என்னிடத்தில் நாடின மனதுடன், என்னையே அடைக்கலமாய்க் கொண்டு, மேற் சொன்னபடி யோகாப்யாஸம் செய்வதால் என்னைப்பற்றின ஸகல விஷயத்தையும் எப்படி நீ அறிவாயோ அந்த விதத்தைச் சொல்லுகிறேன்.

ज्ञानं तेऽहं सविज्ञानमिदं वक्ष्याम्यशेषतः ।
यज्ज्ञात्वा नेह भूयोऽन्यज्ज्ञातव्यमवशिष्यते ॥ २ ॥

2. ஸாமான்ய ஞானத்தையும் விசேஷ ஞானத்தையும் பூர்ணமாய் உனக்குச் சொல்லுகிறேன். அதை அறிந்தால் மறுபடியும் அறியவேண்டியது யாதொன்றுமில்லை.

मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये ।
यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥ ३ ॥

3. பல்லாயிரம் மனிதர்களில் ஒருவனே யோகஸித்தியடைய முயல்கிறான். அப்படி முயன்று ஸித்தியடைந்த பலரில் யாரோ ஒருவனே என்னை உண்மையாய் அறிகிறான்.

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।
अहंकार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ ४ ॥

4. பிருதிவி, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாசம், மனம், புத்தி, அகங்காரமென்று இந்த என் பிரகிருதி எட்டு விதமாய்ப் பிரிக்கப்படும்.

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥ ५ ॥

5. இதே அபராப்ரகிருதி (பகவானுக்குத் தேஹமாய் உபாதியாய் இருப்பதால் தாழ்ந்தது;) இதைக்காட்டிலும் (மேலான) என் பராப்ரகிருதி ஒன்றுண்டு; அது இந்த ஜகத் முழுவதையும் ஜீவ (பிராண) ரூபமாய் வஹிருவித் தாங்குகிறதென்றறி.

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥ ६ ॥

6. ஸகல பிராணிகளும் மேற்சொன்னதையே உத்பத்தி ஸ்தானமாய் (கர்ப்பமாய்) உடையதென்றறி. நான் ஸகல ஜகத்திற்கும் உண்டாகும் காரணம் (என் அபரா பிரகிருதி ரூபமாய் என்று கருத்து); ஸகல ஜகத்தும் என்னிடத்தில் முடிவில் அடங்குகிறது.

मत्तः परतरं नान्यत्किंचिदस्ति धनंजय ।
मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥ ७ ॥

7. என்னைத்தவிற மேலானது வேறொன்றுமில்லை. இந்த யாவும் என்னிடத்தில் ரத்னங்கள் நூலில் கோர்க்கப்படுவதுபோல் கோர்க்கப்பட்டிருக்கின்றன.

रसोऽहमप्सु कौंतेय प्रभास्मि शशिसूर्ययोः ।
प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥ ८ ॥

पुण्यो गंधः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।
जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥ ९ ॥

8. 9. ஜலத்திலுள்ள ரஸமும், ஸூர்ய சந்திரர்களின் பிரகாசமும், ஸகல வேதங்களில் பிரணவமும், ஆகாச தத்வத்தில் சப்தமும், மனிதர்களில் ஆண்மைத்தனமும், பூமியில் சுத்தமான மணமும், அக்னியில் தேஜஸும், ஸகல பிராணிகளிடத்தில் உயிரும், தபஸ்விகளிடத்தில் தபஸும் நானே.

बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥ १० ॥

बलं बलवतामस्मि कामरागविवर्जितम् ।
धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥ ११ ॥

10. 11. ஸகல பிராணிகளுக்கும் நானே என்றுமழியாத விதையாகிறேன்; புத்திமான்களின் புத்தியும், தேஜஸுள்ளவர்களின் தேஜஸும், பலசாலிகளின் ஆசை விருப்பமில்லாத பலமும், பிராணிகளிடத்தில் தர்மத்திற்கு விரோதமில்லாத காமமும் நானே.

ये चैव सात्विका भावा राजसास्तामसाश्च ये ।
मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि ॥ १२ ॥

12. பிரபஞ்சத்திலுள்ள ஸாத்விக ராஜஸ தாமஸ ஸ்வபாவங்கள் யாவும் என்னிடத்திலிருந்து உண்டானவை யென்றறி. ஆனால் அவைகளிடத்தில் நான் அடங்கியிருக்கவில்லை; அவைகளே என்னிடத்தில் அடங்கியிருக்கின்றன.

त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत् ।
मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥ १३ ॥

13. ஸகல ஜகத்தும் இந்த முக்குணங்களால் அமைக்கப்பட்ட ஸ்வபாவத்தால் மயங்கி, நான் இவைகளைக்காட்டிலும் மேலானவனென்றும் அழிவற்றவனென்றும் அறிவதில்லை.

दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यंते मायामेतां तरंति ते ॥ १४ ॥

14. முக்குணங்களால் அமைக்கப்பட்ட இந்த தெய்வத்தன்மையுள்ள என் மாயை ஸுலபமாய்த் தாண்டமுடியாதது; என்னை அடைகிறவர்களே இந்த மாயையைத் தாண்டுகிறார்கள்.

न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यंते नराधमाः ।
माययापहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥ १५ ॥

15. மாயையால் கெடுக்கப்பட்ட ஞானத்துடன் அஸுரஸ்வ பாவத்தை யடைந்து பாபங்களைச் செய்து புத்தி மயங்கின அற்ப மனிதர்கள் என்னை அடைவதில்லை.

चतुर्विधा भजंते मां जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥ १६ ॥

16. புண்ய கர்மங்களைச் செய்த மனிதர்கள், என்னை ஆராதிக்கிறார்கள். அவர் துக்கத்தால் வருந்துகிறவர்களென்றும் என் ஸ்வரூபத்தை உண்மையாய் அறிய விரும்புகிறவர்களென்றும், லௌகிக க்ஷேமத்தை யடைய விரும்புகிறவர்களென்றும், ஞானியென்றும் (பூர்ணமாய் அறிந்தவர்) நான்கு வகையாவர்.

तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः ॥ १७ ॥

17. அவர்களில் எப்பொழுதும் என்னிடத்திலேயே நாடின மனதுடன் என்னைத்தவிர வேறொன்றிலும் பக்தியில்லாமலிருக்கும் ஞானியே மேலானவன். ஞானிக்கு என்னைக்காட்டிலும் பிரியமானது வேறொன்றில்லை. எனக்கும் அவனைக் காட்டிலும் பிரியமானது வேறொன்றில்லை.

उदाराः सर्व एवते ज्ञानी त्वात्मैव मे मतम् ।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥ १८ ॥

18. இந்த நால்வரும் மேன்மை வாய்ந்த ஸ்வபாவமுள்ளவர்களே; ஆனால் ஞானியோ நானென்றே என் எண்ணம். தன் அந்தக்கரணத்தை ஒருமைப்படுத்தி என்னிடத்தில் நாட்டி என்னையே ஸர்வோத்தமமான கதியென்று அவன் எண்ணியிருப்பவனல்லவா.

बहूनां जन्मनामंते ज्ञानवान्मां प्रपद्यते ।
वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥ १९ ॥

19. அனேக ஜன்மங்களை யெடுத்து, பிறகு, ஸர்வமும்

வாஸுதேவ ஸ்வரூபமேயென்று ஞானம் பிறந்து, பிறகு என்னை யடைகிறான். அவ்விதமான மஹாத்மா கிடைப்பதரிது.

कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यंतेऽन्यदेवताः ।
तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥ २० ॥

20. ஆனால் பெரும்பாலர் பற்பல ஆசைகளால் இழுக்கப் பட்ட ஞானத்தையுடையவர்களாய்த், தங்களுடைய பூர்வ கர்மத்தால் வந்த ஸ்வபாவத்தால் தூண்டப்பட்டு வேறு தேவதைகளை அவை களுக்கேற்ற நியமத்தை யனுஷ்டித்துச் சரணமடைகிறார்கள்.

यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ।
तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥ २१ ॥

21. யார் யார் எந்தெந்த தேவதா ஸ்வரூபத்தில் பக்தி வைத்து சிரத்தையுடன் ஆராதிக்க விரும்புகிறார்களோ அவரவர்க ளுடைய சிரத்தையையே உறுதியாய் அசையாமல் நானே செய் கிறேன்.

स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते ।
लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥ २२ ॥

22. அந்த சிரத்தையுடன் கூடி அந்தத் தேவதையை ஆரா திக்க விரும்புகிறான். அதனிடத்திலிருந்து தன் எண்ணங்களை அடைகிறான். ஆனால் அவை உண்மையாய் என்னாலேயே கொடுக் கப்பட்டவை.

अंतवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।
देवान्देवयजो यांति मद्भक्ता यांति मामपि ॥ २३ ॥

23. அற்பப் புத்தியுள்ள அந்த மனிதர்கள் அடையும் பய னுக்கோ அழிவுண்டு. தேவதைகளை உபாஸிப்பவர்கள் தேவதை களின் ஸ்வரூபத்தையே அடைகிறார்கள். என்னிடத்தில் பக்தி வைத்தவர்கள் என்னையும் அடைகிறார்கள்.

अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यंते मामबुद्धयः ।
परं भावमजानंतो ममाव्ययमनुत्तमम् ॥ २४ ॥

24. நான் அழிவற்றவன், யாவற்றிற்கும் மேலானவனென்ற என் பரஸ்வரூபத்தை யறியாத புத்தியீனர்கள், நான் இதுவரையில் அவ்யக்தமாயிருந்து (வெளிப்படாமலிருந்து) வியக்தமானவனென்று (வெளிப்பட்டவனென்று) எண்ணுகிறார்கள்.

नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।
मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥ २५ ॥

25. என் யோகமாயையால் சூழப்பட்ட நான் எல்லோருக்கும் விளங்கமாட்டேன். அதனால் மயங்கின இந்தப் பிராணிகள் நான் பிறப்பற்றவன், அழிவற்றவனென்று அறிவதில்லை.

वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन ।
भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन ॥ २६ ॥

26. இதுவரையில் சென்ற பிராணிகளையும் இப்பொழுதிருக்கும் பிராணிகளையும் இனி வரும் பிராணிகளையும் நான் அறிவேன்; ஆனால் என்னை ஒருவனும் அறியான்.

इच्छाद्वेषसमुत्थेन द्वंद्वमोहेन भारत ।
सर्वभूतानि संमोहं सर्गे यांति परंतप ॥ २७ ॥

27. விருப்பம் வெறுப்பு என்றவையாலுண்டான சீதோஷ்ண ஸுகதுக்கங்களால் ஸகல பிராணிகளும் பிறக்கும்பொழுது (ஸிருஷ்டிகாலத்தில்) மயங்குகின்றன.

येषां त्वंतगतं पापं जनानां पुण्यकर्मणाम् ।
ते द्वंद्वमोहनिर्मुक्ता भजंते मां दृढव्रताः ॥ २८ ॥

28. ஆனால் புண்ய கர்மத்தைச் செய்த ஜனங்கள் அதனால் ஸகல பாபங்களையுமொழித்து, மேற்சொன்ன ஸுகதுக்காதிகளா

னுண்டாகும் மயக்கத்தினின்று விடுபட்டு, என்னை உறுதியான விரதங்களால் ஆராதிக்கிறார்கள்.

जरामरणमोक्षाय मामाश्रित्य यतंति ये ।
ते ब्रह्म तद्विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम् ॥ २९ ॥

29. பிறப்பு இறப்பு கிழத்தனம் முதலியவைகளிலிருந்து விடுபடுவதற்காக என்னையே சரணமடைந்து முயலுகிறவர்களும், பிரஹ்மஸ்வரூபத்தையும் பூர்ணமான அத்யாத்ம ஸ்வரூபத்தையும் கர்மத்தைப் பற்றின யாவற்றையும் அறிகிறார்கள்.

साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।
प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥ ३० ॥

30. அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம் என்றவைகளுடன் கூடினவனும் என்னை யார் அறிகிறார்களோ அவர்கள், என்னிடத்தில் நாடின மனதையுடையவர்களாய், தங்களுடைய தேஹத்தை விட்டுப் போகும் பொழுதும் என்னையே அடைகிறார்கள்.



# அத்யாயம் 7.

## பீடிகை.

அத்வைதம்:—தியானத்தால் பகவானைக் காணலாம்.

"ஸகல யோகிகளுக்குள் எவன் நம்பிக்கையுடையவனாய் என்னிடத்தில் அந்தக்கரணத்தை நாட்டி என்னைப் போற்றுகிறானோ, அவனே தியானயோகத்தை அனுஷ்டித்தவர்களில் மேலானவனென்று நினைக்கிறேன்" (6-47) யென்று பகவான் சொல்லி முடித்தார். ஆனால் அவருடைய உண்மையான தத்வம் எப்படிப்பட்டது. ஒருவன் தன் அந்தக்கரணத்தை யென்னிடத்தில் இவ்விதமாய் நாட்டவேண்டும். அப்படிச் செய்தால் என்னை யடையலாமென்ற விஷயத்தைத் தானே சொல்லவிரும்பி, பகவான் இந்த அத்யாயத்தை ஆரம்பிக்கிறார்.

### விஷய அட்டவணை.

1. தியானத்தால் பகவானுடைய தர்சனம்.
2. பிரபஞ்சம் பிரகிருதியிலிருந்துண்டாகும் விதம்.
3. ஈசுவரன் ஸர்வ வியாபி.
4. மாயையும் அதையொழிப்பதும்.
5. நான்குவிதமான பக்தர்கள்.
6. வேறு தெய்வங்களை உபாஸிக்கும் அக்ஞானிகள்.
7. பகவானைப் போற்றுவதே பிரம்மஞானத்தைக் கொடுக்கும்.

விசிஷ்டாத்வைதமதம்:—முதலாவது ஆறு அத்யாயங்களடங்கிய பாகத்தில் ஜீவாத்மாவை உண்மையாய்ப் பார்க்கும்விதம் சொல்லப்பட்டது. அது ஆத்மஞானத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கும் கர்மயோகானுஷ்டானத்தால் உண்டாக்கப்படும். அது நாம் அடைய

வேண்டிய பிரயோஜனமாயும், தோஷங்களில்லாதவனும், ஸகல லோககாரணனும், ஸர்வக்ஞனும், ஸகல பிரபஞ்சமாயும், வீணுகாத ஸங்கல்பத்தை யுடையவனும், மஹா விபூதிகளை யுடையவனுமிருக்கும் லக்ஷ்மீநாராயணனை அடைவதற்கு உபாயமான உபாஸனைக்கு மேற்சொன்ன ஆத்ம தத்வமே அங்கமாகும். இரண்டாவது பாகமான ஆறு அத்யாயங்களில் பரம புருஷனுடைய ஸ்வரூபமும் பக்தியோகமென்ற உபாஸனையும் சொல்லப்படுகின்றன. இதே விஷயத்தை 18-46, முதல் 18-53, 54, வரையில் சுருக்கிச் சொல்லப்படுகிறது. பக்திரூபமான உபாஸனையே பரமாத்மாவை அடைவதற்கு உபாயமென்று வேதாந்தவாக்கியங்கள் சொல்லுகின்றன. "அவனையே அறிந்து ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறான் (சுவேதாசுவதர உபநிஷத்); அவனை இவ்விதமாகத் தெரிந்து கொண்டவன் இவ்விடத்திலேயே மோக்ஷத்தையடைந்தவனாகிறான் (புருஷ ஸூக்தம்)" என்ற சுருதிகளில் சொல்லியிருக்கும் ஞானமானது, "அடே! ஆத்மா பார்க்கத் தகுந்தவன், தியானஞ் செய்யத் தகுந்தவன்; ஆத்மாவாகிய லோகத்தை உபாஸிக்க வேண்டியது (பிருஹதாரண்யக உபநிஷத்)"; "ஸத்வகுணம் மேலாயிருப்பதால் உறுதியான நினைவுண்டாகும். அதனால் ஸகல ஸம்ஸார பந்தங்களும் விலகும். (சாந்தோக்ய உபநிஷத்)"; "பராவரனான அவன் பார்க்கப்பட்டால் ஹிருதயத்தின் ஸகல பந்தங்களும் தெறிக்கின்றன; ஸகல ஸம்சயங்களும் நீங்குகின்றன. ஸகல கர்மங்களும் நசிக்கின்றன"யென்ற சுருதிகளின் அர்த்தத்தையே சொல்லவேண்டியது. தியானம், உபாஸனை யென்ற பதங்களால் இடைவிடாமல் தியானஞ் செய்து கொண்டிருப்பதும் நேராகப் பார்ப்பது போலிருப்பதும் குறிக்கப்படுகின்றன.

"இந்த ஆத்மா, பலவிதமான கேள்விகளாலும், எப்பொழுதும் தியானஞ் செய்வதாலும், மனனம் செய்வதாலும் அடையக் கூடியவனல்ல. எவனை இது கோறுகிறதோ அவனுக்கே தன் ஸ்வரூபத்தைத் தெரிவிக்கிறது. (முண்டகோபநிஷத்)" யென்றவாக்யத்தால் இன்னும் சில விசேஷங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. பரமாத்மாவால் விரும்பத் தகுந்தவனுயிருப்பதற்குக் காரணமாகவிருக்கும் வஸ்து எல்லோருக்கும் மிகவும் பிரியமாயிருக்கும். அவ்

விதமான தொடர்ச்சியை யுடைய நினைவே உபாஸனையென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்நேஹத்தை முன்னிட்ட தியானமே பக்தி. கீதை 11-53, 54-ல் சொல்லப்படும் தாத்பர்யத்தையே புருஷ ஸூக்தத்தில், "அவனை இப்படித் தெரிந்துகொண்டவன் இவ்விடத்திலேயே மோக்ஷத்தை யடைந்தவனாகிறான். மோக்ஷத்திற்கு வேறுவழியில்லை"யென்ற வாக்யத்தால் சொல்லப்படுகிறது. நாம் உபாஸிக்க வேண்டிய பரம புருஷ ஸ்வரூபத்தின் உண்மையும், பிரகிருதி அதை மறைப்பதும் பகவானிடத்தில் பிரபத்தி செய்வதே அதை விலக்கு மென்பதையும், உபாஸகர்களின் லக்ஷணங்களும், வகுப்புகளும் ஞானத்தின் மேன்மையும் இந்த ஏழாவது அத்யாயத்தில் சொல்லப்படுகிறது.

## கீதார்த்த ஸங்கிரஹம்.

தன் உண்மையும், பிரகிருதி அதை மறைப்பதும், அதை விலக்குவதற்காக பகவானையே சரணாகதி செய்வதும், பக்தர்களின் பிரிவும், ஞானியின் மேன்மையும் இந்த அத்யாயத்தின் விஷயங்கள்.

## பாட்டு

தானின்ற வுண்மையைத் தன்றனிமாயை மறைத்தமையும்
தானன்றி மாயை தனைத்தவிர்ப்பான் விரகற்றமையும்
மேனின்ற பத்தர்களால் வரில் ஞானிதன் மேன்மைகளும்
தேனின்ற செங்கமலான்றெளி வித்தனன் பார்த்தனுக்கே.

அ—து:— தான் அவதாரஞ் செய்து நின்ற ஸத்யமான ஸ்வபாவத்தைத் தன் ஒப்பற்ற பிரகிருதி மறைத்துக்கொண்டிருப்பதும், அதைப்போக்குவதற்குத் தானில்லாமல் வேறு உபாயமில்லையென்பதையும், மேன்மையுள்ள நான்குவித பக்தர்களுக்குள் ஞானியின் மேன்மையும் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகிறது.

## விஷயச் சுருக்கம்.

1, 2. ஞானமும் விக்ஞானமும் உபதேசிக்கப்படும்.

3, உண்மையான ஞானம் அரிது.

4, 5, சித் அசித்ரூபமான பிரகிருதி.

6-12. ஈசுவரஸ்வரூபம்.

13-15, அக்ஞானத்தின் காரணம்—நிவிருத்தி.

14-19, உபாஸகர்களின் லக்ஷணம்.

20-23, இதர தேவதா உபாஸகர்களின் லக்ஷணம்--அடையும் பயன்.

24. பகவானிடத்தில் ஸாதாரண மனுஷ்ய புத்தி.

25-27, யோகமாயையே அதற்குக் காரணம்.

28-30, புண்ய கர்மத்தால் என்னை அறியலாம்.

துவைதம்.— ஞானத்தை ஸம்பாதிப்பதற்கு வெளிப்படையான ஸாதனங்களாய் வழங்கும் நிஷ்காம கர்மமென்ற கர்மயோகம் 5-வது அத்யாயத்தின் முடிவில் சொல்லப்பட்டது. ஞானத்தையடைவதற்கு அடுத்தபடியாக ஏற்பட்டிருக்கும் தியானயோகம் 6-வதில் சொல்லப்பட்டது. ஆனால் அந்தத் தியானமும் பக்தியால் போஷிக்கப்பட வேண்டும்; அதுவும் சிசுபாலன், ஹிரண்யகசிபு முதலியவர்களைப் போல் துவேஷத்தால் ஏற்படக்கூடாது. ஆகையால், இந்த ஆறு அத்யாயங்களின் தொடர்ச்சியில் பரமேசுவரனுடைய மஹிமையை வர்ணித்து அவரிடத்தில் உண்மையான பக்தியை உண்டாக்குவதே உத்தேசம்.

இரண்டாவது அத்யாயத்தில் சில விடங்களில் பகவானுடைய மஹிமை வர்ணிக்கப்பட்டிருந்தாலும் ஸாதனமே பிரதானமான விஷயம். அப்படியே இந்த 6, அத்யாயங்களிலும் ஸாதனம் அங்கங்கே சொல்லப்பட்டிருந்தாலும், பகவானுடைய மஹிமையே பிரதானமான விஷயம். முதலில் ஒரு பலத்தை யடைவதற்கு ஸாதனங்களை விவரித்துப் பிறகு, அதின் ஸ்வரூபத்தை யுபதேசிப்பதே கிரமம். ஆகையால், முதல் 6 அத்யாயங்களும் காரணம், இந்த 6-ம் காரியமாகும். முதல் 6-ல் உபதேசமாய்ச் சொல்லப்பட்டதை இந்த 6-ல் அனுபவத்தில் கொண்டு வரப்படுகிறது.

## விஷயச் சுருக்கம்.

1—8, மனதிற்கு நினைப்பதற்கு ஏதாவது விஷயத்தைக் கொடுத்தால் அதை அடக்க முடியுமென்று மேலே காட்டப்பட்டது. மேலும் மேலும் புதிய வஸ்துக்களைத் தேடி அனுபவிப்பதிலேயே அதற்கு நோக்கம். ஆகையால் பகவானுடைய மஹிமைகள் எல்லையற்றவை, எண்ணிறந்தவை, எங்குமிருப்பவை. அவை விளங்கும் பொருள்களைத் தியானிப்பதில் மனதைச் செலுத்தினால் அதற்கு ஓயாமல் வேலையிருக்கும்; மற்ற லௌகிக விஷயங்களிலிருந்து திரும்பும்; காமக்ரோதங்கள் விலகும்; ஒரே யிடத்தில் நாடும்; பகவானுடைய மஹிமையைக் காணக்காண அவரிடத்தில் பக்தி பெருகும். ஆகையால் அவருடைய ஸ்வரூபத்தை ஸாமான்யமாயும் விசேஷமாயும் வர்ணிக்கவேண்டும்.

அசேதனமான பிரகிருதியின் எட்டு விதங்களும், அவைகளின் காரியமான தேஹத்தில் கட்டுப்பட்டிருக்கும் ஜீவன்களும், அதிலிருந்து விடுபட்ட முக்த ஜீவன்களும். இவை யாவற்றிற்கும் அதிஷ்டான தேவதையான பராப்ரகிருதியும், பகவானுடைய ஆக்ஞைக்கு உட்பட்டவை. ஆகையால், அவர் ஸகல வஸ்துக்களுக்கும், அவைகளின் தன்மைகளுக்கும் ஸமீப காரணமாயும் தூர காரணமாயுமிருந்து நியமிக்கிறார். முதலில் அறியவேண்டிய பொதுவான ஞானமென்பது இதே.

8—11. அவர் யாவற்றின் குணங்கள், சக்திகள், ஸாரமென்றவைகளுக்குப் பிரபு. ஈசனென்பதை நிரூபிப்பதால் அவருடைய மஹிமைகள் ஆழ்ந்து விளங்குவதே விசேஷமான ஞானம் அல்லது விக்ஞானம்.

12. "ஸத்வ, ரஜஸ், தமஸென்றவைகளின் காரியங்களும் என்னிடத்திலிருந்துண்டானவை, என்னிடத்தில் அடங்கியிருக்கின்றன; ஆனால் நான் அவைகளிடத்தில் அடங்கியிருக்கவில்லை." அதாவது, அவை எவ்விதத்திலும் அவரை ஆச்ரயித்திருக்கின்றன. அவரால் ஆளப்படுகின்றன. ஆனால் அவர் அவைகளால் கட்டுப்படுவதில்லை, மாறுதலடைவதில்லை. அவர் பரமேசுவரனென்ற கருத்திற்கு இதே பொருந்தும். அவர் இதர வஸ்துக்களோடும்,

அவைகளின் ஸாரத்தோடும் குணங்களோடும் ஒன்றென்று சிலர் கொண்ட கொள்கை தவறென்று இதனால் நிரூபிக்கப்பட்டது.

13, 14. முக்குணங்களின் சக்தியாலும், அவைகளின் அதிஷ்டானை தேவதையான சேதனப் பிரகிருதியாலும் ஜீவன்கள் மயக்கப் பட்டு, அவருடைய அருளாலன்றி அதைத் தாண்டமுடியாது.

15-19. சிலர் அவரை ஆயிரசிப்பதேயில்லை, சிலர் அடைகிறார்கள். அவர்களிலும் எல்லோரும் ஒரே உத்தேசங்கொண்டவர்களல்ல. ஏதாவது ஆபத்து நேர்ந்தபொழுது அதிலிருந்து தப்புவதற்காகச் சிலரும், ஞானத்தை ஸம்பாதிப்பதற்காகச் சிலரும், செல்வத்திற்காகச் சிலரும், அரிதாய் பகவானுக்காகவே யாரோ ஒருவனும் அவரை உபாஸிக்கிறார்கள். ஆகையால் அந்த மஹாத்மாவான ஞானி, எனக்கு மிகவும் பிரியமானவன், என் ஸந்நிதானத்தில் நித்யானந்தத்தை அனுபவித்துக்கொண்டிருக்க வேண்டியவன். அப்படிப்பட்டவன் கிடைப்பதரிது.

22, 23. மற்றவர்கள் தங்களுடைய ஸ்வபாவத்திற்கேற்ற அந்தந்த ஆசைகளால் ஏவப்பட்டு, இதர தேவதைகளை உபாஸித்து அவைகளை அடைய முயலுகிறார்கள். பரமாத்மாவோ அந்தக் காரணத்தால் அவர்களின் சிரத்தையைக் கலைப்பதில்லை. ஒரு காரியத்தைப்பற்றின ஆசையும் சிரத்தையும் உபாயங்களும் ஆசிரயமும் பலமும் ஒன்றிற்கொன்றும், கர்த்தாக்களின் ஸ்வபாவத்திற்கும், ஒத்திருக்க வேண்டுமென்ற தர்மத்தை உலகத்தார் கண்டறிந்து அனுஷ்டிக்கவேண்டுமென்பதே அவருடைய கருத்து. இதர தேவதைகளால் கொடுக்கப்படும் பயன் அழியக்கூடியது. ஈசுவரனை உபாஸிப்பவர்கள் அவரையே பயனாக அடைகிறார்கள்.

தங்களுடைய ஸ்வபாவத்தாலும் முக்குணங்களின் சக்தியாலும் அவருடைய உண்மையான ஸ்வரூபத்தை யறிய மாட்டார்கள். தங்களைப்போல நிர்ப்பந்தங்களுக்கு உட்பட்ட ஒரு ஜீவனென்றே எண்ணுவார்கள். அந்த மோகமானது புண்யகர்மத்தாலும், அவரிடத்தில் சிரத்தைவைத்து, அவரை ஆராதிப்பதாலும் நீங்கும். அப்படிச் செய்வதால், அவர் பிரபஞ்சத்தில் விளங்கும் பொழுது, அவருடைய மஹிமைகளை நன்றாய் அறிவதற்கு ஸாதகமாயிருக்கும். இப்

படி அவருடைய மேன்மையும் மஹிமையும் இன்னதென்று பொது வாயும் விவரமாயும் உபதேசித்து, இன்னும் விஸ்தாரமாய்ச் சொல்லு வதாயும் கூறுகிறார். அவருடைய அருளைப் பெறுவதான யோகம் இந்த ஞானமே. ஆகையால் இந்த அத்யாயத்திற்கு ஞானவிக் ஞானயோகமென்று பெயரிடப்பட்டது.



## அத்யாயம் 8.

# அக்ஷரப்ரஹ்ம யோகம்.

अर्जुन उवाच—

किं तद्ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम ।
अधिभूतं च किं प्रोक्तमधिदैवं किमुच्यते ॥ १ ॥

1. அர்ஜுனன்:— புருஷோத்தம! அந்த பிரஹ்மமென்பதென்ன? ஆத்மாவைப் பற்றின (அத்யாத்ம) ஞானம் எது? கர்மமென்பதெது? பூதங்களைப்பற்றின (ஆதிபூத) ஞானம் எது? தெய்வங்களைப்பற்றின (ஆதி தைவத) ஞானம் எது?

अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन्मधुसूदन ।
प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः ॥ २ ॥

2. இந்த தேஹத்தில் யக்ஞத்தைப்பற்றின (அதியக்ஞ) ஞானம் எது? எவ்விதமானது? மனதை அடக்கினவர்களால் தேஹத்தை விட்டுப் போகும்போது எப்படி அறியப்படுகிறீர்?

श्रीभगवानुवाच—

अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।
भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ॥ ३ ॥

3. பகவான்—யாவற்றிற்கும் மேலானதும் என்றுமழியாததுமான பொருளே பிரஹ்மம். அவருடைய ஸ்வபாவத்தை யறிவதே அத்யாத்மமென்று சொல்லப்படும். ஸகல பிராணிகளின் பாவங்களுடைய உத்பத்திக்குக் காரணமான விருஷ்டியே கர்மமெனப்படும்.

अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम् ।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४ ॥

4. என் அழியக்கூடிய ஸ்வபாவத்தைப்பற்றின ஞானமே

அதிபூதமெனப்படும். ஸிருஷ்டிக்குக் காரணமான புருஷனை அறிவதே அதிதைவதமெனப்படும். பிராணிகளின் இந்தத் தேஹத்தில் அந்தர்யாமியாயிருக்கும் என்னைப்பற்றின ஞானமே அதியக்ஞ மெனப்படும்.

अंतकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥ ५ ॥

5. முடிவில் என்னையே நினைத்துக்கொண்டு தேஹத்தைவிட்டுப்போகிறவன் என் ஸ்வரூபத்தையே அடைகிறான். இதைப்பற்றி ஸந்தேஹமேயில்லை.

यं यं वापि स्मरन्भावं त्यजत्यंते कलेवरम ।
तं तमेवैति कौंतेय सदा तद्भावभावितः ॥ ६ ॥

6. எந்தெந்த ஸ்வரூபத்தை நினைத்துக்கொண்டு மரணகாலத்தில் தேஹத்தை விடுகிறானோ, அந்த ஸ்வரூபத்தையே த்யானஞ் செய்வதால் அந்தந்த ஸ்வரூபத்தையே அடைகிறான்.

तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युध्य च ।
मय्यर्पितमनोबुद्धिर्मामेवैष्यस्यसंशयम् ॥ ७ ॥

7. ஆகையால் எக்காலத்திலும் என்னையே தியானஞ் செய். யுத்தஞ் செய்ய எழுந்திரு. என்னிடத்தில் மனதையும் புத்தியையும் நாட்டினால் என்னையே அடைவாய்; இதைப்பற்றி ஸந்தேஹமில்லை.

अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना ।
परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिंतयन् ॥ ८ ॥

8. மேற்சொன்ன யோகத்தை இடைவிடாமல் அனுஷ்டிப்பதால் மனதை வேறொரு வழியிலும் செல்லாமல் அடக்கி ஒருமைப்படுத்தி என்னையே தியானஞ் செய்கிறவன் தெய்வத்தன்மையுள்ள பரமபுருஷனை அடைகிறான்.

कविं पुराणमनुशासितारमणोरणीयांसमनुस्मरेद्यः ।
सर्वस्य धातारमचिन्त्यरूपमादित्यवर्णं तमसः परस्तात् ॥ ९ ॥

प्रयाणकाले मनसाचलेन भक्त्या युक्तो योगबलेन चैव ।
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक्स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥ १० ॥

9, 10. தேஹத்தை விட்டுப்போகுங் காலத்தில் மனதை அசையாமல் நிறுத்தி, பக்தியுடன் யோக பலத்தால் புருவங்களுக்கு நடுவில் பிராண வாயுவை நன்றாய் நாட்டி, எல்லாமறிந்தவரும் யாவற்றிற்கும் முந்தியே யிருப்பவரும், யாவற்றையும் நடத்தி ஆளுகிறவரும், பரமாணுவைக் காட்டிலும் நுட்பமானவரும், யாவற்றையும் தாங்குகிறவரும், மனதால் நினைக்கமுடியாத ரூபத்தையுடையவரும், இருட்டிற்கப்பால் கோடிஸூர்ய தேஜஸுடன் விளங்குகிறவருமானவரை தியானம் செய்கிறவன் அந்தத் தெய்வத்தன்மையுள்ள பரமபுருஷனையே அடைகிறான்.

यदक्षरं वेदविदो वदंति विशंति यद्यतयो वीतरागाः ।
यदिच्छंतो ब्रह्मचर्यं चरंति तत्ते पदं संग्रहेण प्रवक्ष्ये ॥ ११ ॥

11. வேதங்களின் உட்கருத்தையறிந்தவர்கள் என்றுமழியாததென்று எதைக் கொண்டாடுகிறார்களோ காமக்ரோதங்களற்று மனதையடக்கி முயலுகிறவர்கள் எதில் கலக்கிறார்களோ, எதை அடைய விரும்பி பிரம்மசர்ய விரதத்தை அனுஷ்டிக்கிறார்களோ அந்த மேலான பதவியைச் சுருக்கமாய் உனக்குபதேசிக்கிறேன்.

सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च ।
मूर्ध्न्याधायात्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥ १२ ॥

ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।
यः प्रयाति त्यजन्देहं स याति परमां गतिम् ॥ १३ ॥

12. 13. தேஹத்தில் ஏற்பட்டிருக்கும் வாயில்களான இந்திரியங்கள் யாவையும் அடைத்து, மனதை ஹிருதயத்தில் அடக்கித், தன் பிராண வாயுவை சிரஸில் கொண்டுபோய்வைத்து, யோகாப்யாஸத்தால் தாரணை யென்ற நிலைமையை அடைந்து (கர்மேந்திரிய

ஞானேந்திரிய அந்தக் கரணங்களில் செல்லும் சக்தியை அவைகளி லிருந்து திரும்பி ஆத்ம ஸ்வரூப தியானத்தில் நாடியிருக்கும்படி செய்யும் முறை), ஓமென்ற ஒரு அக்ஷர ரூபமாய் விளங்கும் பிரம்மத் தின் பெயரை உச்சரித்துக்கொண்டு என்னைத் தியானஞ் செய்து கொண்டு எவன் இந்தத் தேஹத்தைவிட்டு மரணமடைகிறானோ, அவன் ஸர்வோத்தமமான கதியை அடைகிறான்.

अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥ १४ ॥

14. வேறொன்றிலும் மனதைச் செலுத்தாமல், என்றும் இடை விடாமல், என்னையே தியானஞ் செய்யும் யோகி, எப்பொழுதும் என்னையே நாடியிருப்பதால் என்னை ஸுலபமாய் அடைகிறான்.

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवंति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ १५ ॥

15. என்னை யடைந்து ஸர்வோத்தமமான ஸித்தியை ஸம்பா தித்த மஹாத்மாக்கள் துக்கத்திற்கு இருப்பிடமும் நிலையற்றதுமான பிறப்பை மறுபடியும் அடையார்கள்.

आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौंतेय पुनर्जन्म न विद्यते ॥ १६ ॥

16. பிரம்மாவின் இருப்பிடம் முதலாயுள்ள ஸகலலோகங் களும் மாறி மாறிவிடும், ஆனால் என்னையடைந்தாலோ புனர் ஜன்ம மென்பதே கிடையாது.

सहस्रयुगपर्यंतमहर्यद्ब्रह्मणो विदुः ।
रात्रिं युगसहस्रांतां तेऽहोरात्रविदो जनाः ॥ १७ ॥

17. பிரம்மாவின் பகல் ஆயிரம் தெய்வ யுகங்களென்றும் அவருடைய ராத்ரி ஆயிரம் சதுர்யுகங்களென்றும் அறிகிறவர்கள் ராத்ரி பகல்களின் பரம ரஹஸ்யத்தை அறிந்தவர்கள்.

अव्यक्ताद्व्यक्तय: सर्वा: प्रभवंत्यहरागमे ।
रात्र्यागमे प्रलीयंते तत्रैवाव्यक्तसंज्ञके ॥ १८ ॥

18. ஸகல வஸ்துக்களும் பிரம்மாவின் பகல் ஆரம்பிக்கும் போது அவ்யக்தமான (புலப்படாத) ஸ்திதியிலிருந்து வியக்தமான ஸ்திதிக்கு வருகின்றன. மறுபடியும் பிரம்மாவின் ராத்ரி ஆரம்பிக்கும்பொழுது அந்த அவ்யக்தமென்று சொல்லப்படும் நிலையிலேயே அடங்குகின்றன.

भूतग्राम: स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।
रात्र्यागमेऽवश: पार्थ प्रभवत्यहरागमे ॥ १९ ॥

19. இந்தப் பிரபஞ்சத்திலுள்ள ஸகல பூதங்களும், தங்களுடைய ஸ்வாதீன மற்று பிரம்மாவின் ராத்ரி வந்தவுடன் இப்படி அடிக்கடி வெளிப்பட்டு வெளிப்பட்டு மறுபடியும் அடங்குகின்றன. பிறகு பிரஹ்மாவின் பகல் வந்தவுடன் வெளிப்படுகின்றன.

परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तो व्यक्तात्सनातन: ।
य: स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥ २० ॥

20. மேற்சொன்ன அவ்யக்த மென்பதைக் காட்டிலும் மேலான வேறொரு அவ்யக்தமென்ற நிலைமையுண்டு. அதற்கும் அவ்யக்தமென்றே பெயர். அது என்றுமுள்ளது. ஸகல பூதங்கள் அழிந்த காலத்திலும் அது அழிவதில்லை.

अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहु: परमां गतिम् ।
यं प्राप्य न निवर्तंते तद्धाम परमं मम ॥ २१ ॥

21. அந்த அவ்யக்தமே அக்ஷரம் என்று சொல்லப்படும். அதையே யாவற்றிற்கும் மேலான பதவியென்று சொல்லுகிறார்கள். எதையடைந்தால் மறுபடி திரும்புவதில்லையோ அதே என் பரமபதமெனப்படும்.

पुरुष: स पर: पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।
यस्यांत:स्थानि भूतानि येन सर्वमिदं ततम् ॥ २२ ॥

22. அந்தப் பரம புருஷனிடத்தில் ஸகலபூதங்களும் தங்கி

யிருக்கின்றன. அவர் இந்த யாவற்றையும் ஊடுருவி நிற்கிறார். வேறொரு விஷயத்திலும் மனதைச் செலுத்தாமல் பக்தியோகத்தை அனுஷ்டித்தால் அவரை யடையலாம்.

यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः ।
प्रयाता यांति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥ २३ ॥

23. எந்தக் காலத்தில் தேஹத்தை விட்டு மரணமடைந்தால் யோகிகள் திரும்பி இவ்வுலகத்திற்கு வரமாட்டார்களோ அந்தக் காலத்தையும் திரும்பிவரும் காலத்தையும், உனக்குச் சொல்லுகிறேன்.

अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् ।
तत्र प्रयाता गच्छंति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥ २४ ॥

24. அக்னி, தேஜஸ், பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், என்ற இவைகளில் தேஹத்தை விடும் பிரஹ்ம ஞானிகள் பிரம்மத்தை யடைகிறார்கள்.

धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम् ।
तत्र चांद्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते ॥ २५ ॥

25. புகை, ராத்ரி, கிருஷ்ண பக்ஷம், தக்ஷிணாயணம், இந்தக் காலங்களில் தேஹத்தைவிடும் யோகி சந்திரனுடைய தேஜஸை (ஸ்வர்க்கத்தை) அடைந்து பூமிக்குத் திரும்புகிறான்.

शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।
एकया यात्यनावृत्तिमन्ययाऽऽवर्तते पुनः ॥ २६ ॥

26. இப்படி அர்ச்சிராதி தூமாதியென்ற இரண்டு மார்க்கங்களும் இந்த உலகத்தோருக்கு என்று முள்ளவை. முதலாவதில் செல்லுறவன் திரும்புவதில்லை; மற்றொன்றில் செல்லுகிறவன் திரும்பிவருகிறான்.

नैते सृती पार्थ जानन्योगी मुह्यति कश्चन ।
तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन ॥ २७ ॥

27. இவ்விரண்டு மார்க்கங்களின் ரஹஸ்யத்தை நன்றாயறியும் யோகி ஒரு நாளும் மயக்கத்தையடையான். எக்காலத்திலும் இடைவிடாது யோகத்தை நீ அனுஷ்டிக்க வேண்டும்.

वेदेषु यज्ञेषु तपःसु चैव दानेषु यत्पुण्यफलं प्रदिष्टम् ।
अत्येति तत्सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाद्यम् ॥ २८ ॥

28. இந்த உபதேசத்தைப் பூர்ணமாய் அறிந்த யோகி, வேதாத்யயனத்தையும் யக்ஞங்களையும் தபஸையும் தானங்களையும் செய்வதால் அடையும் புண்யத்தைக் காட்டிலும் மேலான பயனை அடைகிறான். யாவற்றிற்கும் ஆதியும் மேலானதுமான பதவியை அடைகிறான்.

# அத்யாயம் 8.

## அத்வைதம்.

## பீடிகை.

முன் அத்யாயத்தில் அர்ஜுனன் கேட்பதற்குக் காரணமான சில விஷயங்கள் பகவானால் சொல்லப்பட்டன. பிரம்மம், அத்யாத்மம், அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம், மரண கால ஸ்மிருதி கர்மா முதலிய வழிகளைப் பற்றி அறிய வேண்டியது முக்கியமென்றதாலும், அவர்களே பகவானை உண்மையாய் அறிகிறார்களென்றதாலும், அர்ஜுனன் அதைப்பற்றி இந்த அத்யாயத்தில் கேட்பது நியாயமே. பகவான் அதற்கு ஸமாதானம் சொல்லுகிறார்.

### விஷய அட்டவணை.

1. மனது நிலைப்பதற்கு ஏழு விஷயங்களை அறிய வேண்டும்.
2. பகவானைத் தியானஞ் செய்வது.
3. அதற்குப் பிரணவமே ஸாதனம்.
4. அவரை யடைந்தவர்க்கு மறு ஜனனமில்லை.
5. பிரம்மாவின் பகலும் இரவும்.
6. மோக்ஷ ஸ்வரூபமும் மார்க்கமும்.
7. தேவயானமும் பித்ருயானமும்.
8. யோக மஹிமை.

## விசிஷ்டாத்வைதம்.

## பீடிகை.

பரப்ரஹ்மமான வாஸுதேவனே உபாஸிக்கத்தகுந்தவன் சேதனா சேதன வஸ்துக்களுக்கு சேஷியும் காரணமும் ஆதாரமுமாவான். அவை அவனுக்குச் சரீரமும் விசேஷணமுமாகும். எல்லா சொற்களாலும் சொல்லத் தகுந்தவன் அவனே. யாவற்றையும் நியமிக்கிறவன் அனந்த கல்யாண குணங்களால் அவனே மேலானவன். ஸத்வம் ரஜஸ் தமஸென்ற குணங்கள் நிறைந்து,

தேஹம் இந்திரியம் விஷயங்களாய்ப் பிரிந்து, அநாதிகாலமா யுண்டான பாபங்களில் பிரபாஹத்தைக் காரணமாயுடைய வஸ்துக்கள் இந்தப் பிரம்மத்தை மறைக்கும். மேலான புண்யங்களால் ஸம்பாதிக்கப்பட்ட பிரபத்தியே அதை நீக்கும். அவர்கள் செய்யும் புண்ய பேதங்களால் புத்தியும் பேதமடைகிறது. ஐசுவரியம் கைவல்யம் பகவானை அடைவதென்ற பயன்களில் ஆசை வைப்பதால் உபாஸகர்களும் பலவகையாவார்கள். பகவானையே அடையவேண்டுமென்று ஆசையையுடையவன், எப்பொழுதும் அவரிடத்திலேயே யிருக்கிறான். அவரிடத்திலேயே பக்தி செய்கிறான். அவருக்குப் பிரியமானவன். ஆகையால் மேலானவன், அரியவன், இந்த மூன்று அதிகாரிகளுக்கும் அறியவேண்டியவைகளும் செய்ய வேண்டியவைகளும் பேதப்படுமென்ற விஷயங்கள் இதுவரையில் சொல்லப்பட்டன. முடிவில் சொன்ன ஞான கர்ம பேதங்கள் இந்த அத்யாயத்தில் பிரித்துக்காட்டப்படுகின்றன.

## கீதார்த்த ஸங்கிரகம்.

ஐசுவரியம், ஜீவாத்மாவின் உண்மை (கைவல்யம்) பகவானுடைய திருவடிகள் இவைகளே உபாஸகர்களுக்குஅறியத்தகுந்தவை, அனுஷ்டிக்கத் தகுந்தவை. இவைகளின் பேதம் இங்கே சொல்லப்படுகிறது.

"ஆராத செல்வமும் ஆருயிர்காணு மரும்பயனும்
பேராத தன்கழற் கீழமரும் பெருவாழ்ச்சிகளும்
சோராதுகந்தவர்தூய்மதி கொள்வதுஞ் செய்வனவும்
தோரா விசயனுக்குத் திருநாரணன் செப்பினனே."

அ—து:—தன்னிலே தான் பூர்ணமாகாமல் திருப்தியைப் பெறாத ஐசுவரியத்தையும், எங்கும் நிறைந்த ஜீவாத்மாவை அனுபவிப்பதான அருமையான பிரயோஜனமும், திரும்பி வருவதில்லாத தன் திருவடிகளின் கீழே அமர்ந்திருக்கும் பெரிய வாழ்வும், புருஷார்த்தமும், பகவானை விடாமல் உபாஸிப்பவர்கள் பரிசுத்தமான புத்தியால் அறியத் தகுந்தவைகளும் செய்யத் தகுந்தவைகளும் இங்கே சொல்லப்படுகின்றன.

## விஷயச் சுருக்கம்

1, 2, பிரஹ்மம், அத்யாத்மம், கர்மம், அதிபூதம், அதிதைவம், அதியக்ஞமென்பவை என்ன? மரணகாலத்தில் பகவானை தியானிக்கும் விதமென்ன?

3, 4. பரிசுத்தமான ஜீவாத்ம ஸ்வரூபமே பிரஹ்மம். பிரகிருதியே அத்யாத்மம். பிராணிகளை யுண்டாக்கும் ஸ்திரீ புருஷச் சேர்க்கையே கர்மம். பஞ்சபூதங்களின் மாறும் குணங்களே அதிபூதம். ஜீவாத்மாவே அதிதைவம். பகவானே தேஹத்தில் அதியக்ஞம்.

5, 7. மரணகாலத்தில் பகவானைத் தியானிக்கவேண்டிய பொதுவான மார்க்கம்.

8—10. ஐச்வர்யத்தை விரும்புகிறவனுக்குத் தியான முறை.

11—13. கைவல்யத்தை விரும்புகிறவனுக்குத் தியான முறை

14. ஞானிக்குத் தியானமுறை.

15—21. ஞானியும் கைவல்யத்தை விரும்புகிறவனும் கர்ம வசத்தால் ஸம்ஸாரத்தில் திரும்பிவருவதில்லை. ஐச்வரியத்தை விரும்புகிறவன் மறுபடியும் பிறக்கவேண்டும். இவர்கள் அடையும் பதவிகளின் லக்ஷணம்.

22. பகவானை அடைவதற்கு உபாயம் பக்தியே.

23—27. தேவயானம்—பிதிருயானம்.

28. சென்ற இரண்டு அத்யாயங்களின் உபதேசத்தை அறிவதாலுள்ள பயன்.

## த்வைதம்

### பீடிகை.

முன் அத்யாயத்தில் 29, 30-வது சுலோகங்களில் சொன்ன விஷயமே விவரிக்கப்படுகிறது. அந்திய காலத்தில் பகவானை ஸ்மரி-

பதின் பிரயோஜனமும், அந்த ஸ்மரணை வருவதற்கு உபாயமும், பிரஹ்மத்தை யடையும் மார்க்கமும் இடையில் சொல்லப்படுகின்றன. ஜீவன் அடைய வேண்டிய பரகதியான ஈசுவரனுடைய மஹிமையை அறிவதாலேயே அந்த ஞாபகம் வருமென்பதே இந்த அத்யாயத்தின் கருத்து. ஆகையால் இரண்டாது பாகத்தில் இதற்கு இடமேற்பட்டது.

அக்ஷரமென்ற பதத்தால் குறிக்கப்பட்ட பிரஹ்மம், அறியக் கூடாததும் அடையமுடியாததுமான ஏதோ ஒரு வஸ்துவென்றும், கிருஷ்ண பரமாத்மாவைக் காட்டிலும் வேறென்றும் ஸந்தேஹமுண்டாகலாம். 30-வது சுலோகத்தின் முதல் பாகத்தில் சொல்லப்படும் வர்ணனையால் பிரஹ்மத்தைப்பற்றின ஞானமும் கிருஷ்ணனைப் பற்றின ஞானமும் வேறென்று ஸந்தேஹத்தை யுண்டாக்கலாம். வாஸுதேவனே பிரஹ்மமென்று சொல்லப்பட்டதால் அர்ஜுனனுக்குப் பலிதமாய் ஸந்தேஹமுண்டாயிற்று.

## விஷயச் சுருக்கம்

முன் அத்யாயத்தில் தத்வங்களையும் அவைகளின் வழியாய் பகவான் தன் சக்தியை வெளிப்படுத்துவதையும் பற்றின முக்யமான அம்சங்கள் சொல்லப்பட்டன. அதன் முடிவில் சில விஷயங்களை அறிவதாலேயே பகவானுடைய பரஸ்வரூபம் விளங்குமென்று சொல்லப்பட்டது. அவைகளில் பிரகிருதியின் எட்டுவிதங்கள் மாறி மாறி வெளிப்படும் ரூபங்களையும், அவைகளுக்கும் ஜீவனுக்கும் ஈசுவரனுக்குமுள்ள பொதுவான ஸம்பந்தத்தையும் பற்றியே அந்தப் பதங்கள் சொல்லுகின்றன.

நித்யமாயும் அவ்யயமாயும் விளங்கும் பரதத்வமான பிரஹ்மம்; இந்திரியங்களோடும் மனதோடும் கூடி ஆத்மாவிற்கு இருப்பிடமாய் விளங்கும் அத்யாத்மம்; தேஹத்திற்குப் புறம்பாய் விளங்கும் அசேதன பிரகிருதியின் அழியும் காரியங்களான அதிபூதம்; தேஹம் முதலிய பிரகிருதியின் காரியங்களுக்கு அதிஷ்டானமாய் விளங்கும் ஆத்மாவான அதிதைவம்; ஆத்மாவையும் மற்ற யாவையும் தேஹத்திற்குள்ளிருந்து நியமிக்கும் ஈசுவரனை அதியக்ஞ

மென்றவை விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டன. இதனால் இவை களுக்குள்ள பரஸ்பர ஸம்பந்தம் வெளிப்படுகிறது. பிரபஞ்சத்தி லுள்ள பலவித நிலைமைகளை உண்டாக்குகிற அனந்த கல்யாண குண நிதியாய் விளங்கும் பரம புருஷன்; மேற்சொன்ன நிபந்தனை களுக்குட்பட்டு, நானா ரூபங்களில் தங்கிக், கர்மானுபவத்தை ஸம் பாதித்து முக்தியை அடையவேண்டிய ஜீவன்கள்; அசேதனமான பிரகிருதியின் மாறுதல்களாயாவது, அல்லது இவைகளால் ஜீவன் கட்டுப்படும் நிலைமைகளாயாவது விளங்கும் தன்மைகளென்ற மூன்று வகுப்புக்குமுள்ள ஸம்பந்தத்தை ஸந்தேஹ விபரீதமின்றி அறிந்து தியானம் செய்வதே உண்மையான ஞானம்.

ஸ்ரீ கிருஷ்ணனால் உபதேசிக்கப்பட்ட யோக முறையை அறிவ தற்கு மேற்சொன்ன ஞானம் அவசியம். இவ்விதமான ஸம்பந்தங்கள் உண்மையென்று தெரிந்த பிறகும், அவைகளின் வழியாய்த் தோன் றும் ஸம்ஸார தர்மத்திலிருந்து தப்பமுடியாதென்று நிச்சயமுண்டா கிறது. முதலில் அர்ஜுனனுடைய மனதையும் புத்தியையும் மயக் கின தர்ம ஸந்தேஹத்தை நீக்குவதற்கு இந்த ஞானமே வேண்டும்.

இந்த உபதேசத்திற்கு முக்யமான நோக்கங்கள் இரண்டு. ஈசுவரனுடைய மஹிமையை நமக்கு வெளிப்படுத்துவது ஒன்று. அவரை நேருக்கு நேராய்ப் பார்த்து அனுபவிப்பதற்கு வேண்டிய முயற்சிகளை ஆத்மா ஓயாமல் செய்துகொண்டிருக்க வேண்டுமென் பது இரண்டு. "உன் வாழ் நாள்களில் ஒவ்வொரு நிமிஷத்திலும் என்னை மறவாமல் தியானித்துக் கொண்டிரு. அந்தி காலத்தில் என் ஞாபகம் உனக்கு ஸுலபமாய் வரு"மென்று தெளிவாயும் எளிதா யும் உபதேசிக்கிறார். அந்தி காலத்தில் எந்த எண்ணம் மேல் நாடி யிருக்குமோ அதே அடுத்த ஜன்மத்தில் அவனுக்குக் கிடைக்கும் பயனாகு மென்பதையும் எச்சரிக்கிறார். பிரியவிருதனுடைய மக னான பரதன் யோகியாயும் ஞானியாயும் காலத்தைக் கழித்தும், அந்திகாலத்தில் பகவானுடைய ஞாபகமின்றி மானையே நினைத்துக் கொண்டிருந்ததைப் போல், சிலர் புண்ய கர்மங்களைச் செய்தும் அந்திகால ஸ்மரணமில்லாமல் போவதற்குக் காரணமென்ன வென்றால், பக்தியும் தியானமும் உறுதியாய்ச் செய்யப்படவில்லை.

பகவானுடைய சக்தியும் மஹிமையும் இவ்விதமாய் விளங்குகின்றன வென்பதைப் பூர்ணமாய்க் கண்டு அறியாததே இதற்குக் காரணம்.

இந்த அத்யாயத்தில் சில அப்யாஸ முறைகளும், தேஹத்தை விட்டுப் போகும் ஜீவன்கள் செல்லவேண்டிய தேவயான பித்ரு யானமென்ற வழிகளும், அவைகளால் அடையப்படும் லோகங்களும் முடிவில் வர்ணிக்கப்படுகின்றன. பகவானே எப்பொழுதும் தியானிக்கப்பட வேண்டுமென்ற விதியை அனுஸரித்தே எந்தக் கர்மத்தையும் செய்துகொண்டிருந்தால், அது ஸர்வோத்தமமான முக்தியைக் கொடுக்கும். பகவானை நேருக்கு நேராய்த் தர்சனஞ் செய்வதற்கு ஸாதனமாயுள்ள பல முறைகளுக்கும் அதே அடிப்படையா யிருக்கும் அக்ஷரமென்ற பிரஹ்மத்தைப் பரமகதியாய் அறிந்து தியானம்செய்யும் யோகம் இந்த அத்யாயத்தில் சொல்லப் படும் விஷயமாகும்.



## ஒன்பதாவது அத்யாயம்.

# ராஜவித்யா ராஜ குஹ்ய யோகம்.

---

श्रीभगवानुवाच—

इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।
ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १ ॥

1. அர்ஜுனா! நீ அஸூயையற்றவனானதால் உனக்குப் பரமரஹஸ்யமான இந்த ஸாமான்ய ஞானத்தையும் விசேஷ ஞானத்தையும் உபதேசிக்கிறேன். அதையறிந்தால் உனக்கு அசுபமே நேராது. இதுவரையில் உன்னைப் பிடித்திருக்கும் அசுபமும் விலகும்.

राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।
प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २ ॥

2. இந்த உபதேசம் ரஹஸ்யங்களுக்குள் அரசனைப் போன்றது. வித்யைகளுக்குள் அரசனைப்போன்றது; இதை விட ஒருவனைப் பரிசுத்தஞ்செய்யக் கூடியது வேறொன்றும் கிடையாது. இதை அவரவர்களுடைய அனுபவத்தால் அறிந்துகொள்ளலாம். தர்மத்திற்கு ஒத்தது. வெகு ஸுலபமாய் அனுஷ்டிக்கக்கூடியது. இதனுடைய பயன் என்றும் அழியாது.

अश्रद्दधानाः पुरुषा धर्मस्यास्य परंतप ।
अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३ ॥

3. இந்தத் தர்மத்தில் நம்பிக்கையில்லாதவர்கள் என்னையடையாமல் மிருத்யுவால் ஆளப்பட்ட ஸம்ஸார வழியில் திரும்பிவருகிறார்கள்.

मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ४ ॥

4. என் அவ்யக்தமென்ற ஸ்வரூபத்தால் இந்த யாவும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. ஸகல பூதங்களும் என்னிடத்தில் தங்கியிருக்கின்றன; ஆனால் நான் அவைகளிடத்தில் தங்குவதில்லை.

न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।

भूतभृन्न च भूतस्थो ममात्मा भूतभावनः ॥ ५ ॥

5. ஆனாலும் இந்த பூதங்கள் என்னிடத்தில் தங்கவில்லையென்றும் சொல்லலாம். (அவைகளுடைய சேர்க்கையால் என் ஸ்வரூபத்திலாவது ஸ்வபாவத்திலாவது மாறுதலில்லை. ஆனால் லோகத்தில் ஒன்று வேறொன்றில் தங்கியிருப்பதால் இந்த மாறுதல் காணப்படுகிறது). ஈசுவரனை என்னுடைய யோகத்தை (மஹிமையை)ப் பார். ஸகல பூதங்களையும் தாங்குகிறேன். ஆனால் அவைகளிடத்தில் நான் இருக்கிறவனல்ல. அவை உண்டாவதற்கு நான் நிமித்தகாரணம் (குடத்திற்கு மண் உபாதான காரணம்; குயவன் நிமித்தகாரணம்).

यथाकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् ।

तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥ ६ ॥

6. எங்கும் ஸஞ்சரிக்கும் மஹா வாயு எப்பொழுதும் ஆகாச தத்வத்தில் வேரூன்றியிருக்கிறது. (ஆனால் வாயுவால் ஆகாசம் விகாரமடைவதில்லை). இப்படியே ஸகல பூதங்களும் என்னிடத்திலிருக்கின்றன வென்றறி.

सर्वभूतानि कौंतेय प्रकृतिं यांति मामिकाम् ।

कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥ ७ ॥

7. பிரஹ்மாவின் தினம் (கல்பம்) முடிந்தபொழுது ஸகல பூதங்களும் என் அபரா (தாழ்ந்த) ப்ரகிருதியில தஙகுகின்றன. மறுபடியும் பிரஹ்மாவின் தினம் ஆரம்பிக்கும்பொழுது அவைகளை வெளியில் விடுகிறேன்.

प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः ।
भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥ ८ ॥

8. பிரகிருதியின் மஹிமையால் வசமற்றுக் கிடக்கும் இந்த சராசர பிரபஞ்சம் யாவையும் இப்படி என் பிரகிருதியை ஆதாரமாய் வைத்துக்கொண்டு அடிக்கடி வெளிப்படுத்துகிறேன்.

न च मां तानि कर्माणि निबध्नंति धनंजय ।
उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥ ९ ॥

9. ஆனால் அந்தக் காரியங்களில் எனக்குப் பற்றில்லை, உபேக்ஷை செய்கிறவனைப்போல் இருக்கிறேன். இந்த ஸிருஷ்டி ரக்ஷணம் ஸம்ஹாரமென்ற கர்மங்கள் என்னைக் கட்டுப்படுத்துவதில்லை.

मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनानेन कौंतेय जगद्विपरिवर्तते ॥ १० ॥

10. என்னால் நடத்தப்படும் பிரகிருதி சராசர பிரபஞ்சத்தை பிரஸவிக்கிறது. இந்தக் காரணத்தாலேயே ஜகத் மாறி மாறி வருகின்றது.

अवजानंति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानंतो मम भूतमहेश्वरम् ॥ ११ ॥

11. ஸகல பூதங்களுக்கும் மஹேசுவரனான என் பரம ஸ்வரூபத்தை அறியாத மூடர்கள் மனுஷ்ய தேகத்தை எடுத்திருக்கும் என்னைத் தங்களைப்போன்றவனென்றெண்ணி அவமதிக்கிறார்கள்.

मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतसः ।
राक्षसीमासुरीं चैव प्रकृतिं मोहिनीं श्रिताः ॥ १२ ॥

12. அவர்களுடைய கோறிக்கைகளும் வீணே, கர்மங்களும் வீணே, ஞானமும் வீணே, புத்தியற்றவர்கள்; நிர்மலமான ஸ்வரூபத்தை மயக்கும் ராக்ஷஸ ஸ்வபாவத்தையும் அஸுரஸ்வபாவத்தையும் கொண்டவர்கள்.

महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः ।
भजंत्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम् ॥ १३ ॥

13. மஹாத்மாக்களோ பராப்ரகிருதியென்ற என் தெய்வீ ப்ரகிருதியை ஆச்ரயித்து, மனதை வேறொன்றிலும் செலுத்தாமல், நானே ஸகல பூதங்களுக்கும் ஆதியென்றும் அழிவற்றவனென்றும் என்னைப் பக்தியுடன் உபாஸிக்கிறார்கள்.

सततं कीर्तयंतो मां यतंतश्च दृढव्रताः ।
नमस्यंतश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥ १४ ॥

14. எப்பொழுதும் என்னையே கொண்டாடிக் கொண்டிருப்பார்கள்; விரதங்களை உறுதியுடன் அனுஷ்டிப்பார்கள்; விடா முயற்சியுள்ளவர்கள், பக்தியுடன் என்னை அடிக்கடி நமஸ்கரித்து, என்னிடத்திலேயே எக்காலத்திலும் மனதை நாட்டி உபாஸிப்பார்கள்.

ज्ञानयज्ञेन चाप्यन्ये यजंतो मामुपासते ।
एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥ १५ ॥

15. வேறு சிலர் தாங்கள் ஸம்பாதித்த ஞானத்தையே என் கைங்கரியத்தில் பலாபேக்ஷையின்றி உபயோகிப்பதால் (ஞானயக்ஞமென்பது இதே) என்னை உபாஸிக்கிறார்கள். அந்த ஞானம் எப்படிப்பட்டதென்றால், சிலர் என்னை ஒன்றாயும் இரண்டற்றதுமான பரப்ரஹ்மமென்றும், சிலர் ஸூர்ய சந்திர அக்னி முதலிய நானா ரூபங்களாய் விளங்குகின்றவை அந்தப் பகவானேயென்றும், சிலர் சராசர பிரபஞ்சரூபமாய் பலவிதமாய் விளங்குவதும் அந்தப் பகவானே யென்றும் என் விசுவரூபத்தைப் பலவிதங்களாய் உபாஸிக்கிறார்கள்.

अहं क्रतुरहं यज्ञः स्वधाहमहमौषधम् ।
मंत्रोऽहमहमेवाज्यमहमग्निरहं हुतम् ॥ १६ ॥

16. வேதங்களில் சொல்லப்படும் யாகங்கள் நானே; ஸ்மிருதிகளில் சொல்லப்படும் யக்ஞங்களும் நானே; (இங்கே ச்ரௌதஸ் மார்

தத கிரியைகள் சொல்லப்பட்டன.) பிதிருக்களை உத்தேசித்துக் கொடுக்கும் அன்னமும் நானே; பிராணிகளின் ஸகல பாபங்களையும போக்கி ஞானத்தையும் உத்தமகதியையும் கொடுக்கும் ஸோமமும் நானே; (முன்பு பிதிருக்களைத் திருப்தி செய்யும் 'ஸ்வதா' சொல்லப் பட்டதால், இங்கே தேவதை களைத்திருப்தி செய்யும் 'ஸ்வாஹா' வென்ற ஸோமலதையே சொல்லப்படும். அதே ஸகல பீடை களுக்கும் ஔஷதமாகும்). மேற் சொன்ன கிரியைகளில் உச்ச ரிக்கப்படும் மந்திரமும் நானே; ஹோமஞ் செய்யப்படும் நெய் முதலிய பதார்த்தங்களும் நானே; ஸகல தேவதைகளுக்கும் பிதிர்க் களுக்கும் அவர்களுடைய பாகங்களைக் கொண்டு போய்ச் சேர்க்கும் அக்னியும் நானே; இந்த ஹோமமும் நானே.

पिताहमस्य जगतो माता धाता पितामहः ।
वेद्यं पवित्रमोंकार ऋक् साम यजुरेव च ॥ १७ ॥

17. இந்த ஜகத்திற்குப் பிதாவான புருஷனும் நானே இதைப் பெற்ற தாயான பிரகிருதியும் நானே. அந்தப் பிதாவிற்குப் பிதாவானவனும் நானே. கர்மங்களுக்குத் தகுந்த பலன்களை அனுபவிக்கும்படி ஏற்படுத்துகிறவனும் நானே. அறியப்படவேண் டிய ஞானமும் நானே. பரம சுத்தமான பொருளும் நானே. ஓங்கார மும் நானே. ரிக், ஸாமம், யஜுஸ் என்ற வேதங்களும் நானே.

गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत ।
प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥ १८ ॥

18. பிராணிகள் அடைய விரும்பும் பரகதியும் நானே; பிர பஞ்சத்தைத் தாங்குகிறவனும் நானே; அதற்குப் பிரபுவும் நானே; பிராணிகளின் கர்மங்களை ஸாக்ஷி ரூபமாய்ப் பார்த்துக் கொண்டிருப் பவனும் நானே; அவைகள் ஸுகமாய் வஸிக்குமிடமும் நானே; அவை அடைக்கலம் புகும் ஸ்தானமும் நானே; பிரத்யுபகாரத்தை எதிர்பாராமல் அவர்களுக்கு என்றும் க்ஷேமத்தையே செய்கிறவ னும் நானே. பிரபஞ்சம் என்னிடத்திலிருந்தே உண்டானது; என்னிடத்திலேயே நிலைபெற்றிருக்கிறது; என்னிடத்திலேயே லய மடைகிறது. முன்னோர் தேடிவைத்த மஹாதனத்தைப் போன்ற

வனும் நானே; இவை யாவும் உண்டாவதற்கு காரணமாயும் என்றும் அழியாமலுமிருக்கும் விதையும் நானே.

तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।
अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ १९ ॥

19. நானே உஷ்ணத்தைக் கொடுக்கிறேன்; மழையைப் பெய்யும்படி செய்கிறேன்; பெய்யாமல் நிறுத்துகிறேன்; பிராணிகளின் மரணத்திற்குக் காரணம் நானே; மரணமின்றிச் செய்யும் அமிருதமும் நானே. ஸத் என்ற நித்ய பதார்த்தமும் அஸத்தென்ற அனித்ய பதார்த்தமும் நானே.

त्रैविद्या मां सोमपाः पूतपापा यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयंते ।
ते पुण्यमासाद्य सुरेंद्रलोकमश्नंति दिव्यान्दिवि देवभोगान् ॥ २० ॥

20. வேதாத்யயனம் செய்து அவைகளின் தாத்பர்யத்தையறிந்தவர்கள், யக்ஞங்களை அனுஷ்டித்து ஸோமபானஞ் செய்து, அதனால் பாபங்களிலிருந்து விடுபட்டுப் பரிசுத்தர்களாய், தங்களுக்கு ஸ்வர்க்கத்தைக் கொடுக்கவேண்டுமென்று என்னையே பிரார்த்திக்கிறார்கள். (வெளிப்படையாய் அவர்கள் உபாஸிக்கும் வஸு ருத்ர ஆதித்ய இந்த்ர அக்னி முதலிய தேவதைகள் நானேயென்று கருத்து). அப்படியே என்னால் கொடுக்கப்பட்ட புண்யலோகமான இந்திரனுடைய லோகத்திற்குச் சென்று அங்கே தேவபோகங்களை அனுபவிக்கிறார்கள்.

ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं क्षीणे पुण्ये मर्त्यलोकं विशति ।
एवं त्रयीधर्ममनुप्रपन्ना गतागतं कामकामा लभंते ॥ २१ ॥

21. பலவிதமான ஸுகானுபவங்களையுடைய அந்த ஸ்வர்க்கத்தில் அவர்கள் முன்செய்த புண்ய கர்மங்களின் பயனிருக்கும் வரையில் ஆனந்தமாய்க் காலங்கழித்து அந்தப் பயன் அழிந்தவுடன் மறுபடியும் மனுஷ்ய லோகத்திற்கு வருகிறார்கள். இப்படி வேதத்தில் சொல்லப்பட்ட உபதேசத்தையே நம்பி அனுஷ்டித்துக் கொண்டு காமங்களையே விரும்பினவர்களாய் இந்த மூன்று லோகங்

களிலும் போக்குவரத்தையே அடைகிறார்கள். (இதிலிருந்து விடு பட்டு ஸ்வாதந்தரியத்தை அடைவதில்லை)

अनन्याश्चिंतयंतो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ २२ ॥

22. என்னைத் தவிர வேறு பற்றின்றி, என்னிடத்தில் எப்பொழுதும் மனதைச் செலுத்தி, என்னையே த்யானஞ்செய்து உபாஸிப்பவர்கள் அதுவரையில் அடையாதவைகளை அவர்களுக்குக் கொடுக்கிறேன். அதுவரையில் அடைந்ததை அழியாமல் காப்பாற்றுகிறேன்.

येऽप्यन्यदेवताभक्ता यजंते श्रद्धयान्विताः ।
तेऽपि मामेव कौंतेय यजंत्यविधिपूर्वकम् ॥ २३ ॥

23. என்னைத்தவிர வேறு தேவதைகளிடத்தில் பக்திவைத்து சிரத்தையுடன் யாகம் செய்கிறவர்களும் (என்னையே முடிவில் அடைகிறார்கள்) என்னைக் குறித்தே யாகம் செய்கிறார்கள்; ஆனால், அவர்கள் அனுஷ்டிக்கும் விதி ஸரியல்ல.

अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।
न तु मामभिजानंति तत्त्वेनातश्च्यवंति ते ॥ २४ ॥

24. ஏனென்றால் நான், ஸகல யக்ஞங்களில் கொடுக்கப்படும் ஆஹுதிகளை அனுபவிக்கிறவனென்றும் அவைகளில் பூஜிக்கப்படும் தேவதைகளுக்குப் பிரபுவென்றும் என் உண்மையான ஸ்வரூபத்தை அவர்கள் அறிவதில்லை. அதனால் அவர்கள் அடையவேண்டிய பலனை அடைவதுமில்லை.

यांति देवव्रता देवान् पितृन्यांति पितृव्रताः ।
भूतानि यांति भूतेज्या यांति मद्याजिनोऽपि माम् ॥ २५ ॥

25. தேவதைகளைக் குறித்து விரத உபவாஸ நியம யாகங்களைச் செய்கிறவர்கள் தேவதைகளை அடைகிறார்கள்; பிதிருக்களை உபாஸிப்பவர்கள் பிதிருக்களை அடைகிறார்கள். விநாயககணம்,மாதிரு

கணம், பூத பிசாசம் முதலியவைகளை உபாஸிக்கிறவர்கள் அவைகளை அடைகிறார்கள்; இப்படியே என்னைக் குறித்து யாகயக்ஞங்களைச் செய்கிறவர்களும் என்னை அடைகிறார்கள்.

पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।
तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः ॥ २६ ॥

26. (மேற்சொன்னவைகளை உபாஸிப்பது வெகு கஷ்டம். ஆனால்) ஒருவன் பக்தியுடன் எனக்கு ஒரு துளஸி பில்வ தளத்தை யாவது, புஷ்பத்தையாவது, பழத்தையாவது, அதுவும் கிடைக்கா விட்டால் ஜலத்தையாவது ஸமர்ப்பித்தால் அப்படி என்னைத் திருப்தி செய்யவேண்டுமென்று முயன்று பக்தியுடன் எனக்கு அர்ப் பணம் செய்யப்பட்ட பதார்த்தத்தை ஒப்புக்கொள்ளுகிறேன்.

यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यसि कौंतेय तत्कुरुष्व मदर्पणम् ॥ २७ ॥

27. நீ எதைச் செய்தாலும், எதைப் புஜித்தாலும், எதை ஹோமஞ் செய்தாலும், எந்தத் தானஞ் செய்தாலும், எந்த தப ஸைச் செய்தாலும், அந்த யாவையும் எனக்கு அர்ப்பணமாகச் செய்.

शुभाशुभफलैरेवं मोक्ष्यसे कर्मबंधनैः ।
संन्यासयोगयुक्तात्मा विमुक्तो मामुपैष्यसि ॥ २८ ॥

28. இப்படிச் செய்வதால் சுபாசுப பலன்களைக் கொடுக்கும் கர்மபந்தத்திலிருந்து விடுபடுவாய். பலன்களை விரும்பாமல் கர்மங் களைச் செய்வதென்ற யோகாப்யாஸத்தில் தேறி அக்ஞானத்திலி ருந்து விடுபட்டு என்னை அடைவாய்.

समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।
ये भजंति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥ २९ ॥

29. ஸகல பிராணிகளிடத்திலும் நான் ஒரே விதமாயிருக் கிறேன்; நான் ஒருவனிடத்திலும் துவேஷம் வைப்பதில்லை; காரண மில்லாமல் ஒருவனிடத்திலும் பிரியம் வைப்பதில்லை. என்னைப்

பக்தியுடன் உபாஸிப்பவர்கள் என்னிடத்திலேயே இருக்கிறார்கள்; நானும் அவர்களிடத்திலேயே பிரஸன்னமா யிருக்கிறேன் (இது எங்களிருவருடைய ஸ்வபாவமே. இதற்கு வேறு காரணங்களில்லை).

अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मंतव्यः सम्यग्व्यवसितो हि सः ॥ ३० ॥

30. லோகத்தில் ஒருவன் செய்யும் தொழில் பார்வைக்கு வெறுக்கத் தக்கதாயும் கெட்டதாயும் தோன்றினாலும், அவன் வேறொன்றிலும் பற்றின்றி என்னையே உபாஸித்தால் அவனை உத்தமமான ஆசாரமுள்ள ஸாதுவென்றே நினைக்கவேண்டும். அவன் நன்றாய் விசாரித்து உத்தமமான மார்க்கத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்று நிச்சயம் செய்துவிட்டானல்லவா?

क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छांतिं निगच्छति ।
कौंतेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति ॥ ३१ ॥

31. ஆகையால் அதி சீக்கிரத்தில் அவனுடைய மனம் தர்ம மார்க்கத்திலேயே செல்லும் (அதற்குத் தகுந்தபடியே அவனுடைய ஜன்மமும் ஆசாரமும் ஏற்படும்); என்று மழியாத சாந்த நிலையை அடைவான். அர்ஜுனா! நான் சொல்வதைக் கேள். என்னிடத்தில் பக்தி வைத்த எவனும் கெடுதியை அடையமாட்டான்; இதை நிச்சயமாய் நம்பு; இதைப் பிறருக்குப் பிரதிக்ஞை செய்து சொல்.

मां हि पार्थ व्यपाश्रित्य येपि स्युः पापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यांति परां गतिम् ॥ ३२ ॥

32. பாப ஜன்மமென்று சொல்லப்பட்ட ஸ்திரீகளும் வைசியர்களும் சூத்ரர்களும் என்னை ஆசிரயித்து உபாஸித்தால் அவர்களும் ஸர்வோத்தமமான நிலையை அடைகிறார்கள்.

किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।
अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥ ३३ ॥

33. அப்படி யிருக்க, புண்ய ஜன்மமென்று சொல்லப்படும்

பிராஹ்மணர்களையும் பக்தியுடன் கூடின ராஜ ரிஷிகளையும் பற்றிச் சொல்ல வேண்டுமோ? அநித்யமாயும் துக்கமயமாயு மிருக்கும் இவ்வுலகத்தில் பிறந்து மனுஷ்ய தேஹத்தை யடைந்த பிறகு என்னை உபாஸிப்பதே நீ செய்ய வேண்டிய கடமை.

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि युक्त्वैवमात्मानं मत्परायणः ॥ ३४ ॥

34. ஆகையால் என்னிடத்திலேயே உன் மனதைச் செலுத்து; என்னிடத்திலேயே பக்தியைச்செய்; என்னைக் குறித்தே யாகங்களைச் செய்; என்னைக் குறித்தே வந்தனம், நமஸ்காரம் முதலியவைகளைச் செய்; இப்படி உன் மனதை என்னிடத்தில் நிறுத்தி என்னையே நீ அடையவேண்டிய மேலான பதவியாய் நினைத்து முயன்றால், என்னையே முடிவில் அடைவாய்.

---

## அத்தியாயம் 9.

# அத்வைதம்.

### பீடிகை.

---

**சங்கரர்.** பிரம்ம வித்யையே உயர்ந்த தர்மம்.

முந்தின அத்யாயத்தில் "ஸுஷும்ந நாடியின் வழியாய், ஹிருதயம், கழுத்து, புருவங்களின் மத்யம் என்ற விடங்களில் பிராணனை நிறுத்தி, ஸகல வழிகளையும் அடைத்து" என்று வர்ணிக்கப் படும் யோக முறை உபதேசிக்கப்பட்டது. அக்னி ஜ்யோதி முதலிய வரிசையாய் அந்தப் பெயருள்ள தேவதைகளின் லோகங்களைக் கடந்து சென்று பிரம்மத்தை யடைந்து, திரும்பி வராமலிருப்பதென்ற பிரயோஜனமும் சொல்லப்பட்டது. ஆனால் முக்தியைப் பெறுவதற்கு இதே உபாயம், வேறில்லை யென்ற ஸந்தேஹத்தை நீக்குவதற்காகப் பகவான் பிரம்ம வித்யையைப்பற்றிப் புகழ்கிறார்.

## விஷய அட்டவணை.

1. சிரேஷ்டமான தர்மம் பிரம்ம வித்யையே.
2. யாவும் பகவானிடத்திலேயே தங்கியிருக்கின்றன.
3. அவரே அவைகளுக்கு ஆதியும் அந்தமும் ஆவார்.
4. அவரைக் கர்மங்கள் கட்டுப்படுத்தாது.
5. அவரைப் பழிப்பவர்கள்.
6. பக்தர்களின் மார்க்கம்.
7. எவ்விதமான உபாஸனையும் பகவானையே அடைவிக்கும்.
8. பலாபேக்ஷையுள்ள வைதிக கர்மங்களின் பயன்.
9. பிரம்ம ஞானியின் யோக க்ஷேமத்தைப் பகவான் நடத்துகிறார்.
10. மற்ற பக்தர்கள் அவரை யறியாமல் மற்றவர்களைப் பூஜிக்கிறார்கள்.
11. அவரை உபாஸிப்பது ஸுலபம்.
12. அவர் பக்ஷபாத மில்லாதவர்.
13. பக்தியோகமானது துஷ்டர்களையும் தாழ்ந்தவர்களையும் முக்தர்களாக்கும்.
14. அந்த யோகத்தின் லக்ஷணம்.

## விசிஷ்டாத்வைதம். (பீடிகை.)

உபாஸகர்களின் பேதங்களைப்பற்றின விசேஷங்கள் இதுவரையில் சொல்லப்பட்டன. இப்பொழுது உபாஸிக்கப்படும் பரமபுருஷனுடைய மஹிமையும் ஞானிகளின் விசேஷமும் உபாஸனத்தின் ஸ்வரூபமும் சொல்லப்படுகின்றன.

## கீதார்த்த ஸங்கிரஹம்.

தன் மஹிமையும், மனுஷ்யனாய் அவதாரம் செய்திருக்கும் நிலைமையில் மேன்மையும் ஞானிகளின் விசேஷமும் பக்தி யோகமும் இந்த அத்யாயத்தின் விஷயங்கள்.

"தன் மேன்மையுந் தன் பிறப்பிற் றளராத்தனிமையையும்
புன்மேனி நண்ணினன்பாற் பிரியா வன்பராசைகளும்

*புன்மேனி விண்ணவர்பாற் புரியாத தன் பத்தியையும்*
*நன்மேனி நாரணன்ருெ னர்னுக்கு நவின்றனனே."*

அ—து:—தன் மேன்மையும் தன் அவதாரங்களில் நழுவாத ஒப்பற்ற ஸ்வபாவமும் பலவிதமான சரீரங்களை அடைந்த (சேதனு சேதன வஸ்துக்களைச் சரீரமாயுடைய) தன்னிடத்தில் என்றும் அகலாத பக்தியைச் செய்பவர்களின் ஆசைகளும் அற்ப சரீரத்தையுடைய இதர தேவதைகளை உபாஸிக்காமல் தன்னையே உபாஸிப்பதும் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகின்றன.

## விஷயச் சுருக்கம்.

**1—3.** பக்தியோகத்தின் மஹிமை.

**4—8.** பகவானுக்கும் சித் அசித் ரூபமான பிரபஞ்சத்திற்குமுள்ள ஸம்பந்தம்—அவருடைய ஸங்கல்பத்தாலேயே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் நடக்கின்றன.

**9.** மேற்சொன்ன கர்மங்களால் அவருக்குத் தோஷம் ஏற்படாது—அபிமானமற்றவர்.

**10.** அவருடைய நியமனத்தால் பிரகிருதி இந்தக் கார்யங்களைச் செய்கிறது.

**11—12.** பகவானைக் கேவலம் மனிதனுய் நினைப்பவர்களின் கதி.

**13—14.** மஹாத்மாக்கள் அவருடைய உண்மையை யறிந்து உபாஸிக்கிருர்கள்—நாமகீர்த்தனம்.

**15.** ஞானிகள் அவரை ஒரே வஸ்துவாய் உபாஸிக்கிருர்கள்.

**16—19.** ஸகல ஜகத்தும் அவருடைய ஸ்வரூபம். அவைகளின் செயல்களும் அவருடைய சக்திகளே. நானுவிதமான நாமரூப பிரபஞ்சம் அவருக்குச் சரீரம். பலவகையான தோற்றமும் அவரேயென்று உபாஸிக்கிருர்கள்.

**20—21.** கர்ம பயன்களை விரும்புகிறவர்களின் நடத்தை.

**22.** மஹான்களின் தியானம்—அடையும் நித்யானந்தம்.

**23—25.** இதர தேவதைகளை உபாஸிப்பவர்கள் என்னையே பூஜிக்கிருர்கள். ஆனல் அதை அறிவதில்லை.

25. பக்தியுடன் பகவானுக்குத் தன்னாலியன்றதை அர்ப்பணஞ் செய்தால் அவர் பிரியத்துடன் ஏற்றுக்கொள்ளுகிறார்.

27. எதையும் பகவானுக்கு அர்ப்பணமாகவே செய்.

28. கர்மபந்தம் அழியும்—வைராக்யமுண்டாகும்—பகவானை அடையலாம்.

29. கண்ணனைச் சரணமடைகிறவர்களிடத்தில் அவருக்குப் பேதபுத்தியில்லை. ஜாதி, வர்ணம், ஆச்ரமம், தனம், அதிகாரம், வித்யை முதலியவை அவருக்குப் பிரியத்தையாவது வெறுப்பையாவது உண்டாக்காது. பக்தியே பிரதானம்.

30. முன்பு தன் தர்மத்தை மீறி நடந்தவனானாலும், கண்ணனையே சரணமாயடைந்து உபாஸித்தால், அவன் பரம ஸாதுவே. அவரே ஸர்வோத்தமமான கதியென்று அவனுக்கு உறுதியுண்டானதே போதும்.

31. கிருஷ்ணனிடத்தில் அவன் வைத்த உறுதியான பக்தியே எல்லா இடையூறுகளையும் போக்கும்—கடவுளை அண்டினவன் கெடுதியை அடைவதில்லை.

32. பூர்வ ஜன்ம பாபத்தால் ஸ்திரீ வைச்யன் சூத்ரனாயிருப்பவர்களும் அவரை அண்டினால் பரகதியடையலாம்.

33. ராஜர்ஷியான அர்ஜுன! நீ என்னை உபாஸிக்கத் தடையென்ன?

34. அவரை ஸ்மரிப்பதும், பக்திசெய்வதும், நமஸ்கரிப்பதும், அவருக்கு அர்ப்பணமாய் யாக யக்ஞங்களைச் செய்வதும், மோக்ஷத்தை அடைவதற்கு உபாயம்.

## த்வைதம். (பீடிகை)

ஏழாவது அத்யாயத்தின் முடிவில் பகவான், ஸாதி தைவம் முதலான பதங்களால் சுருக்கமாய்க் குறிப்பிடப்பட்டு, இந்த அத்யாயத்தில் அவருடைய சக்திகள் விரிவாயும் ஸம்பூர்ணமாயும் சொல்லப்படுகின்றன. இந்த அத்யாயம் ஏழாவதற்குப் பின்னால் ஏன் வைக்கப்படவில்லை யென்று நினைக்கலாம். ஆனால் இவ்விரண்டிற்கும் ஸம்பந்தம் ஏற்படுவதற்கு, அதி பூதம் முதலிய பதங்களின்

தாத்பர்யத்தை விளக்கிக் காட்டவேண்டியது அவசியமானதால் அது எட்டாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## விஷயச் சுருக்கம்.

7-வது 8-வது அத்யாயங்களில் சொன்ன விஷயங்கள் இந்த அத்யாயத்தில் விஸ்தாரமாய்ச் சொல்லப்படுகின்றன. அதற்குப் பீடிகையாகும் ராஜவித்யை யென்றால், பகவானுடைய வாசா மகோசரமான சக்திகளையும், ஸகல சக்திகளையும், ஸகல பதார்த்தங்களின் வழியாய் அவர் பிரகாசிப்பதையும் அறிவதைத் தவிர வேறென்ன. முந்தின இரண்டு அத்யாயங்களில், ஸிருஷ்டியிலுள்ள பதார்த்தங்களின் பொதுவான வகுப்பும் பரஸ்பர ஸம்பந்தமும், அவைகள் முடிவில் போய்ச் சேருமிடமும் மாத்திரம் சொல்லப் பட்டன. ஸ்ரீ ஹரியான கிருஷ்ணன் ஸகல பொருள்களிடத்தி லும் அந்தர்யாமியாய் ஸம்பந்தப்பட்டும், அவைகளால் எவ்விதத் திலும் பாதிக்கப்படாமலும், விளங்குவது இங்கே அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்படுகிறது.

இந்த ஞானம் தர்மத்திற்கு ஒத்தது. அது ஸர்வேசுவர னை பரம புருஷன் தர்ம ஸ்வருபியாய், யாவற்றையும் தாங்குகிறு ரென்பதை யறியவேண்டும். மற்ற காரணங்களுக்கும் காரியங்களுக் கும் பின்னால் பரம காரணமாய் எது விளங்குகிறதோ அதே தர்மம். ஆகையால் "இந்தப் பிரபஞ்சமனைத்தும் என்னால் வியாபிக்கப்படு கிறது; ஆயினும், நான் வியக்தமாகிறதில்லை; யாவற்றையும் நான் தரிக்கிறேன்; என்னை ஒன்றும் தரிப்பதில்லை. எனக்கும் மற்றவை களுக்கு முள்ள வெளிப்படையான ஸம்பந்தத்தால் மாத்திரம் என்னை யறிய முடியாது. மேலும், என் சக்திகளையும் ஸ்வபாவத் தையும் அது எவ்விதத்திலும் கட்டுப்படுத்தாது, மாற்றாது. மஹா வாயு பல பதார்த்தங்களுடன் ஸம்பந்தப்பட்டுக்கொண்டு ஸஞ் சரித்தாலும், அவைகளின் குணங்களை யடையாமலும், தன் குணங் களை விடாமலும், பற்றில்லாமலும் விளங்குகிறது. அப்படியே நானும் ஸகல பூதங்களிலும் பற்றின்றி வஸிக்கிறேன்.

பிரகிருதியின் மூலமாய்ப் பிரத்யக்ஷமாயும் மறைவாயும் நான் பிரபஞ்சத்தை உண்டாக்கி அழிக்கிறேன். இந்தக் கர்மம் என்னைப் பாதிக்காது; எனக்கு அதில் யாதொரு பற்றுமில்லையல்லவா? ஒன்றை அடையாமல் விரும்பினால் அதில் பற்றுண்டாகும். பரி பூர்ண ஸ்வபாவமுள்ள எனக்கு விருப்பமுமில்லை, பற்றுமில்லை. கால தேசவஸ்துக்களால் தடைபட்ட பிராணிகளுக்கே அந்த நிர்ப்பந்த முண்டு. ஜீவன்கள் பூர்வகர்மத்தை அனுஸரித்து வெவ்வேறு ஸ்வ பாவத்தையும் செய்கையையும் கதியையும் உடையவையென்று பகுத்தறிய வேண்டும். மஹாத்மாக்களுக்கு மாத்திரம் என் உண் மையான ஸ்வரூபம் விளங்கும். "யாவற்றிற்கும் நானே காரணம். என்று மறியாதவ" னென்று ஒரே மனதுடன் நிகரற்ற பக்தியோடு என்னையே எக்காலத்திலும் ஸ்மரித்துக்கொண்டும், யோகத்தை அப்யாஸம் செய்துகொண்டும், என்னை ஆராதிப்பார்கள். தங்களு டைய இயற்கையான தர்மத்தைப் பலாபேக்ஷையின்றி அனுஷ்டிப்ப தால், ஞானமும் ஆனந்தமும் விருத்தியடையும். ஒவ்வொரு வைதிகக்ரியையும் ஒவ்வொரு லௌகிக கர்மமும் என்னை அடைவ தற்கு ஸாதனமென்றும், நான் அந்தந்த ரூபமாய் விளங்குகிறேனென் றும் நன்றாயறிந்தே அவர்கள் நடக்கிறார்கள்.

ஆனால், கேவலம் வேதத்தின் கர்ம காண்டத்தையே நம்பி யிருப்பவர்கள், ஸ்வர்க்கத்தில் அனுபவிக்கப்படும் ஸுகங்களை உத் தேசித்தே யாகங்களைச் செய்கிறார்கள். அதனால் அவர்கள் ஜனன மரணங்களை ஓயாமல் அடைகிறார்கள். ஆனால் மஹாத்மாக்கள் என்னையே தியானிக்கிறார்கள்; நானும் அவர்கள் பரமபதத்தை அடையும்படிக்கும், அதிலிருந்து ஸம்ஸாரத்திற்குத் திரும்பாத படிக்கும் அவர்களுக்கு அனுக்ரஹஞ்செய்கிறேன். எவனும் தான் எதையடைய உத்தேசித்துக் கர்மங்களைச் செய்கி றானோ, அந்தத் தேவதையையோ, பதவியையோ அடைவான். என்னை ஆராதிப்பவர்கள் என்னை அடைவார்கள். இதை அறியாமல் அல்ப பலன்களை உத்தேசித்து மற்ற தேவதைகளை உபாஸிப்பவர்கள் அவைகளையே அடைவார்கள். ஆனால் என்னை உபாஸிப்பதில் கொஞ்சமேனும் சிரமமில்லை. என் பக்தன் எந்தக் காரியத்தைத் தன் தர்மமாகச் செய்துகொண்டிருந்தாலும் அதைப் பக்தியுடன்

செய்யவேண்டியது மாத்திரமே. ஆகையால் அர்ஜுனா! நீயும் உனக்கேற்பட்ட தர்மத்தைச் செய். எனக்கு அர்ப்பணம் செய்; அதனால் அந்தக் கர்மமே மோக்ஷத்திற்கு உபாயமாகும். ஸம்ஸாரத்தைக் கொடுக்காது. நான் சிலரிடத்தில் பிரீதி வைக்கிறேனென்றும் சிலரிடத்தில் த்வேஷம் வைக்கிறேனென்றும், பக்ஷபாத தோஷத்தை என்மேல் சிலர் சுமத்துவது முற்றிலும் பிசகு. அது அந்தந்த ஜீவன்களுடைய ஸ்வபாவத்தையும் கர்மங்களையும் பொறுத்தது.

ஆகையால் ஸன்மார்க்கத்தில் ஒருவனுக்கு ஏற்கனவே புத்தி திரும்பிவிட்டால் அவன், சில அற்ப விஷயங்களில் தவறினாலும், என்னிடத்தில் பக்தி வைத்தவனே. அவனுக்கு எவ்விதமான இடையூறுகளும் கஷ்டங்களும் நேர்ந்தாலும் அழிவில்லை; ஆகையால் ஸகல கர்மங்களையும் தர்மங்களையும் அனுஷ்டிப்பதின் பரம ரஹஸ்யம் இதே. என்னிடத்திலே உன் மனதை நாட்டு; என் பக்தனாக விரு. என்னைக் குறித்தே யாகங்களைச் செய். நமஸ்கார முதலிய கர்மங்களையும் செய். இப்படி உன் மனதைப் பழக்கு. என்னையே நீ அடைய வேண்டிய கதியாக வைத்துக்கொள். என்னை அடைவாயென்பதில் ஸந்தேஹமில்லை'' யென்று, மோக்ஷத்தையடையும் மார்க்கத்தில் ஜீவனை வெகுதூரம் ஒத்தாசை செய்யும் இந்த ராஜவித்யை ராஜ ரஹஸ்யமென்று ஞானமுறை உபதேசிக்கப்பட்டது.



## அத்யாயம் 10.

# விபூதி விஸ்தரயோகம்.

---

श्रीभगवानुवाच

भूय एव महाबाहो शृणु मे परमं वचः ।
यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया ॥ १ ॥

1. அர்ஜுனா! உனக்கு ஹிதத்தைச் செய்ய விரும்பின என் முடிவான உபதேசத்தைக் கேள்; அதைக் கேட்டு நீ அளவற்ற ஆனந்தத்தை அடைவாய்.

न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥ २ ॥

2. (என்னைத் தவிற இதை உனக்கு வேறொருவரும் சொல்ல முடியாது.) தேவ கணங்களும் மஹரிஷிகளும் என் உத்பத்தியை அறியார்கள்; ஏனென்றால் நான் தேவர்களுக்கும் மஹர்ஷிகளுக்கும் எவ்விதத்திலும் ஆதி காரணமா யிருக்கிறேன்.

यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् ।
असंमूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥ ३ ॥

3. நான் பிறப்பற்றவன்; ஆதியற்றவன்; ஸகல லோகங்களுக்கும் மஹேசுவரன் என்று அறிகிறவன், ஸகல மனுஷ்ய கோடிகளுக்குள் மோஹ மற்றவனாய் ஸமஸ்தபாபங்களி லிருந்தும் விடுபடுகிறான்.

बुद्धिर्ज्ञानमसंमोहः क्षमा सत्यं दमः शमः ।
सुखं दुःखं भवो भावो भयं चाभयमेव च ॥ ४ ॥

अहिंसा समता तुष्टिस्तपो दानं यशोऽयशः ।
भवंति भावा भूतानां मत्त एव पृथग्विधाः ॥ ५ ॥

4, 5. புத்தி, ஞானம், மயக்கமின்மை, பொறுமை, ஸத்யம், தன்னடக்கம், சாந்தி, ஸுகம், துக்கம், ஸத், அஸத், பயம், பய

யின்மை, அஹிம்ஸை, ஸமபுத்தி, திருப்தி, தவம், தானம், கீர்த்தி, அகீர்த்தி யென்ற ப்ராணிகளின் பலவித ஸ்வபாவங்கள் என்னிடத்திலிருந்தே உண்டாகின்றன.

महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा ।
मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजाः ॥ ६ ॥

6. ஏழு மஹர்ஷிகளும், புராதனமான நான்கு குமாரர்களும் (ஸனக, ஸனந்தன, ஸனத்குமார ஸனத்ஸுஜாத), பதினான்கு மனுக்களும் என் - தன்மையையுடையவர்கள். என் மனதின் ஸங்கல்பத்தால் உண்டானவர்கள். அவர்களிடத்திலிருந்து இந்த லோகங்களும் பிராணிகளும் உண்டாயின.

एतां विभूतिं योगं च मम यो वेत्ति तत्त्वतः ।
सोऽविकंपेन योगेन युज्यते नात्र संशयः ॥ ७ ॥

7. இந்த என் மகிமையையும் சக்தியையும் உண்மையாய் அறிகிறவன் ஸர்வோத்தமமான யோக நிலையில் கலங்காமல் நிற்கிறான். இதைப் பற்றி ஸந்தேஹமே யில்லை.

अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्तते ।
इति मत्वा भजंते मां बुधा भावसमन्विताः ॥ ८ ॥

8. ஞானிகள் என்னையே த்யானஞ் செய்துகொண்டு (என் தன்மையை உடையவர்களாய்) "யாவற்றிற்கும் நானே உத்பத்தி ஸ்தானம்; என்னிடத்திலிருந்தே யாவும் வெளிப்படுகின்றன" வென்று என்னை உபாஸிக்கிறார்கள்.

मच्चित्ता मद्गतप्राणा बोधयंतः परस्परम् ।
कथयंतश्च मां नित्यं तुष्यंति च रमंति च ॥ ९ ॥

9. அவர்கள் என்னிடத்திலேயே தங்களுடைய சித்தத்தை நாட்டுகிறார்கள். நானே அவர்களுடைய ஜீவனாதாரம். அவர்கள் தங்களுக்குள் என்னைப்பற்றின விஷயங்களையே பேசிக்கொண்டு எப்பொழுதும் ஸந்தேஹங்களைத் தீர்த்துக் கொள்ளுகிறார்கள். இப்

படிக் காலங் கழிப்பமீத அவர்களுக்குப் பரம திருப்தியைக் கொடுக்கும். இதைத்தவிற அவர்கள் ஆனந்த மடையும் விஷயம் வேறில்லை.

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयांति ते ॥ १० ॥

10. இப்படி என்னிடத்தில் எல்லையற்ற ப்ரீதி வைத்து எப்பொழுதும் என்னிடத்திலேயே மனதைச் செலுத்தி ஸேவிக்கிறவர்களுக்கு நான் ஞான யோகத்தை அருளுகிறேன். அதனுல் அவர்கள் என் ஸ்வரூபத்தை நன்ருயறிந்து முடிவில் என்னையே அடைகிருர்கள்.

तेषामेवानुकंपार्थमहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥

11. அவர்களிடத்தில் எனக்குள்ள எல்லையற்ற கருணையால், அவர்கள் ஸர்வோத்தமமான ச்ரேயஸை அடைய வேண்டுமென்று விரும்பி, நான் அவர்களுடைய ஆத்மாவிலேயே அந்தர்யாமிரூபமாய் இருந்து கொண்டு, அக்ஞானத்தால் உண்டான தமோ குணத்தை, ஸ்வயம் பிரகாசமுள்ள ஞான தீபத்தால் நாசஞ் செய்கிறேன் (பகவானுடைய கருணையாலேயே அவருடைய ஸ்வரூபஞானம் கிடைக்கலாமென்பது).

अर्जुन उवाच—

परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् ।
पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥ १२ ॥

12. அர்ஜுனன்—நீரே பரப்ரஹ்மம், பரமபதம், பரமபவித்ரமான (யாவற்றையும் பரிசுத்தஞ் செய்யக்கூடிய சக்தி) புராண புருஷன் (என்று முள்ளவர்), தைவத்தன்மை பொருந்தினவர், ஆதி தைவம், பிறப்பற்றவர், பரமேசுவரன்.

आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।
असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥ १३ ॥

13. என்று ஸகல ரிஷிகளும் தேவர்ஷியான நாரதரும் அஸிதர், தேவலர் வியாஸரென்றவர்களும் கொண்டாடுகிறார்கள். அவர்களுடைய கொள்கையை உறுதிப்படுத்தி நீரே இப்பொழுது எனக்கு அதை உபதேசித்திருக்கிறீர்.

सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव ।
नहि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥ १४ ॥

14. நீர் எனக்கு இதுவரையில் சொன்ன யாவும் உண்மையென்றே நம்புகிறேன். தேவதைகளும் தானவர்களும் உமது ஸ்வரூபத்தை அறியார்கள்.

स्वयमेवात्मनात्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।
भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥ १५ ॥

15. நீரே உமது ஞானத்தால் உம்மை அறிவீர். புருஷோத்தம! ஸகல பூதங்களுக்கும் உத்பத்தி ஸ்தானமே! அதிபதியே! தேவ தேவனே! ஜகத்பதியே!

वक्तुमर्हस्यशेषेण दिव्या ह्यात्मविभूतयः ।
याभिर्विभूतिभिर्लोकानिमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥ १६ ॥

16. எந்த விபூதிகளால் (உமது மஹிமையை விசேஷமாய் வெளிப்படுத்தும் ஸ்வரூபங்களால்), இந்தப் பிரபஞ்சம் யாவையும் வியாபித்து நீர் நிற்கிறீரோ, அந்த உமது திவ்ய விபூதிகளை ஒன்று விடாமல் எனக்குச் சொல்லும்படி வேண்டுகிறேன்.

कथं विद्यामहं योगिंस्त्वां सदा परिचिंतयन् ।
केषु केषु च भावेषु चिन्त्योऽसि भगवन्मया ॥ १७ ॥

17. மஹாயோகி! உம்மையே எப்பொழுதும் தியானஞ் செய்து கொண்டு நான் உம்மை உண்மையாய் அறியும் வழியென்ன? எந்தெந்த ஸ்வரூபங்களாய் நான் உம்மைத் தியானஞ் செய்ய வேண்டும்?

विस्तरेणात्मनो योगं विभूतिं च जनार्दन ।
भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम् ॥ १८ ॥

18. உமது விபூதியையும் சக்தியையும் விஸ்தாரமாய் மறுபடியும் எனக்குச் சொல்லும். அமிருதத்தைப் போல் மதுரமாய் பிறப்பிறப்பை ஒழிக்கும் உமது உபதேசத்தைக் கேட்டுக்கொண்டிருக்கும் எனக்குத் திருப்தியில்லை யல்லவா?

श्रीभगवानुवाच—
हंत ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः ।
प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यंतो विस्तरस्य मे ॥ १९ ॥

19. பகவான் — அர்ஜுனா! நீ இப்படி கேட்டதைப் பற்றி நான் மிகுந்த ஸந்தோஷமடைகிறேன். என் தைவத் தன்மையுள்ள விபூதிகளில் முக்கியமானவைகளை உனக்குச் சொல்லுகிறேன்; ஏனென்றால் விஸ்தாரமாய்ச் சொல்வதற்கோ எல்லையில்லை.

अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।
अहमादिश्च मध्यं च भूतानामंत एव च ॥ २० ॥

20. ஸகலப் பிராணிகளின் ஹிருதயத்தில் ஆத்மாவாய் விளங்கும் அந்தர்யாமியே நான். அவைகளுக்கு ஆதியும் நடுவும் முடிவும் நானே.

आदित्यानामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान् ।
मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥ २१ ॥

21. பன்னிரண்டு ஆதித்யர்களுக்குள் விஷ்ணுவென்றவன் நானே; பிரகாசிக்கும் பதார்த்தங்களுக்குள் நான் ஸூர்யன்; நாற்பத்தொன்பது மருத்துகளுக்குள் மரீசி; நக்ஷத்திரங்களுக்கு சந்த்ரன்;

वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः ।
इंद्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥ २२ ॥

22. நானே, வேதங்களுக்குள் ஸாமவேதம்; தேவர்களுக்குள் இந்த்ரன்; இந்திரியங்களுக்குள் மனஸ்; பிராணிகளுக்குள் சைதன்யம் (அறிவு);

रुद्राणां शंकरश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।
वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥ २३ ॥

23. நானே, பதினொரு ருத்ரர்களுக்குள் சங்கரன்; யக்ஷர்கள் ராக்ஷஸர்களுக்குள் குபேரன், எட்டு வஸுக்களுக்குள் பாவகன் (இது அக்னிக்கும் பெயர்); பெரிய சிகரங்களுள்ள மலைகளுக்குள் மேரு;

पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।
सेनानीनामहं स्कंदः सरसामस्मि सागरः ॥ २४ ॥

24. நானே, புரோஹிதர்களுக்குள் சிரேஷ்டரான பிருஹஸ்பதி; ஸேனாநாயகர்களுக்குள் ஸ்கந்தர்; ஜலந்தங்குமிடங்களுக்குள் ஸமுத்ரம்;

महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।
यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥ २५ ॥

25. நானே, மஹர்ஷிகளுக்குள் பிருகு; சொற்களுக்குள் ஏகாக்ஷரமான பிரணவம்; யக்ஞங்களுக்குள் ஜபயக்ஞம்; ஸ்திரமான பதார்த்தங்களுக்குள் ஹிமாலயம்;

अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणां च नारदः ।
गंधर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः ॥ २६ ॥

26. நானே எல்லா விருக்ஷங்களுக்குள் அரசமரம்; தேவரிஷிகளுக்குள் நாரதர்; கந்தர்வர்களுக்குள் சித்ரரதன்; ஸித்தர்களில் கபிலமுனி;

उच्चैःश्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम् ।
ऐरावतं गजेंद्राणां नराणां च नराधिपम् ॥ २७ ॥

27. அசுவங்களுக்குள் அமிருதத்திற் கிருப்பிடமான திருப்பாலகடலில் பிறந்த உச்சைசிரவஸ் என்ற இந்திரனுடைய குதிரை நானே; உத்தமமான யானைகளுக்குள் ஐராவதம்; மனிதர்களுக்குள் அரசன்.

आयुधानामहं वज्रं धेनूनामस्मि कामधुक् ।
प्रजनश्चास्मि कंदर्पः सर्पाणामस्मि वासुकिः ॥ २८ ॥

28. நான் ஆயுதங்களுக்குள் வஜ்ராயுதம்; பசுக்களுக்குள் காமதேனு; பிரஜைகளுண்டாவதற்குக் காரணமான மன்மதன்; ஸர்ப்பங்களுக்குள் வாஸுகி.

अनंतश्चास्मि नागानां वरुणो यादसामहम् ।
पितृणामर्यमा चास्मि यमः संयमतामहम् ॥ २९ ॥

29. நான் நாகங்களுக்குள் ஆதிசேஷன்; ஜலதேவதைகளுக்குள் வருணன்; பிதிர்க்களுக்குள் அர்யமா; தண்டிக்கிறவர்களுக்குள் யமன்.

प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् ।
मृगाणां च मृगेंद्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥ ३० ॥

30. நான் தைத்யர்களுக்குள் பிரஹ்லாதன்; பிராணிகள் தந்தம் கர்மபலன்களைத் தகுந்த காலத்திலும் இடத்திலும் அனுபவிக்கும்படி கூட்டி வைக்கும் சக்திகளுக்குள் காலதேவதை; மிருகங்களுக்குள் ஸிம்ஹம்; பக்ஷிகளுக்குள் கருடன்.

पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥ ३१ ॥

31. பரிசுத்தஞ் செய்கிற பதார்த்தங்களுக்குள் நான் வாயு; ஆயுதந் தரித்தவர்களுக்குள் ராமசந்திரன்; மீன்களுக்குள் மகரம்; நதிகளுக்குள் நான் கங்கை.

सर्गाणामादिरंतश्च मध्यं चैवाहमर्जुन ।
अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥ ३२ ॥

32. எண்ணிறந்த ஸிருஷ்டிகளுக்கு ஆதிகாரணம் நானே; அவைகளை நடப்பிப்பதென்ற நடுவு நிலையும் நானே; அவைகளின் காரியமான பிறகு அவைகளை முடிப்பவனும் நானே; வித்யைகளில் நான் ஆத்மவித்யை; வாதம் செய்வது, வீண் பேச்சு, விதண்டா

வாதம் (பிடிவாதத்தால் கக்ஷி கட்டிப் பேசுவது) என்றவைகளுக்குள் அர்த்த நிச்சயம் செய்வதற்குக் காரணமான வாதம் நானே.

अक्षराणामकारोऽस्मि द्वंद्वः सामासिकस्य च ।
अहमेवाक्षयः कालो धाताऽहं विश्वतोमुखः ॥ ३३ ॥

33. அக்ஷரங்களுக்குள் நான் 'அ' என்னும் அக்ஷரம்; தத்புருஷன் கர்மதாரயன் பஹுவ்ரீஹி த்வந்த்வம் முதலிய ஸமாஸங்களுக்குள் த்வந்த்வம் நானே; என்றும் மழியாத காலம் நானே (இங்கே அகண்டமான காலம் சொல்லப்படுகிறது); ஸர்வவியாபியான நானே கர்ம பலன்களை அனுபவிக்கும்படி செய்கிறவன் (நான்கு திக்குகளிலும் முகங்களையுடைய பிரம்மதேவனென்றும் அர்த்தமுண்டு).

मृत्युः सर्वहरश्चाहमुद्भवश्च भविष्यताम् ।
कीर्तिः श्रीर्वाक्च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा ॥ ३४ ॥

34. யாவற்றையும் அழிக்கும் மிருத்யு நானே; இனி உண்டாகும் பதார்த்தங்களுக்கு உத்பத்தி ஸ்தானம் நானே; கீர்த்தியும் க்ஷேமமும், ஸ்த்ரீகளின் சொல்லும், ஞாபக சக்தியும், புத்தியும், உறுதியும், பொறுமையும் நானே.

बृहत्साम तथा साम्नां गायत्री छंदसामहम् ।
मासानां मार्गशीर्षोऽहमृतूनां कुसुमाकरः ॥ ३५ ॥

35. ஸாமங்களுக்குள் பிருஹத்ஸாமமென்பது நானே. வைதிக சந்தஸ் (விருத்தங்களுக்குள்) காயத்ரீ நானே; மாஸங்களுக்குள் மார்கழி மாஸம் நானே; ருதுக்களுக்குள் வஸந்த ருது நானே;

द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम् ।
जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्त्वं सत्त्ववतामहम् ॥ ३६ ॥

36. பிறரை வஞ்சிக்கிறவர்கள் செய்யும் தொழில்களில் சூதாடுந்தொழில் நானே; தேஜஸுள்ள பதார்த்தங்களின் தேஜஸ் நானே; வீரியத்தையுடைய பதார்த்தங்களின் வீரியமும் நானே; ஜயமும் விடாமுயற்சியும் நிச்சய புத்தியும் நானே;

वृष्णीनां वासुदेवोऽस्मि पांडवानां धनंजयः ।
मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कविः ॥ ३७ ॥

37. விருஷ்ணி வம்சத்தில் பிறந்தவர்களுக்குள் வாஸுதேவன் நானே; பாண்டவர்களுக்குள் தனஞ்ஜயனென்ற நீயும் நானே. முனிகளுக்குள் (ஆத்ம த்யானஞ் செய்கிறவர்கள்) வியாஸர் நானே; இந்திரியங்களுக்கெட்டாத விஷயங்களை ஞானதிருஷ்டியால் அறிகிறவர்களுக்குள் சுக்ராசார்யர் நானே.

दंडो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम् ।
मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम् ॥ ३८ ॥

38. பிறரை அடக்கி ஆளுகிறவர்களின் தண்டநீதி நானே; ஜயத்தை விரும்புகிறவர்களின் ராஜநீதி நானே; ரஹஸ்யங்களுக்குள் மௌனமென்பது நானே; ஞானிகளுடைய ஞானமும் நானே.

यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।
न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम् ॥ ३९ ॥

39. ஸகல பிராணிகள் எதிலிருந்து உண்டாகின்றனவோ அந்த விதை நானே; சராசர பிரபஞ்சத்தில் நான் ஊடுருவியிராத பதார்த்தம் யாதொன்றுமில்லை.

नांतोऽस्ति मम दिव्यानां विभूतीनां परंतप ।
एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥ ४० ॥

40. என் தைவத்தன்மையுள்ள விபூதிகளுக்கு எல்லையேயில்லை. இந்த விபூதிகளின் விஸ்தாரமான வர்ணனையிலும் குறிப்பாய் சிலவற்றைமாத்திரம் உனக்குச் சொன்னேன்.

यद्यद्विभूतिमत्सत्वं श्रीमदूर्जितमेव वा ।
तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसंभवम् ॥ ४१ ॥

41. இந்தப் பிரபஞ்சத்தில் எதெது மஹிமையுடையதோ வீர்யத்தை யுடையதோ காந்தியுள்ளதோ உறுதியுள்ளதோ அவை யாவும் என் தேஜஸிலிருந் துண்டானதென்றறி.

अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन ।
विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत ॥ ४२ ॥

42. இப்படிப் பல விஷயங்களை நீ அறிந்துகொண்டே போவதால் என்ன பிரயோஜனம்? சுருக்கமாய்ச் சொல்லுகிறேன். இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் என் சக்தியின் ஒருபாகத்தால் வியாபித்து நிலைநிறுத்தி, நான் இதற்குப் புறம்பாயும் இருக்கிறேன்.



## அத்யாயம் 10.

### அத்வைத பீடிகை.

பகவானுடைய நிஜஸ்வரூபமும் மஹிமையும் 7, 9-வது அத்யாயங்களில் வர்ணிக்கப்பட்டன. ஆனால் பிரபஞ்சத்திலுள்ள பதார்த்தங்களில் பகவானுடைய ஸ்வரூபம் அதிகமாய் எங்கே விளங்குகிறது, அவைகளில் அவரை எப்படித் தியானிக்கவேண்டுமென்று முன்பு சுருக்கமாய்க் குறிக்கப்பட்டாலும், பகவத் ஸ்வரூபத்தின் உண்மையை அனுபவத்தால் அறிவது அரிதாகையாலும் மறுபடியும் விஸ்தாரமாய் வர்ணிக்கிறார்.

### விஷய அட்டவணை.

1. பகவானே எல்லா தோற்றங்களுக்கும் ஆதிகாரணம்.
2. அவருடைய மஹிமையை அறிவதால் ஸமாதி யோகம் கிடைக்கும்.
3. பக்தர்களுக்கு அவரே ஞானத்தை அருளுகிறார்.
4. பகவானுடைய விபூதிகள்.
5. அவைகளின் சுருக்கம்.

### விசிஷ்டாத்வைத பீடிகை.

பக்தி யோகமும் அதன் அங்கங்களும் சொல்லப்பட்டன. யாதொன்றாலும் தடுக்கமுடியாத பகவானுடைய ஐசுவரியம் முதலிய கல்யாண குணங்கள் எல்லையற்றவை. எல்லா லோகங்களும் அவ

னுக்குச் சரீரமாவதாலும், அவனே அவைகளுக்கு ஆத்மா ஆவதாலும், அவனால் ஆளத்தகுந்தவை யென்பதை, நமக்குப் பக்தி உண்டாய் விருத்தி யடைவதற்காக இங்கே சொல்லுகிறார்.

## கீதார்த்த ஸங்கிரகம்.

தன் கல்யாண குணங்கள் எண்ணிறந்தவை; எல்லாம் தனக்கு ஸ்வாதீனப்பட்டதே யென்ற உபதேசம், பக்தி உண்டாய் வளரும்பொருட்டு இங்கே சொல்லப்படுகிறது.

"எல்லையில்லாத தன்சீலமு மின்ன முதக்கடலும்
எல்லையில்லாத விபூதியெல்லாம் தனதானமையும்
எல்லையில்லாத பத்தியெழு விக்கத் திருவருளால்
எல்லையிலீச னியம்பின னிந்திரன் மைந்தனுக்கே."

அ-து. எண்ணிறந்த தன் ஸ்வபாவமும் (ஸிருஷ்டி சக்தி) போக்யமான அமிருத ஸமுத்ரமும் கல்யாணகுணங்களும் எல்லையற்ற ஸகல வஸ்துக்களும் (தன் விபூதியாயிருப்பதும்), இந்த அத்யாயத்தில், பகவானுடைய மேலான கிருபையால் ஜீவன்களுக்குப் பக்தியுண்டாய் எல்லையின்றி வளர்வதற்காகச் சொல்லப்பட்டன.

## விஷயச் சுருக்கம்.

1. இந்த அத்யாயத்தின் விஷயம்.

2. இதர தேவதைகள் இதை உபதேசிக்கமுடியாது.

3. இதை அறிந்தால் எல்லா இடையூறுகள் நீங்கும்.

4, 5. என்னிடத்தில் பக்தி உண்டாய் விருத்தி அடையும்.

6. ஸிருஷ்டி ஸ்திதிகளுக்கு அதிகாரிகளான பிருகு முதலிய ஏழு ரிஷிகளும், ஸாவர்ணி யென்று பெயர்கொண்ட நான்கு மனுக்களும் என் ஸங்கல்பத்தால் உண்டானவர்கள், என் ஆக்ஞையை நடத்துகிறார்கள்.

7—11. என் மஹிமையை அறிந்தால் பக்தி அதிகரிக்கும். என் அனுக்ரஹம் கிடைக்கும்.

12—18. பகவானுடைய மஹிமையை அர்ஜுனன் துதித்து, மேற்சொன்ன விதத்தைத் தவிர வேறு எங்கெந்த விதத்தில் பகவான் நியாமகரென்று தியானிக்க வேண்டுமென்பதை உபதேசிக்கும்படி பிரார்த்திக்கிறான்.

19, 20. யாவற்றிற்கும் ஆத்மாவாயிருந்து நடத்துவதே விபூதி; படைத்துக் காத்து அழிப்பதே யோகம்.

21—41. பிரபஞ்சத்தில் பகவானுடைய சக்தி விளங்கும் விதங்கள் — எல்லாம் அவருடைய செயலே — அவர் ஸர்வ வியாபி, ஸர்வாந்தர்யாமி.

## த்வைத பீடிகை.

6-வது அத்யாயத்தில் தியான யோகம் சொல்லப்பட்டது. 9-வதில் முடியும் வாக்யத்தில் அது மறுபடியும் ஞாபகப்படுத்தப் பட்டது. தியானம் செய்ய வேண்டிய பதார்த்தத்தை அங்கே குறிப்பிடுகிறார். ஆகையால் இந்த அத்யாயத்தில் 19-வது சுலோகம் முதல் பகவானுடைய விபூதி ரூபங்களை வர்ணிக்கிறார். புத்தி முதலிய சக்திகளையும் மஹர்ஷிகளையும் அபூர்வஸித்திகளுடைய மஹாத்மாக்களையும் உண்டு பண்ணின மூலகாரணம் ஈச்வரனே யென்று முதலில் காட்டப்படுகிறது. 5-வது அத்யாயத்தின் முதலிலும் முடிவிலும் தியானஞ் செய்யவேண்டிய பதார்த்தம் குறிப்பிடப்பட்டது. அதே விஷயத்தை இங்கே மறுபடியும் சொல்வதால் முக்தி யோக்யர்களான உத்தம அதிகாரிகள் தியானஞ் செய்ய வேண்டிய பகவானுடைய மஹிமைகளை விஸ்தாரமாய் வர்ணிப்பதற்காகவே யென்று ஏற்படுகிறது. மேற் சொன்ன அபூர்வமான சக்திகளையும் ஜீவன்களையும் ஸிருஷ்டிக்கும் மஹிமையை மஹாத்மாக்கள் தியானஞ் செய்ய வேண்டுமாகையால் இங்கே அவை வர்ணிக்கப்படுகின்றன. 'ஜலத்தில் ரஸம் நானே, யக்ஞமும் நானே' யென்று முன்பே சொல்லப்படவில்லையா யென்றால், அந்த விபூதி ரூபங்களை இங்கே விஸ்தாரமாயும் விசேஷமாயும் உபதேசிக்கப்படுவதால் இதற்கு விபூதி அத்யாய மென்று பெயர் வந்தது.

## அத்தியாயம் 11.

# விசுவரூப ஸந்தர்சன யோகம்.



अर्जुन उवाच—

मदनुग्रहाय परमं गुह्यमध्यात्मसंज्ञितम् ।
यत्त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम ॥ १ ॥

1. அர்ஜுனன்—என்னிடத்தில் கிருபை வைத்துப் பரம ரஹஸ்யமான இந்த அத்யாத்ம வித்யையை நீர் உபதேசித்தால் என்னை இதுவரையில் பிடித்த புத்திமயக்கம் தெளிந்தது.

भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया
त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २ ॥

2. ஸகல பிராணிகளின் உத்பத்தியையும் அழிவையும் நீர் விஸ்தாரமாய்ச் சொல்லக் கேட்டேன். உமது என்றுமழியாத மஹிமையையும் நீர் சொல்லக் கேட்டேன்.

एवमेतद्यथात्थ त्वमात्मानं परमेश्वर ।
द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥ ३ ॥

3. பரமேச்வரா! நீர் உம்மை எப்படி வர்ணித்தீரோ அப்படியே லோகேச்வரனை உமது ரூபத்தைப் பார்க்க விரும்புகிறேன்.

मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।
योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ॥ ४ ॥

4. நான் அதைப் பார்ப்பதற்குச் சக்தியுள்ளவனென்று நீர் நினைத்தால், மஹாப்ரபுவே! ஸகல யோகங் (சக்தி) களுக்கும் ஈசுவரனே! உம்முடைய என்று மழியாத ஸ்வரூபத்தை எனக்குக் காட்டும்.

श्रीभगवानुवाच—

पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।
नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥ ५ ॥

5. பகவான்—அர்ஜுனா! பலவிதங்களாய், தைவத்தன்மையுள்ளவைகளாய்ப், பல வர்ணங்களும் உருவங்களு முள்ளவைகளாய், நூற்றுக்கணக்காயும் ஆயிரக்கணக்காயும் விளங்கும் என் ரூபங்களைப் பார்.

पश्यादित्यान्वसून्रुद्रानश्विनौ मरुतस्तथा ।
बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥ ६ ॥

6. ஆதித்யர்கள், வஸுக்கள், ருத்ரர்கள், அச்வினி தேவர்கள், மருத்துக்கள் முதலிய தேவகணங்களையும், நீ இதுவரையில் பாராத பல ஆச்சர்யங்களையும் பார்.

इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम् ।
मम देहे गुडाकेश यच्चान्यद्द्रष्टुमिच्छसि ॥ ७ ॥

7. இன்றைக்கு இவ்விடத்திலிருந்துகொண்டே சராசர பிரபஞ்சம் முழுவதையும், இன்னும் நீ பார்க்க விரும்பும் வேறு விஷயங்களையும் என் தேஹத்தில் ஒரேயிடத்தில் பார்.

न तु मां शक्यसे द्रष्टुमनेनैव स्वचक्षुषा ।
दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥ ८ ॥

8. இப்பொழுது உனக்குள்ள பார்வையால் என்னை நீ பார்க்க முடியாது. ஆகையால் உனக்கு தைவத்தன்மையுள்ள பார்வையை (திவ்ய திருஷ்டியை)க் கொடுக்கின்றேன். அதனால் என் ஈச்வர ஸ்வரூபத்தையும் சக்தியையும் பார்" என்றார்.

संजय उवाच—

एवमुक्त्वा ततो राजन् महायोगेश्वरो हरिः ।
दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥ ९ ॥

9. ஸஞ்ஜயன்—(திருதராஷ்டிர) மஹாராஜ! ஸகல யோகங்களுக்கும் (சக்தி) பரமேசுவரனை ஹரி இப்படிச் சொல்லிவிட்டுத், தன் ஸர்வோத்தமமான ஈச்வர ரூபத்தை அர்ஜுனனுக்குக் காட்டினார்.

अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।
अनेकदिव्याभरणं दिव्यानेकोद्यतायुधम् ॥ १० ॥

10. எண்ணிறந்த வாய்களும், கண்களும், எண்ணிறந்த ஆச்சர்யமான காக்ஷிகளும், எண்ணிறந்த திவ்ய ஆபரணங்களும், எண்ணிறந்த திவ்ய ஆயுதங்களு முடையதாய்,

दिव्यमाल्यांबरधरं दिव्यगंधानुलेपनम् ।
सर्वाश्चर्यमयं देवमनंतं विश्वतोमुखम् ॥ ११ ॥

11. திவ்ய மாலைகளையும், ஆடைகளையும் அணிந்து, திவ்ய பரிமளங்களால் பூசப்பட்டு, எங்கும் முகத்துடன், எல்லையற்று, மகா ஆச்சர்யமுள்ள ஈசுவரனைப் பார்த்தான்.

दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥ १२ ॥

12. ஆகாசத்தில் எண்ணிறந்த ஸூர்யன்கள் ஒரேகாலத்தில் விளங்கினால் எந்தக் காந்தியுண்டாகுமோ, அதைப்போன்ற காந்தி அந்தப் பரமாத்மாவினிடத்திலிருந்து உண்டாயிற்று.

तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा ।
अपश्यद्देवदेवस्य शरीरे पांडवस्तदा ॥ १३ ॥

13. அவ்விடமிருந்துகொண்டே பிரபஞ்சம் முழுவதையும் பலவிதமாய்ப் பிரிக்கப்பட்டதாய், ஒரேயிடத்தில் தேவதேவனை கண்ணனுடைய தேஹத்தில் அர்ஜுனன் கண்டான்.

ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनंजयः ।
प्रणम्य शिरसा देवं कृतांजलिरभाषत ॥ १४ ॥

14. பிறகு ஆச்சர்யத்தால் நிறைந்து மயிர்க்கூச்சலெடுத்து, அந்தத் தேவனை நமஸ்கரித்து கைகூப்பித் தலைவணங்கி அர்ஜுனன் சொன்னான்.

अर्जुन उवाच—

पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसंघान् ।
ब्रह्माणमीशं कमलासनस्थमृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥ १५ ॥

15. அர்ஜுனன்—தேவ தேவ! உமது தேஹத்தில் ஸகல தேவதைகளையும், பிராணிகளின் கூட்டங்களையும், தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மாவையும், ஈசுவரனையும், ஸகல ரிஷிகளையும், தேவ கணங்களில் ஒன்றான உரகர்களையும் காண்கிறேன்.

अनेकबाहूदरवक्त्रनेत्रं पश्यामि त्वां सर्वतोऽनंतरूपम् ।
नांतं न मध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूपम् ॥ १६ ॥

16. எண்ணிறந்த கைகளும், வயிறுகளும், வாய்களும், கண்களும் உடையவராய், நான்கு புறத்திலும் எல்லையற்ற ரூபத்தை யுடையவராய் உம்மைப் பார்க்கிறேன். லோகநாதா! லோகமாய் விளங்குகிறவரே! உமது ஆதியையும் நடுவையும் முடிவையும் அறிய முடியவில்லை.

किरीटिनं गदिनं चक्रिणं च तेजोराशिं सर्वतो दीप्तिमंतम ।
पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समंताद् दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥ १७ ॥

17. கிரீடங்களையும், கதாயுதங்களையும், சக்ராயுதங்களையும் தரித்தவராய், ஒரே தேஜோமயமாய் எப்புறத்திலும் பிரகாசமுடையவராய், நான்குபுறத்திலும் கண்ணெடுத்துப் பார்க்க முடியாதவராய், கொழுந்துவிட்டெரியும் அக்னியையும் ஸூர்யனையும்போன்ற காந்தியோடும் விளங்கினவராய் உம்மைப் பார்க்கிறேன்.

त्वमक्षरं परमं वेदितव्यं त्वमस्य विश्वस्य परं निधानम् ।
त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता सनातनस्त्वं पुरुषो मतो मे ॥ १८ ॥

18. நீர் அக்ஷரமென்று சொல்லப்படும் பொருள்; அறிய

வேண்டிய விஷயங்களுக்குள் ஸர்வோத்தமமானவர்; இந்தப் பிரபஞ்சத்திற்குப் பரம ஆதாரம்; நீர் என்றும் அழியாதவர்; என்றுமுள்ள தர்மத்தை ரக்ஷிக்கிறவர்; என்றுமுள்ளவர்; பரம புருஷன் என்று எண்ணுகிறேன்.

अनादिमध्यांतमनंतवीर्यमनंतबाहुं शशिसूर्यनेत्रम् ।
पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं स्वतेजसा विश्वमिदं तपंतम् ॥ १९ ॥

19 ஆதி நடுவு, முடிவு அற்றவராய், எல்லையற்ற வீர்யத்தையும் எண்ணிறந்த கைகளையும் உடையவராய், சந்திர ஸூர்யர்களைக் கண்களாய் உடையவராய், கொழுந்துவிட்டெரியும் நெருப்பைப் போன்ற முகத்தை யுடையவராய், உமது தேஜஸால் இந்தப் பிரபஞ்சத்தை எரிப்பவராய்க் காண்கிறேன்.

द्यावापृथिव्योरिदमंतरं हि व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः ।
दृष्ट्वाद्भुतं रूपमुग्रं तवेदं लोकत्रयं प्रव्यथितं महात्मन् ॥ २० ॥

20. பூமிக்கும் ஸ்வர்க்கத்திற்கும் நடுவிலுள்ள ஸகல திக்குகளும் உம்மாலேயே வியாபிக்கப்பட்டிருக்கின்றன. இந்த அத்புதமான உமது கோரரூபத்தைக் கண்டு, மஹாநுபாவ! மூன்று லோகத்திலுள்ள பிராணிகளும் துன்பமடைகின்றன.

अमी हि त्वां सुरसंघा विशंति केचिद्भीताः प्रांजलयो गृणंति ।
स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसंघाः स्तुवंति त्वां स्तुतिभिः पुष्कलाभिः ॥ २१ ॥

21. இதோ தோன்றும் தேவகணங்கள் உம்மிடத்தில் புகுகிறார்கள்; சிலர் பயந்து கைகூப்பி ஸ்துதிக்கிறார்கள். மஹர்ஷிகளும் ஸித்தகணங்களும் உமக்கு மங்களமுண்டாகட்டுமென்று உம்மை ஸம்பூர்ணமான ஸ்தோத்ரங்களால் கொண்டாடுகிறார்கள்.

रुद्रादित्या वसवो ये च साध्या विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।
गंधर्वयक्षासुरसिद्धसंघा वीक्षंते त्वां विस्मिताश्चैव सर्वे ॥ २२ ॥

22. ருத்ரர்கள், ஆதித்யர்கள், வஸுக்கள், ஸாத்யர்கள், விச்வே தேவர்கள், அசுவினி தேவர்கள், மருத்துக்கள், உஷ்மபர்க

ளென்ற பிதிருகணங்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், அஸுரர்கள், ஸித்தர்கள் எல்லோரும், பரம ஆச்சர்யங் கொண்டவர்களாய் உம்மைப் பார்க்கிறார்கள்.

रूपं महत्ते बहुवक्त्रनेत्रं महाबाहो बहुबाहूरुपादम् ।
बहूदरं बहुदंष्ट्राकरालं दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाहम् ॥ २३ ॥

23. பல முகங்களையும் கண்களையும் கைகளையும் துடைகளையும் கால்களையும் வயிறுகளையும் உடைத்தாய், எண்ணிறந்த கோரைப்பற்களால் பயங்கரமா யிருக்கும் உமது மஹாரூபத்தைப் பார்த்து, ஸகல ப்ராணிகளும் துன்பமடைகின்றன. நானும் அப்படியே.

नभःस्पृशं दीप्तमनेकवर्णं व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।
दृष्ट्वा हि त्वां प्रव्यथितांतरात्मा धृतिं न विंदामि शमं च विष्णो ॥ २४ ॥

24. ஆகாசத்தை அளாவி ஜ்வலித்துக்கொண்டு, அனேக வர்ணங்களுடன், திறந்தவாயுடன், கொழுந்துவிட்டெரியும் விசாலமான கண்களுடன் விளங்கும் உம்மைக்கண்டு என் அந்தராத்மா பயத்தால் வருந்துகிறது. தைர்யமும் அமைதியும் என்னைவிட்டு அகன்றன.

दंष्ट्राकरालानि च ते मुखानि दृष्ट्वैव कालानलसंनिभानि ।
दिशो न जाने न लभे च शर्म प्रसीद देवेश जगन्निवास ॥ २५ ॥

25. கோரைப்பற்களால் பயங்கரமாய், பிரளய காலாக்னியைப் போன்ற உமது முகங்களைக் கண்டவுடன் எனக்குத் திக்குத்திசை தெரியவில்லை. ஸௌக்யமுமில்லை. தேவ தேவ! ஜகத்திற்கு ஆதாரமானவரே! கிருபை செய்யும்.

अमी च त्वां धृतराष्ट्रस्य पुत्राः सर्वे सहैवावनिपालसंघैः ।
भीष्मो द्रोणः सूतपुत्रस्तथासौ सहास्मदीयैरपि योधमुख्यैः ॥ २६ ॥

वक्त्राणि ते त्वरमाणा विशंति दंष्ट्राकरालानि भयानकानि ।
केचिद्विलग्ना दशनांतरेषु संदृश्यंते चूर्णितैरुत्तमांगैः ॥ २७ ॥

26, 27, இதோ தோன்றும் திருதராஷ்டிரனுடைய பிள்ளைகள் யாவரும் மற்ற அரசர்களுடனும், பீஷ்மர், துரோணர், கர்ணனென்றவர்களும், எங்களைச் சேர்ந்த யுத்த வீரர்களும், கோரைப்பற்களால் திறந்து பயங்கரமாயிருக்கும் உமது முகங்களில் அதிவேகமாய் வந்து விழுகிறார்கள். சிலர் உமது பற்களின் நடுவில் அகப்பட்டுக்கொண்டு பொடியாக்கப்பட்ட தலைகளுடன் காணப்படுகிறார்கள்.

यथा नदीनां बहवोऽम्बुवेगाः समुद्रमेवाभिमुखा द्रवंति ।
तथा तवामी नरलोकवीरा विशंति वक्त्राण्यभिविज्वलंति ॥ २८ ॥

28. உலகத்திலுள்ள நதிகளில் ஓடும் ஜலங்கள் அதிவேகமாய் ஸமுத்ரத்தை நோக்கியே ஓடுவது போல், இவ்வுலகத்திலுள்ள இந்த வீரர்கள் யாவரும் ஜ்வலிக்கும் உமது வாய்களில் வந்து விழுகிறார்கள்.

यथा प्रदीप्तं ज्वलनं पतंगा विशंति नाशाय समृद्धवेगाः ।
तथैव नाशाय विशंति लोकास्तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥ २९ ॥

29. விளக்கு வெட்டுப் பூச்சிகள் ஜ்வலிக்கும் நெருப்பில் அதிவேகமாய் விழுந்து நாசமடைவது போல், ஸகலப் பிராணிகளும் அதிவேகமாய் உமது வாய்களில் வந்து விழுந்து நாசமடைகின்றன.

लेलिह्यसे ग्रसमानः समंताल्लोकान्समग्रान्वदनैर्ज्वलद्भिः ।
तेजोभिरापूर्य जगत्समग्रं भासस्तवोग्राः प्रतपंति विष्णो ॥ ३० ॥

30. ஜ்வலிக்கும் வாய்களால் ஸகல லோகங்களையும் ஒன்றுவிடாமல் விழுங்கிக்கொண்டு உதடுகளை நக்குகிறீர். இந்தப் பிர

பஞ்சம் முழுவதையும் தேஜஸால் கவர்ந்து, உமது உக்ரமான காந்தி யாவற்றையும் எரிக்கிறது.

आख्याहि मे को भवानुग्ररूपो नमोऽस्तु ते देववर प्रसीद ।
विज्ञातुमिच्छामि भवंतमाद्यं न हि प्रजानामि तव प्रवृत्तिम् ॥ ३१ ॥

31. இவ்விதமான உக்ரரூபத்தைத் தரிக்கும் தாங்கள் யார்? எனக்குச் சொல்லும். தேவசிரேஷ்ட! உமக்கு நமஸ்காரம்; கிருபை செய்யும். யாவற்றிற்கும் ஆதியான உம்மை அறிய விரும்புகிறேன். உமது நடத்தையை அறிய முடியவில்லை யென்”றான்.

श्रीभगवानुवाच—
कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो लोकान्समाहर्तुमिह प्रवृत्तः ।
ऋतेऽपि त्वां न भविष्यंति सर्वे येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥ ३२ ॥

32. பகவான்—ஸகல லோகங்களையும் அழிப்பதற்காக வளர்ந்துகொண்டிருக்கும் காலமே நான்; லோகங்களை ஸம்ஹரிப்பதற்காக இப்பொழுது ஆரம்பித்திருக்கிறேன். இந்த சைன்யங்களில் வந்திருக்கும் ஸகல யுத்த வீரர்களும் அழியப்போகிறார்கள்; நீ மாத்திரம் மிகுந்திருப்பாய்.

(குறிப்பு:—கிருபாசார்யர், அசுவத்தாமா, மற்ற பாண்டவர்கள் பாரத யுத்தத்தில் இறக்கவில்லை.)

तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व जित्वा शत्रून्भुंक्ष्व राज्यं समृद्धम् ।
मयैवैते निहताः पूर्वमेव निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३ ॥

33. ஆகையால் எழுந்திரு; கீர்த்தியை அடை; சத்ருக்களை ஜயித்து விசாலமான ராஜ்யத்தை ஆளு. (இவர்களை எப்படி ஜயிப்பே னென்ற கவலை உனக்கு வேண்டாம்.) இவர்கள் இதற்கு முன்பே என்னால் கொல்லப்பட்டிருக்கிறார்கள். ஆகையால் நீ வெளிப்படை யான காரணமாய் மாத்திரமிரு.

द्रोणं च भीष्मं च जयद्रथं च कर्णं तथान्यानपि योधवीरान् ।
मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठा युध्यस्व जेतासि रणे सपत्नान् ॥ ३४ ॥

34. துரோணர், பீஷ்மர், ஜயத்ரதன், கர்ணன், இன்னும் மற்ற யுத்த வீரர்கள் என்னால் முன்பே கொல்லப்பட்டார்கள். நீ அவர்களை வெளிப்படையாய்க் கொல்; வருத்தமடையாதே (அவர்களை நீ கொல்லாததால் வருந்த பயமில்லை.) யுத்தஞ் செய், சத்ருக்களை யுத்தத்தில் ஜயிப்பாய் (துரோணர் அர்ஜுனனுக்கு ஆசார்யர்; பீஷ்மர் தான் விரும்பினபொழுதே மரண மடையக்கூடியவர்; பரசுராமரை யுத்தத்தில் ஜயித்தவர்; 'ஜயத்ரதனுடைய தலையை அறுத்துத் தள்ளினவனுடைய தலை உடனே அறுந்து விழு'மென்ற வரத்தை அவனுடைய பிதாவான பூரிசிரவஸ் பெற்றிருக்கிறான். கர்ணன் ஸூர்ய புத்ரன், பிளக்கமுடியாத கவசத்தையுடையவன்; இந்திரனிடத்திலிருந்து பெற்ற நாகாஸ்திரத்தை அர்ஜுனனைக் கொல்வதற்காகவே வைத்துக் கொண்டிருந்தான். ஆகையால் இவர்களை ஜயிப்பதைப்பற்றியே அர்ஜுனனுக்குக் கவலையும் ஸந்தேஹமும் மேலிட்டது. இங்கு அவர்களைக் குறிப்பிடுவதற்குக் காரணம் இதே. இரண்டாவது அத்யாயத்தில் சொன்ன பல காரணங்களால் பந்துக்களைக் கொல்வதால் பாபமுண்டென்றும் துக்கமுண்டென்றும் அர்ஜுனனுக்கு ஏற்பட்ட புத்தி மயக்கம் நீங்கினாலும் அங்கே சொல்லாத ஒரு முடிவான காரணத்தை இங்கே சொல்லுகிறார். "அவர்களைக் கொன்றாலன்றோ உனக்குப் பாபம். முன்பே அவர்களை நான் கொன்றுவிட்டேன். நீயே பார்த்து தெளியக்கடவாய்" என்கிறார்.)

संजय उवाच—

एतच्छ्रुत्वा वचनं केशवस्य कृतांजलिर्वेपमानः किरीटी ।

नमस्कृत्वा भूय एवाह कृष्णं सगद्गदं भीतभीतः प्रणम्य ॥ ३५ ॥

35. ஸஞ்சயன்—கேசவன் இப்படிச் சொல்லக்கேட்டு, அர்ஜுனன் நடுங்கிக்கொண்டு, கைகூப்பி நமஸ்கரித்துத் தழ தழத்த குரலுடன் பயம்மேலிட்டு வணங்கி, மறுபடியும் கண்ணனைப் பார்த்துச் சொல்லுகிறான்.

अर्जुन उवाच—

स्थाने हृषीकेश तव प्रकीर्त्या जगत्प्रहृष्यत्यनुरज्यते च ।
रक्षांसि भीतानि दिशो द्रवंति सर्वे नमस्यंति च सिद्धसंघाः ॥ ३६ ॥

36. அர்ஜுனன்:—உமது உத்தமமான கீர்த்தியால் ஸகல ஜகத்தும் ஸந்தோஷத்தையடைகிறது; உம்மிடத்தில் ப்ரீதி வைக்கிறது; இது தகும். ராக்ஷஸர்கள் பயந்து மூலைக்கு மூலை ஓடுகிறார்கள். ஸகல ஸித்த கணங்களும் உம்மை வணங்குகின்றன.

कस्माच्च ते न नमेरन्महात्मन् गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे ।
अनंत देवेश जगन्निवास त्वमक्षरं सदसत्तत्परं यत् ॥ ३७ ॥

37. மஹாத்மாவே! யாவற்றைக் காட்டிலும் மேலானவரும் பிரம்மாவுக்கும் ஆதிகாரணமாய் விளங்குகிறவருமான உமக்கு அவர்கள் ஏன் நமஸ்காரஞ் செய்ய மாட்டார்கள்? கால தேச வஸ்துக்களால் எல்லையற்றவரே! தேவ தேவ! ஜகத்திற்கிருப்பிடமானவரே! ஸத்தும் அஸத்தும் அக்ஷரமென்பதும் அதற்கும் மேலானது எதோ அதுவும் நீரே.

त्वमादिदेवः पुरुषः पुराणस्त्वमस्य विश्वस्य परं निधानम् ।
वेत्तासि वेद्यं च परं च धाम त्वया ततं विश्वमनंतरूप ॥ ३८ ॥

38. ஸகல தேவர்களுக்கும் நீர் ஆதி; என்றுமுள்ள பரம புருஷனும், இந்தப் பிரபஞ்சத்திற்குப் பரம ஆதார ஸ்தானமும், யாவற்றையும் அறிகிறவரும் அறிய வேண்டியவரும், பரமபதமும் நீரே. எல்லையற்ற ரூபத்தையுடைய உம்மால் இந்தப் பிரபஞ்சம் வியாபிக்கப்பட்டிருக்கிறது.

वायुर्यमोऽग्निर्वरुणः शशांकः प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥ ३९ ॥

39. வாயு, யமன், அக்னி, வருணன், சந்திரன், பிரஜாபதியென்ற பிரம்மா நீரே; அவருக்கும் பிதாவானவரும் நீரே; ஆகையால் உமக்குப் பல்லாயிரம் நமஸ்காரம்; மறுபடியும் மறுபடியும் எண்ணிறந்த நமஸ்காரம், நமஸ்காரம்.

नमः पुरस्तादथ पृष्ठतस्ते नमोऽस्तु ते सर्वत एव सर्व ।
अनंतवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४० ॥

40. உமது முன்புறத்திலும் பின்புறத்திலும் நமஸ்காரம் செய்கிறேன். யாவும் தானாய் விளங்குகிறவரே! நான்கு புறத்திலும் உமக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். எல்லையற்ற வீர்யத்தையுடையவரே! அளவிடமுடியாத வீர்யத்தையுடையவரே! யாவற்றையும் வியாபிக்கிறீர். ஆகையால் யாவுமாயிருக்கிறீர்.

सखेति मत्वा प्रसभं यदुक्तं हे कृष्ण हे यादव हे सखेति ।
अजानता महिमानं तवेदं मया प्रमादात्प्रणयेन वापि ॥ ४१ ॥

41. உமது இவ்விதமான மஹிமையை அறியாமல், அஜாக்ரதையாலும் ஸ்நேஹத்தாலும் உம்மைத் தோழனென்றெண்ணி, 'கிருஷ்ணா ! யதுவம்சத்திற் பிறந்தவரே! தோழா !' வென்று நான் சொன்னதையும்,

यच्चावहासार्थमसत्कृतोऽसि विहारशय्यासनभोजनेषु ।
एकोऽथवाप्यच्युत तत्समक्षं तत्क्षामये त्वामहमप्रमेयम् ॥ ४२ ॥

42. விளையாடும்பொழுதும் படுத்திருக்கும்பொழுதும் உட்கார்ந்திருக்கும்பொழுதும் உண்ணும்பொழுதும் நாம் தனியாயிருக்கும்பொழுதும் அல்லது பிறருடனிருக்கும் பொழுதும் வேடிக்கையாய் உம்மை நான் அவமதித்திருந்ததையும், அறியக்கூடாத மஹிமையுள்ளவரென்று இப்பொழுது அறிந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

पितासि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥ ४३ ॥

43. நிகரற்ற மஹிமையுடையவரே! சராசர பிரபஞ்சத்திற்கு நீரே பிதா; எல்லோராலும் பூஜிக்கத் தகுந்தவர்; எல்லா குருக்களுக்கும் மேலான குரு; மூன்று லோகங்களிலும் உமக்கு ஒப்பானவரில்லை. அப்படியிருக்க, உமக்கு மேலான வேறொருவருண்டோ?

तस्मात्प्रणम्य प्रणिधाय कायं प्रसादये त्वामहमीशमीड्यम् ।
पितेव पुत्रस्य सखेव सख्युः प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥ ४४ ॥

44. ஆகையால் என் சரீரம் முழுவதையும் ஒடுக்கி உம்மை நமஸ்கரித்து, ஸர்வேசுவரனும் துதிக்கத் தகுந்தவருமான நீர் என்னிடத்தில் கிருபை செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன், தன் மகன் செய்த அபராதத்தைப் பிதா பொறுப்பதுபோலும், தோழன் செய்த அபராதத்தைத் தோழன் பொறுப்பதுபோலும், பிரியமான மனைவி செய்த அபராதத்தைக் கணவன் பொறுப்பது போலும், தேவ தேவ! நான் அறியாமையால் செய்த அபராதத்தைப் பொறுக்க வேண்டும்.

अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा भयेन च प्रव्यथितं मनो मे ।
तदेव मे दर्शय देव रूपं प्रसीद देवेश जगन्निवास ॥ ४५ ॥

45. இதுவரையில் நான் பார்க்காத இந்த உமது விசுவ ரூபத்தை இப்பொழுது பார்த்து ஸந்தோஷத்தையடைந்தேன். பயத்தால் என் மனம் துன்பமடைகிறது. ஆகையால் உமது பூர்வ ரூபத்தைக் காட்டும். தேவ தேவ! பிரபஞ்சத்திற்கு இருப்பிடமானவரே! என்னிடத்தில் கிருபை செய்யும்.

किरीटिनं गदिनं चक्रहस्तमिच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।
तेनैव रूपेण चतुर्भुजेन सहस्रबाहो भव विश्वमूर्ते ॥ ४६ ॥

46. கிரீடம், கதாயுதம், சக்ரம் முதலியவைகளால் விளங்கும் உமது ரூபத்தை மறுபடியும் பார்க்க விரும்புகிறேன். எண்ணிறந்த கைகளுடன் எங்கும் வியாபித்திருப்பவரே! முன்போல் நான்கு திருக்கைகளுடன் விளங்கும் ரூபத்தைத் தரிக்கவேண்டு"மென்றான்.

श्रीभगवानुवाच—
मया प्रसन्नेन तवार्जुनेदं रूपं परं दर्शितमात्मयोगात् ।
तेजोमयं विश्वमनंतमाद्यं यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम् ॥ ४७ ॥

47. (அதற் கிணங்கி பகவான் விசுவரூபத்தை மறைத்து முன்போல் விளங்கி அர்ஜுனனைப் பார்த்துப் பிரியத்துடன்

"குழந்தாய்! உனக்கு அனுக்ரஹஞ் செய்ய விரும்பி இந்த என் விசுவரூபத்தை ஈசுவர சக்தியால் உனக்குக் காட்டினேன். தேஜோமயமாய் யாவற்றிற்கும் ஆதியாய் முடிவின்றி விளங்கும் இந்த விசுவரூபம் உன்னைத் தவிற வேறொருவரால் இதுவரையில் பார்க்கப்படவில்லை.

न वेदयज्ञाध्ययनैर्न दानैर्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः ।
एवंरूपः शक्य अहं नृलोके द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥ ४८ ॥

48. வேதாத்ய யனத்தாலும் யாகயக்ஞங்களாலும் தானங்களாலும் மற்ற வைதிக க்ரியைகளாலும் கடினமான தவங்களாலும் இந்த மனுஷ்ய லோகத்தில் உன்னைத் தவிற வேறொருவர் இந்த ரூபத்தைப் பார்ப்பது ஸாத்யமல்ல.

मा ते व्यथा मा च विमूढभावो दृष्ट्वा रूपं घोरमीदृङममेदम् ।
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं तदेव मे रूपमिदं प्रपश्य ॥ ४९ ॥

49. கோரமான இந்த என் ரூபத்தைப் பார்த்ததால் உனக்குப் பயமுண்டாக வேண்டாம். உன் புத்தி மயங்க வேண்டாம். பயம் நீங்கி ஸந்தோஷத்துடன் மறுபடியும் என் பூர்வ ரூபத்தைப் பார்."

सजय उवाच—
इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा स्वकं रूपं दर्शयामास भूयः ।
आश्वासयामास च भीतमेनं भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥ ५० ॥

50. ஸஞ்ஜயன் — என்று வாஸுதேவன் அர்ஜுனனைப் பார்த்துச் சொல்லி மறுபடியும் தன் பூர்வரூபத்தைக் காட்டினார். அந்த மஹாத்மா மறுபடியும் குளிர்ந்த பார்வையுடன் பயத்தால் நடுங்கும் அர்ஜுனனை ஸமாதானம் செய்தார்.

अर्जुन उवाच—
दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन ।
इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥ ५१ ॥

51. அர்ஜுனன் — "ஜனார்த்தனா! அழகான உமது இந்த மனுஷ்ய ரூபத்தைப் பார்த்து இப்பொழுது தான் எனக்கு பிரக்ஞை வந்தது; மனம் தெளிந்தது; முன்போலானேன்"னென்றான்.

श्रीभगवानुवाच—

सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम ।
देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकांक्षिणः ॥ ५२ ॥

52. பகவான் — பார்ப்பதற்கரிதான இந்த என் ரூபத்தை நீ பார்த்தாயல்லவா? தேவதைகளும் இந்த ரூபத்தை பார்க்க வேண்டுமென்று எப்பொழுதும் ஆசை கொண்டிருக்கிறார்கள். (ஆனால் பார்க்க முடியவில்லை.)

नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।
शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥ ५३ ॥

53. நீ பார்த்த ரூபத்தை வேதாத்ய யனங்களாலும் தவத்தாலும் தானத்தாலும் யாகத்தாலும் அப்படியே பிறர் பார்ப்பது முடியாது.

भक्त्या त्वनन्यया शक्य अहमेवंविधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परंतप ॥ ५४ ॥

54. இதர விஷயங்களிலிருந்து அந்தக்கரணத்தைத் திருப்பி, என்னிடத்திலேயே நாடின பக்தியாலேயே, இந்த ரூபத்தை நீ பார்த்தபடி அறியவும் உள்ளபடி பார்க்கவும் அதில் கலக்கவும் முடியும்.

मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः संगवर्तिः ।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पांडव ॥ ५५ ॥

55. ஆகையால் எனக்கு உகந்த கர்மங்களையே செய்து கொண்டு, என்னைக் காட்டிலும் மேலான பொருளில்லாதவனாய், என்னிடத்திலேயே பக்தியைச் செய்துகொண்டு, பற்றின்றி, ஸகல பிராணிகளிடத்திலும் த்வேஷமற்றிருப்பவனே என்னை அடைகிறான்.



# அத்யாயம் 11.

## அத்வைத பீடிகை.

முந்தின அத்யாயத்தில் பகவானுடைய வைபவங்கள் வர்ணிக்கப்பட்டன. "இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் ஒரு அம்சத்தால் தாங்கி நிற்கிறே"னென்று சென்ற அத்யாயத்தின் முடிவில் பகவான் சொன்னதைக் கேட்டு, அர்ஜுனன் "பிரபஞ்சரூபமான ஆதிரூபம் எவ்விதமானது? அதை நேரில் காணவேண்டு"மென்று கேட்கிறான்.

### விஷய அட்டவணை.

1. விசுவரூபத்தைக் காண அர்ஜுனன் விரும்புதல்.
2. அதற்கேற்ற ஞானக்கண்ணைப் பெறுதல்.
3. விசுவரூப தர்சனம்.
4. நிர்க்குணப் பிரம்மம் அவரே.
5. அதின் ஆச்சர்யத்தையும் பயங்கரத்தன்மையையும் கௌரவர்களின் தோல்வியையும் அர்ஜுனன் கண்டான்.
6. பிரபஞ்சத்தை ஸம்ஹரிக்கிறவர் பகவானே.
7. விசுவரூபத்தைத் துதித்தல்.
8. அர்ஜுனன் மன்னிப்புக் கேட்கிறான்.
9. பழைய ரூபத்தைக் காட்டும்படி வேண்டுகிறான்.
10. விசுவரூப தரிசனத்திற்குப் பக்தியே ஸாதனம்.
11. கீதாஸாரம்.

## விசிஷ்டாத்வைத பீடிகை.

இப்படிப் பகவானுடைய கல்யாண குணங்கள் மற்றவைகளுக்கு மேற்பட்டவை; ஸ்வபாவத்திலேயே ஏற்பட்டவை; அவருக்கே அஸாதாரணம். அவர் யாவற்றிற்கும் ஆத்மா; மற்ற சேதனு சேதன

வஸ்துக்கள் அவருக்குச் சரீரம். அவைகளின் ஸ்வரூபமும் நிலைமையும் பிரவிருத்தியும் (செயல்களும்), அவருக்கு அடங்கின விஷயங்கள்; பக்தியானது உண்டாய் வளர்வதற்காகச் சொல்லப்பட்டன. மேற் சொன்னவைகளைப் பகவான் சொல்லக்கேட்டு, இது இப்படியேயென்று நிச்சயஞ்செய்து, அவரை நேரில் பார்க்க வேண்டுமென்ற ஆசை அர்ஜுனனுக்குண்டாய்க் கண்ணை வேண்டினன். அவருடைய கிருபையால் அதைப் பார்த்தானென்பது இந்த அத்யாயத்தின் விஷயம்.

## கீதார்த்த ஸங்கிரஹம்.

தன் உண்மையான ஸ்வபாவத்தை நேரில் பார்ப்பதற்குக் காரணமான ஞானக்கண் அர்ஜுனனுக்குக் கொடுக்கப்பட்டது. அப்படியே அவரை அறிந்து அடைவதற்குப் பக்தி ஒன்றே ஸாதனமென்று இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகிறது.

"எல்லாந் தனக்குருவாயிலங்கும் வகை தானுரைத்துச்
சொல்லா லறிந்தது சோராமற் கண்டிட வேண்டுமென்ற
வில்லாள னுக்கன்று மெய்க்கண் கொடுத்திது வேறுமுண்டோ
நல்லார்கள் காண்பரென்று நவின்றனங்கணுபகனே."

அ—து:—சேதன சேதன வஸ்துக்களெல்லாம் தனக்குச் சரீரமாய் பிரகாசிக்கும் பிரகாரத்தை ஸர்வக்ஞன தான் உபதேசித்து, அதனால் தெரிந்துகொண்டதை விடாமல் பார்க்கவேண்டுமென்று அர்ஜுனன் ப்ரார்த்தித்தான். அப்படியே அவனுக்கு மெய்யான ஸ்வரூபத்தைப் பார்க்கக்கூடிய கண்ணைக் கொடுத்துப் பார்க்கச் செய்தார். அந்த ரூபத்தை வேறொருவரும் பார்த்ததில்லை. பக்தியைத் தவிற அதைப் பார்ப்பதற்கு வேறு உபாயமில்லையென்று இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகிறது.

## விஷயச் சுருக்கம்.

1—4. விசுவரூபத்தைத் தர்சிக்க அர்ஜுனன் வேண்டுகிறன்.

5—8. பகவான் அந்த ரூபத்தை வர்ணித்து அதைப் பார்க்கக்கூடிய ஞானக்கண்ணைக் கொடுக்கிறர்.

9—14. அர்ஜுனன் விசுவரூபத்தைத் தரிசித்துப் பயந்து, மகிழ்ந்து வர்ணிக்கிறான்.

15—31. விச்வரூப வர்ணனை — நீர் யாரென்கிறான்.

32—34. 'நான் காலம்', உன்னைக் கருவியாய் வைத்துக் கொண்டு யாவரையும் கொல்வேன். தைர்யமாய் யுத்தஞ்செய். ஜயிப்பாயெ'ன்று கண்ணன் சொல்வது.

35—46. அர்ஜுனனுடைய ஸ்தோத்திரம். பயந்து முன் ரூபத்தையே காட்டவேண்டுமென்று பிரார்த்திக்கிறான்.

47—49. அந்த ரூபத்தின் அருமையும் மஹிமையும்.

50—53. பகவான் பூர்வ ரூபத்தைக் காட்ட, அர்ஜுனன் பயந்தீர்ந்தது.

54. அந்த ரூபத்தைத் தரிசிப்பதற்குப் பக்தியே உபாயம்.

55. அவரை அடையும் உபாயமும் அதே.

## த்வைத பீடிகை.

பகவானுடைய ஸர்வ வியாபியான ரூபத்தைத் தியானிப்பது இந்த அத்யாயத்தின் முடிவில் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டது. அப்படி அதை உண்மையாயும் பூர்ணமாயும் அறியமுடியாது; தியானஞ் செய்யவும் முடியாது. ஆகையால் ஸர்வ வியாபியான அந்த ரூபத்தைப் பூர்ணமாயும் ஒரே விஷயமாயும் இந்த அத்யாயத்தில் வர்ணிக்கிறார். ஆகையால் இது 10-வது அத்யாயத்திற்கு விவரண மென்பதால் பொருந்தும்.

### விஷயச் சுருக்கம்.

பிரபஞ்சத்திலுள்ள ஸகல பதார்த்தங்களில், சக்திகளாயும் குணங்களாயும் பகவான் வெளிப்படுத்திக்கொண்டு, அவைகளின் உத்பத்திஸ்தானமாய், அங்கங்கே விளங்கும் நானாரூபங்களே விபூதி ரூபங்களெனப்படும். 7, 9 அத்யாயங்களில் சொன்னவைகளைத் தவிர இங்கே மற்றவை சொல்லப்படுகின்றன. அந்த ஞானம் வெவ்

வேறு படிகளாலும் அல்லது வெவ்வேறு பக்வமுள்ள அதிகாரிகளாலும் அறியப்படவேண்டியதால் பல தடவைகளில் கொஞ்சங் கொஞ்சமாய் உபதேசிக்கப்படுகிறது. இதுவரையில் அர்ஜுனன் கண்ணன் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்தான்; இப்பொழுது அவன் நேரில் பார்த்து அறியவேண்டிய காலம் வந்தது, ஸர்வ வியாபியும் ஸர்வாதாரமுமான பகவானுடைய ரூபத்தை அர்ஜுனன் நேரில் பார்த்துத், தன்னால் கூடிய வரையில் வார்த்தைகளால் வர்ணிக்கப்படும் வரையில் சொல்லப் பார்க்கிறான். அந்த வர்ணனையை நாம் கேட்கும்பொழுது இரண்டு விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டியது. (1) அதுவரையில் தனக்கு உபதேசிக்கப்பட்ட பகவானுடைய விபூதிகளை அவன் எவ்வளவு தூரம் அறிந்தானென்பது; (2) தான் எவ்வளவு வரையில் அந்த யுத்தத்தில் கர்த்தாவா யிருக்கிறனென்பது. முடிவில் கண்ணனுடைய பழைய ரூபத்தைப் பார்க்க வேண்டுமென்று அவன் பிரார்த்தித்ததைக் கொண்டு பகவானுடைய விபூதிகளை அறிவதற்கு நமக்கு அளவற்ற விருப்ப மிருந்தாலும், அவை அனந்த மென்றும், காலதேச வஸ்துக்களாலும் அக்ஞானத்தாலும் தடைப்பட்ட நமது குறுகின ஞானத்தால் அதை உள்ளபடி அறிவது ஸாத்யமல்லவென்றும் தோன்றும். பகவானுடைய அனந்தமான ரூபங்களும் எல்லையற்ற சக்திகளும், ஸகல பூதங்களையும் அந்தர்யாமியாயிருந்து நடப்பிக்கிறதென்றும், அவரே யாவற்றையும் தாங்கும் ஆதாரமென்றும், இரண்டு படிகளை ஞான பூமியில் இந்த அத்யாயங்களால் தாண்டினேம்.



அத்யாயம் 12.

# பக்தி யோகம்.

अर्जुन उवाच—

एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।
ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥ १ ॥

1. அர்ஜுனன்:—நீர் சொன்னபடி எப்பொழுதும் மனதை ஒருமைப்படுத்தி, உம்மை எந்த பக்தர்கள் உபாஸிக்கிறார்களோ, அக்ஷரமென்ற அவ்யக்தத்தை எவர் உபாஸிக்கிறார்களோ, இவ்விருவரில் யோகத்தை அறிந்தவர்களில் மேலானவர் யார்?

श्रीभगवानुवाच—

मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।
श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः ॥ २ ॥

2. பகவான்:— என்னிடத்தில் மனதை நிறுத்தி, மேலான சிரத்தையுடன், எப்பொழுதும் சஞ்சலமின்றி என்னை உபாஸிப்பவர்களை யோகத்தில் எல்லோரைவிட மேலானவரென்று எண்ணப்படுவார்கள்.

ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगमचिंत्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥ ३ ॥

3. இன்னதென்று குறிப்பிட முடியாததாய், எங்கும் வியாபித்து, மனதால் நினைக்கமுடியாததாய், விகாரமின்றி அசையாமல் நித்யமாய், அக்ஷரமென்று சொல்லப்படும் அவ்யக்தத்தை,

संनियम्येंद्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।
ते प्राप्नुवंति मामेव सर्वभूतहिते रताः ॥ ४ ॥

4. இந்த்ரியங்களை நன்றாய் வசப்படுத்தி எங்கும் ஸம புத்தியுள்ளவர்களாய், ஸகல ப்ராணிகளுக்கும் ஹிதத்தைச் செய்வதிலேயே

ப்ரியமுள்ளவர்களாய், எல்லாவிதத்தாலும் உபாஸிப்பவர்களோ என்னையே அடைகிறார்கள்.

क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ ५ ॥

5. அவ்யக்த உபாஸனையில் ஆசைகொண்ட மனதையுடையவர்களுக்கு இன்னும் அதிக ச்ரமம் ஏற்படும்; அவ்யக்தபத்தை அடைவது தேஹத்தை யுடையவர்களுக்கு வெகு கஷ்டமன்றோ?

ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।
अनन्येनैव योगेन मां ध्यायंत उपासते ॥ ६ ॥

तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।
भवामि नचिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ॥ ७ ॥

6. 7. ஸகல கர்ம பலன்களையும் என்னிடத்தில் அர்ப்பணஞ் செய்து, என்னையே அடைய விரும்பி, வேறொன்றிலும் மனதைச் செல்லவிடாமல் என்னிடத்தில் நாட்டி, என்னையே த்யானித்துக் கொண்டு, யார் உபாஸிக்கிறார்களோ, அந்த என்னிடத்தில் லயித்த சித்தத்தை யுடையவர்களை, ஜனன மரண ரூபமான ஸம்ஸாரமென்ற ஸமுத்ரத்திலிருந்து வெகு சீக்ரத்தில் கரையேற்றுகிறேன்.

मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय ।
निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ ८ ॥

8. ஆகையால் என்னிடத்திலேயே மனதைச் செலுத்து. என்னிடத்தில் புத்தியை நாட்டு. இந்த தேஹத்தை விட்டபிறகு என்னிடத்திலேயே வஸிப்பாய்; இதில் ஸந்தேஹமில்லை.

अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।
अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनंजय ॥ ९ ॥

9. ஆனால் என்னிடத்தில் உன் சித்தத்தை ஸ்திரமாய் நிலை நிறுத்த முடியாவிட்டால், அது செல்லுமிடங்களைத் தேடிக்கண்டு,

திருப்பித் திருப்பி என்னிடத்தில் நாட்டுவதென்ற யோகத்தால் என்னை அடைய விரும்பு.

अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव ।
मदर्थमपि कर्माणि कुर्वन्सिद्धिमवाप्स्यसि ॥ १० ॥

10. ஆனால், இந்த அப்யாஸ யோகத்தை அநுஷ்டிப்பதற்கும் முடியாவிட்டால், எனக்கு ப்ரியமான கர்மங்களைச் செய்வதிலேயே நோக்கமுள்ளவனாயிரு; எனக்குகந்த கர்மங்களையே செய்துகொண்டிருந்தாலும், சித்த சுத்தி பிறந்து, யோகம் ஞானமென்ற படிகளைத்தாண்டி ஸித்தியடைவாய்.

अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥ ११ ॥

11. என்னை அடையும் மார்க்கமான யோகத்தைப் பற்றி, நான் முன்சொன்னதைச் செய்யமுடியாவிட்டால், மனதை அடக்கி, ஸகல கர்மங்களையும் செய்து, அவைகளில் பயனை அநுபவிக்க விரும்பாமல் விடு.

श्रेयोहि ज्ञानमभ्यासाज्ज्ञानाद्ध्यानं विशिष्यते ।
ध्यानात्कर्मफलत्यागस्त्यागाच्छांतिरनंतरम् ॥ १२ ॥

12. விவேகத்துடன் செய்யப்படும் அப்யாஸயோகத்தை விட ஞானம் மேலானது; ஞானத்தைவிட பரஹ்ம ஸ்வரூபத்யானம் மேலானது; த்யானத்தைவிட கர்மபலன்களை விரும்பாமல் விடுவது மேலானது; அப்படி விடுவதைக் காட்டிலும் ஸம்ஸாரமும் அதற்குக் காரணமான அக்ஞானமும் அழிந்து அமைதி உடனே பிறக்கும்.

अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।
निर्ममो निरहंकारः समदुःखसुखः क्षमी ॥ १३ ॥

संतुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।
मय्यर्पितमनोबुद्धिर्यो मे भक्तः स मे प्रियः ॥ १४ ॥

13—14. ஸகல ப்ராணிகளிடத்திலும் த்வேஷமின்றி, அவைகளுக்கு ஹிதத்தையே செய்துகொண்டு, எல்லையற்ற கருணையுள்ளவனாய், நான் எனதென்ற எண்ணமற்று, ஸுக துக்கங்களை ஸமமாய் அனுபவித்துக்கொண்டு, பொறுமையுடன், எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளவனாய், மனதை அடக்கி, உறுதியான நிச்சயத்தையுடையவனாய், யோகாப்யாஸஞ் செய்துகொண்டு, என்னிடத்தில் மனதையும் புத்தியையும் அர்ப்பணஞ் செய்திருக்கும் பக்தனே எனக்கு ப்ரியமானவன்.

यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः ।
हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः ॥ १५ ॥

15. ப்ராணிகள் யாரைக் கண்டு நடுங்கவில்லையோ, யார் ப்ராணிகளைக் கண்டு நடுங்கவில்லையோ, பெருமை, பொறாமை, பயம், கோப மென்றவைகளிலிருந்து விடுபட்டவன் எவனோ, அவனே எனக்குப் ப்ரியமானவன்.

अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।
सर्वारंभपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥ १६ ॥

16. யாதொன்றையும் விரும்பாமல், பரிசுத்தமான அந்தக்கரணத்துடன், கார்யங்களை ஸாமர்த்தியத்துடன் செய்துகொண்டு, ஒன்றிலும் பற்றின்றி, வருத்தமின்றி, தானாய் தனக்கென்று யாதொன்றையும் ஆரம்பிக்காமலிருப்பவன் எனக்கு ப்ரியமான பக்தன்.

यो न हृष्यति न द्वेष्टि न शोचति न कांक्षति ।
शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः ॥ १७

17. அளவிற்கு மிஞ்சி ஸந்தோஷிக்காமலும், வெறுக்காமலும், வருத்தமடையாமலும், விரும்பாமலும், தனக்கு நேரும் சுபத்திலும் அசுபத்திலும் பற்றைவிட்டு பக்தியைச் செய்கிறவன் எனக்கு ப்ரியமானவன்.

समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः।
शीतोष्णसुखदुःखेषु समः संगविवर्जितः ॥ १८ ॥

तुल्यनिंदास्तुतिर्मौनी संतुष्टो येन केनचित्।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥ १९ ॥

18—19. சத்ருவிடத்திலும் நண்பனிடத்திலும் வெகுமதிக்கப்பட்டாலும் அவமதிக்கப்பட்டாலும், சீதம் உஷ்ணம் ஸுகம், துக்கம் நேரும்பொழுதும் ஒரே நிலையுள்ளவனாய், பற்றின்றி, அவதூறையும் புகழையும் ஸமமாய் நினைத்து, உசிதமாய்ப் பேசிக்கொண்டு, எது கிடைத்தாலும் ஸந்தோஷமடைந்து, ஸ்திரமான இருப்பிடமில்லாதவனாய், ஸ்திரமான மனதையுடைய பக்தனே எனக்கு ப்ரியமானவன்.

ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते।
श्रद्दधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २० ॥

20. அடையவேண்டிய பரம்பொருள் நானேயென்று சிரத்தையுடன், தர்மத்திற்கு ஒத்ததும் ஜனன மரணத்தை ஒழிக்கும் இந்த என் உபதேசத்தை நான் சொன்னவிதமாய் உபாஸிப்பவர்களான பக்தர்களே எனக்கு மற்றவர்களைவிட ப்ரியமானவர்கள்.

---

## அத்யாயம் 12.

### அத்வைத பீடிகை.

இரண்டாவது அத்யாயம் முதல் 11-வது அத்யாயம் வரையில், ஸ்தூல ஸூக்ஷ்ம காரண மஹாகாரணமென்ற ஸகல சரீரங்களும் ஒழிந்ததாய் என்றுமழியாத பிரம்மமாய் விளங்கும் பரமாத்மாவின் உபாஸனை உபதேசிக்கப்பட்டது. "யாவற்றிற்கும் ஸிருஷ்டி கர்த்தாவாய், யாவற்றையும் அறியும் ஸாமர்த்தியமுள்ளவராய், ஸத்வ குணத்தைச் சரீரமாய்ப் பெற்றவராய், பிரபஞ்சத்தையாளும் உமது உபாஸனையும் அங்கங்கே உபதேசிக்கப்பட்

டது. ஆனால் விசுவரூப அத்யாயத்தில் ஸகல ஜகத்தின் ரூபமாய் யாவற்றிற்கும் ஆதியாயுள்ள உமது ஈசுவர ஸ்வரூபத்தை நான் உபாஸிக்க வேண்டுமென்றே காட்டினீர். மேலும் "எனக்காகக் கர்மத்தைச் செய்பவனாய், என்னையே மேலாகக் கொண்டவனாய், என் பக்தனாய், பற்றில்லாதவனாய், ஸகல ப்ராணிகளிடத்திலும் த்வேஷமில்லாதவனாயிருப்பவனே என்னை வந்தடைகிறானென்று சொன்னீர் (11-55). ஆகையால் இவ்விரண்டில் எது மேலானதென்று அறியவிரும்புகிறேன்"னென்று அர்ஜுனன் கேட்டது நியாயமே. மேலே சொன்ன விசுவரூபத்தைக் கொண்ட ஸகுண பிரம்மமான பகவானை வேறு அடைக்கலமில்லாமல் தியானிப்பவர்களும், ஸகல உபாதிகளும் ஒழிந்ததால் இந்திரியங்களுக்கு எட்டாமல் அழியாப் பொருளான நிர்க்குணப் பிரம்மத்தை, ஆசைகளை விட்டுக், கர்மங்களைத் துறந்து தியானஞ் செய்வதும் இங்கே குறிக்கப்படுகிறது. "இரு திறத்தாரும் என்னையே வந்தடைகிறார்கள். ஆனால் நிர்க்குணப் பிரம்மத்தின் உபாஸனை மிகவும் பிரயாஸமுள்ளது. தேஹாபிமான முள்ளவர்களால் அடைவதற்கரி"தென்று உபதேசிக்கிறார்.

## விஷய அட்டவணை.

1. ஸகுண பிரம்மமான கிருஷ்ணனுடைய உபாஸனை.
2. நிர்க்குண பிரம்மமான அக்ஷரத்தின் உபாஸனை.
3. ஈசுவரனுடைய உபாஸனை முக்தியைக் கொடுக்கும்.
4. அப்யாஸ யோகமும் அப்படியே.
5. பகவானுக்கு கைங்கர்யம் செய்வது அடுத்தபடி.
6. கர்ம பலன்களை விரும்பாமலிருப்பது அடுத்தபடி.
7. நிர்க்குண பிரம்மத்தை உபாஸிப்பவர்களின் ஒழுக்கம்.

## விசிஷ்டாத்வைத பீடிகை.

பக்தியோகத்தில் நிஷ்டையை உடையவர்கள் அடையத்தகுந்த வஸ்து, பரப்ரஹ்மமான பகவான் நாராயணனே. தடையில்லாத அவருடைய ஐசுவரியத்தை நேரில் பார்க்கவேண்டுமென்ற

ஆசை அர்ஜுனனுக்குண்டாயிற்று. எல்லையற்ற மேன்மையையுடைய கிருபை ஔதார்யம் ஒழுக்கம் முதலிய கல்யாண குணங்களுக் கிருப்பிடமும் வீண் போகாத ஸங்கல்பமுடையவனுமான பகவான் தன் ஈச்வரத்தன்மையை அவனுக்குள்ளபடி காட்டினார். ஒரே நிச்சயத்துடன் இடைவிடாமல் அவரிடத்தில் பக்தி செய்வது ஒன்றே அவரை நேரில் பார்ப்பதற்கும் அடைவதற்கும் உபாயமாகுமென்று இதுவரையில் சொல்லப்பட்டது. ஆத்ம உபாஸனையைப் பார்க்கிலும் பக்தி யென்ற உபாஸனையே சீக்கிரமாய்ப் பலத்தைக் கொடுக்கும். ஸுலபமாய்ச் செய்யக்கூடியது, சிறந்ததென்றும், மேற்சொன்ன உபாஸனைக்கு உபாயங்களும், அவைகளைச் செய்யச் சக்தியில்லாதவனுக்கு ஆத்ம நிஷ்டையும், அதற்கு வேண்டியவைகளும் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகின்றன. நாம் அடையவேண்டிய பிரயோஜனமாயும் தியானஞ் செய்யத் தகுந்தவனுயுமிருக்கிற பகவான் சிறந்தவராகையால், அவரைப்பற்றின உபாஸனையும் சிறந்ததென்று "ஸமஸ்த யோகிகளைக் காட்டிலும் என்னிடத்திலேயே மனதைச் செலுத்திச் சிரத்தையுடன் என்னையே உபாஸிக்கிறவனே மேலானவன்" என்றவிடத்தில் சொல்லப்பட்டது.

## கீதார்த்த

### ஸங்கிரஹம்.

பக்தியின் மேன்மையும், அதற்கு உபாயமும், அதில் சக்தியில்லாதவனுக்கு ஆத்மாவிடத்தில் நிஷ்டையும், அதற்கு வேண்டியவைகளும், பக்தனிடத்தில் பகவானுக்கு அதிகப் பிரீதியும் இந்த அத்யாயத்தின் விஷயங்கள்.

"தன் கழலிற்பத்தி தாழாதது, மதின் காரணமாம்
இன்குணர் சிந்தையு, மீதறியார்க் கவ்வடிமைகளும்,
தன் கருமங்களறியாத வர்க்கிலகு நிலையும்,
தன் கழலன்பர்க்கு நல்லவன் சாற்றினன் பார்த்தனுக்கே."

அ—து:— தன் திருவடிகளில் செய்யப்படும் பக்தி யோகம் தாழாதிருப்பதும், அதற்குக் காரணமான கல்யாண குணங்களை

யுடைய பகவானைப்பற்றின தியானமும், இந்த அப்யாஸத்தைச் செய்ய முடியாதவர்களுக்கு அப்படிப்பட்ட கைங்கர்யங்களும், அந்த அஸாதாரணமான கைங்கர்யங்களைச் செய்யச் சக்தியில்லாதவர்களுக்கு ஸுலபமாய் அனுஷ்டிக்கக்கூடிய ஆத்ம நிஷ்டையும் இந்த அத்யாயத்தில் சொல்லப்பட்டன.

விஷயச் சுருக்கம்.

1. ஈசுவரனை உபாஸிப்பது, ஜீவாத்ம ஸ்வரூபத்தை உபாஸிப்பதென்ற இரண்டில் எது சிறந்தது?

2. என்னை உபாஸிப்பதே மேலானது.

3—5. ஜீவஸ்வரூப உபாஸனை செய்கிறவர்கள் எனக்கு ஸமமான சுத்த ஜீவஸ்வரூபத்தை அடைகிறார்கள். ஆனால் அது வெகு கஷ்டம்.

6—8. என் உபாஸகர்களை நான் கரையேற்றுகிறேன். என்னையே தியானஞ்செய்,

9. இது முடியாவிட்டால் அப்யாஸ யோகத்தைச் செய்.

10. இதுவும் முடியாவிட்டால், தேஹத்தால் எனக்கு உகந்த கைங்கர்யத்தைச் செய்.

11. இதுவும் முடியாவிட்டால் ஸர்வ கர்மபலங்களையும் எனக்கு அர்ப்பணம் செய்.

12. இந்த உபாயங்களின் தாரதம்யம்.

13—19. பலாபேக்ஷையின்றிக் கர்மங்களைச் செய்யும் பக்தனுடைய லக்ஷணங்கள்—இவனே எனக்குப் பிரியன்.

20. ஜீவாத்ம உபாஸனையைக் காட்டிலும் பக்தியே எனக்கு எல்லையற்ற பிரீதிகரமானது.

## த்வைத பீடிகை

தேவதேவனான விஷ்ணுவையும் பரதேவதையான லக்ஷ்மியை

யும் உபாஸிக்கும் முறைகளில் பகவானுடைய உபாஸனையே மேலானது. இதை விளக்குவதற்காக இந்த அத்யாயத்தில் லக்ஷ்மியின் உபாஸனை விசாரிக்கப்படுகிறது. இதுவும் பகவானுடைய மஹிமையைப்பற்றிச் சொல்வதால் இரண்டாவது வகுப்பில் சேர்ந்த ஆறு அத்யாயங்களில் அடங்கவேண்டியதே. பகவானையே தியானஞ் செய்யவேண்டும்; முக்திக்கு அதே வழி; வேறு வழியில்லையென்று புருஷ ஸூக்தம் சொல்லுகிறது. ஆனல் வேறொரு ஸூக்தத்தில் லக்ஷ்மியை உபாஸிப்பவர்களும் தியானஞ் செய்பவர்களும் அமிருதத்வத்தை அடைகிறார்களென்று சொல்லப்படுகிறது. ஸாமான்யமாய் விசாரிப்பவனுக்கு இவ்விரண்டு சுருதிகளும் விரோதமாய்த் தோன்றும். அர்ஜுனன் அந்த நிலைமையிலிருந்து கொண்டு, பகவானுடைய உபாஸனையே மேலானதென்பதற்குக் காரணங்களை வெளிப்படுத்துகிறான்.

## விஷயச் சுருக்கம்.

விசுவரூபத்தைத் தர்சித்தால் என்ன பிரயோஜனமுண்டாக வேண்டும்? யாவற்றிற்கும் ஆதாரமான விசுவரூபத்தைத் தவிர வேறொன்றையும் நாம் தியானிக்கக்கூடாதென்ற உறுதியான நம்பிக்கை பிறக்கவேண்டும். பக்தியென்றாலென்ன? நமது பிரேமைக்குப் பாத்திரமான ஒரு பதார்த்தத்தின் மேன்மையையும் குணங்களையும் உண்மையாய் உணர்வதால் பிறக்கும் தீவிரமான பிரேமையே.

ஈசுவரனுடைய ஸர்வோத்தமமான அகண்ட மஹிமையை அர்ஜுனன் பார்த்தான். அவரிடத்தில் எல்லையற்ற பக்தி யுண்டாயிற்று. வேறொரு பதார்த்தத்தில் பக்தியைச் செலுத்துகிறவனுக்கு நேரும் பயனென்னவென்று அவன் கேட்டதே அதற்கு அடையாளம். அர்ஜுனன் தானே அதற்குப் பதில் ஊஹித்துக்கொள்ளக் கூடாது. ஆகையால் அதைத் திருஷ்டாந்தத்துடன் விளக்கும்படி கிருஷ்ணனைக் கேட்டான்.

பகவானுக்கு அடுத்தபடியாயும், அவருடைய நியமனத்திற்குட்பட்டதாயுமிருக்கும் பதார்த்தம், சேதனப் பிரகிருதியே;

அதையே ஸ்ரீயென்றும் லக்ஷ்மியென்றும் சொல்வதுண்டு. இங்கே அது அவ்யக்தமெனப்படுகிறது. இந்த அவ்யக்தத்தைப்பற்றிச் சொல்லப்படும் விஸ்தாரந்தமே மற்ற யாவற்றிற்கும் பொருந்துவதால் அர்ஜுனனுடைய கேள்விக்குப் பதில் ஸுலபமாகிறது.

"அர்ஜுனா! என்னையே உபாஸிக்கும் பக்தர்கள் ஸர்வோத்தமமான உபாயத்தை அனுஷ்டிக்கிறார்கள். அவ்யக்தத்தை உபாஸிப்பவர்களுக்கும் நானே உத்தமமான கதி. ஆனால் அவர்கள் மிகுந்த கஷ்டங்களை அனுபவிக்கவேண்டியிருக்கும். அவ்யக்தத்தின் வழியாய் என்னையடைவது எளிதல்ல. என்னையே நேரில் உபாஸிப்பதால் ஸம்ஸார ஸமுத்ரத்தை ஸுலபமாய்த் தாண்டலாமென்பது நிச்சயம்."

ஒவ்வொரு ஜீவனும் தன் பரிபக்வ நிலைக்குத் தகுந்தபடி இந்த மார்க்கத்தில் எவ்விடத்தில் வேண்டுமானாலும் ஆரம்பிக்கலாம். அல்லது முதற்படியிலேயே ஆரம்பிக்கலாம். பரம புருஷனை அடைவதற்கு அவன் நினைக்க வேண்டியதும் செய்யவேண்டியதும் இதே. உண்மையான அறிவுள்ள பக்தன் மற்றப்பிராணிகளுடன் கலந்திருக்கும் பொழுது, சில நற்குணங்கள் வாய்ந்திருக்க வேண்டும். அவை பக்திக்கு முக்யமான அங்கமாகும். இவ்விதமாய்ப் பக்தி முதிர்ந்து, அவன் பகவானுக்கு அத்யந்தம் பிரியனாகிறான். இந்த குணங்கள் 13 முதல் 19 வரையில் சொல்லப்படுகின்றன.

"அர்ஜுனா! தர்மத்திற்கும் மரணமின்மைக்கும் உன்னை அழைத்துச் செல்லும் இந்த மார்க்கத்தில் நடப்பவர்களே எனக்கு அத்யந்தப் பிரியர்க"ளென்று பகவான் முடிவில் விஸ்தாரஞ் செய்கிறார். ஆகையால் பரம பக்தியே கடைசியான படி. இந்த அத்யாயத்திற்குப் பக்தி யோகமென்ற பெயர் வந்ததும் அதனாலேயே. பக்தனை வர்ணிக்குமிடத்தில் பக்தியும் வர்ணிக்கப்படும்.

## பதின்மூன்றாவது அத்யாயம்.

अर्जुन उवाच—
'प्रकृतिं पुरुषं चैव क्षेत्रं क्षेत्रज्ञमेव च ।
एतद्वेदितुमिच्छामि ज्ञानं ज्ञेयं च केशव ॥ १ ॥'

श्रीभगवानुवाच—
इदं शरीरं कौंतेय क्षेत्रमित्यभिधीयते ।
एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः ॥ १ ॥

1. இந்தச் சரீரம் க்ஷேத்ரமென்று சொல்லப்படும். இதை அறிகிறவன் (உபயோகப்படுத்துகிறவன்) க்ஷேத்ரக்ஞன் என்று பிரஹ்ம ஞானிகள் சொல்லுகிறார்கள்.

क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।
क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥ २ ॥

2. ஸகல க்ஷேத்ரங்களிலும் என்னை க்ஷேத்ரக்ஞனென்று அறி. இப்படி க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரக்ஞனையும் பற்றின ஞானமே ஞானமென்று நினைக்கிறேன்.

तत्क्षेत्रं यच्च यादृक् च यद्विकारि यतश्च यत् ।
स च यो यत्प्रभावश्च तत्समासेन मे शृणु ॥ ३ ॥

3. அந்த க்ஷேத்ரமானது எதைப் போன்றது. எதினுடைய விகாரம் (மாறுதல்)? எதிலிருந்துண்டாயிற்று? எதை உண்டாக்குகிறது; அந்த க்ஷேத்ரக்ஞனும் யார்? எந்தச் சக்திகளையுடையவனென்பதைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன், கேள்.

ऋषिभिर्बहुधा गीतं छंदोभिर्विविधैः पृथक् ।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥ ४ ॥

4. இதே விஷயத்தை மஹாரிஷிகள் பல வேதவாக்கியங்களாலும், காரணங்களை எடுத்துக் காட்டி வித்தாந்த ரூபமான பிரஹ்ம ஸூத்ரவாக்யங்களாலும் நிரூபித்திருக்கிறார்கள்.

महाभूतान्यहंकारो बुद्धिरव्यक्तमेव च ।
इंद्रियाणि दशैकं च पंच चेंद्रियगोचराः ॥ ५ ॥

इच्छा द्वेषः सुखं दुःखं संघातश्चेतना धृतिः ।
एतत्क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥ ६ ॥

5, 6. இந்திரியங்களால் அடையப்படும் பதார்த்தங்களும், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களும், மனதும், ஐந்து மஹாபூதங்களும், அஹங்கார தத்வம், புத்தி (மஹத்தத்வம்)யும், அவ்யக்தமும் (பிரகிருதி, பிரதானம்), தேஹேந்திரியங்களின் சேர்க்கை, இச்சை த்வேஷம், ஸுகம், துக்கம், அறிவு, உறுதி யென்றவையுமே, க்ஷேத்ரமும் அதின் மாறுதல்களு மென்று சுருக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

अमानित्वमदंभित्वमहिंसा क्षांतिरार्जवम् ।
आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ ७ ॥

7. வணக்கம், டம்பமில்லாமை, பிறருக்கு ஹிம்ஸை செய்யாமை, பொறுமை, நேர்மை, குருசுச்ரூஷை, தூய்மை (சுத்தி), கலங்காமலிருத்தல், தன்னடக்கம்.

इंद्रियार्थेषु वैराग्यमनहंकार एव च ।
जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥ ८ ॥

असक्तिरनभिष्वंगः पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥ ९ ॥

8. 9. இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் விஷயங்களில் வைராக்யம், அஹங்கார மில்லாமை, பிறப்பு, இறப்பு, கிழத்தனம் நோயென்றவைகளால் வரும் துக்கத்தையும் கெடுதிகளையும் பரிசோதிப்பது, ஒன்றிலும் பற்றில்லாமை, புத்ரன் மனைவி வீடு முதலியவைகளுடன் தன்னை ஒருமைப் படுத்தாமலிருப்பது, எப்பொழுதும் தனக்கு நேரும் ஸுகதுக்கங்களை ஸம நிலையுடன் அனுபவிப்பது.

मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥ १० ॥

10. என்னைத் தவிர மற்றவைகளிலிருந்து மனதைத் திருப்பி என்னிடத்திலேயே நாட்டிக், கலங்காத பக்தி செய்வது, ஜனக்கூட்டங்களில் ஸந்தோஷமின்றித், தனியேயிருப்பதில் பிரியமடைவது.

अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थदर्शनम् ।
एतज्ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥ ११ ॥

11. ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றின ஞானத்தையே எப்பொழுதும் பரிசீலனை செய்வது, அந்தப் பரமாத்ம ஞானத்திற்குப் பொருளான பிரம்மத்தை நேருக்கு நேராய்ப் பார்ப்பதென்றவை ஞானமென்று சொல்லப்படும். இவைகளைத் தவிர மற்றவை அஞ்ஞானமெனப்படும்.

ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वाऽमृतमश्नुते ।
अनादिमत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥ १२ ॥

12. இப்பொழுது நீ அறிய வேண்டிய பொருளை உபதேசிக்கிறேன்; அதை அறிந்தால் ஜனன மரண ரூபமான ஸம்ஸாரத்தை ஒருவன் தாண்டுவான். பரப்ரஹ்மம் ஆதியற்றது; அதை ஸத்தென்றாவது அஸத்தென்றாவது சொல்லமுடியாது.

सर्वतः पाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥ १३ ॥

13. அது எங்கும் கைகளையும் பாதங்களையும் கண்களையும் தலைகளையும் வாய்களையும் செவிகளையும் உள்ளதாய் லோகங்களில் யாவற்றையும் வியாபித்து நிற்கிறது.

सर्वेंद्रियगुणाभासं सर्वेंद्रियविवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥ १४ ॥

14. கர்மேந்திரிய ஞானேந்திரிய அந்தக் கரணங்களை (வியாபாரங்களை) அது பிரகாசிக்கச் செய்கிறது. ஆனால் மேற்சொன்ன

வைகளில் ஸம்பந்தப்படாமல் நிற்கிறது. யாதொன்றையும் ஆதாரமாகக் கொள்ளாமல் யாவற்றையும் தரிக்கிறது (தாங்குகிறது); பிரகிருதி ஸம்பந்தமான குணங்கள் இல்லாவிட்டாலும், ஜீவகோடிகளின் ஸத்வ ரஜஸ்தமஸென்ற குணங்களால் நடக்கும் வியாபாரங்களின் பலன்களை அது அடைகிறது. (ஸர்வக்ஞனானதால் அறிந்து, ஸர்வசக்திமானானதால் கர்மங்களுக்குப் பலன்களை ஜீவன்கள் தகுந்த காலதேசங்களில் அனுபவிக்கும்படி ஏற்பாடு செய்கிறது.

बहिरंतश्च भूतानामचरं चरमेव च ।
सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चांतिके च तत ॥ १५ ॥

15. பிராணிகளை உள்ளும் புறமும் வியாபித்திருக்கிறது; சராசரப் பிரபஞ்சமும் அதே. அது ஸூக்ஷ்மத்தைக் காட்டிலும் ஸூக்ஷ்மமானதால் பிறரால் அறியமுடியாதது. அக்ஞானிகளுக்கு வெகு தூரத்திலிருப்பது (அடையமுடியாதது), ஞானிகளுக்கு வெகு ஸமீபத்திலிருப்பது. தங்களுடைய ஆத்மாவில் அந்தர்யாமியாய் உபாஸிக்கிறார்கள்).

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम्
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥ १६ ॥

16. ஸகல பிராணிகளிடத்திலும் தனித்தனியே பிரிந்திருப்பதுபோல் தோன்றினாலும் உண்மையில் அது பிரிந்திருப்பதல்ல. ஸகலப் பிராணிகளையும் (பிரபஞ்சம் நடக்கும்பொழுது) அதே தாங்குகிறது. (பிரளய காலத்தில்) பிரபஞ்சத்தை அது விழுங்குகிறது; மறுபடியும் (ஸிருஷ்டி காலத்தில்) வெளிப்படுத்துகிறது.

ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य धिष्ठितम् ॥ १७ ॥

17. ஜோதியுள்ள ஸூர்யன் அக்னி முதலிய பதார்த்தங்களைக் காட்டிலும் அது மேலான ஜோதியுள்ளது; தமஸ் (இருட்டு) என்று சொல்லப்படும் அக்ஞானத்திற்கு அப்பால் விளங்கும் ஞான ஸூர்யன் அதே. மேற்சொன்ன வணக்கம் முதலிய ஞானத்தின் அம்சங்களும் அதின் ஸ்வரூபமே. அறியவேண்டிய விஷயங்களுக்

குள் அதே. (பிரம்மமே) மேலானது. அதை\அடையும் ஸாதனம் மேற்சொன்ன ஞானமே. யாவற்றின் ஹிருதயத்தில் அந்தர்யாமி யாய் வேறுன்றி இருப்பதும் அதே.

इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः ।
मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥ १८ ॥

18. இப்படி உனக்கு ஞானம், ஞேயம், க்ஷேத்ரமென்றவை களைச் சுருக்கமாய் உபதேசித்தேன். என்னிடத்தில் பக்தி செய்து இதை நன்றாய் அறிந்தவன் என் தன்மையை அடைகிறுன்.

प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।
विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसंभवान् ॥ १९ ॥

19. பிரகிருதி புருஷனென்ற இவ்விரண்டும் அநாதியென்று அறி. மஹத்தத்வம் முதல் தேஹம் வரையிலுள்ள மாறுதல்களும் ஸுகம், துக்கம், மோஹம் முதலிய குணங்களும் அந்தப் பிரகிருதியி லிருந்தே உண்டாயின வென்றறி.

कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।
पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥ २० ॥

20. காரிய ரூபமான ஸ்தூல பிரபஞ்சத்திற்கும் அதற்குக் காரண ரூபமான ஸூக்ஷ்ம பிரபஞ்சத்திற்கும் கர்த்தா (செய்கிற வன்) யாரென்று விசாரிக்குமிடத்தில் பிரகிருதியே ஹேதுவென்று சொல்லப்படுகிறது. ஆனல் ஜீவன் ஸுக துக்கங்களை அனுபவிக் கும் விஷயத்தில் புருஷனே ஹேதுவென்று சொல்லப்படுகிறது.

पुरुषः प्रकृतिस्थो हि भुंक्ते प्रकृतिजान्गुणान् ।
कारणं गुणसंगोऽस्य सदसद्योनिजन्मसु ॥ २१ ॥

21. மேற்சொன்னபடி பிரகிருதியிலிருந்துண்டாகும குணங் களை அந்தப் பிரகிருதியையே தேஹமாய்க்கொண்டு புருஷன் அனுப விக்கிறுன்; இப்படி குணங்களுடன் அவனுக்கு ஏற்பட்ட ஸம்

பந்தமே பாப புண்ய ஜன்மங்களை ஜீவனுக்குக் கொடுப்பதற்குக காரணமாகும.

उपद्रष्टानुमंता च भर्ता भोक्ता महेश्वरः ।
परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन्पुरुषः परः ॥ २२ ॥

22. இந்த தேஹத்தில் இருந்துகொண்டு யாவற்றையும் தரிக்கிறவனென்றும், கர்ம பலன்களைப் புஜிக்கிறவனென்றும்,ஸாக்ஷியாய்ப் பார்த்துக் கொண்டிருப்பவனென்றும், கர்மங்களைச் செய்வதற்கு ஸம்மதிக்கிறவனென்றும் சொல்லப்படும் பரமபுருஷனான மஹேசுவரன், பரமாத்மாவென்றும் சொல்லப்படுகிறான்.

य एवं वेत्ति पुरुषं प्रकृतिं च गुणैः सह ।
सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते ॥ २३ ॥

23. இப்படிப் புருஷனையும் பிரகிருதியையும் அதின் குணங்களையும் நன்றாய் அறிகிறவன், பூர்வகர்ம கதியால் பலவிதமாய உலகத்தில் நடந்துகொண்டிருந்தாலும், மறுபடியும் பிறப்பதில்லை.

ध्यानेनात्मनि पश्यंति केचिदात्मानमात्मना ।
अन्ये सांख्येन योगेन कर्मयोगेन चापरे ॥ २४ ॥

24. சிலர், பரமாத்மாவைத் தங்களுடைய நிர்மலமான மனதாலும், சிலர் புத்தியில் தியானயோகத்தாலும் நேருக்கு நேராய்ப் பார்க்கிறார்கள். வேறு சிலர், கர்மயோகத்தாலும் வேறு சிலர் ஞானயோகத்தாலும் அதைப் பார்க்கிறார்கள்:

अन्ये त्वेवमजानंतः श्रुत्वान्येभ्य उपासते ।
तेऽपि चातितरंत्येव मृत्युं श्रुतिपरायणाः ॥ २५ ॥

25. இப்படி அறியமுடியாத வேறு சிலர், பிறரிடத்திலிருந்து ஆத்ம வித்யையைக் கேட்டறிந்து அதை உபாஸிக்கிறார்கள். அப்படி ஆசாரியனுடைய உபதேசத்தையே மோக்ஷ ஸாதனமாய் நம்பி,

அனுஷ்டிப்பவர்களும் ஜனன மரண ரூபமான ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறார்கள்.

यावत्संजायते किंचित्सत्त्वं स्थावरजंगमम् ।
क्षेत्रक्षेत्रज्ञसंयोगात्तद्विद्धि भरतर्षभ ॥ २६ ॥

26. இந்தப் பிரபஞ்சத்தில் ஸ்தாவர ஜங்கமமென்ற எந்தப் பதார்த்தம் உண்டாகிறதோ, அதெல்லாம் முன் சொன்ன க்ஷேத்ரமும் க்ஷேத்ரக்ஞனும் சேருவதாலேயே உண்டாகின்றன வென்றறி.

समं सर्वेषु भूतेषु तिष्ठंतं परमेश्वरम् ।
विनश्यत्स्वविनश्यंतं यः पश्यति स पश्यति ॥ २७ ॥

27. ஸகல பிராணிகளிடத்திலும் ஒரேவிதமாய் விளங்கி நாசத்தையடையும் பதார்த்தங்களுக்குள் நாசமடையாலிருக்கும் பரமேசுவரனை எவன் பார்க்கிறானோ அவனே ஞானியெனப்படுவான்.

समं पश्यन्हि सर्वत्र समवस्थितमीश्वरम् ।
न हिनस्त्यात्मनात्मानं ततो याति परां गतिम् ॥ २८ ॥

28. எல்லாவிடத்திலும் ஒரேவிதமா யிருக்கும் ஈசுவரனை இப்படிப் பார்க்கிறவன் தன்னைத்தானே அழிக்கமாட்டான். ஆகையால் உத்தமகதியை அடைகிறான் (அக்ஞானத்தால் ஆத்மஸ்வரூபத்தை அறியாமல், அறியவிரும்பாமல், ஸம்ஸாரத்திலேயே உழன்றுகொண்டிருப்பவர்கள், தங்களுடைய ஆத்மாவைக் கொல்லுகிறவர்களென்று ஈசோபனிஷத்தின் வாக்யம் இங்கே ஞாபகத்திற்கு வரும்.).

प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।
यः पश्यति तथात्मानमकर्तारं स पश्यति ॥ २९ ॥

29. கர்மங்கள் யாவும் பிரகிருதியாலேயே செய்யப்படுகின்றனவென்று பார்க்கிறவன், ஆத்மா அவைகளைச் செய்கிறவனல்லவென்று பார்க்கிறான்.

यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति ।
तत एव च विस्तारं ब्रह्म संपद्यते तदा ॥ ३० ॥

30. தனித்தனியா யிருக்கும் ஸகல பிராணிகளையும் ஒன்றாய் ஈசுவர ஸ்வரூபத்தி லிருப்பதாய் பார்த்தபிறகே, அவை யாவும் பிரம் மத்தினிடத்திலிருந்து உண்டாகும் முறையையும் பார்க்கிறான். அப்பொழுது அவன் பிரம்மத்தையே அடைகிறான்.

अनादित्वान्निर्गुणत्वात्परमात्मायमव्ययः ।
शरीरस्थोऽपि कौंतेय न करोति न लिप्यते ॥ ३१ ॥

31. அழிவற்ற பரமாத்மா ஆதியற்றவன்; பிரகிருதி ஸம்பந்த மான குணங்களற்றவன். ஆகையால் இந்தச் சரீரத்திலிருந்தாலும் ஒன்றையும் செய்வதில்லை. ஒன்றிலும் ஸம்பந்தப்படுவதில்லை.

यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे तथात्मा नोपलिप्यते ॥ ३२ ॥

32. எங்கும் வியாபித்திருக்கும் ஆகாசம் அதிஸூக்ஷ்மமா யிருப்பதால் ஒன்றிலும் ஒட்டாமலிருப்பதுபோல், எங்கும் வியாபித் திருக்கும் ஆத்மாவும் இந்தத் தேஹத்திலிருக்கும்பொழுது ஒன் றிலும் ஒட்டுவதில்லை.

यथा प्रकाशयत्येकः कृत्स्नं लोकमिमं रविः ।
क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत ॥ ३३ ॥

33. ஒரே ஸூரியன் இந்த லோகம் முழுவதையும் எப்படி பிரகாசிக்கச் செய்கிறதோ, அப்படியே இந்த க்ஷேத்ரக்ஞன் க்ஷேத் ரம் முழுவதையும் பிரகாசிக்கச் செய்கிறான்.

क्षेत्रक्षेत्रज्ञयोरेवमंतरं ज्ञानचक्षुषा ।
भूतप्रकृतिमोक्षं च ये विदुर्यांति ते परम् ॥ ३४ ॥

34. மேற்சொன்னபடி க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞன் என்றவை களின் பேதத்தையும் பிராணிகள் பிரகிருதியினிடத்திலிருந்துவிடுபடும் வழியையும் ஞானக்கண்ணால் அறிகிறவர்கள் பரம்பொருளை அடை கிறார்கள்.

# அத்யாயம் 13.

## அத்வைத பீடிகை.

பரமேசுவரனுக்கு இரண்டு பிரகிருதிகள் உண்டென்றும், அவற்றுள் ஒன்று முக்குணங்களின் ரூபமாய் எட்டுவிதமாய் விளங்குகிறதென்றும், ஸம்ஸாரத்திற்குக் காரணமாகையால் தாழ்ந்ததென்றும், மற்றொரு பிரகிருதி உயர்ந்ததென்றும், உயிராயிருப்பதென்றும், ஜடமான பொருளை அறிவதற்காக ஈசுவர வடிவமாயுள்ளதென்றும், பிரபஞ்சம் உண்டாவதற்கும் நிலைத்திருப்பதற்கும் மறைவதற்கும் இந்த இரு பிரகிருதிகளாலேயே ஈசுவரன் காரணமாகிறானென்றும் ஏழாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டது. இனி க்ஷேத்ரம், அதை அறிகிறவனென்ற இருவிதமான பிரகிருதிகளை உபதேசித்து, அந்த மூலமாய் அவைகளுக்கு அதிஷ்டானமான ஈசுவரனுடைய தத்வத்தை நிச்சயமாய் அறிவதற்காக இந்த அத்யாயம் ஆரம்பிக்கப்படுகிறது. முந்தின அத்யாயத்தில் 13-வது சுலோகம் முதல் முடிவுவரையில், தத்வஞானமுள்ள துறவிகளின் ஆசாரம் வர்ணிக்கப்பட்டது. அவர்கள் எவ்விதமான ஞானத்தை யுடையவர்களாய், அதற்குத் தகுந்த அனுஷ்டானத்தால் பகவானுடைய கிருபையை அடைகிறார்களென்று இங்கே சொல்லப்படுகிறது.

## விஷய அட்டவணை.

1. தேஹமும் ஆத்மாவும்.
2. ஆத்மாவும் பரமாத்மாவும் உண்மையில் ஒன்றே.
3. ஸம்ஸாரமும் ஸம்ஸாரியும் அக்ஞானத்தாலுண்டானவை.
4. ஆத்மா ஸம்ஸாரத்தால் உண்மையாய்த் தாக்கப்படுவதில்லை.
5. ஆத்மாவிடத்தில் அவித்யை தங்காது; இந்திரியமே அதற்கிருப்பிடம்.
6. சாஸ்திரங்கள் அக்ஞானிக்கே.
7. ஆத்மாவுக்கு உண்மையாய் பந்தமும் மோக்ஷமுமில்லை.
8. கற்றறிந்த மூடர்கள் ஆத்மாவுக்கு ஸம்ஸாரத்துடன் ஸம்பந்தமுண்டென்பது பிரமையே.

9. ஆத்மாவுக்கும் அவித்யைக்கும் உள்ள ஸம்பந்தமும் இப்படியே.
10. மேற்சொன்னதின் சுருக்கம்.
11. க்ஷேத்ரத்தின் மாறுதல்கள்.
12. ஆத்மஜ்ஞானத்தைக் கொடுக்கும் நடத்தை.
13. பிரம்மத்தையே அறிய வேண்டியது.
14. சொல்லுக்கும் மனதுக்கும் அது எட்டாதது.
15. எல்லா முயற்சிக்கும் அதே ஆதி காரணம்.
16. அதற்கு எந்தத் தன்மையுமில்லை.
17. அஸத்யமான தோற்றத்திற்கு அதே ஆதாரம்.
18. எல்லாம் பிரம்ம மயமே.
19. ஞானிகளே அதை அறிவார்கள்.
20. யாவற்றிலும் அது ஒரே ஆத்மாவாய் விளங்குகிறது.
21. பிரபஞ்சத்திற்கு அதே காரணம்.
22. யாவற்றையும் அது பிரகாசிக்கச்செய்கிறது.
23. அறிவும் பொருளும் கருவியும் பயனும் நமது ஹிருதயத்திலுள்ளவை.
24. பக்தியுடன் உண்மையான ஞானத்தைத் தேடவேண்டும்.
25. பிரகிருதியும் புருஷனும் நித்யமே.
26. ஸம்ஸாரத்திற்குக் காரணம் அவைகளே.
27. அக்ஞானமும் பற்றும் காரணங்களாகும்.
28. ஆத்மஞானமே ஸம்ஸாரத்தை ஒழிக்கும்.
29. ஆத்மஸ்வரூபம்.
30. ஆத்மஞானத்தின் பயன்.
31. அதற்கு நான்கு மார்க்கங்கள்.
32. ஆத்மாவைத் தவிற வேறொன்றுமில்லை.
33. அது எங்கும் ஒரேவிதம்.
34. அதே மோக்ஷத்தைத் தரும்.
35. பிரகிருதியே யாவற்றையும் செய்யும், ஆத்மா செய்யாது.
36. யாவற்றிற்கும் பிறப்பிடமும் இருப்பிடமும் ஆத்மாவே.
37. கர்ம பலன்கள் அதைப் பற்றுவதில்லை.
38. யாவற்றையும் அது விளங்கச் செய்யும்.

## விசிஷ்டாத்வைத பீடிகை.

அடைகிறவனென ஜீவாத்மாவின் உண்மையை நேரில் பார்ப்பது முதல் ஆறு அத்யாயங்களில் சொல்லப்பட்டது; அது ஞான கர்ம யோகமென்ற நிஷ்டைகளால் உண்டாக்கப்படும். பரப்ரஹ்மமாயும் முக்யமாய் அடையவேண்டிய பிரயோஜனமாயுமிருக்கும் வாஸு தேவனை அடையும் உபாயமான பக்தியோகத்திற்கு அதே அங்க மாகும் பகவானுடைய உண்மையான ஸ்வபாவமும் அந்த மஹிமையைத் தெரிந்துகொண்ட பிறகு உண்டாய், ஒரே நிச்சயத் துடன் கூடி, எப்பொழுதும் இடைவிடாமலிருக்கும் பக்தியோகத் தில் நிஷ்டை இரண்டாவது ஆறு அத்யாயங்களில் சொல்லப் பட்டது.

மேலான ஐசுவரியத்தில் ஆசையுள்ளவர்களுக்கும் ஜீவாத்மா வின் கைவல்யத்தில் மாத்திரம் ஆசையுள்ளவர்களுக்கும் இந்தப்பக்தி யோகமே வேண்டிய பலன்களைக் கொடுக்குமென்றும் சொல்லப் பட்டது.

இவ்விரண்டு வகுப்புகளில் சொல்லப்பட்ட பிரகிருதி ஜீவன், இவைகளாலுண்டான பிரபஞ்சம், ஈசுவரன் என்றவைகளின் உண் மையான ஸ்வபாவமும், கர்ம ஞான பக்தியோகங்களின் ஸ்வ ரூபமும், அவைகளை அனுஷ்டிக்கும் விதமும், இனி வரும் மூன்று வது ஆறு அத்யாயங்களில் உபதேசிக்கப்படுகின்றன.

இந்தப் பதின்மூன்றுவது அத்யாயத்திலோ ஆத்ம ஸ்வரூபம், தேஹஸ்வரூபம், தேஹத்தின் உண்மை, தேஹத்தைவிட வேறு பட்ட ஆத்மாவை அடையும் உபாயம், அவனுடைய ஸ்வரூபம், அவன் அசேதனத்துடன் சேர்ந்ததற்குக் காரணம், அவன் தேஹத்தைவிட வேறுபட்டவனென்று தெரிந்துகொள்ளும் விதம் சொல்லப்படுகிறது.

### கீதார்த்த ஸங்கிரஹம்.

தேஹத்தின் ஸ்வரூபமும், ஆத்மாவை அடைவதற்குக் காரண மும், ஆத்ம தத்வமும், அவனுக்கு ஸம்ஸார பந்தம் உண்டாவதற்

குக் காரணமும், அவனுக்கும் தேஹத்திற்குமுள்ள பேதத்தைப் போதிக்கும் ஞானமும் இந்த அத்யாயத்தின் விஷயங்கள்.

"ஊனின்படியு, முயிரின் பிரிவு, முயிர் பெறுவார்
ஞானம் பெறுவகையுஞ், ஞானமீன்ற வுயிர்ப்பயனும்,
ஊனின்ற தற்கடியு, முயிர் வேறிடுமுள் விரகும்,
தேனின்ற பாதன் தெளிவித்தனன் சிலைப் பார்த்தனுக்கே."

அ-து:—சரீரத்தின் ஸ்வரூபமும், ஜீவாத்மாவின் பேதமும், ஜிவாத்மாவை அடைகிறவர்கள் ஞானத்தை அடையும் வகையும், (அதற்கு வேண்டிய குணங்களும்), ஆத்மாவைப்பற்றின ஞானம் உண்டாக்கின ஜீவாத்மாவாகிற பிரயோஜனமும் (பரிசுத்தமான ஆத்மஸ்வரூபம் அந்த ஞானத்தால் அடையப்படுகிறது), சரீரம் ஜீவனோடு சேர்ந்திருப்பதற்குக் காரணமும், ஜீவனும் தேஹமும் வேறென்று தெரிந்து கொள்ளும் அந்தரங்கமான உபாயமும் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகிறது.

## விஷயச் சுருக்கம்.

1. க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்ற பதங்களின் தாத்பர்யம் (தேஹம், ஜீவாத்மா)

2. எல்லா ஜீவாத்மாக்களுக்கும் அந்தர்யாமியாய் ஆத்மாவாய்ப் பகவானே விளங்குகிறார். இதை அறிவதே ஞானம்.

3, 4. இவைகளின் விவரங்கள் விஷ்ணு புராணம், மனுஸ்மிருதி, பாரதம் முதலியவைகளில் ரிஷிகளாலும், வேதவாக்யங்களாலும் பிரஹ்ம ஸூத்ரங்களாலும் உபதேசிக்கப்படுகின்றன.

5. 6. சரீர லக்ஷணம்.

7,11. ஞானஸாதனமான குணங்கள்.

12,18. க்ஷேத்ரக்ஞனான ஜீவாத்ம ஸ்வரூபம்.

19,22. தேஹமும் ஆத்மாவும் சேர்ந்திருக்கும் காரணமும், இவைகளின் கார்யங்களும், இவைகளின் ஸம்பந்தமும் சொல்லப்படுகின்றன.

23. இந்த ஞானம் முக்தியைக் கொடுக்கும்.

24, 25. அதிகாரிகளின் சக்திக்கு ஏற்றபடி தியானம், ஞானம்,

காமம், சிரவணம் முதலியவை ஜீவாத்ம தரிசனத்திற்கு ஸாதனங்கள்.

26. ப்ரகிருதி புருஷனுடைய சேர்க்கையால் ஸகல பிராணிகளும் உண்டாகின்றன.

27. ஆத்மாவின் ஸ்வரூப ஞானம்.

28. இந்த உண்மையான ஞானமே பரகதியைக் கொடுக்கும்.

29. மேற் சொன்ன ஞானத்தின் விவரம்.

30. இந்த ஞானத்தால் பரிசுத்தமான ஜீவாத்ம ஸ்வரூபத்தை அடையலாம்.

31. பரிசுத்த ஜீவாத்மாவின் லக்ஷணம்.

32. ஆகாசத்தைப் போல் அது யாதொன்றிலும் பற்றுகிறதில்லை.

33. ஸூர்யனைப் போல் அது தேஹங்களில் விளங்கிப் பிரகாசிக்கச் செய்கிறது.

34. மேற்கண்ட விஷயங்களை அறிவதால் பரிசுத்தமான ஜீவ ஸ்வரூபத்தை அடையலாம்.

## த்வைதம் (பீடிகை.)

முன் பன்னிரண்டு அத்யாயங்களிலும் சொல்லப்பட்ட விஷயங்களை ஒன்று திரட்டிச் சுருக்கமாய் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகிறது. முதல் ஆறு அத்யாயங்களில் ஞானவிக்ஞானங்களை அடையும் வழியும், பின் ஆறு அத்யாயங்களில் ஜீவன் அழிவற்றதென்பதும் விளக்கிக் காட்டப்பட்டது. 7 முதல் 12 வரையில் ஈசுவரத் தன்மையின் ஸ்வபாவமும், 7-ல் முக்யமாய் ஈசுவரனுக்கு இருப்பிடமான க்ஷேத்ரத்தைப்பற்றியும் தெரிவிக்கப்பட்டது. இவ்விதமாய் பல பல அத்யாயங்களில் சிதறிக் கிடக்கும் விஷயங்களை ஒன்றாய்ச் சேர்த்துப், படிப்பவர்களுக்கு எளிதில் விளங்கும்படி அர்ஜுனனுடைய கேள்விக்குப் பதிலாய்க் காட்டப்பட்டிருக்கிறது.

## விஷயச் சுருக்கம்.

இதுவரையில் உபதேசிக்கப்பட்ட விஷயங்களை எப்படி வருக்கலாமென்றும், அதாவது, அர்ஜுனன் தான் ஸுலபமாய்த் தெரிந்து

கொள்வதற்சாகஎப்படி வருத்துக் கொண்டானென்றும் காட்டப்பட்டது. எப்படியென்றால், பிரகிருதியும் புருஷனும், க்ஷேத்ரமும் க்ஷேத்ரக்ஞனும், ஞானமும் ஜ்ஞேயமும், இப்படிச் சேர்த்ததின் கருத்தை நன்றாய்க் கவனிக்கவேண்டும். அதனால் கிருஷ்ணன் உபதேசித்த தத்வங்களின் ஸம்பந்தம் தெரியும். அர்ஜுனன் அவைகளை எவ்வளவு வரையில் கிரஹித்தானென்பதும், நாம் அவைகளை அறிவதற்கு என்ன ஸஹாயம் பகவானால் ஏற்படுத்தப்பட்டதென்றும் தெரியும்.

மேற்சொன்ன பதங்களுக்குத் தெளிவான கருத்தென்னவென்றால், பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமே பிரகிருதி. சேதனமான பூதமே (வஸ்துவே) புருஷன். பிரகிருதியின் காரியங்களே க்ஷேத்ரம். அவைகளை அறிகிறவனே க்ஷேத்ரக்ஞன். ஞானத்திற்கு ஸாதனங்களையே ஞானமென்றும், அவைகளால் அறிய வேண்டிய பொருளையே ஜ்ஞேயமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தப் பதங்களைக் கேட்டவுடனே இந்த அர்த்தம் வெளிப்பட்டால், இவ்விரண்டு பதார்த்த வகைகளிலும் ஏதாவதொன்று மாயையென்றும் மித்யை யென்றும் ஸத்யமல்லவென்றும் அர்ஜுனன் எண்ணுவானென்று நாம் சொல்ல முடியாது. ஆனால் இயற்கையாய் நமக்கு என்ன தோன்றும். பிரகிருதிக்கும் அதின் காரியங்களுக்குமுள்ள பேதத்தையும் ஸம்பந்தங்களையும் அர்ஜுனன் நன்றாய் அறிந்திருக்க வேண்டுமென்றே நாம் எண்ணலாம். இரண்டாவது அத்யாயம் 12, 13 சுலோகங்களில் பகவான் இதைக் குறிப்பிட்டிருக்கிறார். இவைகளை ஸந்தேஹ விபரீதமின்றி அறிந்தாலொழிய அவனுக்கு நேர்ந்த சோகம் ஆதாரமற்றதென்று நிரூபிக்க முடியாது.

இந்த அத்யாயத்தின் மற்ற பாகங்களில் எவ்வளவு தேடிப் பார்த்தாலும் மேற்சொன்ன இருவகை பதார்த்தங்களில் ஏதாவது அஸத்யமென்றும் மாயையென்றும் நிரூபிப்பது ஸாத்யமல்ல. இரண்டும் ஒன்றேயென்று விஸ்தாரஞ் செய்யவும் முடியாது. இதை நன்றாய் விளக்கும்பொருட்டு, இதைப்பற்றின சுலோகங்களைச் சற்றுக் கவனிப்போம்.

சு. 2. இந்தத்தேஹத்தை க்ஷேத்ரமென்றும், இதை அறிகிறவனை க்ஷேத்ரக்ஞனென்றும் ஞானிகள் சொல்லுகிறார்கள்.

3. எல்லா க்ஷேத்ரங்களிலும் என்னை க்ஷேத்ரக்ஞனென்றறி. இப்படி இவ்விரண்டு பதார்த்தங்களையும் அறிவதே என்னை விளக்கும் ஞானமாகும்.

இவ்விடத்தில் ஒவ்வொரு தேஹத்திலுமிருக்கும் ஆத்மாவையே க்ஷேத்ரக்ஞனென்று வைத்துக்கொண்டால், ''எல்லா க்ஷேத்ரங்களிலுமிருக்கும் க்ஷேத்ரக்ஞனாக என்னை அறி''யென்று கண்ணன் சொன்னதற்கு, எல்லா தேஹங்களிலும் ஒரே ஆத்மாவே விளங்குகிறதென்று அர்த்தமாகும். அப்படியும் க்ஷேத்ரத்திற்கும் க்ஷேத்ரக்ஞனுக்குமுள்ள பேதம் சற்றுவது குறைவில்லை.

மேலும், எல்லா க்ஷேத்ரங்களிலும் ஒரே காலத்தில் ஒரு பதார்த்தம் ஆத்மாவாய்த் தன் தன்மையை விடாமல் எப்படி விளங்க முடியுமென்று அறிவது ஸுலபமல்ல. அது பரமாத்மாவாகவேயிருந்தால், ஒரு விதமாய் ஸாத்யமென்று சொல்லலாம். பரமாத்மாவையும் ஜீவாத்மாவையும் ஒன்றென்று சொன்னால், கண்ணன் 'என்னை அறி' யென்றதற்குப் பதிலாய், 'உன்னை அறி' யென்று சொன்னதே கருத்தாகும். 'என்னை அறி' யென்று அவர் சொன்ன பொழுது க்ஷேத்ரமாவது க்ஷேத்ரக்ஞனாவது அப்படி அறிகிறவனென்று அவர் சேர்த்துச் சொல்லவில்லை. அப்படிச் சொன்னால் 3-வது சுலோகத்தின் இரண்டாவது பாகத்திற்குப் பயனில்லை. க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரக்ஞனையும் உண்மையாய் அறிவதே என் ஸ்வரூபத்தை விளக்கும் ஞானமென்பதால், மூன்றாவது ஒரு பதார்த்தம் அவ்விரண்டையும் அறியவேண்டுமென்றே தோன்றுகிறது. ஆகையால் வேறொரு பதார்த்தம், தனக்கு வேறான க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞனென்ற இரண்டு பதார்த்தங்களை அறிய வேண்டுமென்பதே முடிவு. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றானால், க்ஷேத்ரத்தை அறியும் க்ஷேத்ரக்ஞனும் அவனேயானால், ஒரே குழப்பமே ஏற்படும். ஏனென்றால், க்ஷேத்ரக்ஞன் க்ஷேத்ரக்ஞனை அறிய வேண்டுமென்று உபதேசித்ததாகும். மேலும், ஜீவாத்மா முன்பே க்ஷேத்ரத்தை அறிந்திருந்தால் அது ஜீவாத்ம தசையில் எப்படியிருக்கமுடியும்?

4. க்ஷேத்ரத்தின் குணங்களையும் மாறுதல்களையும் அதின் செய்கை வேறொன்றை ஆசிரயிக்கிறதென்றதையும் அந்தப் பதார்த்

தின் ஸ்வபாவத்தையும் கவனிக்கும்படி கிருஷ்ணன் அர்ஜுனனை எச்சரிக்கிறார். மேல் சுலோகத்தில் க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரக்ஞனையும் குறிப்பிடும்பொழுது "அந்த க்ஷேத்ரமும் அவனு"மென்று உபயோகித்திருக்கும் சொற்களைக் கவனிக்கவேண்டும். அவைகளுக்குரிய விசேஷங்கள் சேர்த்துச் சொல்லப்படுகின்றன; மாறுதலுக்கு யோக்யமானவென்று க்ஷேத்ரத்தையும், மஹா சக்தியை யுடைய'வென்று க்ஷேத்ரக்ஞனையும் குறிப்பிட்டதைக் கவனிக்க வேண்டும். இப்படி இவ்விரண்டு பதார்த்தங்களும் முற்றிலும் வேறென்றே நிரூபிக்கப்படுகிறது.

5. மஹர்ஷிகளின் பிரமாணமும், வேதங்களின் ஆதாரமும், பிரஹ்ம ஸூத்ரங்களின் ஸித்தாந்தமும் எடுத்துச் சொல்லப் பட்டுப், பிறகே மேற்சொன்ன பதங்கள் விவரிக்கப்படுகின்றன. நிகரற்ற ஹேதுக்களால் நிறைந்து, நன்ருய்ப் பரிசோதித்து ஸித்தாந்தம் செய்யப்பட்ட பிரஹ்ம ஸூத்ரங்களின் பதங்கள் இதைப்பூர்ணமாய் நிரூபிக்கின்றனவென்று சொல்லப்படுகிறது. ஆகையால் இந்தக் கீதையின் நிலைமையும் ஸித்தாந்தங்களும் பிரஹ்மஸூத்ரங்களின் நிலைமையையும் ஸித்தாந்தங்களையும் ஒத்ததென்று கண்ணனுடைய மதம்.

6, 7. பஞ்ச பூதங்கள், அஹங்காரம், மற்ற தத்வங்கள், ஆசை முதலிய மனோ விருத்திகள், தேஹம் என்றவை ஒன்று சேர்ந்து க்ஷேத்ரமெனப்படும்.

8—12. க்ஷேத்ரக்ஞனை அறிய விரும்புகிறவன் காமக்ரோதங்களை ஒழிக்கவேண்டும். புண்ய கர்மங்களையே செய்துகொண்டு பக்தியுடன் பகவானை ஆராதிக்கவேண்டும்; அப்பொழுதுதான் க்ஷேத்ரக்ஞனைப்பற்றின ஞானம் அவனுக்கு உபதேசிக்கத் தகும். பரமாத்மாவைப்பற்றின ஞானத்தை அறிய விரும்புவதும் அதற்கேற்ற நடத்தையுமே இங்கே ஞானமெனப்படுகிறது. ஏனென்ருல் அதை அடைவதற்கு இது முக்யமான ஸாதனம்.

13—18. ஸகல சக்திகளும் பொருந்தின க்ஷேத்ரக்ஞனை பிரஹ்மமே க்ஷேத்ரத்தில் காணப்படும் செய்கைகளுக்கு உத்பத்தி

ஸ்தானமாகும். அறிய வேண்டிய பொருளான ஞேயமும் பிரம்ம மென்றே சொல்லவேண்டும். ஆதியுள்ள எந்தக் குணமும் அதற் கில்லை. அதாவது, தேஹம், இந்திரியங்கள், அவைகளாலுண் டாகும் அவஸ்தைகள், அதைக் கட்டுப்படுத்த முடியாது. பிரகிருதியின் காரியமாய் வெளிப்படையாய் விளங்கும் ஸத்தும் அவரல்ல. ஸூக்ஷ்மமான பிரகிருதியென்ற அஸத்தும் அவரல்ல. ஆகையால் க்ஷேத்ரமென்று சொல்லப்படும் யாவற்றிற்கும் அவர் வேறு. ஸத் அஸத்தென்ற பதங்களுக்கு மேற்சொன்னபடியே வேதங்களில் அர்த்தஞ் செய்யப்படுகிறது. கண்டமான சக்திகளை யுடைய ஆத்மாவும் அசேதன பிரகிருதியான தேஹமும் அவரென்று சொல்லக்கூடாதென்பதை உறுதிப்படுத்துவதற்கே அவருடைய பர ஸ்வரூபமும் சக்திகளும் இந்த சுலோகத்தில் வர்ணிக்கப்படுகின்றன.

19. இப்படி க்ஷேத்ரம், ஞானம், அறியப்படும் பொருள், சுருக்கமாய் வர்ணிக்கப்பட்டன. என் பக்தன் இதைப் பூர்ணமாய் அறிந்து, என் பாவத்தை அடையத் தகுந்தவனாகிறானென்று கண் ணன் சொல்லுகிறார். இங்கே 'என் பாவ' மென்றதால் ஜீவேசுவர ஐக்யம் உபதேசிக்கப்பட்டதென்று ஸந்தேஹமுண்டாகும். இதற்கு என்ன ஆதாரமென்று கீதையையே நன்றாய்ப் பரிசோதித்தால் தெரியும்.

20. பிரகிருதியும் புருஷனும் நித்யம். விகாரங்கள் யாவும் பிர கிருதியைச் சேர்ந்தவை. இங்கே முதல் இரண்டு பதார்த்த வகுப் பும் கடைசியில் விசாரிக்கப்படுகிறது. க்ஷேத்ரக்ஞனையும் அதாவது ஞேயத்தையும் உபதேசிக்கும்பொழுது, புருஷனென்ற பதத்தை உபயோகிக்கவில்லை. விஸ்தாரமாய் வர்ணிக்கப்பட்ட க்ஷேத்ரத்தின் மூல காரணமானதால் பிரகிருதி புருஷனுடன் சேர்த்தே சொல்லப் படுகிறது. இப்படி அவை அனாதியாய் எப்பொழுதுமிருக்கின்றன வென்று காட்டப்படுகிறது. எல்லா மாறுதல்களுக்கும் குணங்களுக் கும் அவஸ்தைகளுக்கும் பிரகிருதியே உபாதான காரணம், அவை பிரகிருதி ரூபமாகவேயிருக்கின்றன வென்று அதைக் குறிப்பிட்டுப் பிரித்துச் சொல்லுகிறார்.

அப்படியானால் புருஷன் யார்? மற்றோரிடத்தில் அந்தப் பதம் ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் குறித்துச் சொல்லப் படுகிறது. ஆனால் பிறகு பரமாத்மாவையே புருஷோத்தம னென்று சொல்லியிருக்கிறது. இவ்விடத்திலும் அதையே அனு ஸரித்துப் புருஷனென்ற பதத்திற்கு இருவிதமாயும் அர்த்தஞ் செய்யலாம்.

11. தேஹேந்திரியங்களுக்குக் காரணமும் ஜீவனுடைய செயல் களுக்குக் காரணமும் ஜீவனுடைய செயல்களுக்கு நியாமகனும் புருஷ னென்று, பிரகிருதியைக் காட்டிலும் வேறாகச் சொல்லப்படுகிறது. ஸுகதுக்கானுபவமென்ற காரியத்திற்குப் புருஷனே ஹேது வென்றும் சொல்லப்படுகிறது. அந்தப் பதத்திற்கு காரணம் அல் லது கர்த்தாவென்று அர்த்தஞ் செய்யலாம். அனுபவத்தின் கர்த்தா வாய், அதாவது, ஸுகதுக்கத்திற்கு விஷயமாயிருக்கும்பொழுது ஸர்வ சக்தியுள்ள ஞேயமே அதென்று சொல்ல முடியாது. அது ஸுகதுக்கத்தை அனுபவிக்கும் ஜீவனாகவே யிருக்கவேண்டும். நித்யானந்தத்தை அடைவதற்கு வேண்டிய க்ஷேத்ரக்ஞன் இதன்று. புருஷனே காரணமென்று ஹேதுவிற்கு அர்த்தஞ் செய்தால், ஒரு பதத்தைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். அப்பொழுது, பரமாத்மா வான புருஷன் ஜீவாத்மாவின் ஸுக துக்கத்தை அனுபவிப்பதற் குக் காரணமென்று அர்த்தமாகும். இப்படிப் புருஷனென்று பதத் தால் நேராகவோ அல்லது, ஸுகதுக்கத்தை அனுபவிக்கும் ஒரு வஸ்துவென்ற எண்ணத்தாலோ ஜீவன் பகவானைக்காட்டிலும் வேறென்றே காட்டப்படுகிறது.

22. ஆனால் அடுத்த சுலோகத்தில் புருஷன் முக்குணங்க ளின் சக்திக்கு உட்பட்டவனென்றும், அவைகளிலும் அவைகளின் காரியங்களில் பற்றுள்ளவனென்றும், உத்தம அதம ஜன்மங்களில் அவன் பிறப்பதற்கு அதே காரணமென்றும் சொல்லப்படுகிறது. இந்தப் புருஷனும், ஞேயமும் க்ஷேத்ரக்ஞனும் பரமாத்மாவுமான வஸ்துவும் வெவ்வேறென்று சொல்லப்படுகிறது.

23. முக்குணங்களால் கட்டுப்பட்ட புருஷனுடன் ஒரே தேஹத்தில் இருந்தாலும், வேறொரு மேலான புருஷன் எல்லையற்ற

சக்திகளுடன் விளங்குகிறாரென்றும், அவரே பரமாத்மாவென்றும் சொல்லப்படுகிறது. அதாவது, ஸுக துக்கானுபவத்திற்கு உட்பட்ட புருஷன் ஒன்று. பரமாயும் ஸாக்ஷியாயும் நியாமகராயும் விளங்கும் புருஷன் வேறு. இவரையே க்ஷேத்ரக்ஞனென்றும், எல்லா க்ஷேத்ரங்களிலும் இருக்கிறவரென்றும், ஜீவன் அறியவேண்டியது. ஆகையால், அர்ஜுனனுடைய கேள்வியில் காணப்படும் மூன்று வகுப்பான வார்த்தைகளுக்கு உட்கருத்து விளங்கும். முதலாவது வகுப்பிலுள்ள பிரகிருதியென்பது உபாதான காரணம்; புருஷனென்பது சேதன பதார்த்தங்களின் ஸமூகம்; சேதனப்பிரகிருதியும் பரம புருஷனும் சேர்ந்து செய்யும் காரியத்தின் பயனைச் சராசரப் பிரபஞ்சம் யாவும் உண்டாகிறது. ஆகையால் ஜீவனை புருஷனைக் காட்டிலும் இவ்விரண்டும் மேலானவை. முதலில் அறிய வேண்டியவை.

க்ஷேத்ரமென்ற பதத்தால், மாறும் தன்மையையுடைய காரியமான பதார்த்தத்தை மாத்திரமல்ல, அதற்கு அதிஷ்டானமான தேவதையையும் சேர்த்தே பொருள் கொள்ளவேண்டும். இவ்விரண்டும் சேர்ந்து தேஹத்தையும் ஜீவனையும் உண்டாக்குவதையே முதலில் அறியவேண்டும். இவ்விதமான ஸம்பத்துடன் விஷயங்களை அறிவதைத்தவிர வேறு விதமாய் ஞானத்தை ஸம்பாதிக்க முடியாது. இந்த விஷயங்களை அறிந்தால், இந்த ஞானம் பரமாத்மாவை அறிவதற்கு உபயோகமாகும். அப்பொழுது அவர் கிருபைகூர்ந்து தன்னை அறிந்து தர்சித்த ஜீவனைப் பந்தத்திலிருந்து விடுவிப்பார். ஆகையால், அவரே ஸர்வ விதத்தாலும் ஞேயமாகிறார். அந்தக் காரணத்தாலேயே மற்ற இரண்டு வகுப்புகளையும் முதலில் விசாரித்துப் பிறகு, முதல் வகுப்பைக் கடைசியில் விசாரிக்கிறார். இதனால் ஜீவஸ்வரூபமும் அவனைப் பாதிக்கும் நிலைமையும் வர்ணிக்கப்படுகிறது.

24—35. துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் ஜீவன்களின் பொருட்டு மேற்சொன்ன ஞானத்தின் மஹிமை விஸ்தாரமாய்ச் சொல்லப்படுகிறது. புருஷனென்ற பதத்தால் பரமபுருஷனே குறிக்கப்பட்டாலும், ஒரே தேஹத்தில் ஜீவனுடன் கலந்

திருந்தாலும், எவ்விதத்திலும் இரண்டும் வெவ்வேறென்றும், தேஹத்தின் காரியங்களால் அவர் கொஞ்சமேனும் பாதிக்கப்படமாட்டாரென்றும், எல்லையற்ற மஹிமையுடன் யாவற்றிற்கும் நியாயகனாய் விளங்குகிறாரென்றும் சொல்லப்படுகிறது. கடைசி சுலோகத்தில் இவ்வளவு கருத்தும் அடங்கியிருக்கிறது. அதின் ஒவ்வொரு பதமும் ஆழ்ந்த கருத்துள்ளது. அதாவது, ஞானக்கண்ணால் க்ஷேத்ரத்திற்கும் க்ஷேத்ரக்ஞனுக்குமுள்ள பேதத்தை அறிகிறவர்களும், பூதங்களிலிருந்தும் பிரகிருதியிலிருந்தும் ஜீவன்கள் விடுவதற்குக் காரணமான தத் என்ற பொருளை அறிகிறவர்களும் பரமபுருஷனை அடைகிறார்கள். இப்படி மோக்ஷத்தையடைவதற்கு வேண்டிய ஞானத்தின் மேலானபடியென்று சொல்லத்தகும் க்ஷேத்ரக்ஞ யோகம் வர்ணிக்கப்பட்டது.



## பதினான்காவது அத்தியாயம்.



### குணத்ரய விபாக யோகம்.

श्रीभगवानुवाच—

परं भूयः प्रवक्ष्यामि ज्ञानानां ज्ञानमुत्तमम् ।
यज्ज्ञात्वा मुनयः सर्वे परां सिद्धिमितो गताः ॥ १ ॥

1. லோகத்தில் வழங்கும் பலவித ஞானமார்க்கங்களில் மேலான ஞானத்தை உனக்கு மறுபடியும் உபதேசிக்கிறேன். இதை அறிந்து ஸகல ரிஷிகளும் இந்தத் தேஹத்திலிருந்தே மேலான ஸித்தியை அடைந்தார்கள்.

इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायंते प्रलये न व्यथंति च ॥ २ ॥

2. இந்த ஞானத்தை ஆசிரயித்து என் தன்மைக்கு ஒத்த நிலைமையை அடைந்து, அவர்கள் ஸிருஷ்டி காலத்தில் மறுபடியும் பிறப்பதில்லை. பிரளயகாலத்தில் மற்றவர்களைப் போல் அழிவதுமில்லை.

मम योनिर्महद्ब्रह्म तस्मिन्गर्भं दधाम्यहम् ।
संभवः सर्वभूतानां ततो भवति भारत ॥ ३ ॥

3. எனக்கு வசப்பட்டு யாவற்றையும் தன்னுள்ளடக்கிக் கொண்டிருக்கும் மூல பிரகிருதியே யாவற்றிற்கும் உத்பத்தி ஸ்தானம் (கர்ப்பகிருஹம்). அதில் நான் கர்ப்பத்தை வைக்கிறேன். அதிலிருந்து ஸகல பிராணிகளும் உத்பத்தியாகின்றன.

सर्वयोनिषु कौंतेय मूर्तयः संभवंति याः ।
तासां ब्रह्म महद्योनिरहं बीजप्रदः पिता ॥ ४ ॥

4. ஜகத்தில் ஸகல கர்ப்ப ஸ்தானங்களிலும் உண்டாகும் ரூபங்கள் யாவற்றிற்கும் மேற்சொன்ன மூலப்பிரகிருதியே மஹா கர்ப்ப ஸ்தானம் (மாதா); பிதாவைப் போல் அதில் விதையை (பீஜத்தை) வைக்கிறவன் நானே.

सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसंभवाः ।
निबध्नंति महाबाहो देहे देहिनमव्ययम् ॥ ५ ॥

5. பிரகிருதியி லிருந்து ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்களுண்டாகின்றன. இவை இந்தத் தேஹத்தில் அழிவற்ற ஆத்மாவைக் கட்டுப் படுத்துகின்றன.

तत्र सत्त्वं निर्मलत्वात्प्रकाशकमनामयम् ।
सुखसंगेन बध्नाति ज्ञानसंगेन चानघ ॥ ६ ॥

6. அவைகளில் ஸத்வம், நிர்மலம், பிரகாசிக்கச் செய்வது, குறைவற்றது. ஆகையால் ஸுகத்திலும் ஞானத்திலும் பற்றுதலை உண்டாக்கி ஆத்மாவைக் கட்டுப்படுத்துகிறது.

रजो रागात्मकं विद्धि तृष्णासंगसमुद्भवम् ।
तन्निबध्नाति कौंतेय कर्मसंगेन देहिनम् ॥ ७ ॥

7. ரஜோ குணம் ஆசையைப் பிரதானமா யுடையதென் றறி. பற்றுதலையும் அனுபவிக்க வேண்டுமென்ற தாஹத்தையும் உண்டாக்

கும். ஆகையால் கர்மங்களைச் செய்வதிலேயே பற்றை உண்டாக்கி ஆத்மாவைக் கட்டுப்படுத்தும்.

तमस्त्वज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम् ।
प्रमादालस्यनिद्राभिस्तन्निबध्नाति भारत ॥ ८ ॥

8. தமோகுணம் அக்ஞானத்திலிருந்துண்டாகிறது. ஸகல ஜீவன்களையும் மயக்குகிறது. அஜாக்ரதை சோம்பல் தூக்கமென்றவைகளால் ஜீவனைக் கட்டுப்படுத்துகிறது.

सत्त्वं सुखे संजयति रजः कर्मणि भारत ।
ज्ञानमावृत्य तु तमः प्रमादे संजयत्युत ॥ ९ ॥

9. ஸத்வகுணம் ஸுகத்திலும், ரஜோகுணம் கர்மத்திலும், தமோகுணம் ஞானத்தை மறைத்து அஜாக்ரதையிலும் பற்றை உண்டாக்குகின்றன.

रजस्तमश्चाभिभूय सत्त्वं भवति भारत ।
रजः सत्त्वं तमश्चैव तमः सत्त्वं रजस्तथा ॥ १० ॥

10. ஸத்வகுணம் ஒரு ஸமயத்தில் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் அடக்கி ஓங்கிநிற்கும். அப்படியே ரஜோ குணம் ஸத்வகுணத்தையும் தமோகுணத்தையும் அடக்கிச் சில ஸமயங்களில் ஓங்கிநிற்கும். தமோகுணம் ஸத்வகுணத்தையும் ரஜோகுணத்தையும் அடக்கிச் சில ஸமயங்களில் ஓங்கி நிற்கும்.

सर्वद्वारेषु देहेऽस्मिन्प्रकाश उपजायते ।
ज्ञानं यदा तदा विद्याद्विवृद्धं सत्त्वमित्युत ॥ ११ ॥

11. இந்தத் தேஹத்தின் ஸகல துவாரங்களிலிருந்தும் (இந்திரியங்களும் அந்தக்கரணமும் இங்கே சொல்லப்படுகிறது). பிரகாச ரூபமான ஞானம் உண்டாகும்பொழுது ஸத்வகுணம் அதிகரித்திருக்கிறதென் றறி.

लोभः प्रवृत्तिरारंभः कर्मणामशमः स्पृहा ।
रजस्येतानि जायंते विवृद्धे भरतर्षभ ॥ १२ ॥

12. ரஜோகுணம் அதிகரிக்கும்பொழுது, பொருளாசை, கர்மங்களைச் செய்ய வாரம்பித்தல், ஊக்கம், ஓய்வின்மை, ஆசை யென்றவை உண்டாகின்றன.

अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च ।
तमस्येतानि जायंते विवृद्धे कुरुनंदन ॥ १३ ॥

13. தமோகுணம் அதிகரிக்கும்பொழுது பிரகாசமின்மை, ஊக்கமில்லாமை, அஜாக்ரதை, மயக்கமென்றவை உண்டாகின்றன.

यदा सत्त्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत् ।
तदोत्तमविदां लोकानमलान्प्रतिपद्यते ॥ १४ ॥

14. ஸத்வகுணம் அதிகரிக்கும்பொழுது ஜீவன் தேஹத்தை விட்டால் உத்தம ஞானிகள் அடையும் நிர்மலமான லோகங்களுக்குச் செல்லுகிறான்,

रजसि प्रलयं गत्वा कर्मसंगिषु जायते ।
तथा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते ॥ १५ ॥

15. ரஜோ குணம் அதிகரிக்கும் பொழுது தேஹத்தை விடும் ஜீவன், கர்மங்களைச் செய்வதில் பற்றுள்ளவர்களுக்குள் பிறக்கிறான். அப்படியே தமோகுணம் அதிகரிக்கும் பொழுது தேஹத்தை விடும் ஜீவன், புத்திமயக்கம் நிறைந்திருக்கும் ஜீவன்களுக்குள் பிறக்கிறான்.

कर्मणः सुकृतस्याहुः सात्त्विकं निर्मलं फलम् ।
रजसस्तु फलं दुःखमज्ञानं तमसः फलम् ॥ १६ ॥

16. நல்ல கர்மங்களைச் செய்வதாலுண்டாகும் பயன் நிர்மலமான ஸத்வகுண ரூபமாயிருக்கும். ரஜோகுணத்தின் பயன் துக்கம்; தமோ குணத்தின் பயன் அக்ஞானம்.

सत्त्वात्संजायते ज्ञानं रजसो लोभ एव च ।
प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥ १७ ॥

17. ஸத்வ குணத்திலிருந்து ஞானமும், ரஜோ குணத்திலிருந்து பொருளாசையும், தமோ குணத்திலிருந்து அஜாக்ரதையும் மயக்கமும் அக்ஞானமும் உண்டாகின்றன.

ऊर्ध्वं गच्छंति तत्त्वस्था मध्ये तिष्ठंति राजसाः ।
जघन्यगुणवृत्तिस्था अधो गच्छंति तामसाः ॥ १८ ॥

18. ஸத்வ குணத்தில் நிலைத்திருப்பவர்கள் மேலுலகங்களுக்குப் போகிறார்கள்; ரஜோகுணத்தில் நிலைத்திருப்பவர்கள் நடுவிலுள்ள லோகங்களுக்குப் போகிறார்கள். தாழ்ந்த குணங்களின் வியாபாரங்களில் நிலைத்திருக்கும் தாமஸிகர்கள் கீழுலகங்களுக்குப் போகிறார்கள்.

नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टानुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥ १९ ॥

19. குணங்களைத் தவிர வேறொன்றும் கர்மங்களைச் செய்வதில்லையென்று ஸாக்ஷியான ஜீவன் எப்பொழுது பார்க்கிறானோ, குணங்களைக் காட்டிலும் மேலாய் விளங்கும் பொருளை எப்பொழுது அறிகிறானோ, அப்பொழுதே என் தன்மையை அடைகிறான்.

गुणानेतानतीत्य त्रीन्देही देहसमुद्भवान् ।
जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥ २० ॥

20. தேஹத்திலுண்டாகும் இந்த மூன்று குணங்களையும் தாண்டி, ஜீவன் பிறப்பு இறப்பு கிழத்தனமென்றவைகளாலுண்டாகும் துக்கங்களிலிருந்து விடுபட்டு, என்று மழியாத தன்மையை அடைகிறான்.

अर्जुन उवाच—
कैर्लिंगैस्त्रीन्गुणानेतानतीतो भवति प्रभो ।
किमाचारः कथं चैतांस्त्रीन्गुणानतिवर्तते ॥ २१ ॥

21. அர்ஜுனன்— இந்த மூன்று குணங்களையும் ஜீவன் எப்படித் தாண்டுகிறான்? அவனுக்கு என்ன லக்ஷணம்? அவனுடைய நடத்தை எவ்விதமானது?

श्रीभगवानुवाच—

प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पांडव ।
न द्वेष्टि संप्रवृत्तानि न निवृत्तानि कांक्षति ॥ २२ ॥

22. பகவான்— முக்குணங்களையும் தாண்டினவன், பிரகாச ரூபமான ஸத்வத்தையும், செயல் ரூபமான ரஜஸையும், மயக்கரூபமான தமஸையும், அவைகளின் கார்யங்களைச் செய்யும் பொழுது வெறுப்பதுமில்லை; செய்து ஒழிந்த பிறகு அவைகளை அனுபவிக்க விரும்பவதுமில்லை.

उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते ।
गुणा वर्तंत इत्येव योऽवतिष्ठति नेंगते ॥ २३ ॥

23. உதாஸீனனைப் போல் ஒரு கக்ஷியிலும் சேராமல் இருக்கிறான். மூன்று குணங்களின் வேகத்தாலும் அசையமாட்டான். குணங்கள் தங்களுடைய கார்யங்களைச் செய்து கொண்டிருக்கின்றன வென்று, தான் அவைகளில் பற்றின்றி தனியே நிற்பான். கலங்க மாட்டான்.

समदु:खसुख: स्वस्थ: समलोष्टाश्मकांचन: ।
तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिंदात्मसंस्तुति: ॥ २४ ॥

24, ஸுகதுக்கங்களை ஒரே விதமாய் அனுபவிப்பான். ஓடு, கல், தங்கமென்றவைகளை ஒரே விதமாய் எண்ணுவான். தனக்குப் பிரியத்தைக் கொடுக்கும் விஷயத்தையும் பிரியமில்லாமையைக் கொடுக்கும் விஷயத்தையும் ஒரே விதமாய் அனுபவிப்பான். பிறர் தன்னை நிந்தித்தாலும் புகழ்ந்தாலும் ஒரே விதமாய் நடப்பான். விவேகத்தையே பற்றி கார்யங்களைச் செய்வான்.

मानापमानयोस्तुल्यस्तुल्यो मित्रारिपक्षयो: ।
सर्वारंभपरित्यागी गुणातीत: स उच्यते ॥ २५ ॥

25. தன்னை ஒருவர் வெகுமதித்தாலும் அவமதித்தாலும் ஒரே விதமாய் நடப்பான். சத்ரு விடத்திலும் மித்ரனிடத்திலும்

ஒரே விதமாய்ப் பழகுவான். பயனுக்காக ஆசைப்பட்டுத் தானே எந்தக் காரியத்தையும் செய்யமாட்டான். இவ்வித லக்ஷணங்களை யுடையவனே மூன்று குணங்களைத் தாண்டினவனென்று சொல் லப்படுவான்.

मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।
स गुणान्समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते ॥ २६ ॥

26. வேறொன்றிலும் மனதைச் செலுத்தாமல், என்னிடத் திலேயே பக்தியைச் செய்து, என்னை உபாஸிப்பவன், இந்த மூன்று குணங்களையும் நன்றாய்க் கடந்து, மோக்ஷத்தை அடையத் தகுந்த வனாகிறான்.

ब्रह्मणो हि प्रतिष्ठाहममृतस्याव्ययस्य च ।
शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकांतिकस्य च ॥ २७ ॥

27. ஏனென்றால் நாசமும் விகாரமுமற்ற பிரம்மத்தின் இருப் பிடம் நானல்லவா? என்றுமுள்ள தர்மத்திற்கும் ஸர்வோத்தம மான பிரம்மானந்தத்திற்கும் இருப்பிடம் நானே.



## அத்யாயம் 14.

## அத்வைத பீடிகை.



பிரபஞ்சத்திலிருக்கும் பதார்த்தங்கள் யாவும் க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞர்களின் ஸம்பந்தத்தால் உண்டாகின்றனவென்று சொல்லப்பட்டது. அது எப்படியென்று விவரித்துரைக்கும் பொருட்டு இந்த அத்யாயம் துவக்கப்படுகிறது.

அல்லது. க்ஷேத்ரமும் க்ஷேத்ரக்ஞனும் ஈசுவரனுக்கு வசமாய் நின்று பிரபஞ்சத்திற்குக் காரணமாகிறார்கள். ஆனால் ஸ்வதந்திர மாய் விளங்குகிறார்களென்று ஸாங்க்யமதத்தில் சொல்லப்படுவது போலல்லவென்ற தத்வத்தை உபதேசிப்பதற்காக, அந்தப் பிரகிருதி

தானேயென்று மயங்குவதும், இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் விஷயங்களில் பற்றை விடாமலிருப்பதும் ஸம்ஸாரத்திற்குக் காரணமென்று "பிரகிருதியில் தங்கியிருக்கும் புருஷன் அதினின்றும் தோன்றிய குணங்களை அனுபவிக்கிறான். குணங்களிலுள்ள பற்றானது இவனுக்கு புண்ய பாப ஜன்மங்களைக் கொடுப்பதற்குக் காரணமாகிற"தென்று 13, 21-ல் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், அந்தக் குணங்கள் எவை? அவைகளில் பற்றுதல் எப்படி யுண்டாகிறது? எவ்வாறு ஜீவனைக் கட்டுப்படுத்துகின்றன? அவைகளிலிருந்து விடுபடுவது எப்படி? விடுபட்டவனுடைய லக்ஷணமென்னவென்று அர்ஜுனனுக்குத் தோன்றும் கேள்விகளுக்குப் பகவான் பதில் அளிக்கிறார்.

விஷய அட்டவணை.

1. பிரபஞ்ச வரலாறு.
2. அதன் தோற்றமும் விரிவும்.
3. குணங்கள் அக்ஞானியைக் கட்டுகின்றன.
4. அவைகளின் செயல்களும் ஸ்வபாவமும்.
5. மேல்நாடியிலிருக்கும் குணத்தை அறியும் விதம்.
6. அவைகளால் வரும் பிறவிகள்.
7. தத்வக்ஞானமே அவைகளை ஒழிக்கும்.
8. முக்தனுடைய லக்ஷணம்.
9. அவனுடைய நடத்தை.
10. பகவானிடத்தில் பக்திசெய்வதே முக்திஸாதனம்.
11. ஆத்மா ஒன்றே.

விசிஷ்டாத்வைத பீடிகை.

ஒன்றோடொன்று கலந்திருக்கும் ஜீவாத்மா பிரகிருதி யென்றவைகளின் ஸ்வரூபத்தை உண்மையாய்த் தெரிந்துகொண்டு பகவானிடத்தில் பக்திசெய்து, சாந்தி வினயம் முதலிய கல்யாண குணங்களை ஸம்பாதித்துப்பிறகு ஸம்ஸாரத்திலிருந்து விடுபடும் விதம்; படிப்படியாய் வந்த முக்குணங்களாலுண்டாகிற ஸுக துக்கங்களில் பற்றுதலே ஸம்ஸாரபந்தத்திற்கு காரணமென்று சென்ற அத்யாயத்தில் சொல்லப்பட்டது. இந்த அத்யாயத்தில் அந்த ஸம்பந்தம்

வந்தவிதமும், அந்த குணங்களை ஒழிக்கும் விதமும் சொல்லப் படுகின்றன.

## கீதார்த்த சங்கிரஹம்.

குணங்கள் ஸம்ஸார பந்தத்தை யுண்டாக்கும் விதமும் அவைகளே கர்த்தாவென்பதும், அவைகளை யொழிப்பதும், மூன்று விதமான பலன்களுக்கும் பகவானே காரணமென்பதும் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகின்றன.

"முக்குணமே யுயிர்முற்றவுங் கட்டிட மூண்டமையும்
முக்குணமே யனைத்தும் வினைகொள்ள முயன்றமையும்
முக்குண மாயை கடத்தலு முக்கதி தன்னளிப்பும்
முக்குண மற்றபிரான் மொழிந்தான் முடியோன்றனக்கே."

அ-து:—முக்குணங்கள் ஜீவன்களை முற்றிலும் ஸம்ஸாரத்தில் கட்டுப்படுத்துவதும், புண்ய பாப கர்மங்களைச் செய்வதற்கு அவைகளே கர்த்தாவாயிருக்க முயற்சிசெய்வதும், இவைகளுக்குத் தாயான பிரகிருதியைத் தாண்டுவதும், மூன்றுவிதமான கதிகளும் பகவானால் கொடுக்கப்படுகின்றனவென்பதும் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகின்றன.

## விஷயச் சுருக்கம்.

1—2. முக்குணங்களின் ஞானமே முக்தி ஸாதனம்.

3—4. ஸகல ஸிருஷ்டிக்கும் காரணமான புருஷப் பிரகிருதியின் சேர்க்கையும் பகவானாலேயே செய்யப்பட்டது.

5. பலவிதமான பிறப்புகளுக்குக் காரணம்.

6—8. குணங்களின் ரூபமும், கட்டுப்படுத்தும் வகையும்.

9. ஸம்ஸாரத்தை உண்டாக்குவதற்கு முக்யமான வழிகள்.

10. இவைகளில் ஒவ்வொன்று ஒவ்வொரு ஸமயத்தில் மேல் நாடும்.

11—13. இவை கார்யங்களால் அறியப்படும்.

14—15. இவை மேல் நாடினபோது மரணமடைகிறவனுக்கு நேரும் ஜன்மங்கள்.

16—17. இவைகளால நேரும் ஜன்மங்களில் ஓங்கி நிற்கும் கர்மங்கள்.

18. இவைகளால் கிடைக்கும் லோகங்கள்.

19. குணங்களே கர்த்தா, ஜீவன் கர்த்தாவல்லவென்ற அபரோக்ஷ ஞானத்தால் பகவானுடைய தன்மை அடையப்படும்.

20. அடையப்படும் பகவானுடைய ஸ்வபாவம்.

21. முக்குணங்களைத் தாண்டும் வழி, தாண்டினவனுடைய அடையாளங்கள், நடத்தையென்ன?

22—25. குணங்களைத் தாண்டினவனுடைய அடையாளங்கள்.

28. பக்தியே இவைகளைத் தாண்டுமுபாயம்.

27. இதற்குக் காரணம் பகவானுடைய கல்யாணகுணங்களே.

## த்வைதம் (பீடிகை)

இரண்டாவது அத். 49-வது சுலோகத்தில் ஞானத்திற்கு ஸாதனத்தை உபதேசிப்பதாய்ப் பகவான் வாக்களித்தார். 6-வது அத்யாயத்தின் முடிவு வரையில் அப்படிச் செய்தார். ஸ்வதர்மத்தை அனுஷ்டிப்பதும் தியானமும் அதற்கு அங்கமான சில விஷயங்களும் சொல்லப்பட்டன. இதுமுதல் முடிவு வரையில் அந்த அங்கங்கள் விஸ்தாரமாயும் தெளிவாயும் போதிக்கப்படுகின்றன.

ஸம்ஸாரபந்தத்தின் தன்மையைத் தெளிவாய் அறியாவிட்டால் அதிலிருந்து விடுபடுவதற்கு ஸாதனத்தையும், அதை எப்படி அனுஷ்டிப்பதென்பதையும் விவரிக்கமுடியாது. அந்த பந்தமோ முன் அத். 22ல் சொன்னபடி முக்குணங்களால் உண்டாகிறது. ஆகையால் குணங்களின் விகாரங்களுக்குக் கட்டுப்பட்டிருப்பதும், க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ ஸம்பந்தத்தால் ஜீவன்கள் பிறப்பதும், அந்தப் பந்தத்திலிருந்து விடுபடுவதும், இந்த அத்யாயத்தின் விஷயமாகும்,

3-வது அத்யாயத்தில் சுருக்கமாய்ச் சொல்லப்பட்ட த்ரிகுண ஸ்வபாவமே இங்கே விரிவாய்ச் சொல்லப்படுகிறது.

### விஷயச் சுருக்கம்.

13. 27ல், ஸர்வக்ஞனை பகவான் க்ஷேத்ரக்ஞரூபமாய் க்ஷேத்ரத்தில் விளங்குகிறாரென்றும், ஷை 22ல், ஜீவன்கள் இதனால் தேஹங்களைப் பெருகின்றனவென்றும் சொல்லப்பட்டது. தேஹத்திலுள்ள ஜீவன் முக்குணங்களின் அதீனத்திற்குட்பட்டது. அவை பல

விதமாய் தேஹேந்திரியங்களை அமைக்கின்றன. 12-வது அத்யாயத்தில் சொல்லப்பட்ட அவ்யக்தமென்பது அசேதன பிரகிருதியையும், ஜீவன்களுக்கு இருப்பிடமான தேஹத்தை உண்டாக்கும் முக்குணங்களையும் அடக்கி யாளுகிறதென்று சொல்லப்பட்டது. அந்த அவ்யக்தம் இங்கே மஹத் பிரஹ்மமென்று சொல்லப்படும் சேதனப்பிரகிருதியே. பரமபுருஷனுடைய பார்வையே பிரகிருதிக்கு அதிஷ்டான தேவதையென்றும், பகவானுடைய எண்ணிறந்த ஆச்சர்யகரமான வியக்திகளுக்கும் மஹிமைக்கும் நித்யமான ஸாக்ஷியென்றும், அது நமக்கு உபதேசிக்கப்படுகிறது.

அவர் ஸிருஷ்டி கார்யத்தை ஆரம்பிக்கும்பொழுது அவருடைய சக்தி பிரகிருதியில் முதலில் தாக்குகிறது. அந்தத் தூண்டுதலாலும், அவளுடன் எப்பொழுதும் சேர்ந்து விளங்கும் பகவானுடைய கிருபையாலும் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமான ஸூக்ஷ்ம பிரகிருதியைப் பலவிதமாய் அவர் மாற்றுகிறார். அப்பொழுது மூன்று குணங்களும் அதனால் பிரிகின்றன. பல அளவுகளுடன் நானா ரூபங்களாய், ஜீவன்களுக்கு இருப்பிடமான பல தேஹங்களை உண்டாக்குகின்றன. ஜீவன்களின் யோக்யதையையும் அவன் போகவேண்டிய மார்க்கத்தையும் ஒத்துப், பகவான் தேஹங்களை அவைகளுக்கு விதிக்கிறார்.

மூன்று குணங்களும் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொன்று தலையெடுக்கும்பொழுது, மூன்றுவிதமான தேஹங்கள் உண்டாகின்றன. ஒரு ஜீவன் ஒருவிதமான தேஹத்தை எடுப்பது கேவலம் காரணமின்றி கண்மூடித்தனமா யிராது. ஒவ்வொரு ஜீவனும் எந்தக் கர்மத்தை அனுபவிக்கவேண்டுமோ, எந்தத் தேஹத்தை உபயோகிக்க முடியுமோ, அதற்குத் தகுந்தபடியே தேஹம் கொடுக்கப்படும். எல்லா ஜீவன்களும் மூன்று குணங்களின் வலையில் கட்டுப்பட்டிருந்தாலும், வெவ்வேறு பயன்களை அடைவதற்கு வெவ்வேறு விதமாய் முயல்வதாகக் காணப்படுகிறது.

இந்தக் குணங்களுக்குள் பேதமென்பது கனவா? அப்படியிருந்தால் அவைகளை வகுக்கும் முயற்சி வீணேயாகும். அல்லது அவை உண்மையாய் ஒன்றென்றும், ஒரே பிரகிருதியிலிருந்து

உண்டாகின்றனவல்லவாவென்றும் எண்ணுவது நியாயமா? அப்படி ஒன்றாயிருந்தால் பலவாகத் தோன்றுவதற்குக் காரணமுண்டா, இல்லையா? அல்லது, பிரகிருதியென்ற பதத்திலேயே அவ்விதமான ஓர் அர்த்தம் அடங்கியிருக்கிறதா? அல்லது, இவ்விதமாய் விசாரிப்பதற்கு அந்தப் பதம் கேவலம் கௌரதையைக் கொடுக்கும் வழியா? இவ்விதமான பல ஸம்சயங்களுக்கு ஒரே ஸமாதானமிருந்தால், அதுவும் மற்றவைகளைப்போல் ஸத்யமென்று நாம் ஏன் நினைக்கக்கூடாது? இவ்விதமான பல கேள்விகள் தோன்றுகின்றன.

6—18. ஒவ்வொரு தேஹத்திலும் ஏதாவது ஒரு குணத்தின் சக்தி மற்ற இரண்டையும் அடக்கி மேலோங்கி நிற்கும். அதனால் வெவ்வேறு நிலைமையும் தன்மையும் உண்டாகும். அவைகளை உடனே அனுபவிக்கக்கூடிய தூக்கம், கோபம், ஸுகம், துக்கம், மரணமென்றும், அல்லது, ஜீவன்கள் எந்த நிலையிலிருந்து திரும்புவதில்லையோ, அந்தத் தன்மையென்றும் வகுக்கலாம்.

19—21. ஜீவன் குணங்களுக்குக் கட்டுப்பட்டிருக்கும் விதத்தை யோசித்தால் ஆச்சர்யமுண்டாகிறது. அவைகளின் சக்தியை அடக்கித் தான் விளங்க விரும்பினால், அவைகளைக் காட்டிலும் மேலாய், அவைகளை அடக்கியாளும் சக்தியின் ஸ்வரூபத்தை உண்மையாய் அறியவேண்டும். இந்த ஞானத்தால் பிறப்பிறப்பிலிருந்து ஜீவன் விடுபட்டுப் பரமகாருணிகரான பிரஹ்மத்தை அடையலாம்.

22—26. மூன்று குணங்களும், அவை ஜீவன்களை அடக்கும் வன்மையும், அவைகளை முற்றிலும் ஒழிக்கவேண்டியது அவசியமென்பதும் அர்ஜுனனுக்கு நன்றாய் மனதில் பட்டது. ஆயினும் அந்தக் குணங்களை வசப்படுத்தி, அவைகளுக்கு மேலான பூமியில் விளங்கும் மஹான்களுடைய ஸஹவாஸத்தால் விசேஷ லாபம் உண்டென்று அறிந்து, அவர்களின் குணங்களையும் அடையாளங்களையும் அறிய விரும்புகிறான். பகவான் அதை உபதேசித்து அந்தக் குணங்களை மாத்திரம் ஸம்பாதிப்பதால் பிரயோஜனமில்லை யென்றும், பகவானிடத்தில் தீவ்ரமான பக்தியில்லாமலும் அவரை ஆராதிக்காமலு

யிருந்தால், எவ்விதமான நற்குணங்களும் உபயோகமில்லை யென்றும் பக்தியை வளர்ப்பதற்கே அவை ஸாதனங்களென்றும் சொல்லுகிறார். தானே சாச்வதமான தர்மத்திற்கு ஆதாரமென்றும் உபதேசிக்கிறார்.

அந்தத் தர்மமென்ன ? இந்த அத்யாயத்திலாவது வேறிடத்திலாவது அதை உபதேசித்திருக்கிறாரா ? குணங்களையும் அவைகளின் காரியங்களையும் வர்ணித்து அவைகளை அடக்க வேண்டுமென்றும், தோஷங்களை விலக்கவேண்டுமென்றும், குணங்களை ஸம்பாதிக்க வேண்டுமென்றும் சொன்னதைக் கொண்டு, சாசுவதமான தர்மம் இன்னதென்றும், தர்மத்தின் நிறை இன்னதென்றும் அவர் சொன்னதாய் நாம் எண்ணக்கூடாதா ? குணங்களும், அவைகளின் மாறுதல்களும், அவைகளைக் கருவிகளாய் உபயோகிக்கும் ஜீவன்களின் ஸ்வபாவத்திற்கு ஒத்திருக்க வேண்டுமென்று நாம் ஒப்புக்கொண்டால், ஞானத்தை வளர்ப்பதற்கு அநுகூலமாய் ஓர்விதமான ஆசாரமும், சில நற்குணங்களும் அவசியமென்று தோன்றினால், அவ்விதமான ஞானத்தையும் பக்தியையும் வளர்ப்பதே ஸகல புண்ய காமங்களின் உத்தேசமென்றால், அவைகளை விருத்தி செய்யும் காரணங்களும் ஸந்தர்ப்பங்களும் உண்டென்றும், அந்த விருத்தியைத் தடுக்கும் விஷயங்களு முண்டென்றும் ஒப்புக்கொண்டால், அவை இன்னதென்று நமக்குச் சொல்லப்பட்டால், சாசுவதமான தர்மமும் அதின் நிறையும் இன்னதென்று உபதேசித்ததாய் எண்ணக்கூடாதா ? மேலும், ஜீவன்களின் ஸ்வபாவமும் அவர்கள் அடையவேண்டிய பலனைக் கொடுக்கவும் கெடுக்கவும் சக்தியுள்ள காரணங்களும் ஒரேவிதமாய் எந்நாளும் மாறுமலிருந்தால், சாசுவதமான தர்மத்தின் ஆதாரம் தானேயென்று பகவான் சொன்னது உண்மையல்லவா? அதாவது, மேற்சொன்னவைகளின் ஸ்வபாவத்தையும் குணங்களையும் எக்காலத்திலும் ஒரேவிதமாய் மாறுதலின்றி அவர் நிலைநிறுத்திக்கொண்டிருக்கிறாரென்று ஏன் எண்ணக்கூடாது?

முதலில் ஒரு விஷயத்தைப் பற்றின ஞானம் முழுவதும் புலப்படும்; ஆனால் அந்த ஞானம் அவ்வளவு தெளிவாயிராது. அதற்

குப் பிறகே அதின் பாகங்களும் விசேஷங்களும் கொஞ்சங் கொஞ்சமாய் வெளிப்படும். இப்படி முந்தின அத்யாயத்தில் பிரகிருதியையும் புருஷனையும், அவை சேர்ந்திருக்கும் ஸ்திதியில் வர்ணித்தார். பிரகிருதி ஜீவனை உபயோகிக்கும் விதமும் பிரகிருதியின் சக்தியை அடக்கித் தான் முன்னேறும் விதத்தை ஜீவன் அனுஷ்டிக்கவேண்டுமென்பதும் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுவது நியாயமே.



## பதினைந்தாவது அத்யாயம்

# புருஷோத்தம யோகம்.



श्रीभगवानुवाच—

ऊर्ध्वमूलमधःशाखमश्वत्थं प्राहुरव्ययम् ।
छंदांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥ १ ॥

1. இந்த ஸம்ஸாரமென்ற விருக்ஷமானது நிலையில்லாதது, ஆயினும் அழிவற்றது (ஸ்தூல ரூபங்கள் அடிக்கடி அழிந்தாலும் அவைகளின் காரணமான மூலபதார்த்தம் என்றும் அழியாதது). இதற்கு மற்ற விருக்ஷங்களைப் போலில்லாமல் வேர்கள் மேலோங்கியிருக்கின்றன. கிளைகள் கீழ் நோக்கிச் செல்லுகின்றன. வேதவாக்கியங்களே இதன் இலைகள். இந்த விருக்ஷத்தின் ஸ்வரூபத்தையும் லக்ஷணத்தையும் நன்றாய் அறிந்தவனே வேதங்களின் உட்கருத்தை அறிந்தவனாவான்.

अधश्चोर्ध्वं प्रसृतास्तस्य शाखा गुणप्रवृद्धा विषयप्रवालाः ।
अधश्च मूलान्यनुसंततानि कर्मानुबंधीनि मनुष्यलोके ॥ २ ॥

2. மேலும், அதின் கிளைகள் கீழும் மேலுமாய்ப் பரவியிருக்கின்றன; ஸத்வ ரஜஸ் தமஸென்ற குணங்களே அவைகளை வளரச் செய்கின்றன; அவைகளிலிருந்துண்டாகும் இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் விஷயங்களே அதற்குத் துளிர்கள். அதின் வேர்கள்

மனுஷ்யர்கள் வஸிக்கும் லோகங்களில் பாப புண்யமென்ற தர்மா தர்மங்களால் வெளிப்பட்டுப் பரவுகின்றன.

न रूपमस्येह तथोपलभ्यते नांतो न चादिर्न च संप्रतिष्ठा ।
अश्वत्थमेनं सुविरूढमूलमसंगशस्त्रेण दृढेन छित्त्वा ॥ ३ ॥

3. அதின் ஸ்வரூபம் இப்பொழுது வர்ணித்தபடி இவ்வுலகத்தில் அறியப்படுவதில்லை. அதின் முடிவும் ஆதியும் ஆதாரமும் (நடுவும்) ஒருவருக்கும் தெரியாது. ஆழமாய் வேரூன்றி நிற்கும் நிலையற்ற இந்த ஸம்ஸார விருக்ஷத்தைப், பற்றில்லாமை யென்ற உறுதியான கத்தியால் வெட்டியெறிந்து,

ततः पदं तत्परिमार्गितव्यं यस्मिन्गता न निवर्तंति भूयः ।
तमेव चाद्यं पुरुषं प्रपद्ये यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥ ४ ॥

4. அதற்குப் பிறகு எந்தப் பதவியை அடைந்தால் மறுபடியும் திரும்பி வரமாட்டார்களோ அந்த விஷ்ணுவின் பரமபதமென்ற ஸ்தானத்தைத் தேடவேண்டியது. எப்படி யென்றால், 'எந்த வஸ்துவினிடத்திலிருந்து புராதனமான ஸம்ஸார விருக்ஷம் உண்டாயிற்றோ, அந்த ஆதி புருஷனை நான் சரணமடைகிறேனென்'று தியானம் செய்வதால் இந்தப் பதவி தெரியும்.

निर्मानमोहा जितसंगदोषा अध्यात्मनित्या विनिवृत्तकामाः ।
द्वंद्वैर्विमुक्ताः सुखदुःखसंज्ञैर्गच्छंत्यमूढाः पदमव्ययं तत् ॥ ५ ॥

5. அபிமானமும் புத்திமயக்கமு மற்று, பற்றுதலா லுண்டாகும் தோஷத்தை அழித்துப், பரமாத்ம ஸ்வரூபத்யானத்திலேயே நாடி, ஆசையை வெறுத்து, ஸுகதுக்கம் பிரியம் அப்ரியமென்றவைகளைத் தள்ளிவிட்டு, மயக்கமின்றி விளங்கும் மஹாத்மாக்களே நித்யமான அந்தப் பரம பதத்தை அடைகிறார்கள்.

न तद्भासयते सूर्यो न शशांको न पावकः ।
यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ ६ ॥

6. ஸகல லோகங்களையும் பிரகாசிக்கச் செய்யும் ஸூர்யனாவது சந்திரனாவது அக்னியாவது அந்தப் பதத்தை பிரகாசிக்கச் செய்

யாது (அதின் தேஜஸாலேயே இவைகளுக்குப் பிரகாசம் உண்டாகிறது. அதற்கு ஒளியைக் கொடுக்கும் வஸ்து வேறொன்றில்லை.) எந்த பதத்தை அடைந்து மறுபடியும் (கர்மவாஸனைக்குக் கட்டுப் பட்டுத்,) திரும்புவதில்லையோ அதே என் பரமபதம்.

ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।
मनःषष्ठानींद्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥ ७ ॥

7. என் அம்சம் (பாகம் அல்லது அவயவம்) ஒன்று இந்த மனுஷ்ய லோகத்தில் நீண்டகாலமாய் விளங்கிக்கொண்டிருக்கிறது. கர்த்தாவும் போக்தாவுமான (செய்கிறவனும் அனுபவிக்கிறவனும்) ஜீவன் அதே. அது மனதையும் பிரகிருதியில் லயமாயிருக்கும் ஐந்து இந்திரியங்களையும் வேறொரு தேஹத்தை எடுக்கும் பொழுது தன்னிடத்தில் இழுத்துக்கொள்ளுகிறது.

शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।
गृहीत्वैतानि संयाति वायुर्गंधानिवाशयात् ॥ ८ ॥

8. இந்தத் தேஹத்திற்கு அதிகாரியாயிருக்கும் அந்த ஜீவன் இப்படி ஓர் புதிய சரீரத்தை எடுக்கும்பொழுதும், எடுத்த சரீரத்திலிருந்து வெளிப்படும்பொழுதும், புஷ்பங்களி லிருந்து மணத்தை வாயு கிரஹித்துக் கொண்டு அடிப்பது போல், இந்திரியங் களையும் மனதையும் கிரஹித்துக் கொண்டே செல்லுகிறது.

श्रोत्रं चक्षुः स्पर्शनं च रसनं घ्राणमेव च ।
अधिष्ठाय मनश्चायं विषयानुपसेवते ॥ ९ ॥

9. செவி, கண், தொடுவது, ருசியறிவது, முகர்வதென்றவை களைக் குணங்களாயுடைய இந்திரியங்களையும் மனதையும் இருப்பிட மாய்க் கொண்டு, இந்த ஜீவன் சப்தம் முதலிய விஷயங்களை அனு பவிக்கிறது.

उत्क्रामंतं स्थितं वापि भुंजानं वा गुणान्वितम् ।
विमूढा नानुपश्यंति पश्यंति ज्ञानचक्षुषः ॥ १० ॥

10. இப்படி அது முக்குணங்களுடன் கூடிக்கொண்டு தேஹத்தில் இருப்பதையும், விஷயங்களை அநுபவிப்பதையும், தேஹத்திலிருந்து வெளிப்படுவதையும், அக்ஞானிகள் அறியமுடியாது. ஞானக்கண்ணுள்ளவர்களே அறிவார்கள். ஐயோ! என்ன கொடுமை!

यतंतो योगिनश्चैनं पश्यंत्यात्मन्यवस्थितम् ।
यतंतोऽप्यकृतात्मानो नैनं पश्यंत्यचेतसः ॥ ११ ॥

11. ஆனால் விடாமுயற்சியுடைய யோகிகள், இந்த ஜீவன் அந்தக்கரணத்தில் வஸிப்பதை நேரில் பார்க்கிறார்கள். தபஸாலும் இந்திரிய ஜயத்தாலும் பரிசுத்தமில்லாதவர்கள் எவ்வளவு முயன்றாலும் விவேகமில்லாததால் இந்த ஜீவனை உள்ளபடி பார்த்தறிவதில்லை.

यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् ।
यच्चंद्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥ १२ ॥

12. ஸூர்யனுடைய ஜ்யோதிஸ் ஸகல ஜகத்தையும் பிரகாசிக்கச்செய்கிறதன்றோ? சந்திரனிடத்தில் விளங்கும் காந்தி இருட்டைப் போக்கி ஆனந்தத்தைக் கொடுக்கின்றதன்றோ? அக்னியில் விளங்கும் தேஜஸ் யாவற்றையும் எரிக்கிறதன்றோ? அந்தத் தேஜஸ் என்னிடத்திலிருந்து உண்டானதென்றே அறி.

गामाविश्य च भूतानि धारयाम्यहमोजसा ।
पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः ॥ १३ ॥

13. பூமியில் நான் பிரவேசித்து என் சக்தியால் ஸகல பிராணிகளையும் தரிக்கிறேன்; அவைகளுக்கு ஆதாரமாயிருக்கிறேன். ரஸங்களுக்கு இருப்பிடமான ஸோமனாய் (சந்திரன்) ஸகல ஓஷதிகளையும் வளர்க்கிறேன்.

अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।
प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥ १४ ॥

14. வைசுவானரனென்ற அக்னியாய்ப் பிராணிகளின் தேஹத்தில், வயிற்றிலிருந்துகொண்டு, பிராணன் அபானனென்ற வாயுக்க

ளுடன் சேர்ந்து, குடிக்கப்படுவது உறிஞ்சப்படுவது நக்கப்படுவது தின்கப்படுவதென்ற நால்வகை ஆஹார பதார்த்தங்களைப் பக்வஞ் செய்கிறேன்.

सर्वस्य चाहं हृदि संनिविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च ।
वेदैश्च सर्वैरहमेव वेद्यो वेदांतकृद्वेदविदेव चाहम् ॥ १५ ॥

15. நானே ஸகல பிராணிகளின் ஹிருதயத்தில் அந்தர்யாமியாயிருக்கிறேன்; ஞாபகசக்தியும் ஞானமும் அதின் மறைவும் என்னிடத்திலிருந் துண்டாகின்றன. ஸகல வேதங்களால் அறியத் தகுந்தவன் நானே. வேதாந்தமென்ற உத்தரமீமாம்ஸா சாஸ்திரத்தை உபதேசித்த (கிருஷ்ண த்வைபாயன ரென்ற வேதவியாஸரும் நானே.)

द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।
क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥ १६ ॥

16. இவ்வுலகத்தில் இரண்டு புருஷர்கள் விளங்குகிறார்கள். அவர்களுக்கு க்ஷரனென்றும் அக்ஷரனென்றும் பெயர். இந்திரியங்களாலும் அந்தக்கரணத்தாலும் அறியப்படும் ஸ்தூலப் பிரபஞ்சம் யாவும் க்ஷரபுருஷன்; இவைகளுக்குக் காரணமாய் அசைவின்றி ஸூக்ஷ்ம ரூபமாயிருக்கும் மூலப்பிரகிருதியே அக்ஷரபுருஷன்.

उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥ १७ ॥

17. இவைகளுக்கு மேலான வேறொரு புருஷனுண்டு. அவனே பரமாத்மா வென்று சொல்லப்படுகிறான். அவன் குறைவற்றவன், யாவற்றிற்கும் பிரபு, மூன்று லோகங்களையும் உள்ளும் புறமும் வியாபித்து நின்று தாங்குகிறான்.

यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।
अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥ १८ ॥

18. நான் க்ஷரபுருஷனைக்காட்டிலும் (ஸம்ஸார விருக்ஷத்தை) அக்ஷர புருஷனைக் காட்டிலும் மேலானவன் (உத்தமன்); ஆகையால் உலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமனென்று என்னைக் கொண்டாடுகிறார்கள்.

यो मामेवमसंमूढो जानाति पुरुषोत्तमम् ।
स सर्वविद्भजति मां सर्वभावेन भारत ॥ १९ ॥

19. புத்திமயக்க மில்லாமல் என்னை இப்படிப் புருஷோத்தம னென்று அறிகிறவன் யாவற்றையும் அறிந்தவன்; நான் யாவுமென்ற தியானத்தால் என்னை அடைகிறான்.

इति गुह्यतमं शास्त्रमिदमुक्तं मयानघ ।
एतद्बुद्ध्वा बुद्धिमान्स्यात्कृतकृत्यश्च भारत ॥ २० ॥

20. பாபமற்ற அர்ஜுனா! பரம ரஹஸ்யமான இந்த மோக்ஷ சாஸ்திரத்தை இவ்விதமாய் உனக்குச் சொன்னேன். இதை அறிந்தவன் புத்திமானாவான். (நித்யா நித்ய வஸ்து விவேகம் செய்வான்) இந்தப் பிரபஞ்சத்தில் ஒருவன் செய்ய வேண்டிய யாவையும் அவன் செய்தவனாவான்.



## அத்யாயம் 15.

## அத்வைத பீடிகை.



பிராணிகள் செய்யும் காமமும், ஞானிகள் அனுஷ்டிக்கும் ஞானமும் என்னைச் சார்ந்தே பயனைக் கொடுக்கின்றன. என்னைப் பக்தி யோகத்தால் உபாஸிக்கிறவர்களே என் அனுக்ரஹத்தைப் பெற்று, உண்மையான ஞானத்தை அடைந்து, முக்குணங்களைத் தாண்டி, முக்தர்களாகிறார்கள். ஆத்மாவின் நிஜ ஸ்வரூபத்தையே நேரில் அறிந்தவர்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? இதைப் பற்றி அர்ஜுனன் கேட்காவிட்டாலும், ஆத்மாவின் உண்மையான

ஸ்வரூபத்தைத் தெளிவாய் உபதேசிக்க விரும்பி, ஸம்ஸாரத்தை மரமாக வர்ணித்து, அதில் வைராக்யம் பிறந்து, ஞானமென்ற கோடாரியால் வெட்டவேண்டுமென்கிறார். ஸம்ஸாரத்தில் வெறுப் புள்ளவனுக்கே பகவானுடைய நிஜஸ்வரூபத்தை அறிவதற்கு யோக் யதையுண்டு.

## விஷய அட்டவணை.

1. ஸம்ஸாரமென்ற விருக்ஷம்.
2. அதை வெட்டினால் பரகதியுண்டு.
3. ஸர்வவியாபியான பிரம்மத்தை அடையும் வழி.
4. ஜீவன் பரமாத்மாவின் அம்சத்தைப்போல் தோன்றுவது உபாதியாலேயே.
5. அவன் தேஹத்திலிருப்பதும் வெளிப்படுவதும்.
6. ஞான திருஷ்டியே அவனைப் பார்க்கமுடியும்.
7. ஆத்மக்ஞானம் யோகத்தாலேயே கிடைக்கும்.
8. யாவற்றையும் விளங்கச் செய்யும் பிரகாசம் பகவானே.
9. யாவற்றையும் அவரே தாங்குகிறார்.
10. அவரே ஜீர்ணம் செய்யும் அக்னி.
11. யாவற்றின் ஹிருதயத்திலும் வஸிப்பவர்.
12. நித்ய அநித்ய பிரபஞ்சத்திற்கும் மேலானவர்.
13. ஆத்மாவின் மஹிமை.

## விசிஷ்டாத்வைத பீடிகை.

க்ஷேத்ரமென்ற பிரகிருதியும் க்ஷேத்ரக்ஞனென்ற ஜீவாத் மாவும், பரிசுத்தனும் அளவில்லாத ஞானத்தையே ஸ்வரூபமாய் உடையவனுமிருக்கும் ஜீவாத்மாவிற்கு முக்குணங்களில் பற்றுண் டாகி, அக்காரணத்தால் தேவன் மனுஷ்யன் முதலிய ரூபங்களான ஸம்ஸார ஸம்பந்தம் அநாதியாய் ஏற்பட்டதென்றும் பதின்மூன்று வது அத்யாயத்தில் சொல்லப்பட்டது. ஜீவனுக்குக் காரிய காரண தசைகளையுடைய பிரகிருதியுடன் ஸம்பந்தம் குணங்களில் பற்றுத லிருப்பதால் உண்டாயிற்றென்றும், அது பகவானாலேயே செய்யப் பட்டதென்றும், அந்தப் பற்றுதல் உண்டாகும் விதம் இன்னதென்

றும், அந்தப் பற்றுதலற்று ஆத்மாவின் உண்மையை அடைவது பகவானிடத்தில் பக்தி செய்வதாலேயே கூடுமென்றும் பதினான்காவதில் சொல்லப்பட்டது.

இந்தப் பதினைந்தாவதில் பக்திக்கு விஷயமான பகவான், க்ஷரமென்ற ஸம்ஸாரி ஜீவனையும், அக்ஷரமென்ற முக்தஜீவனையும் விபூதிகளா யுடையவன். இவ்விரண்டைக் காட்டிலும் மேலானவன். ஸகல துர்க்குணங்களுக்கும் எதிர்த்தட்டாயும் கல்யாண குணங்களுக்கே இருப்பிடமாயு மிருப்பதால் மிகவும் உத்தமமானவன், வேறுபட்டவன், புருஷோத்தமனென்பதை உபதேசிக்கிறார். பற்றுதலில்லாமையென்ற சக்தியால் ஸம்ஸார பந்தத்தை அறுத்த அக்ஷரமென்ற முக்தஜீவனுடைய மஹிமையைச் சொல்வதற்காக அந்த ஸம்ஸாரத்தை அரசமரமாய்க் கல்பனைசெய்து வர்ணிக்கிறார்.

## கீதார்த்த ஸங்கிரஹம்.

அசேதனங்களோடு சேர்ந்திருக்கும் முக்த ஜீவனைக் காட்டிலும் பரமாத்மா வேறுபட்டவன்; அவன் ஸர்வ வியாபியும் யாவற்றையும் தரிக்கிறவனும் யஜமானனுமிருப்பதே அதற்குக் காரணமென்று இங்கே சொல்லப்படுகிறது.

"மூவெட்டினு மதில்மோஹ மடைந்த வுயிர்களினும்
நாவெட் டெழுத்தொடு நல்வீடுநண்ணின நம்பரினும்
மேவெட்டு வண்குண விண்ணோர்களினும் விசயனுக்குத்
தாவிட் டுலகளந்தான் றன்னைவேறென்று சாற்றினனே."

அ-து:—இருபத்திநான்கு தத்வங்களடங்கிய பிரகிருதியிலும், அவைகளில் மயங்கியிருக்கும் ஜீவன்களைக் காட்டிலும், அஷ்டாக்ஷரத்தை எப்பொழுதும் ஜபிக்கும் மேலான மோக்ஷத்தையடைந்த பக்தர்களிலும் மேலானவனாய், எட்டுவிதமான கல்யாண குணங்களையுடைய நித்ய ஸூரிகளைக்காட்டிலும் வேறுபட்டவனாய், விளங்கும் புருஷோத்தமனுடைய ஸ்வரூபம் இங்கே வர்ணிக்கப்படுகிறது.

## விஷயச் சுருக்கம்.

1-4. ஸம்ஸாரமென்ற அரசமரத்தின் லக்ஷணம்; பற்றில்லா

மையால் அதை வெட்டலாம்; பிறகு முக்திக்கு வழி தெரியும்; பரம புருஷனைச் சரண்மடைந்தால் ஆசையும் அக்ஞானமும் நீங்கும்.

5. அந்த முக்தர்களின் லக்ஷணம்,

6. சுத்தமான ஜீவன் யாவற்றையும் பிரகாசிப்பிக்கிறது. அதை யாதொன்றும் பிரகாசிக்கச் செய்யாது. மறு ஜன்மமில்லாத அந்த ஜீவாத்ம ஜ்யோதியும் என் அம்சமே.

7-11. அந்த ஜீவாத்மாவில் ஒரு பாகம் மாயையால் கட்டுண்டு பத்தஜீவனாய் லோகத்தில் விளங்கும் தன்மை; யோகிகளே அதைத் தேஹத்தில் காணலாம். மற்றவர்களால் முடியாது.

12-15. ஸூர்யன், சந்திரன், அக்னி, பூமி, ஜாடராக்னி முதலியவைகளில் காணப்படும் சக்தியும் பகவானால் ஏற்பட்டவையே. இவைகளை உபதேசிக்கும் வேதங்களைச் செய்தவரும், அவைகளால அறியவேண்டியவரும் யாவற்றிற்கும் அந்தர்யாமியும் அவரே;

16. பத்த ஜீவன்கள், முக்த ஜீவன்கள்.

17-18. புருஷோத்தமனுடைய லக்ஷணம்.

19. இப்படி அவரை அறிவதின் பயன்.

20. இந்தப் பரம ரஹஸ்யமான உபதேசத்தின் மஹிமை.

## த்வைத பீடிகை

13-வது அத்யாயத்தில் பிரகிருதி, மஹத், அஹங்காரம், மற்ற தத்வங்கள், க்ஷேத்ரமென்ற பதத்தால் குறிக்கப்படுகின்றனவென்றும், அவையே பிரபஞ்சமாகின்றனவென்றும், ஸம்ஸாரத்திற்குக் காரணங்களென்றும் சொல்லப்பட்டது. அதிலிருந்து விடுபடுவதற்கு க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ ஞானமே உபாயமென்றும் சொல்லப்பட்டது. இவ்விரண்டு விஷயங்களையும் இங்கே மறுபடியும் விஸ்தாரமாய்ச் சொல்லுகிறார். முந்தின அத்யாயத்தில் குணங்களைப்பற்றிச் சொல்லுமிடத்தில் இந்த விஷயம் விவரிக்கப்படவில்லை. இங்கே எல்லா அம்சங்களையும் ஒன்று சேர்த்துப், பிரபஞ்சத்தின் தன்மையை உதாஹரணத்தால் விளக்கி, ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்கு விருப்பத்தையுண்டாக்கி, அதற்கு ஸாதனங்களையும் உபதேசிக்கிறார். ஆகையால் இது 14-வதற்குப் பிறகு வரவேண்டியதே. ஸாதனங்களை

விஸ்தாரமாய் வர்ணிப்பதும் அந்த ஸமயத்தில் பகவானுடைய மஹிமையை உபதேசிப்பதும் இதின் விஷயங்கள்.

## விஷயச் சுருக்கம்.

ஜீவன் தேஹத்தில வ்யவஹரிக்கும்பொழுது அடையும் பல் நிலைகளை (ஸம்ஸாரத்தை) தெளிவாய் விருக்ஷமென்று முதல் 5 சுலோகங்களில் வர்ணிக்கிறார். ஆனால் அதற்கு வேர், கள் அடியிலில்லை; மேலிருந்து உண்டாகின்றன. அதாவது, சேதன அசேதன பிரகிருதியும் பரமபுருஷனும் சேர்ந்தே பிரபஞ்சத்திற்குக் காரணமென்பதே. ஸிருஷ்டியின் ஒவ்வொரு அம்சத்திலும் எவருக்காக அந்த ஸிருஷ்டி ஏற்பட்டதோ அந்த ஜீவன்களிடத்திலும் மேற்சொன்னவைகளின் சக்தி வெளிப் படுகிறது. இது 13-வது அத்யாயத்திற்கு ஸரியான சுருக்கம். அந்த மரம் ஆழ்ந்து பலமாய் வேரூன்றியிருக்கிறதென்றும் அதை ஞானமென்ற கூர்மையான கத்தியால் வெட்டவேண்டுமென்றும் மேற்சொன்ன காரணங்களையும் ஸம்பந்தங்களையும் விசாரிப்பதாலும், துர்க்குணங்களை அகற்றுவதாலும், பரம பக்தியை இடைவிடாது அனுஷ்டிப்பதாலும் இந்த ஞானம் உண்டாகும். அந்த மரத்தின் இலைகளே வேதங்கள். அவைகளை ஆராய்வதால் ஞானமென்ற புஷ்பமும் மோக்ஷமென்ற பழமும் கிடைக்கும்.

6—9. கருணாமூர்த்தியான பகவானே அடையவேண்டிய வஸ்து. அவரை அடைந்தால் ஜீவன் ஸம்ஸாரத்திற்குத் திரும்புவதில்லை. ஜீவன் எல்லைக்குட்பட்ட ஸ்வபாவத்தை யுடையவன்; ஸ்வதந்திரனல்ல; பகவானுக்குப் பரதந்திரன்; அவன் ஸம்ஸாரத்திலிருந்தாலும் மோக்ஷானந்தத்தை அனுபவித்துக்கொண்டிருந்தாலும், இந்த ஸம்பந்தமே தொடரும்.

10-18. மறுபடியும் பகவானுடைய விபூதிகள் வர்ணிக்கப் படுகின்றன. அவைகளை அறிவதும் நேரில் பார்ப்பதுமே ஞானம். ஜீவனுக்கும் பகவானுக்கு முள்ள ஸம்பந்தத்தை அறிய வேண்டும்; அதைத் தியானஞ் செய்வதற்கு இந்த ஞானம் அவசியம். இவைகளை "க்ஷரம் அக்ஷரமென்ற இரண்டு புருஷர்களுண்டு. இவைகளுக்கு மேலாய் இவைகளைக் காட்டிலும் வேறாய்ப் பரமாத்மா

மென்ற பெயருள்ள உத்தம புருஷர் ஒருவருண்டு. அவர் ஈசுவரர் களுக்கு மீசுவரன், என்று மழியாதவர்.

19. "க்ஷரத்திற்கும் அக்ஷரத்திற்கும் மிகவும் அவர் மேலான தால், வேதங்களிலும் மதக்கிரந்தங்களிலும் அவரைப் புருஷோத் தம"னென்று வர்ணிக்கிறார்கள்.

20. இந்த ஞானமே பரமரஹஸ்யம்; இந்தச் சாஸ்திரத்தில் அது உபதேசிக்கப்படுகிறது. இதனால் பிரஹ்ம வித்யை கிடைக் கும்; பரம புருஷார்த்தமும் ஸித்திக்கும். இப்படி இந்த அத்யாயத் தில் புராண புருஷோத்தமனே விஷயமாகிறார்.



## பதினாறுவது அத்யாயம்

# தைவாஸுர ஸம்பத் விபாகயோகம்.



श्रीभगवानुवाच—

अभयं सत्त्वसंशुद्धिर्ज्ञानयोगव्यवस्थितिः ।
दानं दमश्च यज्ञश्च स्वाध्यायस्तप आर्जवम् ॥ १ ॥

பகவான் சொல்லுகிறார்.

1. பயமில்லாமை, சுத்தமான அந்தக்கரணம், சாஸ்திரத்தா லும் ஆசார்யனாலும் ஆத்மஸ்வரூபத்தை யறிந்து, இந்திரியங்களையும் அந்தக் கரணத்தையும் அடக்கி ஒருமைப்படுத்தி, அந்த ஆத்ம த்யானத்தில் நிறுத்துவது, சக்திக்குத் தகுந்தபடி தானம் கொடுப் பது, ஸ்தூல இந்திரியங்களையும் தேஹத்தையும் அடக்குவது, விதிக் கப்பட்ட வைதிக ஸ்மார்த்த யக்ஞங்களைச் செய்வது, வேதாத்ய யனம், காயக்கிலேச ரூபமான தவம், நேர்மை,

अहिंसा सत्यमक्रोधस्त्यागः शांतिरपैशुनम् ।
दया भूतेष्वलोलुत्वं मार्दवं ह्रीरचापलम् ॥ २ ॥

2. பிறர்க்குத் தீங்கு செய்யாமை, பொய் சொல்லாமை, கோப மில்லாமை, விஷயங்களில் பற்றுதலை விடுவது, அந்தக் கரணத்தை அடக்குவது, கோட் சொல்லாமை, பிராணிகளிடத்தில் தயை, இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் விஷயங்களைக் கண்டபொழுது விகாரமில்லாமை, மிருதுவான பேச்சும் செய்கையும், தகாத வியாபாரங்களைச் செய்வதில் வெட்கம், பிரயோஜனமின்றி வாக்கு கை, கால் முதலியவைகளை உபயோகிப்பது.

तेजः क्षमा धृतिः शौचमद्रोहो नातिमानिता ।
भवंति संपदं दैवीमभिजातस्य भारत ॥ ३ ॥

3. புத்தியின் பிரகாசம், பொறுமை, மனோபலத்தால் தேஹேந்திரியங்களைத் தளர்ந்திருக்கும்பொழுதும் கட்டுப்படுத்தி நிறுத்துவது, தேஹத்தையும் பேச்சையும் எண்ணத்தையும் சுத்தமாக வைத்துக்கொள்வது, பிறர்க்கு துரோஹஞ் செய்யாமை (நமக்கு ஒருவன் உபகாரஞ் செய்திருக்கும்பொழுது அதற்குப் பதில் உபகாரஞ் செய்யாமல் கெடுதி செய்வதே துரோஹம்; இப்படி உபகாரம் செய்தவனுக்கும் செய்யாதவனுக்கும் கெடுதி செய்வது பரஹிம்ஸை) தன்னைப் பிறர் பூஜிக்கவேண்டுமென்று அளவுக்குமிஞ்சி விரும்புவது, இவை தைவீகஸம்பத் (தைவத்தன்மை) பொருந்தினவனுக்கு லக்ஷணமாகும்.

दंभो दर्पोऽभिमानश्च क्रोधः पारुष्यमेव च ।
अज्ञानं चाभिजातस्य पार्थ संपदमासुरीम् ॥ ४ ॥

4. கபட வேஷம் போடுவது (பிறர் தன்னை மெச்சவேண்டுமென்றும் வெகுமதிக்க வேண்டுமென்றும் தர்மத்தைச் செய்வது), வித்யை செல்வம் பிறப்பு அதிகாரம் முதலியவைகளால் இறுமாப்புடன் நடந்து கொள்வது), தன்னைப்பற்றி அளவுக்கு மிஞ்சி மேலாக எண்ணிக்கொள்வது, கோபம், கடுமையான பேச்சு, அவிவேகத்தால் செய்யவேண்டியதையும் விலக்கவேண்டியதையும் உள்ளபடி அறியாதிருப்பது, இவை அஸுரத்தன்மையுடன் பிறந்தவனுக்கு லக்ஷணமாகும்.

दैवी संपद्विमोक्षाय निबंधायासुरी मता ।
मा शुचः संपदं दैवीमभिजातोऽसि पांडव ॥ ५ ॥

5. தைவஸம்பத் ஸம்ஸாரபந்தத்தை விலக்கும்; அஸுர ஸம்பத்தோ ஜீவனை ஸம்ஸார ஸமுத்ரத்தில் அழுத்தும். நீ வருத்தமடையாதே. தைவஸம்பத்துடன் பிறந்திருக்கிறாய்.

द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन्दैव आसुर एव च ।
दैवो विस्तरशः प्रोक्त आसुरं पार्थ मे शृणु ॥ ६ ॥

6. இவ்வுலகத்தில் தைவமென்றும் ஆஸுரமென்றும் பிராணிகளின் ஸிருஷ்டி இருவகைப்படும். இதுவரையில் தைவஸம்பத்தை விஸ்தாரமாய் எடுத்துச் சொன்னேன். ஆஸுர ஸம்பத்தைப்பற்றிச் சொல்லுகிறேன், கேள்.

प्रवृत्तिं च निवृत्तिं च जना न विदुरासुराः ।
न शौचं नापि चाचारो न सत्यं तेषु विद्यते ॥ ७ ॥

7. ஆஸுர ஸம்பத்துள்ளவர்கள் கர்மங்களைச் செய்யவேண்டிய முறையையும் அவைகளிலிருந்து விலகவேண்டிய முறையையும் அறியார்கள். அவர்களிடத்தில் சுத்தியாவது ஆசாரமாவது ஸத்யமாவது கிடையாது.

असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम् ।
अपरस्परसंभूतं किमन्यत्कामहैतुकम् ॥ ८ ॥

8. இந்த ஜகத் ஸத்ய ரூபமான பரமாத்மாவால் ஸிருஷ்டிக்கப்பட்டதல்ல; பரமாத்மாவை ஆதாரமாயுடையதல்ல; இதை நடத்தி ஆளுகிறவன் ஒருவனுமில்லை; ஸ்திரீ புருஷர்களின் சேர்க்கையால் உண்டாகாத பதார்த்தம் யாதுமில்லை. ஆகையால் காமமே இதற்கு ஹேதுவாகுமென்கிறார்கள்.

एतां दृष्टिमवष्टभ्य नष्टात्मानोऽल्पबुद्धयः ।
प्रभवंत्युग्रकर्माणः क्षयाय जगतोऽहिताः ॥ ९ ॥

9. இவ்விதமான கொள்கையை உறுதியாகக் கொண்டு மனதைக் கெடுத்துக்கொண்டு, அல்ப புத்தியுள்ளவர்களாய், பிராணிகளுக்குக் கெடுதியையே செய்துகொண்டு, கொடிய காரியங்களிலேயே நாடி இவ்வுலகத்தை அழிக்க முயலுகிறார்கள்.

काममाश्रित्य दुष्पूरं दंभमानमदान्विताः ।
मोहाद्गृहीत्वासद्ग्राहान्प्रवर्तंतेऽशुचिव्रताः ॥ १० ॥

10, ஒருநாளும் திருப்தியடையாத ஆசைக்கு இடங்கொடுத்துக், கபட வேஷதாரிகளாய், தன்னைப்பற்றி மேலாயெண்ணிக்கொண்டு கொழுப்படைந்து, அசுத்தமான எண்ணத்தைப் புத்தி மயக்கத்தால் கைக்கொண்டு, அசுத்தமான விரதங்களை அனுஷ்டிக்கிறார்கள்.

चिंतामपरिमेयां च प्रलयांतामुपाश्रिताः ।
कामोपभोगपरमा एतावदिति निश्चिताः ॥ ११ ॥

11. சாகும் வரையில் எல்லையற்ற மனோராஜ்யத்தைச் செய்வதிலேயே காலத்தைக் கழித்து, ஆசையைப் பூர்த்தி செய்வதையே மேலான புருஷார்த்தமென்றெண்ணி, மனிதன் அடையக்கூடிய பதவி இதைக்காட்டிலும் வேறில்லையென்று நிச்சயித்து,

आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः ।
ईहंते कामभोगार्थमन्यायेनार्थसंचयान् ॥ १२ ॥

12. எண்ணிறந்த ஆசைக் கயிறுகளால் கட்டுண்டு, விஷயங்களை அனுபவிக்க வேண்டுமென்கிற ஆசையும் அதைத் தடுக்கும் காரணங்களிடத்தில் கோபமுமே மேல் நாடினவர்களாய்த், தாங்கள் விரும்பின ஸுகத்தை அனுபவிப்பதற்காக அன்யாயமான வழிகளால் ஏராளமான தனத்தை ஸம்பாதிக்க விரும்புகிறார்கள்.

इदमद्य मया लब्धमिमं प्राप्स्ये मनोरथम् ।
इदमस्तीदमपि मे भविष्यति पुनर्धनम् ॥ १३ ॥

13. "இன்று நான் இதை ஸம்பாதித்தேன், இந்த எண்ணத்தை இனிப் பூர்த்தி செய்வேன்; எனக்கு இவ்வளவு செல்வமுண்டு; இதுவும் எனக்குக் கிடைக்கும்.

असौ मया हतः शत्रुर्हनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान्सुखी ॥ १४ ॥

14. அந்தச் சத்ருவைக் கொன்றுவிட்டேன்; மற்றவர்களையும் கொல்வேன்; நானே ஈசுவரன்; ஸுகங்களை என்னைப் போல் அநுபவிக்கிறவனுண்டோ? ஸகல உத்தம குணங்களும் பொருந்தினவன் நானே; பலசாலி நானே; என்னைப்போல் ஸுகமாயிருப்பவனுண்டோ?

आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया ।
यक्ष्ये दास्यामि मोदिष्य इत्यज्ञानविमोहिताः ॥ १५ ॥

15. செல்வத்திலும் பிறப்பிலும் நானே மேலானவன்; எனக்கு இணை யார்? யாகங்களைச் செய்வேன், தானங்களைக் கொடுப்பேன்; ஆனந்தமாய்க் காலங் கழிப்பேனென்று" அக்ஞானத்தால் புத்தி மயங்கி,

अनेकचित्तविभ्रांता मोहजालसमावृताः ।
प्रसक्ताः कामभोगेषु पतंति नरकेऽशुचौ ॥ १६ ॥

16. பல பல எண்ணங்களால் தடுமாறிப், பல விதமான மோஹ வலையில் கட்டுண்டு, ஆசையை நிறைவேற்றுவதிலேயே நாடி, மஹா அசுத்தமான நரகங்களில் விழுகிறார்கள்.

आत्मसंभाविताः स्तब्धा धनमानमदान्विताः ।
यजंते नामयज्ञैस्ते दंभेनाविधिपूर्वकम् ॥ १७ ॥

17. தன்னைப் பற்றித் தானே புகழ்ந்துகொண்டு, பிடிவாதமுடையவர்களாய்த், தங்களுக்கே செல்வமுண்டென்ற பெருமையாலும் கொழுப்பாலும் நிறைந்து, சுருதி ஸ்மிருதிகளில் சொல்லப்பட்ட விதிகளை மீறித், தங்களிஷ்டப்படி கபட வேஷதாரிகளாய்ப், பிறர் தங்களைப் புகழவேண்டுமென்றே யக்ஞயாகாதிகளைச் செய்கிறார்கள்.

अहंकारं बलं दर्पं कामं क्रोधं च संश्रिताः ।
मामात्मपरदेहेषु प्रद्विषंतोऽभ्युसूयकाः ॥ १८ ॥

18. அஹங்காரம், பலம், பெருமை, காமம், குரோத மென்ற துர்க்குணங்களைத் தழுவித், தங்களுடைய தேஹங்களிலும் பிறருடைய தேஹங்களிலும் விளங்கும் என்னிடத்தில் அஸூயை கொண்டு வெறுக்கிறார்கள்.

तानहं द्विषतः क्रूरान्संसारेषु नराधमान् ।
क्षिपाम्यजस्रमशुभानासुरीष्वेव योनिषु ॥ १९ ॥

19. இப்படி என்னை வெறுத்துக் கொடிய பாபங்களைச் செய்யும் நீசமனிதர்களை இந்த ஜனன மரண ஸம்ஸாரத்தில் அஸுர ஜன்மங்களில் அடிக்கடி பிறக்கும்படி தள்ளுகிறேன்.

आसुरीं योनिमापन्ना मूढा जन्मनि जन्मनि ।
मामप्राप्यैव कौंतेय ततो यांत्यधमां गतिम् ॥ २० ॥

20. இப்படி அஸுர ஜன்மத்தில் பிறந்து, எவ்வளவு ஜன்மங்களெடுத்தும் புத்தி மயக்கத்தையே வர வர அதிகமாயடைந்து, என்னை அடையாமலேயே அதோகதி யடைகிறார்கள்.

त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः ।
कामः क्रोधस्तथा लोभस्तस्मादेतत्त्रयं त्यजेत् ॥ २१ ॥

21. ஆத்மாவை அழிக்கக் கூடிய நரக த்வாரங்கள், காமம், கோபம், பேராசையென்று மூவகைப்படும். ஆகையால் இம்மூன்றையும் ஒழிக்க வேண்டும்.

एतैर्विमुक्तः कौंतेय तमोद्वारैस्त्रिभिर्नरः ।
आचरत्यात्मनः श्रेयस्ततो याति परां गतिम् ॥ २२ ॥

22. நரகத்திற்குப் போகும் வழிகளான இம்மூன்றிலிருந்தும் தப்பினவன், தனக்கு மேலான க்ஷேமத்தை அடையும் விதமாய் நடந்து கொள்ளுகிறான். பிறகு அந்த வழியாகவே பரமபதத்தை அடைகிறான்.

यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः ।
न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥ २३ ॥

23. சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட விதியை விட்டுத் தன்னிஷ்டப்படி நடந்து கொள்ளுகிறவனுக்கு ஸித்தியாவது ஸுகமாவது பரகதியாவது கிடையாது.

तस्माच्छास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ ।
ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥ २४ ॥

24. ஆகையால் இதைச் செய்வது, இதை விலக்குவது என்று நிச்சயிப்பதில், உனக்குச் சாஸ்திரமே பிரமாணமாகும். சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட கர்மம் இன்னதென்று நன்றாயறிந்து அதையே செய்யக்கடவாய்.



## அத்யாயம் 16.

### அத்வைத பீடிகை.



தைவம் ஆஸுரம் ராக்ஷஸமென்று பிராணிகளின் ஸ்வபாவம் 12, 13-ல் சொல்லப்பட்டது. அவை இவ்வத்யாயத்தில் விரிவாக உபதேசிக்கப்படுகின்றன. ஸாத்விக ராஜஸ தாமஸ வாஸனைகள் ஸம்ஸாரத்தின் பக்கவேர்கள். முந்தின கர்மத்திற் கேற்றபடி மனுஷ்ய சரீரத்தில் வெளிப்படுகின்றன. அவைகளே தைவாஸுர ராக்ஷஸ தன்மையாகும். அவற்றுள் தைவத்தன்மை ஸம்ஸாரத்திலிருந்து நம்மை நீக்கும். ஆஸுரராக்ஷஸத் தன்மைகள் ஸம்ஸாரத்தில் கட்டுப்படுத்தும். தைவத்தன்மையைக் கைப்பற்றி மற்றவைகளை விடவேண்டுமென்பது பகவானுடைய கருத்து.

### விஷய அட்டவணை.

5. நாஸ்திகவாதம்
6. நாஸ்திக ஆசாரம்
7. அஸுரர்களின் நோக்கங்கள்.
8. அவர்கள் செய்யும் யாகங்கள்.
9. பகவானுடைய ஆக்ஞையை மீறுவார்கள்.
10. அதோகதியை அடைவார்கள்.
11. நரகத்தின் மூன்று வாயில்கள்.
12. ஆசாரத்திற்கு சாஸ்திரமே குரு.

## விசிஷ்டாத்வைத பீடிகை.

ஒன்று சேர்ந்தும் பிரிந்து மிருக்கும் பிரகிருதி ஜீவன்களின் உண்மையும், குணங்களில் ஆசையும் ஆசையில்லாமையுமே இந்தச் சேர்க்கைக்கும் பிரிவுக்கும் காரணமென்பதும், இவ்விரண்டும் பகவானுக்கு விபூதிகளென்பதும், அவர் அசேதனங்களைக் காட்டிலும் ஸம்ஸார முக்தனென்ற சேதனங்களைக் காட்டிலும் வேறுபட்டவனென்றும், மாறுதலில்லாத ஸ்வபாவத்தை யுடையவனாய் இவைகளை வியாபித்துத் தரித்து யஜமானனா யிருப்பதே இதற்குக் காரணமென்றும், புருஷோத்தமனென அவனுடைய உண்மையான ஸ்வரூபமும் சென்ற மூன்று அத்யாயங்களில் சொல்லப் பட்டன.

பிறகு இந்த உபதேசத்தை உறுதிப்படுத்த விரும்பி, சாஸ்திரங்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பவரான தேவர்களையும், நடக்காதவரான அஸுரர்களையும் வர்ணித்து, சாஸ்திரங்களுக்குக் கட்டுப்படவேண்டுமென்று உபதேசிக்கிறார்.

## கீதார்த்த ஸங்கிரஹம்.

தேவதைகள், அஸுரர்களென்ற பிரிவை நிரூபித்துச் சாஸ்திரங்களுக்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டுமென்பதும், உண்மையான கர்மங்களையும் வஸ்துக்களையும் பற்றின அனுஷ்டானமும் ஞானமும் மேற்சொன்னவைகளை உறுதிப்படுத்துமென்பதும் இந்த அத்யாயத்தின் விஷயங்கள்,

"ஆணைமறுதவர் தேவரல்லா வழக்கோ ரசுரர்,
கோணைமறுத குணச்செல்வ நீ குறிக்கொண், மறையை
பேணிய தத்துவமும் பிணியற்ற கிரிசைகளும்
காணிதனால் விசயவென்று கண்ணனியம்பினனே."

அ—து:—"என்னுடைய ஆக்ஞையை மீறி நடக்காதவர்கள் தேவதைகளின் ஸ்வபாவமுடையவர்கள்; அதற்கு விரோதமாய்ப் பேசுகிறவர்கள் அஸுர ஸ்வபாவமுள்ளவர்களென்றும்; கோணலான ஸ்வபாவத்தால் பகவானுடைய ஆக்ஞையை மறுக்காத குணங்களாகிற ஸம்பத்தையுடைய அர்ஜுனா! வேதத்தையே பிரமாணமாக அங்கீகரிக்கக்கடவாய். அப்படி ஆதரிக்கப்பட்ட தத்வத்தையும், துக்கமற்ற கிரியைகளையும், இந்த வேதத்தால் தெளிவாய்த் தெரிந்துகொள்ளக் கடவாயெ"ன்று இங்கே உபதேசிக்கப்படுகிறது.

## விஷயச் சுருக்கம்.

1—3. பகவானுடைய ஆக்ஞைப்படி நடக்கும் தைவீஸம்பத்து பொருந்தினவர்களின் லக்ஷணம்.

4. பகவானுடைய கட்டளையை மீறும் ஆஸுர ஸம்பத்துள்ளவர்களின் சுருக்கமான லக்ஷணம்.

5. இவைகளின் பயன்—அர்ஜுனன் தைவீ ஸம்பத்துடையவன்.

6—18. அஸுர ஸம்பத்துள்ளவர்களின் விஸ்தாரமான லக்ஷணம்.

19—20. பகவான் அவர்களைத் தண்டிக்கும் விதம்.

21. காமக் குரோத லோபமே அஸுர ஸ்வபாவத்திற்குக் காரணம்.

22. இவைகளை ஒழித்தால் பரகதியுண்டு.

23. பகவானுடைய ஆக்ஞையான சாஸ்திரத்தை மீறி நடப்பவர்களுக்கு ஒன்றும் பலிக்காது; அதோ கதியே கிடைக்கும்.

24. சாஸ்திரத்தையே பற்றி நடக்கவேண்டும்.

## துவைத பீடிகை

"சர்வம் மோஹ மற்றவர்க"ளென்ற சுலோகத்தில் பிரஹ்ம ஞானத்திற்கும் மோக்ஷத்திற்கும் ஸாதனங்கள் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டன. "சுத்தமான மனதில்லாதவர்கள் முயன்றாலும்" என்ற சுலோகத்தாலும் பரம புருஷார்த்தத்தை அடைவதற்குத் தடைகளும் சொல்லப்பட்டன. இங்கே தேவாஸுர ஸ்வபாவங்கள் குறிக்கப்பட்டன. அதையே இந்த அத்யாயத்தில் விவரிக்கிறார். இது கிரமமாகவே வைக்கப்பட்டிருக்கிறது. இடையூறுகளைப் பற்றிச் சொல்லும்பொழுது, யோகி அவைகளை விலக்கவேண்டுமென்றும், நேரான மார்க்கத்தை அனுஸரிப்பதே அதற்கு ஸாதனமென்றும் சொல்லவேண்டும்.

## விஷயச் சுருக்கம்.

ஜீவன் ஸம்பாதிக்கவேண்டிய உத்தம குணங்களும் விலக்க வேண்டிய துர்க்குணங்களும் இங்கே விவரிக்கப்படுகின்றன. பரம புருஷார்த்தத்தை விட்டு வேறு வழியில் செல்லுகிறவர்களின் லக்ஷணமே மேற்சொன்ன தோஷங்களாகும்.

1—3. முதலில் தைவ ஸ்வபாவமுள்ளவர்களின் லக்ஷணம் சுருக்கமாய்ச் சொல்லப்படுகிறது. இவை முன் அத்யாயங்களில் விவரிக்கப்பட்டன. தைவ ஸ்வபாவத்துடன் முயலுகிறவர்களைப் பற்றியே சாஸ்திரம் விசாரிப்பது உசிதம். அவர்களின் நடத்தையும் கதியும் நமக்குத் தெரியவேண்டியதே. அஸுர ஸ்வபாவமுள்ளவர்களின் லக்ஷணங்கள் அங்குமிங்கும் குறிக்கப்பட்டன.

4. அஸுர ஸ்வபாவத்தின் சுருக்கம்.

5. அர்ஜுனன் தைவ ஸம்பத்துள்ளவன்.

6—20. அஸுர ஸ்வபாவம் விவரிக்கப்படுகிறது. "எதை அனுஷ்டிப்பதென்றும், எதை விலக்குவதென்றும் அவர்களுக்குத் தெரியாது. இந்தப் பிரபஞ்சம் அவர்களுக்கு ஒரு பொய்யான தோற்றமே. அதற்குப் பரமேசுவரனென்பது கிடையாது. காரண

காரியமென்ற ஸம்பந்தமுள்ளவைகளால் அது உண்டாக்கப்படவில்லை. தற்காலத்தில் ஸுகத்தை அனுபவிப்பதே அவர்களுடைய நோக்கம். அதற்குப் புறம்பாய் யாதொன்றுமில்லை. இவ்விதமான பல எண்ணங்களால் புத்தி மயங்கி, அசுத்தமான நரகங்களில் விழுகிறார்கள். பகவான் அவர்களை ஸம்ஸாரத்திலேயே சுழலச்செய்து அஸுர ஜன்மங்களையே கொடுக்கிறார். ஒவ்வொரு பிறப்பிலும், அந்த அக்ஞானம் தடித்து, அவரை ஒருநாளும் அடைவதில்லை. அதோ கதியை அடைகிறார்கள்.''

21—24. ஆகையால் காமம் கோபம் லோபமென்ற நரகத்தின் மூன்று வாயில்களையும் ஜீவன் நெருங்கக்கூடாது. புண்ய கர்மங்களைச் செய்யும் மார்க்கத்தில் அவனை நடத்தக்கூடிய சாஸ்திரத்தையே கைப்பிடிக்கவேண்டும். ஆகையால் அர்ஜுனன் தனக்குரிய க்ஷத்ரிய தர்மத்தைச் செய்யவேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறான்.

## பதினேழாவது அத்யாயம்

# சிரத்தாத்ரய விபாக யோகம்.

अर्जुन उवाच—

ये शास्त्रविधिमुत्सृज्य यजंते श्रद्धयान्विताः ।
तेषां निष्ठा तु का कृष्ण सत्त्वमाहो रजस्तमः ॥ १ ॥

1. *அர்ஜுனன்—சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட விதியை விட்டு, ஆயினும் சிரத்தையுடன் யாகங்களைச் செய்கிறவர்கள் எந்த நிலையிலிருப்பவர்கள்? ஸத்வ குணத்திலா? அல்லது ரஜோகுணத்திலா? அல்லது தமோகுணத்திலா?*

श्रीभगवानुवाच—

त्रिविधा भवति श्रद्धा देहिनां सा स्वभावजा ।
सात्त्विकी राजसी चैव तामसी चेति तां शृणु ॥ २ ॥

2. *பகவான்—ஸாத்விக ராஜஸ தாமஸமென்று சிரத்தை மூன்று விதமாகும். அது பிராணிகளுக்கு ஸ்வபாவத்திலேயே ஏற்பட்டது. (பூர்வ ஜன்ம தர்மா தர்மங்களால் ஏற்பட்ட ஸ்வபாவம்)*

सत्त्वानुरूपा सर्वस्य श्रद्धा भवति भारत ।
श्रद्धामयोऽयं पुरुषो यो यच्छ्रद्धः स एव सः ॥ ३ ॥

3. *எல்லோருக்கும் அவரவர்களின் கர்ம வாஸனையுடன் கூடின அந்தக் கரணத்திற்குத் தகுந்தபடி சிரத்தையும் ஏற்படும். ஜீவனிடத்தில் சிரத்தையே பிரதானமாய் இருக்கும். யார் எந்த விஷயத்தில் சிரத்தை வைக்கிறானோ அதற்குத் தகுந்தபடியே அவன் ஆகிறான்.*

यजंते सात्त्विका देवान्यक्षरक्षांसि राजसाः ।
प्रेतान्भूतगणांश्चान्ये यजंते तामसा जनाः ॥ ४ ॥

4. ஸாத்விக ஸ்வபாவமுள்ளவர்கள் தேவதைகளைப் பூஜிக்கிறார்கள். ராஜஸ ஸ்வபாவமுள்ளவர்கள் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும், தாமஸ ஸ்வபாவமுள்ளவர்கள் பிரேதங்களையும் பூதகணங்களையும் பூஜிக்கிறார்கள்.

अशास्त्रविहितं घोरं तप्यंते ये तपो जनाः ।
दंभाहंकारसंयुक्ताः कामरागबलान्विताः ॥ ५ ॥

कर्षयंतः शरीरस्थं भूतग्राममचेतसः ।
मां चैवांतःशरीरस्थं तान्विद्ध्यासुरनिश्चयान् ॥ ६ ॥

5—6. சாஸ்திரங்களால் விதிக்கப்படாத கோரமான தபஸைச் செய்துகொண்டு, டம்ப அஹங்காரத்துடன், காமம் ஆசையென்றவையாலுண்டான பலத்துடன் கூடினவர்களாய்ச், சரீரத்தில் வஸிக்கும் எண்ணிறந்த ஜீவன்களையும் அந்தர்யாமியாய் விளங்கும் என்னையும் உபத்ரவித்துக்கொண்டு, புத்தியற்றவர்களாய்த் திரிகிறவர்கள் அஸுர ஸ்வபாவமுள்ளவர்களென்றறி. (என் உபதேசரூபமான வேத சாஸ்திரங்களையும் ஸாதுக்களின் அநுஷ்டானத்தையும் அலக்ஷ்யஞ்செய்து, தங்களுடைய ஆத்ம நாசத்தைத் தேடிக்கொள்வதே எனக்கு உபத்ரவத்தைச் செய்வதாகும். அவர்களுடைய க்ஷேமத்தால் எனக்கு ஸந்தோஷமும், கெடுதியால் எனக்கு வருத்தமும் உண்டாகின்றனவல்லவா ?)

आहारस्त्वपि सर्वस्य त्रिविधो भवति प्रियः ।
यज्ञस्तपस्तथा दानं तेषां भेदमिमं शृणु ॥ ७ ॥

7. எல்லோருக்கும் பிரியமான ஆஹாரமும் யக்ஞமும் தபஸும் தானமும் மூவகைப்படும். அவைகளின் பேதத்தைச் சொல்லுகிறேன் கேள்.

आयुःसत्त्वबलारोग्यसुखप्रीतिविवर्धनाः ।
रस्याः स्निग्धाः स्थिरा हृद्या आहाराः सात्त्विकप्रियाः ॥ ८ ॥

8. ஆயுஸ், வலிமை, பலம், ஆரோக்யம், ஸுகம், ப்ரீதியென்றவைகளை விருத்தி செய்கிறதும், ரஸத்துடன் கூடியதும், எண்ணெய்ப்

பசையுடன் கூடினதும், நீண்டகாலம் கெடாமலிருக்கக்கூடினதும், மனதிற்குப் பிரியத்தைக் கொடுக்கக் கூடினதுமான ஆஹாரம் ஸத்வ குணம் மேலிட்டவர்களுக்குப் பிரியமாயிருக்கும்.

कट्वम्ललवणात्युष्णातीक्ष्णरूक्षविदाहिनः ।
आहारा राजसस्येष्टा दुःखशोकामयप्रदाः ॥ ९ ॥

9. காரம், புளிப்பு, உப்பென்ற ரஸங்களையுடையதும், அளவுக்கு மிஞ்சின சூட்டையும் எரிச்சலையும் வரட்சியையும் உபத்ரவத்தையும் உண்டாக்கக் கூடியதுமான ஆஹாரங்கள், துக்கம் சோகம் வியாதியென்றவைகளையுண்டாக்கும். இவை ராஜஸ ஸ்வபாவமுள்ளவர்களுக்குப் பிரியமானவை.

यातयामं गतरसं पूति पर्युषितं च यत् ।
उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम् ॥ १० ॥

10. பக்வஞ்செய்து ஒரு ஜாமமானதும், ரஸம் நீங்கினதும், நாற்றமெடுத்ததும், முந்தின ராத்ரியில் பக்வமானதும், புஜித்த சேஷமும், யக்ஞங்களுக்குத் தகாததுமான ஆஹாரம் தாமஸ ஸ்வபாவமுள்ளவர்களுக்குப் பிரியமானது.

अफलाकांक्षिभिर्यज्ञो विधिदृष्टो य इज्यते ।
यष्टव्यमेवेति मनः समाधाय स सात्त्विकः ॥ ११ ॥

11. யக்ஞத்தைச் செய்வது கடமையென்ற ஒரே எண்ணத்துடன் (பகவானுக்குப் பிரியமான கைங்கர்யமென்று), தங்களுக்கு அதனால் யாதொரு பயன் வேண்டுமென்று விரும்பாமல், மனதை ஒருமைப் படுத்தி சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டபடி செய்யப்படும் யக்ஞம் ஸாத்விகமெனப்படும்.

अभिसंधाय तु फलं दंभार्थमपि चैव यत् ।
इज्यते भरतश्रेष्ठ तं यज्ञं विद्धि राजसम् ॥ १२ ॥

12. பலத்தை உத்தேசித்தாவது வீண் பெருமைக்காவது செய்யப்படும் பூஜை ராஜஸமெனப்படும்

विधिहीनमसृष्टान्नं मंत्रहीनमदक्षिणम् ।
श्रद्धाविरहितं यज्ञं तामसं परिचक्षते ॥ १३ ॥

13. சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட விதிப்படியில்லாமலும், பிறருக்கு அன்னமிடாமலும், மந்த்ரமில்லாமலும், விதிப்படி தக்ஷிணை கொடுக்காமலும், சிரத்தையில்லாமலும் செய்யப்படும் யக்ஞம் தாமஸ மெனப்படும்.

देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम् ।
ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥ १४ ॥

14 தேவதைகள், பிராமணர்கள், ஆசார்யாகள, ஞானிக ளென்றவர்களைப் பூஜிப்பதும், மனோவாக்குக் காயங்களில் சுத்தமா யிருப்பதும், உள்ளும் புறமும் ஒத்து நேர்மையாயிருப்பதும், பிரம்மசர்ய விரதம் தவறாமலிருப்பதும், பிறருக்கு ஹிம்ஸை செய் யாம லிருப்பதும் சரீரத்தால் செய்யக் கூடிய தவமெனப்படும்.

अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।
स्वाध्यायाभ्यसनं चैव वाङमयं तप उच्यते ॥ १५ ॥

15. உண்மையாயும், பிறர்க்குத் துக்கமுண்டாக்காமலும், பிரியமாயும் ஹிதமாயுமிருக்கும்படி பேசுவதும், வேதசாஸ்திரங்க ளைக் கற்பதும், வாக்கினால் செய்யும் தவமாகும்.

मनःप्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।
भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते ॥ १६ ॥

16. மனதின் அமைதியும் தெளிவும், முகமலர்ச்சியும், அள வுக்கு மிஞ்சிப் பேசாமலிருப்பதும், தன்னடக்கமும், கபடமில்லாத எண்ணமும், மனதால் செய்யப்படும் தவம்.

श्रद्धया परया तप्तं तपस्तत्त्रिविधं नरैः ।
अफलाकांक्षिभिर्युक्तैः सात्त्विकं परिचक्षते ॥ १७ ॥

17. மேலான சிரத்தையுடன் மனிதர்களால் அநுஷ்டிக்கப்

படும் தவம் இப்படியே மூவகைப்படும். பயனை விரும்பாமல் மனதை ஒருமைப்படுத்திச் செய்யும் தவம் ஸாத்விகமாகும்.

सत्कारमानपूजार्थं तपो दंभेन चैव यत् ।
क्रियते तदिह प्रोक्तं राजसं चलमध्रुवम् ॥ १८ ॥

18. பிறர் மெச்சுவதற்காகவும் மர்யாதை செய்வதற்காகவும் பூஜிப்பதற்காகவும் டம்பத்தாலும் செய்யப்படும் தவம் ராஜஸமெனப் படும். அது நீடித்திருக்காது. அதனுல் கிடைக்கும் பயனும் நிச்சயமல்ல.

मूढग्राहेणात्मनो यत्पीडया क्रियते तपः ।
परस्योत्सादनार्थं वा तत्तामसमुदाहृतम् ॥ १९ ॥

19. விவேகமில்லாமல் பிடிவாதத்துடன் தன்னை ஹிம்ஸை செய்துகொண்டு செய்யப்படும் தவமும், பிறருடைய நாசத்தை உத்தேசித்துச் செய்யப்படும் தவமும் தாமஸமெனத்தகும்.

दातव्यमिति यद्दानं दीयतेऽनुपकारिणे ।
देशे काले च पात्रे च तद्दानं सात्त्विकं स्मृतम् ॥ २० ॥

20. பிறர்க்குத் தானம் செய்வது நமது கடமை (பகவானுக்கு உகந்த கைங்கர்யம்) யென்ற ஒரே நோக்கத்துடன், தனக்கு முந்தியாவது பிற்காலத்திலாவது உபகாரம் செய்ய முடியாதவனுக்குப், புண்ய க்ஷேத்ரத்தில் புண்யகாலத்தில் தகுந்த யோக்யதையுள்ளவனுக்குக் கொடுக்கப்படும் தானம் ஸாத்விகமாகும்.

यत्तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः ।
दीयते च परिक्लिष्टं तद्दानं राजसं स्मृतम् ॥ २१ ॥

21. ஒருவனிடத்திலிருந்து பின்பு உபகாரத்தை எதிர்பார்த்தாவது தனக்கு அதனுல் புண்யம் கிடைக்குமென்றாவது வருத்தத்துடனாவது செய்யும் தானம் ராஜஸமாகும்.

अदेशकाले यद्दानमपात्रेभ्यश्च दीयते ।
असत्कृतमवज्ञातं तत्तामसमुदाहृतम् ॥ २२ ॥

22. தகாத தேசத்திலும் காலத்திலும் மனிதனிடத்திலும் செய்யப்படும் தானமும், மரியாதையில்லாமலும் அவமானத்துடனும் செய்யப்படும் தானமும் தாமஸமாகும்.

ओंतत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः ।
ब्राह्मणास्तेन वेदाश्च यज्ञाश्च विहिताः पुरा ॥ २३ ॥

23. பிரம்மத்தைக் குறிப்பிடும் சொற்கள் ஓம் தத், ஸத் தென்று மூவகைப்படும். அதனுல் பிராஹ்மணர்களும் வேதங்களும் யக்ஞங்களும் ஆதிகாலத்தில் படைக்கப்பட்டன.

तस्मादोमित्युदाहृत्य यज्ञदानतपःक्रियाः ।
प्रवर्तंते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥ २४ ॥

24. ஆகையால் ஓமென்று சொல்லிப், பிரம்ம ஞானிகள் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட யக்ஞம் தானம் தபஸ் முதலிய காரியங்களைச் செய்கிறுர்கள்.

तदित्यनभिसंधाय फलं यज्ञतपःक्रियाः ।
दानक्रियाश्च विविधाः क्रियंते मोक्षकांक्षिभिः ॥ २५ ॥

25. மோக்ஷத்தை அடைய விரும்புகிறவர்கள் வேறு பலத்தை விரும்பாமல், ஓமென்று உச்சரித்து, யக்ஞம் தபஸ் தான மென்ற க்ரியைகளைச் செய்கிறுர்கள்.

सद्भावे साधुभावे च सदित्येतत्प्रयुज्यते ।
प्रशस्ते कर्मणि तथा सच्छब्दः पार्थ युज्यते ॥ २६ ॥

26. ஸத் (இருப்பு) தென்ற தன்மையையும், ஸாது (நன்மை) வென்றதையும் குறிப்பிடும்பொழுது ஸத்தென்று உபயோகிப்பதுண்டு. அப்படியே சாஸ்த்ரங்களால் கொண்டாடப்படும் க்ரியையைச் செய்யும் பொழுதும் ஸத் தென்ற பதம் உபயோகிக்கப்படும்.

(எக்காலத்திலும் இருக்கும் தன்மையே ஸத்; ஹிதத்தையே ஸகல பிராணிகளுக்கும் செய்துகொண்டு பரமானந்தத்தைக் கொடுப்பதே ஸாதுவென்ற தன்மை. இவ்விரண்டும் பிரம்மத்தினிடத்தில் பொருந்தியிருப்பதாலும் அதை அடையும் ஸாதனமான கர்மங்களைச் செய்யும் பொழுதும் ஸத் தென்று சொல்வது தகும்).

यज्ञे तपसि दाने च स्थितिः सदिति चोच्यते ।
कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते ॥ २७ ॥

27. யக்ஞம் தபஸ் தானம் முதலியவைகளைச் செய்வதில் மனதைச் செலுத்துவதும் ஸத்தென்று சொல்லப்படும். இவைகளுக்கு வேண்டிய கிரியைகளைச் செய்வதும் ஸத்தெனப்படும்.

अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत् ।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥ २८ ॥

28. சிரத்தையில்லாமல் தவம் செய்வதும் தானங்கொடுப்பதும் யாகஞ் செய்வதும் அஸத்தெனப்படும். எவ்வளவு சிரமப்பட்டும் அது இவ்வுலகிலாவது பரலோகத்திலாவது பயனைக் கொடுக்காது.

# அத்யாயம் 17.

## அத்வைத பீடிகை.

முந்தின அத்தியாயத்தில் (XVI 24) "செய்வதையும் விலக்குவதையும் நிச்சயிப்பதில் உனக்குச் சாஸ்திரமே பிரமாணம். சாஸ்திர விதியால் சொல்லப்பட்ட கர்மத்தையே அறிந்து செய்வா" யென்று பகவான் உபதேசித்தார். அதைக் கேட்ட அர்ஜுனனுக்கு "சாஸ்திரத்தை அறிந்து அதனை நம்பும் ஆஸ்திகனுடைய நிலை யென்ன? அதை அறிந்தும் அதை நம்பாத நாஸ்திகனுடைய கதி யென்ன? சாஸ்திரத்தை அறியாத ஆஸ்திகனுடைய கதி யென்ன" வென்ற ஸந்தேஹமுண்டாயிற்று. முதல் இரண்டு கேள்விகளுக்கும் முந்தின அத்யாயத்தில் பதில் சொல்லப்பட்டதால், மூன்றாவது கேள்விக்கு இந்த அத்யாயத்தில் ஸமாதானம் சொல்லப்படுகிறது.

## விஷய அட்டவணை.

1. நம்பிக்கையை உடைய அக்ஞானி.
2. மூன்று வித நம்பிக்கைகள்.
3. மூன்று விதமான ஆஹாரம்.
4. மூன்று விதமான யக்ஞம்.
5. மூன்று விதமான தபஸ்.
6. மூன்று விதமான தானம்.
7. குறைகளை யுடைய கர்மங்களை நிறைவேற்றும் வழி.
8. சிரத்தையில்லாத கார்யம் வீணே.

## விசிஷ்டாத்வைத பீடிகை.

தேவாஸுரர்களின் பிரிவைச் சொல்லி, அதன் வழியாய் அடையவேண்டிய தத்வ ஞானமும் வேதத்தையே காரணமாயுடையதென்று சொல்லப்பட்டது. சாஸ்திரத்தில் விதிக்கப்படாத கர்மம் அஸுரர்களின் ஸ்வபாவத்தைச் சேர்ந்ததால் பிரயோஜனமற்றது;

(எக்காலத்திலும் இருக்கும் தன்மையே ஸத்; ஹிதத்தையே ஸகல பிராணிகளுக்கும் செய்துகொண்டு பரமானந்தத்தைக் கொடுப்பதே ஸாதுவென்ற தன்மை. இவ்விரண்டும் பிரம்மத்தினிடத்தில் பொருந்தியிருப்பதாலும் அதை அடையும் ஸாதனமான கர்மங்களைச் செய்யும் பொழுதும் ஸத் தென்று சொல்வது தகும்).

यज्ञे तपसि दाने च स्थितिः सदिति चोच्यते ।
कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते ॥ २७ ॥

27. யக்ஞம் தபஸ் தானம் முதலியவைகளைச் செய்வதில் மனதைச் செலுத்துவதும் ஸத்தென்று சொல்லப்படும். இவைகளுக்கு வேண்டிய கிரியைகளைச் செய்வதும் ஸத்தெனப்படும்.

अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत् ।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥ २८ ॥

28. சிரத்தையில்லாமல் தவம் செய்வதும் தானங்கொடுப்பதும் யாகஞ்செய்வதும் அஸத்தெனப்படும். எவ்வளவு சிரமப்பட்டும் அது இவ்வுலகிலாவது பரலோகத்திலாவது பயனைக் கொடுக்காது.



# அத்யாயம் 17.

## அத்வைத பீடிகை.

முந்தின அத்தியாயத்தில் (XVI 24) "செய்வதையும் விலக்கு வதையும் நிச்சயிப்பதில் உனக்குச் சாஸ்திரமே பிரமாணம். சாஸ் திர விதியால் சொல்லப்பட்ட கர்மத்தையே அறிந்து செய்வா" யென்று பகவான் உபதேசித்தார். அதைக் கேட்ட அர்ஜுனனுக்கு "சாஸ்திரத்தை அறிந்து அதனை நம்பும் ஆஸ்திகனுடைய நிலை யென்ன? அதை அறிந்தும் அதை நம்பாத நாஸ்திகனுடைய கதி யென்ன? சாஸ்திரத்தை அறியாத ஆஸ்திகனுடைய கதி யென்ன" வென்ற ஸந்தேஹமுண்டாயிற்று. முதல் இரண்டு கேள்விகளுக்கும் முந்தின அத்யாயத்தில் பதில் சொல்லப்பட்டதால், மூன்றுவது கேள்விக்கு இந்த அத்யாயத்தில் ஸமாதானம் சொல்லப்படுகிறது.

## விஷய அட்டவணை.

1. நம்பிக்கையை உடைய அக்ஞானி.
2. மூன்று வித நம்பிக்கைகள்.
3. மூன்று விதமான ஆஹாரம்.
4. மூன்று விதமான யக்ஞம்.
5. மூன்று விதமான தபஸ்.
6. மூன்று விதமான தானம்.
7. குறைகளை யுடைய கர்மங்களை நிறைவேற்றும் வழி.
8. சிரத்தையில்லாத கார்யம் வீணே.

## விசிஷ்டாத்வைத பீடிகை.

தேவாஸுரர்களின் பிரிவைச் சொல்லி, அதன் வழியாய் அடையவேண்டிய தத்வ ஞானமும் வேதத்தையே காரணமாயுடைய தென்று சொல்லப்பட்டது. சாஸ்திரத்தில் விதிக்கப்படாத கர்மம் அஸுரர்களின் ஸ்வபாவத்தைச் சேர்ந்ததால் பிரயோஜனமற்றது;

28. சாஸ்திரங்களில் விதிக்கப்படும் கர்மங்களைச் சிரத்தையில்லாமல் செய்வதால் இஹபரத்தில் ஸுகமில்லை.

த்வைத (பீடிகை)

எவ்வகையான மாறுதல்களும் குணங்களின் காரியமென்று 16—19-ல் சொல்லப்பட்டது. இங்கே பலவகையான சிரத்தைகளைப் பிரித்துக் காட்டுவதால் அதே விஸ்தாரமாக உபதேசிக்கப்படுகிறது. அவைகளுக்கும் குணங்களே காரணம். மேலும், ஆஹாரம் தபஸ் முதலிய பலவகையான ஜீவன்களின் மார்க்கங்களும், அவைகளில் நன்மை தீமை இவ்விதமென்றும் தெளிவாய்க் காட்டப்படுகிறது. சாஸ்திர விதிகளை நன்றாயறிந்தே தன் தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்று பகவான் சொன்னபொழுது, அந்த விதிகளை அறியாமல் சிரத்தையுடன் தர்மத்தை அனுஷ்டிப்பவர்களுக்கு வழியென்னவென்று அர்ஜுனன் கேட்க இடமுண்டாயிற்று.

விஷயச் சுருக்கம்.

இதுவரையில் பகவான் உபதேசித்த தத்வங்களின் பயனாய் அர்ஜுனன் படிப்படியாய் ஏறிச், சாஸ்திரத்தால் ஹிதமென்று உபதேசிக்கப்பட்டதிலும் ஸ்ரீ கிருஷ்ணனால் உபதேசிக்கப்பட்டதிலும் கலங்காத சிரத்தையென்ற ஸர்வோத்தமமான பதவியை அடைந்தான். இதர குணங்களும் தோஷங்களும் சிரத்தையைப் பொறுத்திருக்கின்றன. அது பொருந்தினால் ஸகல நற்குணங்களும் பொருந்தும். அது பொருந்தாவிட்டால் ஸகல துர்க்குணங்களும் வந்தடையும். ஆகையால் சிரத்தையின் ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையும் சக்தியையும் நன்றாய்த், தெளிவாய் நாம் அறிய வேண்டும். ஆகையால், சாஸ்திர விதிகளைப் பின்பற்றாமல் ஒருவன் பகவானைப் பூர்ண சிரத்தையுடன் ஆராதிக்க முடியாதா? அது தைவத் தன்மையைப் பற்றினதா? அல்லது அஸுரத்தன்மையைக் காட்டுமாவென்று அர்ஜுனன் கேட்டான்.

இதற்குப் பதில் சொல்லுமிடத்தில் க்ஷேத்ரக்ஞனுடைய ஸ்வரூபத்தை அனுஸரித்து சிரத்தையின் பல வகைகளை உபதேசிக்கிறார்.

இவை தேஹத்தைப் பொறுத்த தல்ல. முக்குணங்களைப் பொறுத்தது. தேஹத்தின் தன்மை தேஹியின் தன்மையைப் பொறுத்தது.

மேற்சொன்ன பேதம் ஜீவன்களுடைய யக்ஞம் தானம் தபஸ் ஆஹாரம் முதலிய யாவற்றிலும் தொடரும். இப்படி சிரத்தையை விளக்கி, ஜீவன்களின் உயிரும் செயல்களும் அதைப் பொறுத்திருப்பதைக் காட்டி, சாஸ்திர விதிகளைச் சிரத்தையுடன் அனுஷ்டிக்கும் பிராசீனமான பிரஹ்மவாதிகளின் நடத்தையைப் பார்த்து அர்ஜுனனும் நடப்பது நலமென்கிறார்.

பிரணவஸ்வரூபியான பரம புருஷனிடத்தில் சிரத்தையுடன் அவர்கள் ஸகல காரியங்களையும் ஆரம்பிக்கிறார்கள். அவர் தங்களை ரக்ஷித்து வழிகாட்ட வேண்டுமென்று அடிக்கடி பிரார்த்திக்கிறார்கள். அவருடைய அருளைப் பெறுவதற்கே தாங்கள் ஸகல காரியங்களையும் செய்கிறார்கள். அப்படிச் செய்யும்பொழுது அவர் அந்தர்யாமியாய்த் தங்களிடத்திலிருந்து யாவற்றையும் நடத்துகிறாரென்று நம்புகிறார்கள். தங்களை ரக்ஷித்துக் காரியங்களை ஸபலமாய்ச் செய்கிறவரும் அவரேயென்று நம்புகிறார்கள்.

பகவானிடத்தில் சிரத்தையில்லாமல் சாஸ்திர வசனங்களை மாத்திரம் பின்பற்றி நடப்பவர்கள் செய்யும் காரியங்கள் யாவும் புண்யமாகாது, பயன்படாது. அஸத்தென்னப்படும். ஆகையால் சிரத்தையுள்ளவர்களுக்கே சாஸ்திரம் உபயோகப்படும்.



## பதினெட்டாவது அத்யாயம்

# மோக்ஷ ஸந்யாஸ யோகம்.

अर्जुन उवाच—

संन्यासस्य महाबाहो तत्त्वमिच्छामि वेदितुम् ।
त्यागस्य च हृषीकेश पृथक्केशिनिषूदन ॥ १ ॥

1. *அர்ஜுனன்—ஸந்யாஸமென்ற பதத்தின் உண்மையான கருத்தையும் தியாகமென்ற பதத்தின் உண்மையான கருத்தையும் தனித்தனியே அறிய விரும்புகிறேன்.*

श्रीभगवानुवाच—

काम्यानां कर्मणां न्यासं संन्यासं कवयो विदुः ।
सर्वकर्मफलत्यागं प्राहुस्त्यागं विचक्षणाः ॥ २ ॥

2. *பகவான்—சில பண்டிதர்கள் அசுவமேதம் முதலிய காம்ய கர்மங்களைச் செய்யாமல் விடுவதே ஸந்யாஸமென்கிறார்கள். வேறு சிலர், அவசியம் அனுஷ்டிக்கவேண்டிய நித்ய நைமித்திகங்களான ஸகல கர்மங்களின் பலத்தை விடுவதே த்யாகமென்கிறார்கள்.*

त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुर्मनीषिणः ।
यज्ञदानतपःकर्म न त्याज्यमिति चापरे ॥ ३ ॥

3. *கர்மம் மனுஷ்யனை ஸம்ஸாரத்தில் கட்டுப்படுத்துவதால் தோஷத்தையுடையதென்றும் அதை முற்றிலும் விடவேண்டுமென்றும் சில பண்டிதர்கள் ஞானயோக ரீதியாய்ச் சொல்லுகிறார்கள். வேறு சிலர் யக்ஞம் தானம் தபஸென்ற கர்மங்களை விடக் கூடாதென்கிறார்கள்.*

निश्चयं शृणु मे तत्र त्यागे भरतसत्तम ।
त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधः संप्रकीर्तितः ॥ ४ ॥

4. த்யாகம் ஸந்யாஸமென்ற பதங்களின் கருத்தைக் குறித்து நான் நிச்சயமாகச் சொல்லும் முடிவைக் கேள். த்யாகமென்பது ராஜஸ தாமஸ ஸாத்விக மென்று மூவகைப்படும்.

यज्ञदानतपःकर्म न त्याज्यं कार्यमेव तत् ।
यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥ ५ ॥

5. யக்ஞம், தானம், தபஸென்ற கர்மங்களை விடக் கூடாது; செய்தே தீரவேண்டும். ஏனென்றால் யக்ஞமும் தானமும் தபஸும் பலாபேக்ஷையின்றிக் கர்மங்களைச் செய்யும் ஞானிகளைப் பரிசுத்தப்படுத்தும்.

एतान्यपि तु कर्माणि संगं त्यक्त्वा फलानि च ।
कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम् ॥ ६ ॥

6. இந்தக் கர்மங்களையும் பற்றின்றி பலா பேக்ஷையில்லாமல் செய்ய வேண்டுமென்பதே நான் நிச்சயமாய்ச் சொல்லும் உத்தம மான முடிவாகும்.

नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते ।
मोहात्तस्य परित्यागस्तामसः परिकीर्तितः ॥ ७ ॥

7. வேதசாஸ்திரங்களால் அவசிய மென்று விதிக்கப்பட்டிருக் கும் நித்ய நைமித்திக கர்மங்களை விடுவது உசிதமல்ல. (அக் ஞானியை அவை பரிசுத்தஞ் செய்வதைப் பார்த்திருக்கிறோம்.) அப்படி அவைகளை விடுவது அக்ஞானத்தாலேயே. அப்படிச் செய்யும் த்யாகம் தாமஸமெனப்படும்.

दुःखमित्येव यत्कर्म कायक्लेशभयात्त्यजेत् ।
स कृत्वा राजसं त्यागं नैव त्यागफलं लभेत् ॥ ८ ॥

8. இதைச் செய்வது துக்கத்தையும் சிரமத்தையும் உண் டாக்கு மென்ற காரணத்தாலாவது சரீரத்தை வாட்ட வேண்டுமே யென்ற பயத்தாலாவது கர்மத்தை விடுவது, ராஜஸ த்யாகமெனப் படும்; அப்படிச் செய்வதால் தியாகத்தின் பயனை அவன் அடைய மாட்டான்.

कार्यमित्येव यत्कर्म नियतं क्रियतेऽर्जुन ।
संगं त्यक्त्वा फलं चैव स त्यागः सात्विको मतः ॥ ९ ॥

9. வேத சாஸ்திரங்களால் விதிக்கப்படும் நித்ய கர்மங்களை "இது பகவானுக்குகந்த கைங்கர்யம்; ஆகையால் இதைச் செய்வதே நமது கடமை" யென்று பற்றை விட்டுப் பலாபேக்ஷையின்றி ஒருவன் செய்தால், அவனே ஸாத்விகமான த்யாகத்தைச் செய்தவன்.

न द्वेष्ट्यकुशलं कर्म कुशले नानुषज्जते ।
त्यागी सत्वसमाविष्टो मेधावी छिन्नसंशयः ॥ १० ॥

10. அந்த த்யாகி அசுபமான கர்மம் செய்யும்படி நேர்ந்தாலும் அதை வெறுக்கமாட்டான் (இதைச் செய்தால் மறு ஜன்மம் வருமென்ற ஸம்ஸார பயம் அவனைப் பிடிக்காது). சுபமான நித்ய கர்மத்தைச் செய்யும்படி நேர்ந்தால், (இதனால் மனதின் சுத்தியும் ஞானேத் பக்தியும் காலக்ரமத்தில் மோக்ஷமும் கிடைக்குமென்று) அதைச் செய்வதில் பிரீதியை வைக்கமாட்டான். ஆத்மானத்ம விவேகத்தாலுண்டான ஞானமே அவனிடத்தில் விளங்கும். ஆத்ம ஸ்வரூப த்யானத்திலேயே அவனுடைய மனம் நாடியிருக்கும். அவித்யையாலுண்டாகும் ஸம்சயங்களெல்லாம் அற்றுப்போம்.

नहि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः ।
यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥ ११ ॥

11. கர்மங்களை முற்றிலும் விடுவது தேஹத்தோடு கூடின ஜீவன்களுக்கு ஸாத்யமல்ல. ஆகையால் கர்ம பலன்களை விடுகிறவனே த்யாகி யென்று சொல்லப்படுவான்.

अनिष्टमिष्टं मिश्रं च त्रिविधं कर्मणः फलम् ।
भवत्यत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित् १२ ॥

12. கர்மங்களின் பலத்தை அனுபவிப்பதில் அக்ஞானிகளுக்குச் சரீரம் விழுந்த பிறகு மூன்று விதமுண்டு. அவை இஷ்டமில்லாதது, (நரகயாதனை மிருக பக்ஷி ஜன்மம்), இஷ்டமானது (தேவ

தாஜன்மம்), கலந்தது (மனுஷ்ய ஜன்மம்). ஆனால், பரமார்த்த திருஷ்டியுடன் கர்மபலன்களை விட்ட பரமஹம்ஸர்களுக்கு இப்படியல்ல.

पंचैतानि महाबाहो कारणानि निबोध मे ।
सांख्ये कृतांते प्रोक्तानि सिद्धये सर्वकर्मणाम् ॥ १३ ॥

13. ஸகல கர்மங்களும் பலத்தைக் கொடுக்கும் விஷயத்தில், ஐந்து காரணங்கள், பின்வருமாறு கர்மங்களின் முடிவைச் சொல்லும் வேதாந்த சாஸ்திரத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् ।
विविधाश्च पृथक्चेष्टा दैवं चैवात्र पंचमम् ॥ १४ ॥

14. யாவற்றிற்கும் ஆதாரமா யிருக்கும் சரீரம், கர்மங்களைச் செய்கிறவன், தனித்தனியான இந்திரியங்கள், அவைகளின் தனித்தனியான வியாபாரங்கள், ஐந்தாவதான ஆதித்யாதி இந்த்ரிய அபிமானி தேவதைகள்.

शरीरवाङमनोभिर्यत्कर्म प्रारेभते नरः ।
न्याय्यं वा विपरीतं वा पंचैते तस्य हेतवः ॥ १५ ॥

15. இந்த ஐந்தும், சரீரம் வாக் மனமென்றவைகளால், நியாயமோ அன்யாயமோ எந்தக் கர்மத்தை மனிதன் செய்ய ஆரம்பித்தாலும் அவைகளுக்குக் காரணமாகின்றன.

तत्रैवं सति कर्तारमात्मानं केवलं तु यः ।
पश्यत्यकृतबुद्धित्वान्न स पश्यति दुर्मतिः ॥ १६ ॥

16. இப்படியிருக்கையில் இந்த விஷயத்தில் 'ஆத்மா கர்மங்களைச் செய்கிறவனல்ல; அவைகளின் பலத்தால் அவனுக்கு யாதொரு ஏற்றத்தாழ்வுமில்லை; சுத்தனென்' று அறியாத அக்ஞானி, கெட்டபுத்தி யுள்ளவன்; அவன் ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி பார்க்கமாட்டான்.

यस्य नाहंकृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते ।
हत्वापि स इमाँल्लोकान्न हंति न निबध्यते ॥ १७ ॥

17. நான் கர்த்தாவென்ற எண்ணம் எவனுக்கில்லையோ, கர்ம பலன்களில் எவனுடைய அந்தக்கரணம் பற்றவில்லையோ, அவன் இந்த லோகங்கள் யாவற்றையும் அழித்தாலும், அவன் கர்மபலத்தால் கட்டுப்படமாட்டான்.

ज्ञानं ज्ञेयं परिज्ञाता त्रिविधा कर्मचोदना ।
करणं कर्म कर्तेति त्रिविधः कर्मसंग्रहः ॥ १८ ॥

18. கர்மங்களைப் பற்றின விதி, ஞானம் (அறிவது) அறியப்படுவது அறிகிறவனென்று மூவகைப்படும். செய்கை செய்கிறவன் ஸாதனங்களென்று கர்மத்தொகுதி மூன்று விதமாகச் சுருக்கமாய்ச் சொல்லப்படும்.

ज्ञानं कर्म च कर्ता च त्रिधैव गुणभेदतः ।
प्रोच्यते गुणसंख्याने यथावच्छृणु तान्यपि ॥ १९ ॥

19. குணங்களைப்பற்றிச் சொல்லும் ஸாங்க்யமதத்தில், ஸத்வ ரஜஸ் தமஸென்ற முக்குணங்களின் பேதத்தை ஒட்டி, ஞானம் கர்மம், கர்த்தாவென்றவை மூன்று விதமாய்ச் சொல்லப்படுகின்றன. அதையும் உள்ளபடி சொல்லுகிறேன்.

सर्वभूतेषु येनैकं भावमव्ययमीक्षते ।
अविभक्तं विभक्तेषु तज्ज्ञानं विद्धि सात्त्विकम् ॥ २० ॥

20. தனித்தனியாய்ப் பிரிந்திருக்கும் ஸகல பிராணிகளிடத்தில், பிரிவில்லாமல் ஒரே ரீதியாய் அழிவின்றி யிருக்கும் தன்மையைப் பார்க்கும் ஞானமே ஸாத்விகமெனப்படும்.

पृथक्त्वेन तु यज्ज्ञानं नानाभावान्पृथग्विधान् ।
वेत्ति सर्वेषु तज्ज्ञानं विद्धि राजसम् ॥ २१ ॥

21. ஸகலப் பிராணிகளிலும் தனித்தனியாய்ப் பல தன்மைகளை அறியும் ஞானமே ராஜஸமெனப்படும்.

यत्तु कृत्स्नवदेकस्मिन्कार्ये सक्तमहैतुकम् ।
अतत्त्वार्थवदल्पं च तत्तामसमुदाहृतम् ॥ २२ ॥

22. காரணமின்றி உண்மையான நிலைமையை அறியாமல் ஒரு பதார்த்தையே "எல்லாம் இதே; இதைக் காட்டிலும் வேறில்லை" யென்று பற்றும் அல்ப ஞானம் தாமஸமெனப்படும். (ஜைனர்களும் சமணர்களும் சரீரத்தில் இருக்கும் ஜீவன் அதினளவேயாவான்; கல், உலோகம், மரம் முதலியவைகளால் செய்யப்பட்டிருக்கும் விக்ரஹங்களின் அளவே ஈசுவரனுமாவான். இதைத் தவிர ஆத்மாவும் ஈசுவரனும் வேறல்ல வென்ற மதத்தை இங்கே கண்டிருக்கிறாரென்று சங்கரர் அர்த்தஞ் செய்கிறார்.)

नियतं संगरहितमरागद्वेषतः कृतम् ।
अफलप्रेप्सुना कर्म यत्तत्सात्त्विकमुच्यते ॥ २३ ॥

23. வேத சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட நித்ய கர்மத்தைப் பற்றின்றி ராக த்வேஷமில்லாமல் பயனை விரும்பாமல் செய்வதே ஸாத்விகமான கர்மமெனப்படும்.

यत्तु कामेप्सुना कर्म साहंकारेण वा पुनः ।
क्रियते बहुलायासं तद्राजसमुदाहृतम् ॥ २४ ॥

24. ஆசையாலாவது, அஹங்காரத்தாலாவது, பலத்தை விரும்பியாவது, மிகுந்த சிரமத்துடன் செய்யப்படும் கர்மம் ராஜஸமெனப்படும்.

अनुबंधं क्षयं हिंसामनपेक्ष्य च पौरुषम् ।
मोहादारभ्यते कर्म तत्तामसमुदाहृतम् ॥ २५ ॥

25. கர்மங்களைச் செய்வதால் பிறகு வரும் காரியங்களையும், சக்திக்கும் தனத்திற்கும் நேரும் குறைவையும், தன் சக்தி அதற்குத் தகுந்ததாவென்பதையும், பிறர்க்கு அதனால் ஹிம்ஸையுண்டா

கிறதாவென்பதையும், சற்றும் ஆலோசிக்காமல் அவிவேகத்தால் ஆரம்பிக்கப்படும் கர்மம் தாமஸமெனப்படும்.

मुक्तसंगोऽनहंवादी धृत्युत्साहसमन्वितः ।
सिद्ध्यसिद्ध्योर्निर्विकारः कर्ता सात्त्विक उच्यते ॥ २६ ॥

26. பற்றைவிட்டு அஹங்காரமின்றித், தைர்யத்தையும் விடா முயற்சியையும் மேற்கொண்டு, பலித்தாலும் பலிக்காவிட்டாலும் கலங்காமல் கர்மங்களைச் செய்கிறவனே ஸாத்விக கர்த்தாவெனப் படுவான்.

रागी कर्मफलप्रेप्सुर्लुब्धो हिंसात्मकोऽशुचिः ।
हर्षशोकान्वितः कर्ता राजसः परिकीर्तितः ॥ २७ ॥

27. ஆசை மேலிட்டுக், கர்மத்தின் பயனை அடைய விரும்பிப், பிறர் பொருளைக் கவர்ந்து, பிறர்க்கு ஹிம்ஸையை உண்டாக்கி, உள்ளும் புறமும் சுத்தியில்லாமல், ஸுக துக்கங்களால் மகிழ்வையும் சோகத்தையும் அடையும் கர்த்தா ராஜஸனெனப்படுவான்.

अयुक्तः प्राकृतः स्तब्धः शठो नैष्कृतिकोऽलसः ।
विषादी दीर्घसूत्री च कर्ता तामस उच्यते ॥ २८ ॥

28. மனதை ஒருமைப்படுத்தாமல், பக்வமான புத்தியில்லாமல், பாலனைப்போல் ஒருவர்க்கும் கட்டுப்படாதவனாய்ப், பிறரை வஞ்சிக்க நினைத்துத், தன் சக்தியை ஒளித்துக்கொண்டு பிறர்க்குள் கலஹத்தை விளைவித்துக் கொண்டு, அவசியமான கார்யங்களைச் செய்வதிலும் நோக்கமின்றி, எப்பொழுதும் கவலையால் மனந்தளர்ந்து, மந்த ஸ்வபாவத்துடன் கார்யங்களை மெதுவாய்ச் செய்கிறவன் தாமஸ ஸ்வபாவமுள்ள கர்த்தாவெனப்படுவான்.

बुद्धेर्भेदं धृतेश्चैव गुणतस्त्रिविधं शृणु ।
प्रोच्यमानमशेषेण पृथक्त्वेन धनंजय ॥ २९ ॥

29. முக்குணங்களுக்குத் தகுந்தபடி மனிதர்களின் புத்தியும் உறுதியும் மூவகைப்படும். அதை உனக்குத் தனியாய்ப் பூர்ணமாய்ச் சொல்லுகிறேன் கேள்.

प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये ।
बंधं मोक्षं च या वेत्ति बुद्धिः सा पार्थ सात्त्विकी ॥ ३० ॥

30. கர்ம மார்க்கத்தையும், அவைகளை விடும் ஸந்யாஸ மார்க்கத்தையும், சாஸ்திரங்களால் விதிக்கப்பட்டும் விலக்கப்பட்டுமுள்ள லௌகிக வைதிக கர்மங்களையும், பயமுண்டாகும் காரணங்களையும், பயமில்லாமையின் காரணங்களையும், பந்தம் மோக்ஷமென்றவைகளுக்குக் காரணங்களையும் அறியும் புத்தியே ஸாத்விகமெனப்படும்.

यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च ।
अयथावत्प्रजानाति बुद्धिः सा पार्थ राजसी ॥ ३१ ॥

31. தர்மத்தையும் அதர்மத்தையும், விதிக்கப்பட்டதையும் விலக்கப்பட்டதையும், உண்மையாய் அறியாமல் விபரீதமாய் அறியும் புத்தியே ராஜஸமெனப்படும்.

अधर्मं धर्ममिति या मन्यते तमसा वृता ।
सर्वार्थान्विपरीतांश्च बुद्धिः सा पार्थ तामसी ॥ ३२ ॥

32. அக்ஞானத்தால் வியாபிக்கப்பட்டு, அதர்மத்தைத் தர்மமென்றும் ஸகல விஷயங்களையும் விபரீதமாய் அறியும் புத்தியே தாமஸமெனப்படும்.

धृत्या यया धारयते मनःप्राणेंद्रियक्रियाः ।
योगेनाव्यभिचारिण्या धृतिः सा पार्थ सात्त्विकी ॥ ३३ ॥

33. மனது பிராண வாயுக்கள் இந்திரியங்களென்றவை

களின் செயல்களை எப்பொழுதும் ஸமாதியில் பழகுவதால் நிலை நிறுத்தும் கலங்காத உறுதியே ஸாத்விகமான உறுதியெனப்படும்.

यया तु धर्मकामार्थान्धृत्या धारयतेऽर्जुन ।
प्रसंगेन फलाकांक्षी धृतिः सा पार्थ राजसी ॥ ३४ ॥

34. தர்மம் காமம் அர்த்தமென்ற புருஷார்த்தங்களைப் பற்றுதலுடன் பலத்தை விரும்பிச் செய்வதில் உபயோகிக்கும் உறுதியே ராஜஸமெனப்படும்.

यया स्वप्नं भयं शोकं विषादं मदमेव च ।
न विमुंचति दुर्मेधा धृतिः सा पार्थ तामसी ॥ ३५ ॥

35. தூக்கம் பயம் சோகம் மனத்தளர்ச்சி கொழுப்பென்ற வைகளை விடாமலிருக்கும் கெட்ட புத்தியையுடையவனுடைய உறுதியே தாமஸமெனப்படும்.

सुखं त्विदानीं त्रिविधं शृणु मे भरतर्षभ ।
अभ्यासाद्रमते यत्र दुःखांतं च निगच्छति ॥ ३६ ॥

36. செயல்களின் பயனை ஸுகத்திலும் மூன்று விதமுண்டு சொல்லுகிறேன், கேள். அதை அடிக்கடி அனுபவிப்பதால் ப்ரீதியை அடைகிறான். துக்கத்தின் முடிவையும் அடைகிறான்.

यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् ।
तत्सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥ ३७ ॥

37. ஆரம்பத்தில் விஷத்தைப்போல் க்ரூரமாயும் வெறுப்பாயும், முடிவில் அமிருதத்தைப் போல் ப்ரியமாயும் ஹிதமாயுமிருக்கும் ஸுகமே ஸாத்விகமெனப்படும். ஆத்ம த்யானத்தில் லயித்த புத்தியின் தெளிவே இதற்குக் காரணமாகும்.

विषयेंद्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम् ।
परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ॥ ३८ ॥

38. இந்த்ரியங்களும் அவைகளால் அடையப்படும் விஷயங்களும் சேர்வதால் உண்டாகும் ஸுகம் ஆரம்பத்தில் அமிருதத்தைப் போல் ஹிதமாயும், முடிவில் விஷத்தைப்போல் பயங்கரமாயுமிருக்கும். அந்த ஸுகம் ராஜஸமெனப்படும்.

यदग्रे चानुबंधे च सुखं मोहनमात्मनः ।
निद्रालस्यप्रमादोत्थं तत्तामसमुदाहृतम् ॥ ३९ ॥

39. ஆரம்பத்திலும் முடிவிலும் தனக்கு மோஹத்தை உண்டாக்கும் (புத்தி மயக்கம்) ஸுகம் தாமஸமெனப்படும். தூக்கம், சோம்பல், அஜாக்ரதை முதலியவைகளே இதற்குக் காரணமாகும்.

न तदस्ति पृथिव्यां वा दिवि देवेषु वा पुनः ।
सत्त्वं प्रकृतिजैर्मुक्तं यदेभिः स्यात्त्रिभिर्गुणैः ॥ ४० ॥

40. பிரகிருதியிலிருந்துண்டான இந்த மூன்று குணங்களால் கட்டுப்படாத பிராணி இவ்வுலகத்தில் மனிதர்களுக்குள்ளாவது, ஸ்வர்க்கத்தில் தேவர்களுக்குள்ளாவது கிடைப்பதரிது.

ब्राह्मणक्षत्रियविशां शूद्राणां च परंतप ।
कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवैर्गुणैः ॥ ४१ ॥

41. பிராஹ்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ரர்களின் செயல்கள் பூர்வ ஜன்ம கர்மவாஸனை ரூபமான இயற்கையை அனுஸரித்துண்டாகும் மூன்று குணங்களுக்குத் தகுந்தபடி பிரிக்கப்பட்டிருக்கின்றன.

शमो दमस्तपः शौचं क्षांतिरार्जवमेव च ।
ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्रह्मकर्म स्वभावजम् ॥ ४२ ॥

42. ஞானேந்திரிய கர்மேந்திரியங்களை அடக்குவதும், தவ

மும், பொறுமையும், நேர்மையும், ஸாதாரண ஞானமும் விசேஷ ஞானமும், ஈசுவரனிடத்திலும் வேதத்திலும் சிரத்தையும் பிராஹ்மணனுக்கு இயற்கையாய் உண்டாகும் குணங்கள்.

शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम् ।
दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥ ४३ ॥

43. சௌர்யம், தேஜஸ், உறுதி, ஸாமர்த்யம், யுத்தத்தில் பின்வாங்காமை, தானம், அடக்கியாளும் திறமையும் (அரசன் விஷ்ணுவின் அம்சம் பொருந்தினவன் எனப்படுகிறான்), க்ஷத்ரியனுக்கு இயற்கையாய் உள்ள குணங்கள்.

कृषिगोरक्ष्यवाणिज्यं वैश्यकर्म स्वभावजम् ।
परिचर्यात्मकं कर्म शूद्रस्यापि स्वभावजम् ॥ ४४ ॥

44. பயிர்த்தொழில், பசுக்களை ரக்ஷிப்பது, வர்த்தகம், வைச்யனுக்கு இயற்கையாயுள்ளது. பிறர்க்குப் பணிவிடை செய்வதே சூத்ரனுக்கு இயற்கையான தொழிலாகும்.

स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः ।
स्वकर्मनिरतः सिद्धिं यथा विंदति तच्छृणु ॥ ४५ ॥

45. தந்தம் கர்மங்களில் மனதைச் செலுத்தும் மனிதன், அதனால் அசுத்தம் நீங்கித், தேஹமும் இந்திரியங்களும் ஞான யோகத்திற்கு ஏற்ற தன்மையை அடையும் ஸித்தியைப் பெறுகிறான். தனக்கு ஏற்பட்ட கர்மத்தில் மனதை நாட்டி இப்படி ஸித்தியடையும் வழியைச் சொல்லுகிறேன், கேள்.

यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम्
स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विंदति मानवः ॥ ४६ ॥

46. ஸகல பிராணிகளின் உத்பத்திக்கும் செயலுக்கும் எது காரணமோ, இந்தப் பிரபஞ்சம் யாவையும் எது வியாபித்து நிற்கிறதோ, அந்தப் பரம்பொருளுக்குத் தன் தன் கர்மங்களைக் கைங்கர்ய

ரூபமாய்ச் செய்து ஸமர்ப்பிக்கிறவன் மேற்சொன்ன ஸித்தியை யடைகிறான்.

श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वभावनियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ ४७ ॥

47. ஆகையால் பிறனுடைய தர்மத்தை நன்றாய் அனுஷ்டிப்பதைக் காட்டிலும், தனக்குப் பூர்வ கர்மத்தால் ஏற்பட்ட தர்மமே, பார்வைக்குக் குணமற்றதாயிருந்தாலும், மேலானது. பூர்வ கர்மத்தை அனுஸரித்து இந்த ஜன்மத்தில் ஏற்பட்ட இயற்கையால்விதிக்கப்படும் கர்மத்தைச் செய்துகொண்டே யிருப்பவன் பாபத்தை அடையமாட்டான்.

सहजं कर्म कौंतेय सदोषमपि न त्यजेत् ।
सर्वारंभा हि दोषेण धूमेनाग्निरिवावृताः ॥ ४८ ॥

48. நாம் பிறந்ததுமுதல் நமக்கு ஏற்பட்டிருக்கும் தர்மமானது தோஷத்துடனிருந்தாலும் அதை விடக்கூடாது. நெருப்பை புகை சூழ்ந்திருப்பதைப்போல், எல்லா கர்மங்களும் தோஷத்தால் சூழப்பட்டிருக்கின்றன.

असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।
नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥ ४९ ॥

49. பெண்டு பிள்ளைகளிடத்தில் பற்றில்லாத அந்தக் கரணத்துடன் மனதை வசப்படுத்திப், போகங்களில் ஆசையற்றிருக்கும் ஆத்மஞானி, ஸர்வ கர்மங்களையும் விடுவதால் ஞான திருஷ்டியை அடைந்து, அதனால் ஸகல கர்ம வாஸனைகளிலிருந்தும் விடுபட்டு, மேலான ஸித்தியை அடைகிறான்.

सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाप्नोति निबोध मे ।
समासेनैव कौंतेय निष्ठा ज्ञानस्य या परा ॥ ५० ॥

50. (மேற்சொன்னபடி தன் தர்மத்தைக் குறைவற அனுஷ்

டிப்பதால் ஈசுவராராதனத்தைச் செய்து, அதன் மூலமாய்க் கர்ம பந்தத்திலிருந்து விடுபட்டு, ஆத்மானாத்ம விவேக ஞானத்தை அடையும் முறை எப்படியென்றால், தான் செய்யும் கர்மத்தை ஈசுவரார்ப்பணம் செய்து, அவருடைய கிருபையால் தேஹேந்திரியங்கள் ஞான நிஷ்டைக்கு யோக்யமாய்ப், பரமாத்மாவை எப்படி அவன் அடைகிறானென்பதைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேள். ப்ரம்ம ஞானத்தின் முடிவும் அதே.

बुद्ध्या विशुद्धया युक्तो धृत्यात्मानं नियम्य च ।
शब्दादीन्विषयांस्त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च ॥ ५१ ॥

विविक्तसेवी लघ्वाशी यतवाक्कायमानसः ।
ध्यानयोगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः ॥ ५२ ॥

अहंकारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम् ।
विमुच्य निर्ममः शांतो ब्रह्मभूयाय कल्पते ॥ ५३ ॥

51, 52, 53. மாயையின் ஸம்பந்தமற்று, சுத்தமான புத்தியுடன், கலங்காத உறுதியால் தேஹேந்திரிய அந்தக் கரணங்களை நிலை நிறுத்தி வசப்படுத்திச், சப்தம் ஸ்பர்சம் ரூபம் முதலிய விஷயங்களில் தேஹதாரணைக்கு வேண்டியதைத் தவிற மற்றவைகளைவிட்டு, அப்படி இருந்தவைகளிலும் விருப்பையும் வெறுப்பையும் விலக்கிக், காடு ஆற்றுமணல் மலைக்குகை முதலிய ஏகாந்தமான விடங்களில் இருந்து, வர வர ஆஹாரத்தைக் குறைத்து, அதனால் தூக்கம் சோம்பல் அலுப்பு கலக்கம் முதலியவையற்று, மனந்தெளிந்து, தேஹம் வார்த்தை எண்ணம் இம்மூன்றையும் அடக்கிப், பகவத் கைங்கர்யத்தைத் தவிற மற்றவைகளில் வைராக்யமடைந்து, ஆத்ம ஸ்வரூபத்தை த்யானஞ் செய்வதிலேயே எப்பொழுதும் நாடினவனாய், அஹங்காரம் பலம் கொழுப்பு ஆசை கோபம் பொருளாசை என்றவைகளை விட்டு, எதிலும் என்னுடையதென்ற எண்ணமின்றி, நிகரற்ற சாந்தியைபடைந்து (பரமஹம்ஸ பரிவ்ராஜகனாய்) பிரம்மத்தின் தன்மையை அடைவதற்குத் திறமையுள்ளவனாகிறான்.

ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न कांक्षति ।

समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् ॥ ५४ ॥

54. அப்படி ப்ரஹ்மமானவன் (அறிந்தவன்) தெளிந்த ஸ்வ பாவத்துடன் ஒன்றையும் விரும்புவதில்லை; ஒன்றைக் குறித்தும் துக்கப்படுவதில்லை; ஸகல பிராணிகளிடத்திலும் ஒரே விதமாய் நடந்து கொள்ளுகிறான். என்னிடத்தில் ஸர்வோத்தமமான பக்தியை அடைகிறான்.

भक्त्या मामभिजानाति यावान्यश्चास्मि तत्त्वतः ।

ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनंतरम् ॥ ५५ ॥

55. அந்தப் பக்தியின் மஹிமையால் நான் எவ்விதமானவன் (என் விபூதி, என் விஸ்தாரம் எவ்வளவு), யார் (ஸகல உபாதி ஸம்பந்தமற்றவன், புருஷோத்தமன், ஸர்வேசுவரன், அனந்த கல்யாண குண நிதி) என்பதை உண்மையாய் அறிகிறான். இப்படி என்னை உண்மையாய் அறிந்து அதற்குப் பிறகு என்னிடத்தில் கலக்கிறான்.

सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः ।

मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम् ॥ ५६ ॥

56. (கீதா சாஸ்திரத்தில் உபதேசிக்கப்படும் கருத்தை தலைக் கட்டுவதற்காகவும், அதை உறுதிப்படுத்துவதற்காகவும், ஸ்வகர்மானுஷ்டானத்தால் பகவானை ஆராதித்து, அந்தப் பக்தியோகத்தால் ஞான நிஷ்டைக்குத் தன்னை யோக்யனாகச் செய்து கொண்டு மோக்ஷத்தை யடைகிறவன், பகவானிடத்தில் வைக்கப்பட்ட பக்தி யோகத்தையே பரம ஸாதனமாய் அனுஷ்டித்ததால், அதை இங்கே கொண்டாடுகிறார்.) விதிக்கப்பட்டும் விலக்கப்பட்டுமுள்ள எல்லா கர்மங்களையும் எப்பொழுதும் செய்து

கொண்டே, என்னிடத்தில் நாடின தேஹேந்திரிய அந்தக்கரணங்களுடன், என்னையே சரணமடைந்தவன் என் கிருபையைப் பெறுகிறான். அதினால் நித்யமான என்றுமழியாத பரமபதத்தை அடைகிறான்.

चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः ।
बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव ॥ ५७ ॥

57. ஆகையால் அர்ஜுனா! நீயும் ஸகல கர்மங்களையும் செய்து, மனதால் பலன்களைத் துறந்து, எனக்கு அர்ப்பணம் செய்து, என்னையே பரம்பொருளாய் நாடி, ஞான யோகத்தை அனுஷ்டித்து, உன் மனதை என்னிடத்திலேயே எப்பொழுதும் நாட்டு.

मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात्तरिष्यसि ।
अथ चेत्त्वमहंकारान्न श्रोष्यसि विनंक्ष्यसि ॥ ५८ ॥

58. இப்படி உன் மனதை என்னிடத்திலேயே நாட்டினால் என் அனுக்ரஹத்தைப் பெறுவாய்; அதனால் ஸம்ஸார சக்ரத்தில் கட்டுப்படுவதற்குக் காரணமான யாவற்றையும் தாண்டுவாய். ஆனால் 'நான் புத்திமானல்லவா' வென்ற எண்ணங்கொண்டு, என் உபதேசத்தைக் கேட்டு அனுஷ்டிக்காவிட்டால், நாசத்தை அடைவாய்.

यदहंकारमाश्रित्य न योत्स्य इति मन्यसे ।
मिथ्यैष व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति ॥ ५९ ॥

59. (நான் ஸ்வதந்தரன், வேறொருவனுக்குக் கட்டுப்பட வேண்டியதென்ன? எனக்கு ஹிதமும் அஹிதமும் தெரியாதா? வேறொருவன் சொல்வதை ஏன் கேட்கவேண்டுமென்று நினைக்

காதே.) அஹங்காரம் மேலிட்டு 'நான் யுத்தஞ் செய்யமாட்டேன். யார் எதை வேண்டுமானாலும் சொல்லட்டும். எது நேர்ந்தாலும் நேரட்டு'மென்று இருக்க நினைக்கிறாயோ? அந்த முயற்சி வீணாகும். ஏனென்றால், உன் க்ஷத்ரிய ஸ்வபாவம் மேலோங்கி உன்னைக் கொண்டே அந்தக் கர்மத்தைப் பலவந்தமாய்ச் செய்விக்கும்.

स्वभावजेन कौंतेय निबद्धः स्वेन कर्मणा ।

कर्तुं नेच्छसि यन्मोहात्करिष्यस्यवशोऽपि तत् ॥ ६० ॥

60. புத்திமயக்கத்தால் இப்பொழுது எதைச் செய்ய விரும்பவில்லையோ, அதைப், பூர்வஜன்ம கர்மவாஸனையை ஒட்டி வரும் இயற்கையாலுண்டான சௌர்யம் ரோஷம் முதலியவைகளால் கட்டுப்பட்டு, உனக்கு இஷ்டமில்லா விட்டாலும் நீயே செய்வாய்.

ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।

भ्रामयन्सर्वभूतानि यंत्रारूढानि मायया ॥ ६१ ॥

61. ஏனென்றால், ஸகல பிராணிகளுக்கும் ஈசுவரன் அவைகளின் ஹிருதயத்தில் அந்தர்யாமியாய் விளங்குகிறான். குடை ராட்டினத்தைச் சுற்றுகிறவன், மரத்தால் செய்யப்பட்ட வாஹனங்களில் மனிதர்களை ஏற்றி வைத்து நடுவிலிருந்து சுற்றுவிப்பதைப்போல், ஸகல ஜீவன்களையும் தன்னால் ஸிருஷ்டிக்கப்பட்ட தேஹங்களில் வைத்து, நடுவிலிருந்துகொண்டு, மாயாபலத்தால், ஆதியந்தமற்ற ஸம்ஸார ஸாகரத்தில் சுற்றும்படி செய்கிறான். (இந்த சுலோகத்தில் வரும் 'அர்ஜுன'வென்ற பதத்திற்குச் சங்கராசார்யர் செய்யும் வியாக்யானம் கவனிக்கத் தக்கது. இந்தப் பதம் இதுவரையில் பல தடவை கீதையில் காணப்பட்டாலும், அங்கே இப்படி அர்த்தஞ் செய்யவில்லை. அதாவது:—அர்ஜுனவென்ற பதத்திற்கு வெண்மை யென்றும் அர்த்த முண்டு; ஆகையால் வெண்மையான 'ஸாத்விக ஸ்வபாவமுள்ளவனே! நிர்மலமான அந்தக் கரணத்தை

யுடையவனே’! யென்று அர்த்தஞ்செய்து இவ்விடத்தில் ரிக்வேதம் ஒன்பதாவது மண்டலத்திலிருந்து, பகலே கறுப்பு, பகலே வெளுப் பென்ற சுருதியை எடுத்துரைக்கிறார். அதில் கறுப்புக்குக் கிருஷ்ண னென்றும்,-வெளுப்பிற்கு அர்ஜுனனென்றும் பதப்ரயோகம் செய் திருப்பது கவனிக்கத்தக்கது).

तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।

तत्प्रसादात्परां शांतिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥ ६२ ॥

62. ஆகையால் ஸகலவிதத்தாலும் அந்த ஈசுவரனையே நீ சரணமடை. அவருடைய கிருபையை அடைந்தால் யாவற்றிற்கும் மேலான சாந்தியையும் என்றுமுள்ள என் பரமபதத்தையும் அடையலாம்.

इति ते ज्ञानमाख्यातं गुह्याद्गुह्यतरं मया ।

विमृश्यैतदशेषेण यथेच्छसि तथा कुरु ॥ ६३ ॥

63. (அகஸ்மாத்தாய்க் காரணமின்றி கேவலம் அக்ஞானத் தால் அர்ஜுனனுக்கு நெருக்கடியான ஸமயத்திலுண்டான மனத் தளர்ச்சியையும், தர்மாதர்ம விவேகத்தைக்கெடுத்த மோஹத் தையும் இப்படிப் பகவான் தகுந்த காரணங்களாலும் யுக்திகளா லும் விலக்கி ஒழித்து, அந்த மூலமாய் ஜீவஸ்வரூபத்தையும் பிர பஞ்ச ஸ்வரூபத்தையும் பரமாத்ம ஸ்வரூபத்தையும் அவைகளுக் குள்ள ஸம்பந்தத்தையும் இன்னும் பகவானுடைய கைங்கர்ய முறை யையும் மஹிமையையும் அவரை அடைவதற்கு அதே பரம ஸாதன மென்பதையும், இதுவரையில் 17-அத்யாயங்களில் உபதேசித்தார். ஆயினும், ஜீவன் ஸ்வதந்திரன்; கர்மங்களைச் செய்யவும் விடவும், பிர விருத்தி நிவிருத்தி மார்க்கங்களில் செல்லவும் செல்லாமலிருக்கவும், அவனுக்கே ஸ்வாதந்திரிய முண்டு. ஈசுவரனும் அதில் தலையிட முடியாது. ஒன்றைச் செய்யும்படிக்கும் ஒன்றைச் செய்யாமலிருக்

கும்படிக்கும் அவனை நிர்ப்பந்திக்க முடியாது. ஆசார்யனும் வேத சாஸ்திரங்களும் ஈசுவரனும் செய்யக்கூடியது, கேவலம் உபதேசமே. நன்மை தீமைகளை எடுத்துக் காட்டுவது மாத்திரமே. ஜீவன் போக வேண்டிய மார்க்கத்தையும் அதிலுள்ள அபாயங்களையும் அனுகூலங்களையும், தாங்கள் அந்த மார்க்கத்தில் சென்றபொழுதுள்ள அனுபவத்தையும் எடுத்துச்சொல்ல முடியும். ஆனால் அந்த மார்க்கத்தில் போகவேண்டியவன் ஜீவனே. ஸுக துக்கங்களையும் லாப நஷ்டங்களையும் அனுபவிக்கவேண்டியவன் அவனே. அவனுக்குப் பதிலாய் அதை ஈசுவரனும் அனுபவிக்க முடியாதென்ற பரம ரஹஸ்ய உபதேசத்தை இந்த சுலோகத்தில் செய்கிறார். "இந்த உபதேசம் உனக்குப் பரம ஹிதத்தைச் செய்யும்; ஆகையால் நீ இதை அனுஷ்டிக்கவேண்டும். இல்லாவிட்டால் உனக்கு ஸ்வரூப நாசமே நேரு" மென்று முன்பு சொன்னார். இங்கே ஜீவனுக்குள்ள ஸ்வாதந்திரியத்தை உறுதிப்படுத்துவதற்காக) அர்ஜுனா! நீ கேட்ட கேள்விகளுக்குப் பதிலாய் நான் பிரம்ம ஞானத்தை உனக்குபதேசித்திருக்கிறேன். எனக்குத் தெரிந்தவரையில் இதற்கு மேலான ஞானமில்லை. உலகத்தில் பரம ரஹஸ்யமென்று காப்பாற்றப்படும் வித்யைகளைக் காட்டிலும், இது பரம ரஹஸ்யமானது. ஆயினும் நான் உன் தோழன், உன் பந்து, உனக்கு ஹிதத்தையே கோருகிறவனென்ற காரணத்தாலாவது நான் உனக்குக் காட்டின விசுவரூபத்தைப் பார்த்து, நானே ஸர்வேசுவரன் ஸர்வக்ஞனென்ற காரணத்தாலாவது நான் சொன்னதை நம்பவேண்டாம். ஆனால் நான் சொன்னதை ஒன்றுவிடாமல் மறுபடியும் மனதில் ஞாபகப்படுத்திக்கொள். அவைகளின் குணதோஷங்களையும் நியாயா ந்யாயங்களையும் பலாபலங்களையும் யுக்த அயுக்தங்களையும், பக்ஷபாதமின்றி அபிமானமின்றி, பயமின்றி விசாரித்துச் சீர்தூக்கிப்பார். அவைகளைப் பற்றி உனக்கும் மற்றவர்க்கும் தோன்றும் ஆக்ஷேபங்களையும் ஸந்தேஹங்களையும் அறிந்து. அவைகளுக்கு ஸமாதானம் நான் சொன்னதில் அடங்கியிருக்கிறதாவென்று பார். இல்லாவிட்டால் மறுபடியும் என்னைக் கேள். அவைகளுக்கு நான் சொல்லும் ஸமாதானம் திருப்தியாயிருக்கும் பக்ஷத்தில் ஒப்புக்கொள். முடிவில் உனக்கு எது ந்யாயமென்றும் ஹிதமென்றும் தோன்றுகிறதோ அப்படியே செய்.

सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः ।
इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम् ॥ ६४ ॥

64. அர்ஜுனா! உன்னிடத்தில் எனக்கு மிகுந்த ப்ரீதி யுண்டு. ஆகையால் உனக்கு ஹிதமானதை மறுபடியும் சொல்லு கிறேன், கேள் இது எல்லா ரஹஸ்ய உபதேசங்களைக் காட்டிலும் மிகவும் ரஹஸ்ய மானது. இதே நான் செய்யும் ஸர்வோத்தமமான உபதேசம்.

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥ ६५ ॥

65. அர்ஜுனா! உன் சித்தத்தை என்னிடத்திலேயே நாட்டு. என்னைக் குறித்தே பக்தியைச் செய். நீ செய்யும் யாகங் களை எனக்கு ஸமர்ப்பணம் செய். நீ செய்யும் நமஸ்காரம் முதலிய வைகளை என்னை உத்தேசித்தே செய். இப்படி என் கைங்கர்யத் தையே ஸாதனமாயும் பலனாயும் செய்துகொண்டிருந்தால் என்னையே அடைவாய். இது ஸத்யம், இப்படி உனக்குப் பிரதிக்ஞை செய்கிறேன். நீ எனக்குப் பிரியமானவனல்லவா? (பகவான் செய்த பிரதிக்ஞை வீணாகாது. அவரிடத்தில் செய்யும் பக்திக்கு மோக்ஷமே பலனாகும். ஆகையால் அவரையே நாம் சரணமடையக் கடவோமென்பது கருத்து),

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥ ६६ ॥

66. (இப்படிக் கர்மயோக நிஷ்டையென்பது பரம ரஹஸ்ய மானது. அதின் வழியாய் ஈசுவரனையே நாம் சரணமடைய வேண் டியதென்பதைத் தலைக்கட்டி, அந்த நிஷ்டையின் பலன் தெளிவான

பிரம்ம ஞானம்; ஸகல வேத வேதாந்தங்களின் ஸாரம் இதே யென்கிறார்). இதுவரையில் உனக்குப் பூர்வ கர்மத்தால் ஏற்பட்டிருக்கும் தர்மங்களையும் அதர்மங்களையும் விட்டு, என்றதால் (ஸகல கர்மங்களையும்விட்டு, அவைகளின் வாஸனைகளும் அற்ற நைஷ்காம்யஸித்தி இங்கே குறிப்பிடப்படுகிறது), ஸகல பூதங்களிலும் ஒரே விதமாய் அந்தர்யாமியாய் ஒப்பில்லாதவனும் விளங்கும் ஈசுவரன் நானே யென்று, என்னிடத்தில் சரணாகதி செய்யக்கடவாய். நான் அப்பொழுது உன்னை, என் கைங்கர்யத்திற்கு நேரும் ஸகல தர்மா தர்ம பந்தன ரூபமான இடையூறுகளிலிருந்து விடுவிக்கிறேன். (உன் அந்தர்யாமியாயிருந்து பிரஹ்ம ஞானத்தைக் கொடுத்து அக்ஞானத்தைப் போக்குகிறேன்). உன் பிரயத்னத்தால் மேற்சொன்ன இடையூறுகளை விலக்க முடியவில்லையே யென்று வருந்தாதே (என்னை அனன்யமாய்ச் சரணமடைவதே அவைகளை நாசஞ் செய்யும்).

इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन ।

न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ॥ ६७ ॥

67. (கீதாசாஸ்திரத்தில் பகவான் தன் உபதேசத்தின் ஆரம்பத்தில் அசோச்யான் 'வருத்தப்படத் தகாதவரர்களை' யென்று ஆரம்பித்து, நடுவில் தைவாஸுர ஸம்பத்தை விவரிக்கும்பொழுது, 'அர்ஜுனா! நீ தெய்வ ஸம்பத்தை யுடையவன்; ஒருவேளை நம்மிடத்தில் அஸுர குணங்கள் இருக்கின்றனவோ வென்று ஸந்தேஹித்து வருந்தாதே'யென்று ஞாபகப்படுத்தி, தன் உபதேசத்தின் முடிவில் 'மாசுச:' வருந்தாதே யென்று ஸித்தாந்தஞ் செய்கிறார். இப்படி அடியிலும் நடுவிலும் முடிவிலும் நிரூபிக்கப்பட்ட விஷயமே கீதையின் உட்கருத்தாகும். ஜீவன் அக்ஞானத்தால் ஓயாத துக்கத்தை அடைகிறான். அது நீங்கி, நித்யமும் ஸர்வோத்தமமும் கலப்பில்லாததுமான ஆனந்தமே மோக்ஷத்தை அர்ஜுனனுக்கு அனுக்ரஹிக்கிறாரென்பதை இங்கே கவனிக்கவேண்டியது.

இப்படி இந்தப் பதினெட்டாவது அத்யாயத்தில் கீதா சாஸ்திரத்தின் ஸாரத்தைச் சுருக்கமாய்ச் சொல்லி, மேலும் முடிவில்

அந்த அர்த்தத்தைத் திடப்படுத்துவதற்காக இன்னும் சுருக்கமாய்ச் சொல்லி, இனி இந்த உபதேசத்தைக் குரு சிஷ்ய பரம்பரையாய் லோகத்தில் பரவச்செய்யும் முறையைத் தெரிவிக்கிறார்.)

அர்ஜுனா! உன் க்ஷேமத்திற்காக நான் உபதேசித்த இந்த ப்ரஹ்மவித்யையைத், தபஸ் செய்து மனோவாக்காயங்களை அடக்காதவனுக்கு உபதேசிக்காதே. அப்படித் தவம் செய்தவனானாலும், என்னிடத்திலும் ஆசார்யனிடத்திலும் பக்தியில்லாதவனுக்கு ஒருக்காலும் உபதேசிக்காதே. பக்தனும் தபஸ்வியுமானாலும், இதைச் சிரத்தையுடன் கேட்க விரும்பாதவனுக்கு உபதேசிக்காதே. மேற்சொன்ன குணங்களிருந்தாலும், என்னைக் கேவலம் மனிதனாய் எண்ணி, இந்த சாஸ்திரத்தில் ஆத்ம ஸ்தோத்ரம் செய்துகொள்ளுகிறேனென்ற தோஷத்தை என்னிடத்தில் வைத்து, என் ஈசுவரத் தன்மையை அறியாமல், 'என்னைப்போன்ற மனிதன் சொன்னதை நான் கொண்டாட வேண்டியதில்லையெ'ன்று என்னிடத்தில் அஸூயை செய்கிறவனுக்கு எக்காலத்திலும் உபதேசிக்காதே.

य इदं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति ।

भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः ॥ ६८ ॥

68. ஆனால், இந்தப் பரம ரஹஸ்யமான வித்யையை என் பக்தர்களுக்கு உபதேசிக்கிறவன், என்னிடத்தில் ஸர்வோத்க்ருஷ்டமான பக்தியைச் செய்து என்னையே அடைகிறான். இதில் ஸம்சயமில்லை.

न च तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः ।

भविता न च मे तस्मादन्यः प्रियतरो भुवि ॥ ६९ ॥

69. இப்பொழுதுள்ள மனுஷ்யர்களில் இவனைக்காட்டிலும் எனக்குப் பிரியமான கார்யத்தைச் செய்தவன் வேறொருவனுமில்லை. இனிவரும் மனிதர்களிலும் இவனைக்காட்டிலும் எனக்குப் பிரியமானவன் வேறொருவனுமில்லை.

अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः
ज्ञानयज्ञेन तेनाहमिष्टः स्यामिति मे मतिः ॥ ७० ॥

70. உனக்கும் எனக்கும் நடந்த தர்ம விஷயமான இந்த ஸம்வாதத்தைச் சிரத்தையுடன் படிப்பவனும் ஞானயக்ஞத்தால் என்னை ஆராதிக்கிறான்.

श्रद्धावाननसूयश्च शृणुयादपि यो नरः ।
सोऽपि मुक्तः शुभाँल्लोकान् प्राप्नुयात्पुण्यकर्मणाम् ॥ ७१ ॥

71. என்னிடத்தில் அஸூயையின்றி சிரத்தையுடன் இந்த உபதேசத்தைக் கேட்கும் மனிதனும் பாபத்திலிருந்து விடுபட்டுப், புண்ய கர்மங்களைச் செய்தவர்கள் அடையும் உத்தம லோகங்களை அடைகிறான்.

कच्चिदेतच्छ्रुतं पार्थ त्वयैकाग्रेण चेतसा ।
कच्चिदज्ञानसंमोहः प्रनष्टस्ते धनंजय ॥ ७२ ॥

72. (இப்படிச் சிஷ்யனுக்குப் பிரஹ்ம வித்யையை உபதேசித்து, இவன் இதை ஸரியாய் கிரஹித்தானோ இல்லையோ, கிரஹிக்காவிட்டால் மறுபடியும் வேறுவிதமாய் உபதேசிக்கலாமென்ற எண்ணத்துடன் பகவான்) அர்ஜுனா! நீ மனதை வேறு விஷயங்களில் செலுத்தாமல் ஸாவதானமாய் நான் செய்த உபதேசத்தைக் கேட்டாயா? அக்ஞானத்தால் உனக்குண்டான புத்தி மயக்கம் விலகிற்றா? (வெகு சிரமப்பட்டு நான் உனக்குபதேசித்ததும் வெகு ஜாக்ரதையாய் நீ கேட்டதுமான இந்த 'வித்யையின் பலனை நீ அடைய வேண்டுமென்பதே என் கருத்து.)

अर्जुन उवाच—

नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाच्युत ।
स्थितोऽस्मि गतसंदेहः करिष्ये वचनं तव ॥ ७३ ॥

73. அர்ஜுனன்—ஸ்வாமி! அச்சுதா! தங்களுடைய அனுக்ரஹத்தால் நான் என்னைப் பிடித்த புத்தி மயக்கத்திலிருந்து விடுபட்டேன்; தர்மத்தைப்பற்றின குழப்பம் விலகிற்று. அதற்கு முன்

46

னிருந்த தெளிவான புத்தி எனக்கு மறுபடியும் வந்துவிட்டது. இனி 'நான் இதைச் செய்யவேண்டும். இதை விலக்க வேண்டு மென்ற விஷயத்தில் எனக்கு ஸந்தேஹம் நேராது. தாங்கள் ஜயாபஜயத்தைக் கவனிக்காமல் யுத்தஞ் செய்யும்படி என்னை ஆக்ஞாபித்ததைத் தலையால் வணங்கி ஒப்புக்கொண்டு அப்படியே நடக்கிறேன்.

संजय उवाच—

इत्यहं वासुदेवस्य पार्थस्य च महात्मनः ।
संवादमिममश्रौषमद्भुतं रोमहर्षणम् ॥ ७४ ॥

74. (இத்துடன் கீதா சாஸ்திரம் முடிவுபெற்றது. இனி கதா ஸம்பந்தம் சொல்லப்படுகிறது.) ஸஞ்ஜயன்—"திருதராஷ்டிர மஹாராஜ! இப்படி வாசுதேவனுக்கும் மஹாத்மாவான அர்ஜுனனுக்கும் நடந்த இந்த மயிர்க்கூச்சலுண்டாகும் அத்புதமான ஸம்வாதத்தைக் கேட்டேன்.

व्यासप्रसादाच्छ्रुतवानेतद्गुह्यमहं परम् ।
योगं योगेश्वरात्कृष्णात्साक्षात्कथयतः स्वयम् ॥ ७५ ॥

75. வியாஸ மஹர்ஷியின் அருளால், இந்தப் பரம ரஹஸ்யமான யோக சாஸ்திரத்தை, ஸகலயோக முறைகளுக்கும் ஈசுவரனை கிருஷ்ண பரமாத்மா தானே சொல்ல நான் கேட்டேன்.

राजन्संस्मृत्य संस्मृत्य संवादमिममद्भुतम् ।
केशवार्जुनयोः पुण्यं हृष्यामि च मुहुर्मुहुः ॥ ७६ ॥

76. மஹாராஜ! கேசவனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த இந்த ஸம்வாதத்தைக் கேட்டதாலேயே பாபம் விலகும். இந்த அத்புதமான உபதேசத்தை நினைத்து நினைத்து அடிக்கடி ஆனந்தமடைகிறேன்.

तच्च संस्मृत्य संस्मृत्य रूपमत्यद्भुतं हरेः ।
विस्मयो मे महान् राजन् हृष्यामि च पुनः पुनः ॥ ७७ ॥

77. மஹா விஷ்ணு அர்ஜுனனுக்குப் பரம கிருபையால் காட்டின அத்புதமான விச்வரூபத்தை நினைக்க நினைக்க எனக்கு அடிக்கடி அடங்காத ஆச்சர்யமும் ஆனந்தமும் உண்டாகின்றன.

यत्र योगेश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः ।
तत्र श्रीर्विजयो भूतिर्ध्रुवा नीतिर्मतिर्मम ॥ ७४ ॥

78. (இதைக்கேட்டுத் தன் புத்ரர்களுக்கு ஜயமுண்டாகுமோ அபஜய முண்டாகுமோவென்று கவலை கொண்ட திருதராஷ்டிர னுக்கு, ஸஞ்ஜயன் கிருஷ்ணார்ஜுனர்களின் அவதார ரஹஸ்யத்தை யும் இனி பாரதயுத்தத்தின் முடிவையும் சுருக்கமாய்த் தெரிவிக் கிறான்). ஸகல யோக முறைகளுக்கும் பரம குருவான கிருஷ்ண பரமாத்மா எவர்களின் பக்ஷத்தில் இருக்கிறாரோ, எந்தக் கக்ஷி யில் அர்ஜுனன் மோஹந் தீர்ந்து மறுபடியும் காண்டீ வத்தைக் கையிலெடுத்து யுத்தஞ் செய்யத் தயாராயிருக் கிறானோ, அந்தக் கக்ஷியிலேயே லக்ஷ்மீ கடாக்ஷமும் ஜயமும் க்ஷேமமும் என்றும் கலங்காத நீதியும் விளங்குமென்பது என் முடிவு. (முதலாவது அத்யாயத்தில், காண்டீவத்தையும் பாணத்தை யும் நழுவவிட்டு தேர்த்தட்டில் சாய்ந்தானென்றதால், தன் தர்மம் இன்னதென்று தெரியாமல் மோஹமடைந்து தத்தளித்து ஆசார் யனைச் சரணமடையும் முமுக்ஷுவின் நிலைமையும், கீதையின் கடை ச்லோகத்தில் 'தனுர்தர:' என்றதால் நழுவவிட்ட வில்லை எடுத்து யுத்தம் செய்யப் புகுந்த ஜீவனுடைய அக்ஞான நாசமும் மோஹம் விலகினதும், தன் தர்மத்தை நிச்சயமாய் அறிந்ததும், அதை அனுஷ்டிக்க ஆரம்பித்ததும், அதனால் வரும் பயன்களும், இப்படி ஸர்வ வேதாந்த சாஸ்திரத்தின் விஷயங்கள் யாவும் குறிப்பிடப் பட்டன).

## அத்வைத பீடிகை.

கீதாசாஸ்திரத்தின் அர்த்தம் முழுவதையும் வேதத்தின் கருத்து முழுவதையும் சுருக்கிச் சொல்ல வேண்டுமென்றே இந்த அத்யாயம் தொடங்கப்படுகிறது. முந்தின 17 அத்யாயங்களின் ஸாரம் யாவற்றும் இதில் காணப்படும். ஆனாலும் ஸந்யாஸத்திற்கும் தியாகத்திற்கும் பேதமென்ன, லக்ஷணமென்னவென்றதையே அறிய விரும்பி, அர்ஜுனன் கேட்ட கேள்விக்குப் பகவான் உத்தரம் சொல்ல ஆரம்பிக்கிறார்.

## விஷய ஸூசிகை.

1. ஸந்யாஸத்தையும் தியாகத்தையும் பகுத்துக்காட்டல்.
2. அக்ஞானிகள் கர்மத்தைச் செய்யவேண்டுமா, விடவேண்டுமா.
3. அக்ஞானிகள் கர்மத்தைச் செய்யவே வேண்டும்.
4. பற்றையும் பலாபேக்ஷையையும் விட்டு நித்ய கர்மங்களைச் செய்யவேண்டும்.
5. கர்ம த்யாகம் தாமஸம், ராஜஸமென்று வேறுபடும்.
6. ஸாத்விக த்யாகம்.
7. பலா பேக்ஷயை விடுவது மாத்திரமே அக்ஞானிகளால் செய்யமுடியும்.
8. இந்தத் தியாகங்களுக்கு ஏற்பட்ட பிரயோஜனம்.
9. ஒரு கார்யம் உண்டாய் முடிவதற்கு வேண்டிய காரணங்கள்.
10. ஆத்மா கர்மத்திற்குக் கர்த்தாவென்பது அக்ஞானத்தின் காரியமாகும்.
11. கர்மத்தைச் செய்வதற்குத் தூண்டும் காரணங்கள்.
12. குணங்களுக்குத் தகுந்தபடி தூண்டுகோலும் மூன்று விதப்படும்.
13. ஸாத்விக ஞானம்.
14. ராஜஸ தாமஸ ஞானங்கள்.
15. ஸாத்விக கர்மம்.
16. ராஜஸ தாமஸ கர்மங்கள்.

17. ஸாத்விக கர்த்தா.

18. ராஜஸ தாமஸ கர்த்தா.

19. புத்தியும் உறுதியும் குணங்களுக்குத் தகுந்தபடி மூவகையாகும்.

20. ஸுகமும் இப்படி மூவகையே.

21. எந்தப் பதார்த்தமும் முக்குணங்களின் ஸம்பந்தமுள்ளவையே.

22. வர்ணாசிரம கர்மங்கள்.

23. ஸ்வதர்மானுஷ்டானமே ஸத்தியத்தைத் தரும்.

24. ஸ்வதர்மத்தைக் கைவிடக்கூடாது.

25. கர்மத்தை முற்றிலும் விடுவது ஸாத்யமா ?

26. பரிணாம வாத கண்டனம்.

27. பகவானுடைய மதம். ஞானிகளே முற்றிலும் கர்மத்தை விடக்கூடும்.

28. கர்மயோக ஸித்தியே ஞானயோக ஸித்தியைத் தரும்.

29. ஆத்மக்ஞானத்தின் முடிவு பிரம்மத்தை அடைவதே.

30. அந்த ஆத்மஞானம் ஸாத்யமா ?

31. அறிவும் அறியும் பொருளும் வெளிப்படையாயுள்ளவை.

32. பிரம்மத்தில் ஐக்கியமடைவதற்கு வழி.

33. பக்தியால் ஞானத்தைப் பெறுவது.

34. கர்மத்தால் பகவானை உபாஸிப்பது.

35. ஸந்யாஸமும் உண்மையான ஞானமும்.

36. முக்திக்கு ஸாதனம் எது?

37. ஆத்மக்ஞானம் ஒன்றே ஸாதனமாகும்.

38. ஞானம் கர்மத்துடன் ஒன்று சேராது.

39. கர்மத்தாலேயே மோக்ஷம் கிடைக்காது.

40. நித்ய கர்மம் மறுபிறப்பைத் தரும்.

41. கர்மமும் ஞானமும் வெவ்வேறு அதிகாரிகளைக் குறித்தது.

42. கர்மம் அவித்யையால் உண்டானது.

43. ஆத்மா ஸாக்ஷியே கர்த்தாவல்ல.

44. கீதையைப் பெறுவதற்குவேண்டிய யோக்யதை.

45. கீதா பாராயணத்தின் பயன்.
46. கேட்பவனுக்குப் பயன்.
47. கீதோபதேசத்தை அர்ஜுனன் கிரகித்தானாவென்று பகவான் வினவுதல்.

விசிஷ்டாத்வைத மத பீடிகை.

மோக்ஷம் முதலிய புருஷார்த்தங்களைக் கொடுக்கக்கூடியது வேதத்தில் சொல்லப்படும் தானம் தவம் யாகமென்றவையே. வைதிக கர்மத்திற்குப் பொதுவாகிய லக்ஷணம் பிரணவத்துடன் சேர்ந்திருப்பதே. மோக்ஷத்திற்கும் மற்ற புருஷார்த்தங்களுக்கும் ஸாதனமான கர்மங்களின் பேதமானது தத், ஸத்தென்ற சொற்களால் குறிக்கப்படுகிறது. ஸத்வகுணம் விருத்தியடைந்தால் மேற்சொன்ன மோக்ஷஸாதன கர்மமும் பலாபேக்ஷையில்லாத யக்ஞம் முதலியவைகளும் ஆரம்பிக்கப்படுகின்றன. ஸத்வகுணமான ஆஹாரத்தால் ஸத்வகுணம் உண்டாகிறது. மோக்ஷகாரணமான தியாகமும் ஸந்யாஸமும் ஒன்றேயென்பதும், தியாக ஸ்வரூபமும், ஸகல காரணனான பகவானே எல்லா கர்மங்களுக்கும் கர்த்தாவென்று தியானிக்கவேண்டுமென்பதும், முக்குணங்களின் காரியத்தை நிரூபிப்பதால் ஸத்வத்தையே கைக்கொள்ளவேண்டுமென்பதும், வர்ணாசிரம தர்மங்களைப் பகவானுடைய ஆராதனரூபமாய்ச் செய்வதால் அவரை அடையலாமென்பதும், கீதாஸாரமான பக்தி யோகமும், இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகின்றன.

முதலில், தியாகமும் ஸந்யாஸமும் ஒன்று அல்லது வேறு என்று அர்ஜுனன் அறிய விரும்புகிறான்.

கீதார்த்த ஸங்கிரகம்:

ஈசுவரனே கர்த்தாவென்ற நினைவும், ஸத்வகுணமே கைக்கொள்ளத் தகுந்ததென்பதும், வர்ணாசிரம தர்மங்கள் பலத்தைக் கொடுக்கும் விதமும், கீதாசாஸ்திர ஸாரமும், இந்த அத்யாயத்தின் விஷயங்கள்.

"சத்துவ விடுடை நற்கருமந் தானுகந்தமையும்,
சத்துவ முள்ளது தான் குறிக்கொள்வகை செய்தனவும்,
சத்துவ நற்கிரிசைப் பயனுஞ் சரணாகதியும்,
சத்துவமே தருவானுரைத் தான்றனிப் பார்த்தனுக்கே."

அ—து:—ஸாத்விக தியாகத்தோடுகூடின வைதிக கர்மங்கள் பகவானுக்குப் பிரியமென்பதையும், ஸத்வ குணமுடைய வஸ்துக்களையே அங்கீகரிக்க வேண்டுமென்பதையும், ஸாத்விக கர்மங்களின் பயனையும், பிரபத்தி தத்வத்தையும், பகவான் அர்ஜுனனுக்கு இந்த அத்யாயத்தில் உபதேசிக்கிறார்.

## (பொது)

தவஞ் செய்வதும், புண்ய தீர்த்தங்களுக்குப் போவதும், தானங்கொடுப்பதும், யாகஞ்செய்வதும், கர்மயோக மெனப்படும். மனதை அடக்கி, முக்த ஜீவனுடைய ஸ்வரூபத்தில் நிஷ்டையுடனிருப்பதே ஞானயோக மெனப்படும். பரமாத்மா விடத்தில் ஒரே நிச்சயத்தையுடைய பிரீதியால் அவனைத் தியானஞ் செய்யும் நிஷ்டையே பக்தியோக மெனப்படும்.

இம்மூன்றும் ஒன்றோடொன்று ஸம்பந்தப்பட்டவை. பகவானுடைய ஆராதன ரூபமான நித்ய நைமித்திக கர்மங்களோடும் சேர்ந்தவை. ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை நேரில் பார்ப்பதற்கு யோகத்தின் வழியாய் இவை உபாயங்களாகும்.

பலவிதமான அக்ஞானங்களைப் போக்கடித்துப், பரமாத்மாவிற்குக் கிங்கரனான ஜீவாத்மாவை நேரில் பார்த்து, உத்தமமான பக்தியை அடைந்து, அதனாலேயே பரமபதத்தை அடைகிறான். அவன் ஐசுவரியத்தை விரும்பினாலும் அந்தப் பக்தியோகமே அதைப் பூர்ணமாய்க் கொடுக்கும். ஆத்மாவைப் பார்ப்பதற்கு விரும்பினால் இம்மூன்று யோகங்களும் அதை அனுபவிப்பதற்கு ஸாதனங்களாகும். (பிரகிருதியின் ஸம்பந்தமும் பகவானுடைய அனுபவமு மில்லாமல் கேவலம் ஜீவாத்மாவின் அனுபவமே கைவல்ய மெனப்படும்). இந்த அதிகாரிகளுக்குப் பகவானிடத்தில்

ஏகாந்தமான தியானமும் (வேறொரு தைவத்தையும் பூஜிக்காம லிருப்பதும்), பொதுவான குணமாகும். பகவானை அடைகிறவரை யில் அவரைத் தவிர வேறொன்றையும் விரும்பாமலிருந்தால் அழிவில்லாத அந்தப் பலனையே அடைகிறான். ஞானியோ வென்றால், மேற்சொன்ன ஏகாந்திகளுக்குள் மேலானவன். அவனுடைய இருப்பு பகவானுக்கு வசப்பட்டதே. அவரை விட்டுப் பிரிவதால் துக்கமும் சேர்ந்திருப்பதால் சுபமும் உண்டாகும். அவரிடத்தி லேயே புத்தியைச் செலுத்தினவன். பகவானைத் தியானிப்பது, நேரில் பார்ப்பது (திவ்யதேச யாத்ரை), அவரைப் பற்றியே பேசுவது, நமஸ்கரிப்பது, துதிப்பது, திருநாமங்களைச் சொல்வ தென்றவைகளால் தன் ஆத்ம நிலையை அடைந்தவன். அவனுடைய பிராணன்களும் மனதும் புத்தியும் இந்திரியங்களும் பகவானையே அடைந்திருக்கும்.

தன் வர்ணாசிரம தர்மங்கள் முதலாய் பக்திவரையிலு முள்ள கர்மத்தைப் பகவானுடைய பிரீதியை உத்தேசித்தே செய்விக்கப் பட்டவன். அவை அவரை அடைவதற்கு உபாயம் மாத்திரமே யென்ற புத்தியை விட்டு, அவை உபாயமும் அவைகளால் அடையப்படும் பயனுமே யென்று பயமற்றவனாய்ப், பகவானையே உபாய மாய்க் கொண்டு நடப்பவன்.

ஒரே நிச்சயத்துடன் கூடின அழிவில்லாத கைங்கர்யம் ஒன்றிலேயே ஆசையுடையவனாய், அவருடைய திருவடியை அடைவான். இந்தக் கீதசாஸ்திரமும் இதையே பிரதானமாய் உபதேசிக்கும்.

ஸ்ரீநிகமாந்த தேசிகர் அருளிச் செய்த கீதாஸாரம்.

கிருஷ்ணனே மேலான தத்வம். மேலான ஹிதம். அவருடைய திருவடிகளை ஆசிரயித்தவனா யிருப்பதே இந்தச் சாஸ்திரத்தின் கருத் தென்று மூன்று வகுப்பிலும் சொல்லப்பட்டது. அதில் முதலாவது ஆறு அத்யாயங்களில், பக்திக்கு அங்கமான ஆத்ம ஸ்வரூப தர்சனத் திற்கு ஞானயோகமும் கர்மயோகமும் இரண்டு கைகளென்று சொல் லப்பட்டது. நடுவிலுள்ள ஆறு அத்யாயங்களில், பக்தியாகிற உபாயம்

சொல்லப்பட்டது. மற்ற ஆறு அத்யாயங்களில், தன்னால் உபதேசிக்கப்பட்ட கர்மங்களை அநுஷ்டிக்க வேண்டுமென்ற உபதேசம் உறுதிப்படுத்துவதற்காகச் சொல்லப்பட்டது.

பதினெட்டு அத்யாயங்களால் சிஷ்யனுடைய அக்ஞானம், அதை ஒழிப்பது, கர்மயோகம், அதின் உட்பிரிவுகள், அது ஸுலபமாய்ச் செய்யக்கூடியதென்பது, அதற்குத் தகுந்த மஹிமை, ஐசுவரியம் முதலியவைகளில் ஆசையை யுடைய பக்தர்களின் வகுப்பு, அவர்களால் ஸம்பாதிக்கப்பட வேண்டிய அந்திம ஸ்மிருதி முதலியவைகளின் பேதம், பக்தி யோகம், அதற்குக் காரணமான பகவானுடைய மஹிமை, பக்தியாலேயே அவரை ஸுலபமாக அடையலாமென்பது, பக்தியே சீக்கிரமாய்ப் பலத்தைக் கொடுக்குமென்பது, மூன்று விதமான ஜீவன்கள், மூன்று விதமான பிரகிருதிகள், ஈசுவரன், சாஸ்திரத்திற்குக் கட்டுப்படுவது, அப்படி ஸத்வ குணம் மேலிட்டவனுடைய ஸ்வரூபம், கீதாஸாரம், ஸாத்விக தியாகம் முதல் பிரபத்தி வரையிலுள்ள உபதேசமும் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன.

மேற்சொன்ன பலவித யோகமும் பகவானிடத்தில் பரமைகாந்தியாயிருப்பது, ப்ரீதியுடனிருப்பதென்றவைகளை லக்ஷணங்களாயுடையவை. இவைகளுக்கும் நித்ய நைமித்திக கர்மங்களுக்கும் ஒரு பாகத்தால் பரஸ்பர ஸம்பந்தமுண்டு. இம்மூன்றிற்கும் அளவற்ற பயனையுடைய மேலான பக்தி யோகத்தைச் சொல்வதற்காகவே பிரஸ்தாபிக்கப்பட்டதென்பது கருத்து.

விஷயச் சுருக்கம்.

1. ஸன்யாஸம் தியாகமென்றுலென்ன?
2—3. பல மதங்கள்.
4. கண்ணனுடைய மதம்—தியாகம் மூவகை.
5—6. பற்றின்றிக் கர்மங்களைச் செய்.
7. தாமஸத் தியாகம்.
8. ராஜஸத் தியாகம்.
9. ஸாத்விகத் தியாகம்.

10. இவனுடைய நடத்தை.

11. கர்மங்களை முற்றிலும் விடமுடியாது. பலாபேக்ஷையில்லாமையே தியாகம்.

12. பலத்தை விரும்பினவர்களுக்கு நேரும் கர்மபலன் மூவகை.

13—16. கர்மங்கள் பலிப்பதற்கு ஐந்து காரணங்கள்.

17. பலா பேக்ஷயின்றிக் கர்மங்களைச் செய்தால் அது ஒட்டாது.

18. கர்மங்களைப்பற்றின விதி.

19. ஞானம், கர்மம், கர்த்தா மூவகை.

20. ஸாத்விக ஞானம்.

21. ராஜஸ ஞானம்.

22. தாமஸ ஞானம்.

23. ஸாத்விக கர்மம்.

24. ராஜஸ கர்மம்.

25. தாமஸ கர்மம்.

26. ஸாத்விக கர்த்தா.

27. ராஜஸ கர்த்தா.

28. தாமஸ கர்த்தா.

29. புத்தி திருதி மூவகை.

30. ஸாத்விக புத்தி.

31. ராஜஸ புத்தி.

32. தாமஸ புத்தி.

33. ஸாத்விக திருதி.

34. ராஜஸ திருதி.

35. தாமஸ திருதி.

36. ஸுகம் மூவகை.

37. ஸாத்விக ஸுகம்.

38. ராஜஸ ஸுகம்.

39. தாமஸ ஸுகம்.

40. முக்குணங்களற்ற பிராணிகளில்லை.

41. அவைகளுக்குத் தகுந்தபடி வர்ண தர்மங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

42. பிராஹ்மண கர்மம்.

43. க்ஷத்திரிய கர்மம்.

44. வைச்ய சூத்திர கர்மம்.

45—46. பகவானுக்கு ஆராதன ரூபமாய் ஸ்வதர்மத்தை நடத்துவதால் முக்தியை அடையலாம்.

47—48. ஸ்வதர்மம் மேலானது. அதை விடக்கூடாது.

49. ஸ்வதர்மானுஷ்டான பயன், தியானயோக ஸித்தி.

50—53. அவன் சுத்தஜீவ ஸ்வரூபத்தை அடையும் மார்க்கம்.

54. பிறகு நிஜமான பக்தி பிறக்கும்.

55. பிறகு பகவானுடைய ஸ்வரூப ஞானம், அவரை அடைவது.

56. காம்ய கர்மங்களையும் மேற்சொன்னபடி செய்வதால் இதே பயன் கிடைக்கும்.

57. அர்ஜுனா! நீயும் இப்படியே செய்.

58. செய்தால் என் கிருபையை அடைவாய். கேட்காவிட்டால் அழிவாய்.

59—60. யுத்தஞ்செய்வதில்லையென்று அக்ஞானத்தால் சும்மாவிருந்தாலும் உன் ஸ்வபாவம் உன்னை ஏவி விடும்.

61. ஈசுவரன் அந்தரியாமியாயிருந்து கர்ம பலன்களுக்கேற்றபடி ஆட்டுவிக்கிறான்.

62. அவரைச் சரணமடைந்தால் அவருடைய மாயையைத் தாண்டிப் பரகதி கிடைக்கும்.

63. பரம ரஹஸ்யத்தை உபதேசித்தேன்: உன் இஷ்டப்படி செய்.

64—65. பக்தியோகமே ஸர்வோத்தமமான ஸாதனமென்று பகவான் பிரதிக்ஞை செய்கிறார்.

66. ஸகல உபாயங்களையும், பலாபேக்ஷையின்றி, அஹங்காரத்தைவிட்டு, பகவானுக்குக் கைங்கர்யமாய்ச் செய்யவேண்டும். அவரையே சரணமடைய வேண்டும். ஸமஸ்த பாபங்களும் ஒழியும்.

67. பகவானுடைய உபதேசத்தைப் பெறுவதற்குத் தகாதவர்கள்.

68—69. தகுந்தவர்கள்:—அவர்களுக்கு உபதேசிப்பதின் பயன்.

70. இந்தக் கீதையைக் கற்பதின் பயன்.

71. இதைக் கேட்பதின் பயன்.

72. அர்ஜுன! ஸந்தேஹம் தெளிந்ததா?

73. தெளிந்தது. உமது சொற்படி நடக்கிறேன்.

74—77. ஸஞ்ஜயன் ஆச்சரியத்துடன், கீதையையும் விசுவ ரூபத்தையும் ஸ்தோத்திரம் செய்கிறான்.

78. நரநாராயணர்களிருக்கும் கக்ஷியில் ஜயம், ஐச்வர்யம், நீதி யிருக்கும்.

த்வைத பீடிகை.

கீதையின் முக்யமான உபதேசத்தைப் பூர்வாபர விரோத மின்றி ஸ்தாபிப்பதற்கு ஸந்யாஸம் தியாகம் யோகமென்ற விஷ யங்களை ஸந்தேஹ விபரீதமின்றி விளக்க வேண்டும். யோகமென்ற பதத்தால் குறிக்கப்படும் தர்மானுஷ்டானத்தில் அர்ஜுனன் நிலை பெறுவதற்காக இவை மறுபடியும் விவரிக்கப்படுகின்றன. மற்ற இரண்டும் யோகத்தின் அங்கங்களென்று காட்டப்பட்டன. ஆயி னும் உபதேசத்தின் முடிவில் கண்ணன் தன் அபிப்பிராயத்தை மாற்றுவாரோவென்றும், அந்த விஷயத்தை இன்னும் அதிகமாய விளக்கி, முன்பு செய்யப்பட்ட உபதேசத்தை ஸ்திரப்படுத்துவாரோ வென்றும் அர்ஜுனன் மறுபடியும் கேட்கிறான்.

ஸந்யாஸமும் த்யாகமும் கண்ணன் விவரித்தபடியிருந்தால் தனக்குபதேசித்த யோகம் ஸாதனமாகும்; இல்லாவிட்டால் பயன் படாது. ஆகையால், இவ்விரண்டு முறைகளையும் ஆழ்ந்து உண்மை யாய்ப் போதிக்கும்படி வேண்டுகிறான்.

கண்ணனுடைய பதில் என்னவென்றால், ஸ்வதர்மத்தை அனுஷ்டிப்பதில் ஆசை பற்று முதலியவைகளை முற்றிலும் விடுவதே ஸந்யாஸமென்று இதுவரையில் சொல்லப்பட்டது. இதைத் தவிர, காம்ய கர்மங்களை முற்றிலும் விடுவதும் அதன் லக்ஷணமாகும். நாம் செய்ய வேண்டிய கர்மங்கள் யாவையும் பலாபேக்ஷையின்றிச் செய்வதே தியாகமெனப்படும். யக்ஞம் தானம் தபஸ் முதலிய புண்ய கர்மங்கள் கெட்ட பலத்தைக் கொடுக்காது. ஆகையால் அவைகளைச் செய்தே தீரவேண்டும், விடக்கூடாது. அவைகளில் சிரத்தையில்லாமையாலும், தேஹ சிரமத்தைக் கண்டு பயந்தும், செய்யாமல் விடுவது தியாகமென்று ஏற்படாது. இவ்விதமாய்க்

கர்மங்களைச் செய்யும் ஸந்யாஸிகளையும் தியாகிகளையும், ஸுகமும் துக்கமும் இவ்வுலகத்திலும் ஸ்வர்க்க நரகங்களிலும் அணுகாது. மோக்ஷத்தில் நித்யமான ஆனந்தத்தை அனுபவிப்பார்கள்.

இந்த ஸந்தர்ப்பத்தில் செயல்களின் அங்கங்களும் வகைகளும் கண்ணனால் உபதேசிக்கப் படுகின்றன: செய்கிறவன், செயல், கருவிகள், இடம், தைவமென்றவைகளை அறிந்து செய்யாவிட்டால், விவேகம் அழியும். இவைகளை அறிந்து, தான் பரமாத்மாவையும் இதர காரணங்களையும் பொறுத்தே ஜீவிக்கிறானென்பதை உணர்ந்தால், பற்றுதலை முற்றிலும் ஒழித்துக் கர்ம பந்தத்திலிருந்து விடுபடுவான்.

கர்த்தா வென்பவன் யார்? ஜீவன் தானே கர்த்தாவல்லவா? இது முக்யமான கேள்வி. இதற்குத் திருப்திகரமான பதில் கிடைப்பதரிது. இங்கே கண்ணன் சொல்வதைப் பார்ப்போம். கர்மத்தை பற்றின விதி, ஞானம் அறிகிறவன் அறியப்படுவதென்று மூவகையாகும். கருவி செய்கை செய்கிறவனென்று கர்மத்தின் சுருக்கமாகும். இப்படிச் சொல்வதால் கருத்து நன்றாய் விளங்கவில்லை. ஆகையால் வியாக்யானக்காரர் சொல்வதைக் கவனிப்போம்.

(1) கர்மமென்பது யாது? அதின் உத்பத்தியென்ன? இவைகளின் ஞானம்.

(2) கர்மத்தின் உத்தேசம், கர்மத்தைப் பூர்த்தி செய்து குறித்த பலனைக் கொடுக்கச் செய்யும் இதர விஷயங்கள்.

(3) கர்த்தா யார்? அவன் ஸ்வதந்த்ரனா அல்லவா? இல்லாவிட்டால் யாரை ஆசிரயிக்கிறானென்று, கர்த்தாவின் ஸ்வபாவத்தையும் ஸ்வரூபத்தையும் அறிகிறவன்.

செய்கையும் இந்திரியங்களான கருவிகளும் செய்கிறவனும் நெருங்கின ஸம்பந்த முள்ளவை. இப்படி முதல் மூன்று விஷயங்கள் மானஸிக வியாபாரத்தையும் தர்மானுஷ்டானத்தையும் அனுஸரித்துச் சொல்லப்பட்டன. பிந்தி சொன்ன மூன்று விஷயங்களும் ஸ்தூல அவஸ்தையை அனுஸரித்துச் சொல்லப்பட்டன. இரு விதத்திலும் கர்த்தாவும் காரியமும் ஸ்வதந்த்ரமா, அல்லவா

வென்று கேள்வி பிறக்கும். வெளிப்படையான சக்திகளால் இவ்விரண்டும் நடத்தப்படுகிறதென்று வெளிப்படையாய் விளங்கும். ஆகையால் கர்மத்திற்கும் கர்ம பலத்திற்கும் பொறுப்பு உண்டா, இல்லையா வென்பது தெளிவாய் விளங்காது. அந்த விஷயத்தைப் பற்றி நாம் அறிய வேண்டிய தென்னவென்றால், கர்த்தா ஸ்வதந்திரனென்றால், அவனுடைய செயல்கள் அவனாலேயே ஏவப்பட்டு நடைபெற வேண்டும். அந்த ஸ்வாதந்தரியம் பூர்ணமா யிருந்தால், சக்திகளும் கருவிகளும் குறைவில்லாமல் கர்த்தாவிடத்தில் பொருந்தி யிருக்கவேண்டு மென்று ஏற்படுகிறது. அப்படி யானால் அவனுக்கு யாதொரு பொறுப்பு மிருக்க நியாயமில்லை; வேறொரு வனை அபேக்ஷித்து அவன் யாதொன்றையும் பெறவில்லை யல்லவா? வேறொருவனுடைய செயலால் அவன் தடுக்கப்படக் கூடாது; தடுக்கப்பட்டால் அவன் ஸ்வதந்திரமான கர்த்தாவல்ல. பொறுப்பு வாய்ந்த செய்கையே இவ்விதமான ஸ்வதந்திர கர்த்தாவிற்குப் பொருந்தாது. ஆகையால பொறுப்பு எப்பொழுது ஏற்படுமென்றால், தன்னைவிட வேறொருவனால் தனக்கு ஓர்விதமான செய்கை கொடுக்கப்பட வேண்டும்; அதற்குத் தகுந்த யோக்யதை தன்னிடத்தி லிருக்கவேண்டும். அந்த சக்தியைக் கொடுத்தவன் கர்த்தாவின் செய்கையை விரிக்கவோ குறைக்கவோ ஸ்வதந்திர மிருக்க வேண்டும். இப்படித் தனக்குக் கொடுக்கப்பட்ட எல்லைக்குள் தனக்கு ஸ்வாதந்தர்யம் வாய்ந்து, அதை உபயோகிக்கும் விதத்தால் வரும் ஸுகதுக்கத்திற்குத் தான் பொறுப்பாளியாகவேண்டும். இவ்விதமான கர்த்தாவைப்பற்றியே கர்மத்தைப்பற்றின விதிகள் பொருந்தும். தனக்குச் செயலைக் கொடுத்த ஆதாரத்திலிருந்தே இவ்விதமான வரையறைகள் ஏற்பட்டதாக அவன் அறிவான்.

இவ்விதமான கர்த்தாவுக்கும் அசேதன தத்வமான பிரகிருதிக்கும் ஸ்வரூபத்திலும் குணங்களிலும் பேதமுண்டு. பிரகிருதிக்கு எவ்வித பொறுப்புமில்லை. மேலும், கர்த்தாவிற்கும் அவனுக்குச் சக்தியைக் கொடுத்து வரையறுக்கும் பதார்த்தத்திற்கும் பேதமுண்டு. அதற்கே கர்த்தா கட்டுப்பட்டு பொறுப்பைச் செலுத்த வேண்டியவன். வேறுவிதமாயிருந்தால் பொறுப்பென்ற கொள்கையே ஏற்படாது. ஆகையால், பிரகிருதி பகவான் முக்தர்க

ளென்றவைகளுக்குப் புறம்பான ஜீவன், விதிகளை நன்றாயறியவேண்டும். அவைகளை அநுஷ்டித்துப் பயன்களை அடையவேண்டும்; அப்படியே செய்துகொண்டிருக்கிறான். இந்த விஷயங்களில் ஜீவன் ஈசுவரனுக்கு பரதந்திரனே. விதிகளுக்குக் கட்டுப்பட்டுப், பயன்களை அனுபவிக்கிறவன் ஜீவனேயென்று இந்த விஷயத்தால் ஸந்தேஹமில்லாமல் ஏற்படுகிறது.

இந்த சுலோகத்தின் (18) இரண்டாவது பாகத்தை அடியிற் கண்ட விதமாயும் அர்த்தஞ்செய்வதுண்டு. கர்மத்தைச் செய்ய வேண்டுமென்று தூண்டுதல்ஜீவனுக்கு வருவதற்கு, ஞானமும் அறிகிறவனும் அறியப்படும் விஷயமும் காரணமாகும். ஆகையால் பேதமின்றி, மாறுதலின்றி, அழிவின்றி, நித்யமாய் விளங்கும் பரம புருஷனைச்சேதனசேதன பிரபஞ்சத்தில் விளங்குவதாய்ப் பார்க்கும் ஞானமே ஸாத்விகஞான மெனப்படும்.

(24—40) மேற்சொன்ன ஞானம், கர்மம், கர்த்தாவென்பவை ஸாத்விக ராஜஸ தாமஸமென்று காட்டப்படுகிறது. புத்தி, மற்றச் சக்திகள், ஸுகம், ஜீவன்களின் இதர நிலைமைகளும் இப்படியே வகுக்கப்படும். பிரக்ருதியின் முக்குணங்களால் கட்டுப் படாத ஜீவன் ஒன்றுமில்லை.

(41—44) நான்கு வர்ணத்தார் அநுஷ்டிக்கவேண்டிய விசேஷ கர்மங்கள், தன் ஸ்வபாவத்திற்கும் முக்குணங்களால் ஏற்படும் மாறுதல்களுக்கும் ஒத்திருக்கும்.

(45—48) தன் செயல் யாரிடத்திலிருந்து உண்டாகிறதோ அந்தப் பரமபுருஷனை அடைவதற்கு ஸ்வதர்மானுஷ்டானமே முக்ய ஸாதனம். அவரை ஆராதிப்பதும் அதே.

(49—53) ஸங்யாஸத்தால் பரிசுத்தமான மனதுடன் ஸ்வதர்மத்தை அநுஷ்டிக்கவேண்டும். இதனால் பிரஹ்மத்தை அடைவிக்கும் முதிர்ந்த ஞானமென்ற ஸித்தி கிடைக்கும். இந்திரியங்களை அடக்குதல், மனதை ஒருமைப்படுத்துதல், தனியேயிருத்தல், தியானஞ்செய்தல் முதலியவைகளைப்பற்றின விதிகள் மேற்சொன்ன ஸாதனத்திற்குப் பூர்வாங்கமாயும் ஒத்தாசையாயுமிருக்கும்.

(54—57) ஈசுவரன் ஸர்வ வியாபியென்றும், அவருடைய ஸ்வபாவமும் தன்மையும் இன்னதென்று அறிந்து, பிறகு அவரிடத்தில் பிரவேசிப்பதற்குப் பக்தியே பரம உபாயம்.

(58—62) இப்படி உபதேசிக்கப்படும் தத்வத்தை அர்ஜுனன் மறந்தாலும், ஸரியாய் அறியாவிட்டாலும், ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்காமலிருந்தாலும், அவனுடைய முன் கர்மத்திற் கேற்றபடி நடப்பான்; இஷ்டமில்லாவிட்டாலும் பலவந்தமாகவே செய்விக்கப்படுவான். ஆனால் தான் மனப்பூர்வமாய் நடப்பதாய் அதை உணராமலும், தன் கர்மங்களைப் பகவானுக்கும் லோகோபகாரத்திற்கும் அர்ப்பணஞ் செய்யாமலு மிருப்பதால், அர்ஜுனன் பகவானுடைய கிருபையையும் நித்யமான ஆசீர்வதத்தையும் அடையவில்லை. ஒவ்வொரு ஜீவனும் தன் செயல்களுக்கு விசேஷப் பொறுப்பு வாய்ந்தவனென்றும், அதன்படியே கர்மங்களின் பலன்களும் நேருமென்றும், பகவான் முடிவில் வெகு அழுத்தமாய் வற்புறுத்துகிறார். "மோகத்தால் கட்டுப்பட்டு, உனக்கு இயற்கையான கர்மத்தைச் செய்ய மறுக்கிறாய். இப்படித் தப்பமுடியாது. உனக்கு இஷ்டமில்லாவிட்டாலும் பலவந்தமாய் அதைச் செய்யும்படி நேரு" மென்கிறார். தனக்குப் புறம்பாய்த், தனக்கு வசப்படாமல், தான் செய்ய விரும்பாததைப், பலவந்தமாய்ச் செய்விக்கும் மஹா சக்தி எது?

"ஸகல ப்ராணிகளின் ஹிருதயத்தில் ஈசுவரன் அந்தர்யாமியாய் விளங்குகிறார். மனிதர்களை ஒரு சுழல் ராட்டினத்தில் ஏற்றி, நடுவிலிருந்து ஒருவன் கூலிக்காகச் சுற்றுவிப்பதைப் போல், ஸகல பூதங்களையும் மாயையால் சுற்றுவிக்கிறார். ஆகையால் அர்ஜுனா! உன் கடமையை ஸந்தோஷத்துடன் செய். எல்லாவிதத்தாலும் அவரையே சரணமடை" யென்கிறார்.

63. கர்மத்தைச் செய்வதற்கும், செய்யாம லிருப்பதற்கும் காரணங்கள் சொல்லப்பட்டன. ஜீவனுக்குப் பொறுப்பென்பது எவ்விதமாய் ஏற்படுகிறதென்று மறுபடியும் பகவான் உபதேசிக்கிறார்.

"கர்மத்தைச் செய்வதும், செய்யாமலிருப்பதும், உன்னை பொறுத்ததே. உனக்கு எப்படி நலமென்று தோன்றுகிறதோ அப்படியே செய்".

கீதையைக் கேட்பதற்குமுன் அர்ஜுனனுக்கு ஹிதமான மார்க்கம் ஏதென்று தெரியவில்லை. பகுத்தறியும் சக்தியுமில்லை. எல்லா வழிகளும் ஹிதமாகவே தோன்றின. ஆகையால் அவனுடைய ஸந்தேஹத்தை நீக்கி மோஹத்தை விலக்கவேண்டியதாயிற்று. இந்த உபதேசத்தாலுண்டான நிச்சய புத்தியும் அதின் பிரயோஜனமும் அர்ஜுனனுடைய பதிலால் விளங்குகிறது. "கண்ணா! என்னைப் பிடித்திருந்த மோஹம் அழிந்தது. உன் கிருபையால் உண்மையான ஞானம் உதயமாயிற்று, ஸந்தேஹங்கள் அற்றன. உன் சொற்படி நடப்பேனெ"ன்கிறான்.

அப்படியும் பகவான் தன் உபதேசத்தின் ஸாரத்தை மறுபடியும் புகட்டுகிறார். இந்திரியங்களுக்குப் பிரத்யக்ஷமான காரியங்களையும் பயன்களையும் பற்றின ஞானத்தை எவ்வளவுதடவை போதித்தாலும் மனதில் உள்ளபடி பதிவதில்லை. இந்திரியங்களுக்குப் பிரத்யக்ஷமில்லாததும் மனோ வாக்கிற் கெட்டாததுமான விஷயங்களைப்பற்றி விசாரித்து உபதேசிக்கும் பொழுது, எவ்வளவுதடவை ஒரே விஷயத்தைப் பலரூபமாய்ச் சொன்னாலும் தகும். "அர்ஜுனா! என்னையே சரணமடை, ஸகல பாபங்களிருந்தும் உன்னை விடுவிப்பேனெ"ன்றார்.

ஆகையால் ஏதாவதொரு உத்தேசத்தை நிறைவேற்ற விரும்புவதற்கும் முயல்வதற்கும், பக்தி இருந்தால், பொறுப்பு ஏற்படுவதற்குப் போதுமான காரணமாகும். ஆகையால் பகவானைச் சரணமடையவேண்டுமென்ற விருப்பமும் முயற்சியும் மாத்திரமிருந்தால், நாம் செய்யும் கர்மங்கள் பரிசுத்தமாய், அவருடைய கிருபையைப் பெறுவதற்குப் பாத்திரமாவோம். இவ்வளவு தெளிவாய், பூரணமாய், அழுத்தமாய்ப், பர தத்வங்களையும் தர்ம ஸ்வரூபத்தையும் கண்ணன் அர்ஜுனனுக்கு உபதேசித்தது வீண் போகவில்லை.

சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ், சென்னை.